# ஆத்ம ஞானம்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா






இது ஒரு தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு.

# ஆத்ம ஞானம்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தா






வெளியிடுவோர் :

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா யோகாசன சாலை

இராசிபுரம் :: சேலம் ஜில்லா

1969. [விலை ரூ. 4-00

# வெளியிடுவோரது அறிக்கை

இந்த விலை மதிக்கவொண்ணாத உபதேசங்கள் உலகெங்கிலுமுள்ள உண்மை நாடிகளுக்கு குருதேவரின் ஆரம்ப கால சீடரும், சென்னையில் பிரபல பத்திரிக்கையின் ஆசிரியருமான ஸ்ரீ P. K. விநாயக முதலியார் அவர்கள் தனது மதிப்பு மிக்க சஞ்சிகையிலே இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக சற்குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களின் ஆன்மீக உபதேசங்களை வெளியிட்டு வந்திருக்கிறார்.

குருதேவருடைய ஆரம்ப கால சீடர்களில் பெரும்பாலோர் (ஸ்ரீ சுவாமி பரமானந்தாஜி, ஸ்ரீ சுவாமி சிதானந்தஜி, ஸ்ரீ சுவாமி நாராயணானந்தாஜி) ஸ்ரீ குருதேவருடனும், அவருடைய செய்தியுடனும் "My Magzine" சஞ்சிகை மூலமாகத்தான் தொடர்பு கொண்டனர் என்கின்ற விஷயம் இங்கு குறிப்பிடற்பாலது.

'Self Knowledge' என்ற புத்தகம் குருதேவர் திருமேனி தாங்கியிருந்த காலத்தில் 1958 ஆம் ஆண்டு சென்னை திரு. P. S. சுப்ரமணிய ஐயர் அவர்கள் ஞாபகார்த்தமாக அவர்கள் தர்ம பத்தினி ஸ்ரீ நாகலக்ஷ்மி அம்மையார் நன்கொடை மூலமாக ஆங்கிலத்தில் ரிஷிகேசம் சிவானந்த ஆஸ்ரமம் தலைமை தெய்வீக வாழ்க்கைச் சங்கம் வெளியிட்டது.

குருதேவர் மஹாசமாதிக்குப் பின் அகில இந்திய சிவானந்த இலக்கிய பிரச்சார தமிழ் நாட்டுக் குழு சார்பாக 1969 ஆம் ஆண்டு குரு பூர்ணிமா ஞாபகார்த்தமாக இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முதன் முதலாக தமிழில் 'ஆத்ம ஞானம்' புத்தகத்தை வெளியிடுகின்றது.

இந்நூல் ஆன்மீகத் துறையில் ஈடுபட்டிருக்கும் அனைவருக்கும் பெரிதும் பயனுள்ளதாகவும், புத்துணர்ச்சி ஊட்டுவதாகவும் இருக்கும் என நம்புகின்றோம்.

'Self Knowledge' எனும் ஆங்கில நூலை 'ஆத்ம ஞானம்' என்ற பெயருடன் தமிழில் எல்லோரும் எளிதில் படித்து பயனடையும்படி தமிழாக்கம் செய்து கொடுத்த ரிஷிகேசம் (சிவானந்த நகர்) ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தாஜி அவர்களுக்கும், தமிழாக்கம் செய்ததை மேற்பார்வையிட்ட இராசிபுரம் திருவேங்கட விலாஸ் திரு. A இராமசாமி அய்யா அவர்களுக்கும், இப்புத்தகம் வெளிவர மிக்க பக்திப் பிரீதியுடன் நன்கொடை அளித்த தீவிர பரம பக்தர்கள் அனைவருக்கும் சற்குரு தேவனும், ஆண்டவனும் ஆரோக்கியம், நீடித்த ஆயுள், சாந்தி, செழுமை, கைவல்ய மோக்ஷம் ஆகியவற்றை அளித்து ஆசீர்வதிப்பாராக.

இந்நூலை தமிழில் அச்சுக்குக் கொண்டுவர நன்கொடை வசூலித்து சகல ஏற்பாடுகளையும் செய்த ஸ்ரீ சுவாமி சிவானந்த ஸ்ரீனிவாசானந்தாஜி அவர்களுக்கும், ஒரே மாத காலத்தில் பகவத் கைங்கர்யமாக மிகுந்த பக்தி சிரத்தையோடு சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்த சேலம் லிட்டரரி பிரஸிற்கும் சற்குரு சிவானந்த பகவானுடைய எல்லையற்ற கருணை நிறைவதாக.





Grams: DIVINELIFE
PRESIDENT
THE DIVINE LIFE SOCIETY
(Founder: H. H. SWAMI SIVANANDA)

Phone: 40 (Rishikesh)
P. O. SIVANANDA NAGAR,
Dt. Tehri-Garhwal, U. P.,
*Himalayas, India.*

OM

22nd May, 1969.

The President,
**The Divine Life Society Branch,**
**RASIPURAM (Salem Dist.)**

Adorable Atman,

Loving Namaskaras. Om Namo Bhagavate Sivanandaya.

It gives me a great pleasure to hear about your noble work of publishing Sri Gurudev's book 'Self-Knowledge' into Tamil and disseminating the Divine Life Message in South India. For the past so many years the Rasipuram Branch is doing wonderful work in Jnana Yajna, which is one of the noble ideals of Sri Gurudev. May the Divine Grace be ever upon the members of the Branch to continue the Divine Life activities in a progressive manner.

Life as it is lived here, is a perpetual struggle to acquire happiness. Every action, speech or thought, whatever be its form, is, consciously or unconsciously, directed towards the attainment of the supreme, unlimited, indivisible form of happiness. This is the final meaning of all desire and love. The aspiration is, no doubt, genuine; but the method through which man tries to win this happiness is foolish,

defective and incapable of achieving what it wants to achieve. He is deluded by the desire and love he cherishes for external things. No amount of addition to one's possessions no amount of fame, respect or power is going to bring the happiness, of which one is really in need. It is everybody's personal experience that what seemed desirable in the past does not appear to be so at present, and every thinking person would be able to infer from this what the nature would be of such experiences as are at present thought to be conducive to the happiness of one's self Curiosity is one thing and spiritual knowledge is another thing. It is the latter one that is 'Self-Knowledge'. Self-knowledge is the wisdom with which one perceives the world and reality as it is and not as appears to the naked eye.

The readers will be thankful to the efforts of Sri Chandrasekharan, of the Rasipuram Branch, an indefatigable worker for the Divine Cause, who is silently spreading, the light of the mission of Sri Gurudev. Thanks are also due to the translatore who has done his work with genuine devotion.

May God bless the readers of this book with a correct understanding to enable them attain the goal of life!

With respects and regards,
Yours, in the Lord,
**Swami Krishnananda**

# முன்னுரை

இந்த இந்திரியப் பிரபஞ்சத்திலே மனிதனுடைய வாழ்க்கை தூண்டிவிடக் கூடிய வாழ்க்கையாக இருக்கிறது. மனிதன் பிறந்தது ஆத்மானுபூதி அடைவதற்காக. அவன் தார்மீக வாழ்க்கை வாழ்வதற்காகப் பிறந்திருக்கின்றான். ஆனால் அவன் அவனுடைய சூழ்நிலைகளின் தூண்டுதல்களால் தவரான பாதையில் அழைத்துச் செல்லப் படுகின்றான். அவன் சமூகத்தினால் கெடுக்கப்படுகின்றான். தூண்டுதல்களை எதிர்த்து நிற்க அவனிடம் மனோபலம் இல்லை

ஒரு டெபுடி கமிஷனர் "ஓ ஸ்வாமி ஜி, உலகம் உணவை வேண்டுகிறது. நான் உணவை வேண்டுகிறேன். நான் ஆத்மாவை அரையணுவுக்கு மதிக்கிறேன். இந்நாட்களில் யார் ஆத்மாவை வேண்டுகின்றனர்? ஆன்மீக விஷயங்களை யாரும் சட்டை செய்வதில்லை" என்று கூறினார். அதற்கு நான் "உணவினால் மட்டும் நீங்கள் ஜீவித்து விடமுடியாது. ஆனால் பிரம்மனுடைய அடையாளமான ஓம் என்ற பிரணவத்தைக் கொண்டு ஜீவித்திருக்க முடியும். மனதிற்கு மானசீக உணவு தேவைப்படுகிறது. ஆத்மாவிற்கு ஆன்மீக உணவு தேவைப்படுகிறது" என்று அவருக்கு பதிலளித்தேன்.

இம்மாதிரியான கர்வமும் அகந்தையும் கூடிய மக்களுக்கு சில பிரதிகூலங்களும், விபத்துக்களும், துன்பங்களும், ஏமாற்றங்களும் ஏற்படும் போதுதான் இவர்களுக்கு ஆத்ம ஞானத்தை அடைய வேண்டுமென்கின்ற ஆசை உண்டாகும். புலனுகர்ச்சிப் பொருள்களின் மீதுள்ள ஆசையிலிருந்து எவனொருவன் விடுபட்டிருக்கின்றானோ அவனிடம் ஆத்ம ஞானத்தை அடைய வேண்டுமென்கின்ற ஆசை உதிக்கின்றது. தூயமனம் படைத்த அப்பேர்ப்பட்ட மனிதனே ஆன்மீக வழியைக் கடக்கத் தகுதியுடையவன்.

ஆன்மீக சம்ஸ்காரங்கள் நிரம்பப் பெற்றிருப்பவர்களையும், ஆத்மானுபூதிக்காக முயற்சிப்பவர்களையும், கண்ணுறும்போது எனது உள்ளம் சந்தோஷத்தால் நிரப்பப்படுகின்றது. மிகப் பெரும்பான்மையான பேர்கள் பெண்ணையும், பொன்னையும் நாடி அலைகின்ற இக்கலியுகத்தில் கூட கடவுளையே வேண்டுகின்ற உண்மையான மனப்பூர்வமான இளைஞர்களும் இருக்கின்றனர். அவர்கள் உண்மையில் போற்றத்தக்கவர்களே! அவர்களுக்கு என்னுடைய மௌனமான ஆராதனைகள்.

நீ எப்பொழுதும் அமைதியுடன் இருக்கின்ருயா? நீ பெருந்தன்மையுடையவனுக இருக்கின்ருயா? உன்னிடம் புலனடக்கம் இருக்கின்றதா? உன்னிடம் தெய்வீக நற்குணங்கள் பொருந்தியிருக்கின்றனவா? நீ அறியாமையிலிருந்து விடுபட்டிருக்கின்ருயா? நீ ஆத்மனுடைய ஞானத்தைப் பெற்றிருக்கிருயா? நீ (ஞான) ஒளி விளக்கம் அடைந்திருக்கின்ருயா? நீ அழியாத, தூய ஆத்மனை உணர்ந்திருக்கின்ருயா? இக்கேள்விகளுக்கு முன்பாக நீ எப்படி நிற்கப் போகிருய்? இவைகளை நீ உடையவனுக இல்லாவிடில் வந்து உட்கார்ந்து இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் பாடங்களைப் படி. இதிலே உங்கள் அனைவருக்கும் அமிர்தோபதேசம் அடங்கியுள்ளது. இதிலே நீ ஒரு சிறிது பயின்ருலும் நீ இறப்பு, துக்கம், வலி ஆகியவற்றைக் கடந்து செல்வாய்.

வாழ்க்கை ஒரு பெரும் போர்க் களம். வாழ்க்கை ஒரு வெற்றி. வாழ்வது என்பது கொள்கைக்காகவும் லக்ஷியத்திற்காகவும் போராடுதலாகும். வாழ்க்கை ஒரு தொடரான விழிப்புக்களாகும். நீ உன்னுடைய மனத்தையும், புலன்களையும் வெல்ல வேண்டும். இவைகள் தான் உண்மையான பகைவர்கள். நீ அக, புறத்தன்மைகளை வெல்ல வேண்டும். நீ உன்னுடைய சூழ்நிலைகள், பழைய கெட்ட வழக்கங்கள், பழைய கெட்ட சம்ஸ்காரங்கள், கெட்ட எண்ணங்கள், கெட்ட வாஸனைகள் ஆகியவற்றை ஜெயிக்க

வேண்டும். நீ உனக்கு விரோதமான தீய சக்திகளுக் கெதிராகப் போராட வேண்டும். நீ சீர்கேட்டுச் சக்திகளை எதிர்த்து நிற்க வேண்டும்.

பாய்ந்து செல்லும் மனத்தை வெல்லுதலே மாபெரும் வெற்றியாகும் அகத்தே நடக்கும் ஆத்யாத்மிகப் போரே மிகப் பெரிய போராகும். மனத்தை வென்றவனே மிகப் பெரிய வீரனுவான்.

ஒரு வீரனுக ஆகு. இந்த பாய்ந்தோடும் மனமாகிய பயங்கர விரோதியை வெல். ஆத்ம வெற்றியானது பல பிராணத் தியாகத்தினும் மேலானது. கெட்ட எண்ணங் கள், கெட்ட வாஸனைகள், ஆசைகள், கெட்ட சம்ஸ்காரங் கள் அல்லது மனப்பதிப்புகள் ஆகியவற்ருேடு போரிடுகின்ற அகப் போராட்டமானது புறப் போராட்டத்தைவிட மிகவும் பயங்கரமானது. மனம், புலன்கள் ஆகியவற்ருேடு செய்யும் சண்டையானது உண்மையிலேயே வெளியே நடக்கும் சண்டையை விட மிகவும் பயங்கரமானது.

ஆத்யாத்மிக யுத்த களத்திலே ஒரு ஆத்மீக வீரனுக இரு. தைரியமான, அஞ்சாத துணிவுள்ள ஆன்மீக சிப்பா யாக ஆகு. மனம், வாஸனைகள், திருஷ்ணைகள், விருத்தி கள், சம்ஸ்காரங்கள் ஆகியவற்றை எதிர்த்து தைரியமாகப் போராடு. மனத்தைத் திறம்பட வெடிக்கச் செய்ய பிரம்ம விசாரம் என்கின்ற இயந்திரத் துப்பாக்கியைப் பயன் படுத்து. ஆழமாக மூழ்கி காமம், பேராசை, வெறுப்பு, கர்வம், பொருமை ஆகிய அடி நீரோட்டங்களை ஓம் அல்லது ஸோஹம் ஜபமாகிய நீர் மூழ்கி அல்லது துளைக்கும் கப்பலின் மூலமாக அழி. பிரம்மாகார விருத்தி என்கின்ற ஆகாய விமானத்தைக் கொண்டு ஆத்மப் பேரானந்தமாகிய மேற் பிராந்தியத்திற்குப் பறந்து செல். அடிமனமாகிய கடலிலே ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் வாஸனைகளைத் தகர்த்தெறியும் உச்சாடானமாகிய சுரங்கங்களைப் பயன் படுத்து. சில வேளைகளில் பாய்ந்தோடும் பத்து இந்திரி

யங்களான உன்னுடைய பத்து விரோதிகளையும் நசுக்க விவேகம் என்கின்ற டாங்கிகளைச் செலுத்து. உன்னுடைய விரோதி மனத்தைத் தாக்க தெய்வீகச் சங்கத்தை ஆரம்பித்து உன்னுடைய சக்தி பொருந்திய கூட்டாளிகளான வைராக்கியம், திடசித்தம், சகிப்புத் தன்மை, அமைதி, புலனடக்கம் ஆகியவற்றுடன் நட்பு கொள். பெரு மாளிகையான இந்த உடலையும், "நான் இந்த உடல்", "நான் கர்த்தா", "நான் போக்தா" என்கின்ற எண்ணத்தையும் அழிக்க சிவோஹம் பாவனையாகிய வெடி குண்டை வீசு. உன்னுடைய புற விரோதிகளான ரஜஸ், தமஸ் ஆகியவற்றை சீக்கிரத்தில் அழிப்பதற்கு சத்துவம் என்கின்ற புகையை ஏராளமாகப் பரப்பு. விருத்திகளை அழிப்பதின் மூலமாகவும், இந்திரியப் பொருள்களாகிய விளக்குகள் அனைத்தையும் அணைப்பதின் மூலமாகவும், மனத்தை "இருட்டடிப்பு" செய்துவிடு. அதனால் விரோதி மனம் உன்னைத் தாக்க முடியாமல் போய்விடும். ஆன்மீக முத்தாகிய விலை மதிக்க முடியாத செல்வத்தைக் கைப்பற்ற ஏகாக்ரம் (சமாதானம்) என்கின்ற துப்பாக்கியின் மூலமாக உன்னுடைய விரோதி மனத்தை எதிர்த்து நெருங்கிப் போராடு. சமாதி இன்பம், மோக்ஷப் பேரானந்தம், நிர்வாண அமைதி ஆகியவைகள் இப்பொழுது உன்னுடையவைகள்; ஓ ராம், நீ எப்படி இருந்தாலும், நீ எந்த பிரதேசத்தில் பிறந்திருந்தாலும், உன்னுடைய கடந்த கால வாழ்க்கையும் சரித்திரமும் எதுவாக இருந்தாலும், உன்னுடைய விடுதலைக்கு மேற்கூறிய முறைகளின் மூலமாக வழி வகுத்து, இப்பொழுதே இந்த விநாடியிலேயே வெற்றியுடன் வெளியே வா.

இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் பாடங்கள் குறிப்பாக மதம், கடவுள், கர்ம நியதி, மறு அவதாரக் கொள்கை, உலகத்திற்கப்பாலும் அதற்குப் பின்னும் உள்ள வாழ்க்கை (Metempsychosis, Eschatology, etc.) முதலியவற்றில் நம்பிக்கையற்றவர்களை விளித்தே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இவைகள் உலகத்தில் மன்றுடிக் கொண்டிருக்கும் ஆத்மாக்களுக்கு, பல நாஸ்திகர்களுக்கு கடந்த 15 ஆண்டு காலமாகக் கொடுக்கப்பட்ட பாடங்களின் தொகுப் பாகும். இப்பொழுது அவர்கள் எல்லோரும் ஆன்மீக வழி யிலே வெகு தூரம் முன்னேறி இருப்பதோடு உலகின் துன்பங்களிலிருந்தும், தொல்லைகளிலிருந்தும் முற்றிலும் விடுபட்டவர்களாக இருக்கின்றனர்.

இப்பாடங்களின் உதவி கொண்டு பல சாதகர்கள் அவர்களுடைய தினசரி சாதனையில் ஏற்படுகின்ற எல்லா இடையூறுகளையும், படுகுழிகளையும் நீக்கிக் கொள்ள முடிந்ததோடு, அவர்கள் ஆன்மீக வழியில் ஒரு புது நம்பிக்கையையும், சந்தோஷத்தையும் பெற்றனர்.

இப்புதகமானது அதை அணுகுகின்ற மக்களுடைய விருப்பங்கள் அனைத்தையும் பூர்த்தி செய்கின்ற "சிந்தா மணி" அல்லது "கற்பக வ்ருக்ஷம்" அல்லது "காம தேனு" வைப் போன்றது.

இவைகள் அன்பு, அமைதி, ஐக்கிய உபதேசங்கள். என்னுடைய தத்துவமும் உபதேசங்களும் ஒரு சில பொறுக்கியெடுத்த படித்த, பணக்காரர்களுக்கு மட்டுமல்ல. நான் ஏழை, இழிமகன், நோயாளி, வாட்டமடைந்தவன், திக்கற்றவன், அனுதாபப்படுகின்ற குற்றவாளி. ஆகிய அனைவருக்கும் நண்பன். நான் ஏழை, நோயாளி, திக்கற்றவர், குற்றவாளி ஆகியோருக்குச் சேவை செய்வ தற்காகவே ஜீவித்திருக்கின்றேன். அகல உலகமும் என் னுடைய உடல், அகில உலகமும் எனது இல்லம். என் னுடைய செய்திகளும், என்னுடைய உரைகளும், உபதே சங்களும், குறிப்பாக ஏழை, இழிமகன், நோயாளி, வாட்ட மடைந்தோர் ஆகியவர்களுக்காகவே கூறப்பட்டவை களாகும். நான் எல்லோரையும் அணைத்துக் கொள் கிறேன். நான் என்னுடைய இதமான அரவணைப்பிலே எல்லோரையும் சேர்த்துக் கொள்கின்றேன். நான் ஒரு

சர்வலோக நண்பன். யார் வேண்டுமானாலும் அவருடைய காரியத்திற்காக என்னைப் பயன்படுத்திக் கொள்ளலாம். நான் எல்லோருக்கும் சொந்தமானவன். நான் யாவர்க்கும் தொண்டன். நான் எல்லோருக்கும் சகோதரன்.

நீ என்னுடைய உபதேசங்களை பரிபூரண நம்பிக்கை யுடன் பின்பற்றுகின்றாயா? நான் இப்புத்தகத்தில் எல்லா சாதகர்களுக்கும் தயாராக ஜீரணித்துத் தன்வயமாகும் பொருட்டு சர்க்கரைப் பூச்சுப் பூசி இறுக்கப்பட்ட ஒரு ஆன்மீக மாத்திரையைக் கொடுத்திருக்கின்றேன்.

சிவானந்த நகர்,<br>1—6—1958.

சுவாமி சிவானந்தா.



# பொருளடக்கம்.

**அத்தியாயம் – பத்து — பிரம்ம வித்தை**



**அத்தியாயம் – பதினொன்று — வேதாந்தம்**



**அத்தியாயம் – பன்னிரண்டு — ஞானயோகம்**



**அத்தியாயம் – பதின்மூன்று — ஜீவன் முக்தன்**



## Voice of Devotees



---

# சமரஸப் பிரார்த்தனை

ஓம் கருணையும் அன்பும் நிறைந்த இறைவா!
உனைத் தொழுது வணங்குகின்றோம். நீ எங்கு உள்ளாய், எல்லாம் வல்லாய், எல்லாம் அறிவாய். நீ சச்சிதானந்தப் பொருள், மெய்ப் பொருளும் மெய்யறிவும் பேரின்பமும் நீயே. எல்லா உயிர்களிலும் உறைபவன் நீயே.

ஓ தயாபரத் தெய்வமே!
உணரும் உள்ளமும், சமநோக்கும் தூய அன்பும், மெய்யறிவும் எமக்குத் தந்தருள்க. மயக்கத்தை எதிர்க்கவும், மனதை வெல்லவும், உள்ளத்தில் ஒளிரும் தெய்வீகத் தன்மையை எமக்குத் தந்தருள்க.

ஆணவம், துராசை, வெறுப்பு, பேராசை, காமம், வெகுளி இவை பற்றுது எம்மைக் காத்தருள்க. ஆன்மீக சக்திகளை எமது உள்ளத்தில் நிரப்பி அருள்க.

ஓம் உலகாளும் ஜகதீசா!
எல்லாப் பெயரிலும் எல்லா உருவிலும்
உனையே யாம் காண்போமாக.

எல்லாப் பெயரிலும் உருவிலும் உனையே
யாம் வழிபடுவோமாக.

எப்பொழுதும் உனையே யாம் சிந்தித்து
வருவோமாக.

என்றென்றும் உனிலேயே யாம்
நிலைத்திருப்போமாக.





சற்குரு தேவ்

ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ்



தமிழாக்கம்

ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தா
சிவானந்த நகர்

# ஆத்மஞானம்

## அத்தியாயம் ஒன்று

## பிரபஞ்சம்

### 1. உற்பத்தியும் பரிணாமமும்

ஆரம்பத்தில் இரண்டாவதாக ஒன்றும் இல்லாமல் ஒன்றாக மட்டும் இருந்தது பிரம்மமேதான். இருளுக்கு மேல் இருள் புரண்டு கொண்டு வரும் பொழுது அந்த நிலை பேறு (existence) மட்டும் தான் இருந்தது. இப்பிரபஞ்சம் எப்படி ஏற்பட்டது என்பதை யாரும் அறியார்கள். ரிக் வேதத்தில் கீழ்கண்ட விஷயங்களை நீங்கள் காணலாம். "இந்த பல்வேறு விதமான பிரபஞ்சம் எல்லாம் எப்பொழுது வந்தது என்று இங்கு யார் அறிவர்? யார் சொல்ல முடியும்? தேவர்களும் கூட அதன் உற்பத்திக்குப் பிறகு வந்தவர்கள் என்றால் யாரே அறிவர் இப்பிரபஞ்சம் எப்பொழுது ஏற்பட்டது என்று! (ரிக் வேதம் VIII 17-6). இறைவனாகிய பிரம்மத்திற்கு உற்பத்தி அம்சத்தில் ஹிரண்ய கர்ப்பன் (பொற்கருவினன்), சூத்ராத்மா, கார்ய பிரம்மன் என்னும் பெயர்கள் ஏற்பட்டன. சூத்ராத்மா என்றால் ஆடையில் காணும் நூல் போல அனைத்துள்ளும் வியாபித்திருப்பது என்பது பொருள். ஹிரண்ய கர்ப்பன் எல்லா ஜீவராசிகளினுள்ளும் ஒரு பூமாலையினூடேயுள்ள நூல் அல்லது நாரைப் போல ஊடுருவியிருக்கின்றான். அதனால் ஹிரண்ய கர்ப்பனுக்கு சூத்ராத்மா என்ற பெயர் ஏற்பட்டது. "ஒரு கயிற்றிலே கோர்த்துள்ள நவரத்தினங் களைப் போல் இவையெல்லாம் என்னிடம் கோர்க்கப்பட்டுள் ளன" என்பது (கீதை – அத்தியாயம் VII - 7 சுலோகத் தின் பொருள்). ஹிரண்ய கர்ப்பன் கார்ய பிரம்மன், ஈஸ்வரன் காரண பிரம்மன். (காரணம் காரியம் என்ற வார்த்தைகளுக்குப் பொருள் தேவையில்லை). ஹிரண்ய கர்ப்பன் ஈஸ்வரன் மூலமாகத் தோன்றியவன்.

இந்தப் பிரபஞ்சமானது கடவுளினுடைய ஒரு உத்திரவினுலல்லாது வேறு எதிலிருந்தும் உற்பத்தி செய்யப்பட்டதல்ல வென்றும், பிரளய காலத்தில் இது மறுபடியும் ஒன்றுமில்லாமல் போய்விடும் என்றும் சிலர் கருதுகின்றனர். இந்தக் கருத்து விஞ்ஞானிகளால் பூரணமாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இப்பொழுது எது இருக்கின்றதோ அது எப்பொழுதும் இருந்திருக்க வேண்டும். அத்துடன் எப்பொழுதும் ஏதாவது ஒரு ரூபத்தில் இனியும் இருக்குமென்று அவர்கள் அழுத்தம் திருத்தமாகக் கூறுகின்றனர். சாங்கிய தத்துவத்திலும் (Sankhya philosophy) நீங்கள் காணலாம், "இல்லாததொன்றிலிருந்து அது வெளிவர முடியாது" (சாங்கிய சூத்திரம் 78). (That which is, cannot come out of "That which is not"). கீதையில்கூட கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது: "இல்லாததொன்றிலிருந்து இருக்கின்ற ஒன்று தோன்ற முடியாது. அப்படியே இருக்கின்றதும் இல்லாமல் போக முடியாது. இந்த இரண்டைப் பற்றிய உண்மைகளும் தத்துவதரிசிகளால் உணரப்பட்டிருக்கின்றன."

(கீதை – அத்தியாயம் II - 16)

ஒன்றுமில்லாததிலிருந்து யாதொன்றும் தோன்ற முடியாது. (something) ஏதோ ஒன்றிலிருந்துதான் எதுவும் வெளிவர முடியும்.

உணர்வற்ற (unconscious) விஷயம் இப்பிரபஞ்சத்தின் முழுமுதற் காரணமாக இருக்க முடியாது. இது (பிரபஞ்சம்) ஜடமாக இருக்கிறது. ஒரு கிரமமான ஏற்பாடுகளை உடைய, எல்லாமுணர்ந்த ஒரு ஈஸ்வரன்தான் இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாக இருக்க முடியும்.

ஒரு காரியமானது அதன் காரணத்தைவிட்டு விலகியிருக்க முடியாது. உதாரணமாக ஒரு மட்குடமானது அதனுடைய பொருட் காரணமான களிமண்ணிலிருந்து விலகியிருப்பதில்லை. இதுபோலவே இப்பிரபஞ்சமும் அத

னுடைய பொருட் காரணமான பிரம்மனிலிருந்து விலகி யிருக்க முடியாது. இதற்குத் தனிப்பட்ட, அல்லது சுதந்திர மான, இருக்கை அல்லது இருப்பு (existence) கிடையாது. இது பிரம்மனோடு ஒன்றாக இருக்கிறது. பிரம்மன் மட்டும் தான் இருக்கின்றான். இந்த உலகம் என்பது ஒரு வெறும் தோற்றம்தான். ஒருவன் ஆத்மன் அல்லது தன்னைப் பற்றிய ஞானத்தைப் பெறும்பொழுது இவ்வுலகம் மறைந்து விடுகிறது. எதுபோலவெனில், இருளில் கிடக்கின்ற ஒரு கயிற்றை விளக்கு கொண்டு பார்க்கும் பொழுது பாம்பு போல் தோன்றிய தோற்றம் மறைந்து உண்மையான கயிற்றின் ஸ்வரூபம் தெரிவதுபோல.

ஈஸ்வரன் சங்கல்பிக்கிறான். குணங்களின் சமநிலை ஈஸ்வரனுடைய செல்வாக்கினாலே காலத்தின் மூலமாக நிலைகுலையச் செய்யப்படுகிறது. காலம் என்பது ஈஸ்வர னுடைய ஒரு சக்தி. பிறகு பிரகிருதியின் சாராம்ச மான ஸ்வபாவத்தின் மூலமாக மாற்றம் ஏற்படுகின்றது. மகத்துவத்தினுடைய அபிவிருத்தியானது கர்மத்திலி ருந்து பின் தொடருகின்றது. முதலில் இவ்வுலகம் இருளால் சூழப்பட்டிருந்தது. ஈஸ்வரன் அல்லது இறைவனானவன் தன்னைப் புலப்படாத வகையில் வைத்துக் கொண்ட போதிலும், படிப்படியாக புலப்படுத்திக் கொள்வதற்காக இப்பிரபஞ்சத்தைக் காரணமாக்கினான். உண்மைப் பொரு ளாகிய இறைவனானவன் தனது இச்சையின் மூலமாக இப்பிரபஞ்சத்தின் அழியாத மூலாதாரம் அல்லது இயற் கைக்கு முதல் அசைவு அல்லது தள்ளுதலை உண்டாக்கி, தனது ஆரம்ப சமநிலையை அசைப்பதற்காகவும், அறிவு, ஆணவம், ஆதாரமான தத்துவங்கள், அல்லது தன் மாத்திரைகள், பிராணன், மனம், பஞ்ச பூதங்கள் போன்ற இப்போதைய பிரபஞ்சத்தின் அமைப்பிற்குத் தேவையான அந்த இருபத்து நான்கு தத்துவங்கள், அருவப் பொருள் கள் ஆகியவற்றில் படிப்படியாகவும், வெற்றிகரமாகவும் பரிணமிப்பதற்காகவும் கொடுத்தார்.

மூலப் பொருள் (element) எவ்வளவுக்கெவ்வளவு நுண்ணியதாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சக்தி வாய்ந்தது. தண்ணீர் பூமியைவிட சக்தி வாய்ந்தது; ஏனென்றால் அது பூமியை விட நுண்மை வாய்ந்தது. தண்ணீர் பூமியை விலக்கித் தள்ளி விடுகிறது. நெருப்பு தண்ணீரை விட சக்தி வாய்ந்தது; ஏனென்றால் அது தண்ணீரைவிட நுண்மை வாய்ந்தது. நெருப்பு எல்லாத் தண்ணீரையும் வற்ற வைத்து விடுகிறது; காற்று நெருப்பை விட சக்தி வாய்ந்தது; ஏனென்றால் அது நெருப்பை விட நுண்மையானது. காற்று நெருப்பை ஊதித் தள்ளிவிடுகிறது. ஆகாயம் (Ether) காற்றைவிட சக்தி வாய்ந்தது. அது காற்றைவிட நுண்மையாயுள்ளது. காற்று ஆகாயத்தில் தங்கியிருக்கிறது. ஆகாயம் தான் காற்றைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதாரமான பூதம். ஆகாயத்திலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் பிறந்திருக்கின்றது. பிரளய காலத்தில் நிலமானது நீரிலும், நீரானது நெருப்பிலும், நெருப்பானது காற்றிலும், காற்று ஆகாயத்திலும் லயப்பட்டுவிடுகின்றது.

நான் இப்பொழுது இந்த வளர்ந்த உலகின் பரிணாமத்தைப் பற்றி வர்ணிக்கின்றேன். இந்த ஐந்து தன்மாத்திரைகளும், இரண்டு சமபாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு மூலப் பொருளின் ஒரு பாதியோடு மற்ற மூலப் பொருள்களின் ஒவ்வொன்றின் எட்டில் ஒரு பாகம் கலக்கப்படுகிறது. ஐந்து மடங்கான கூட்டு ஒன்று ஏற்படுகின்றது. இந்த ஐந்து வளர்ச்சி பெற்ற மூலப் பொருள்களும், இப்பொழுது உண்டாக்கப்படுகின்றன. இது தான் ஐந்தொழில் (Quintuplication) அல்லது பஞ்சீகரண முறையாகும். தன்மாத்திரைகள் ஒன்றோடொன்று கலக்காமல் ஆதிநிலையில் இருக்கும் பொழுது அவைகள் அபஞ்சீக்ருத (Apancheekrita) ஐந்து மூலப் பொருள்கள் என்று சொல்லப்படுகின்றன. இந்த உலகம் முழுவதும் நான்கு வகைப் பெருந் தோற்றமுடையனவாகவும், நால்வகைப் பிறப்

புடையனவாகவும் இருக்கின்றன. உத்பீஜம் அல்லது விதையிலிருந்து பிறப்பன; ஸ்வேதஜம் அல்லது வியர்வையி லிருந்து பிறப்பன; அண்டஜம் அல்லது முட்டையிலிருந்து பிறப்பன; (Viviparous) ஜராயுஜம் அல்லது கருவிலிருந்து பிறப்பன என்று சொல்லப்படுகின்ற நான்கு விதமான பிறப்புகளுடைய ஜீவன்களின் வளர்ச்சி பெற்ற தேகங் களும், எல்லாவிதமான இன்ப நுகர்ச்சிப் பொருள்களும், இந்த ஐந்து விதமான பஞ்சீகரண மூலப் பொருள்களால் உருவாக்கப்பட்டுள்ளன. மனித வர்க்கத்தின் ஸ்தூல சரீரம் அன்னமய கோசம் என்று அழைக்கப்படுகின்றது. ஜீவனுனது இந்த உடலோடு விழிப்பு நிலை அல்லது ஜாக்ரத் அவஸ்தையை அனுபவிக்கின்றது.

இந்தப் பஞ்சீகரண முறையானது பின் வருமாறு: பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகியவற்றின் ஐந்து தன்மாத்திரைகளில் ஒவ்வொன்றும் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றது. அந்த இரு பகுதிகளில் ஒன்று மேலும் நான்கு பாகங்களாகப் பிரிக்கப்படுகின்றன பிறகு ஒவ்வொரு வளர்ச்சி பெற்ற மூலப் பொருளும் தன்னுடைய (தன் மாத்திரையின்) அரை பாகத்தோடு மற்ற நான்கு தன் மாத்திரைகள் ஒவ்வொன்றின் அரைக்கால் பாகம் சேர்ந்த சேர்க்கையின் மூலம் உண்டாக்கப்படுகின்றது. பிறகு இந்த வளர்ச்சி பெற்ற பிரம்மாண்டமும் ஸ்தூல சரீரங்களும் உண்டாக்கப்படுகின்றன.

இப்பொழுது மேல் கொண்டு சூக்ஷ்ம உலகத்தின் பரிணுமத்தைப் பற்றி விவரிக்கின்றேன். ஈஸ்வரன் தமோ குணமானது ஆவரண சக்தி (அல்லது மறைக்கும் சக்தி) யாகவும், விக்ஷேப சக்தி (அல்லது வெளியில் புலப்படும் சக்தி) யாகவும் பிரிக்கப்பட வேண்டுமெனக் கருதினுன். மறைக்கும் சக்தி காரணமாகவே மனிதன் தன்னுடைய அடிப்படையான சத்-சித்-ஆனந்த குணத்தை உணர முடியாமலிருக்கின்றுன். அவன் கோசங்களாக இல்லை.

(Kosas). இந்த வெளிப்பட்டிருக்கும் சக்தி இந்த பிரபஞ்சத்தை வெளிப்படுத்தியிருக்கின்றது. விக்ஷேப அல்லது புலப்படும் சக்தியிலிருந்து சூக்ஷ்ம ஆகாயம் பிறந்தது; ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் உண்டாயின. அபஞ்சீக்ருதமாக இருக்கும் இந்த ஐந்து சூக்ஷ்மப் பொருள்களும் தன்மாத்திரைகள் அல்லது ஆதாரப் பொருள்கள் என்றழைக்கப்படுகின்றன. இந்த ஆதாரப் பொருள்களில் முக்குணங்களாகிய சத்வ, ரஜஸ், தமஸ் அடங்கியிருக்கின்றன. ஆகாசத்தின் சத்துவப் பகுதியிலிருந்து கேள்விப் பொறியாகிய காது உண்டாயிருக்கிறது. வாயுவிலிருந்து ஸ்பரிசப் பொறியான சர்மமும், தீயிலிருந்து கண்ணும், தண்ணீரிலிருந்து நாவும், பூமியிலிருந்து மூக்கும் உண்டாயின. இந்த ஐந்து தன்மாத்திரைகளின் சத்துவத்தின் கூட்டுத் தொகையிலிருந்து அந்தஹ்கரணம் உண்டாக்கப்படுகிறது. இந்த அந்தஹ்கரணம் நான்கு விதமாக இருக்கிறது. அதாவது மனம், அறிவு, சித்தம், அஹங்காரம். சித்தம் மனதிற்குக்கீழும், அஹங்காரம் அறிவிற்குக் கீழும் வருகின்றது.

சாங்க்ய தத்துவத்தைக் கண்டு பிடித்தவரான கபில முனிவரின் வாக்குப்படி சத்துவ, ரஜஸ், தமஸ் ஆகியவைகள் அடங்கிய திரிகுணாத்மக பிரக்ருதிதான் இவ்வுலகத்திற்குக் காரணமாக இருக்கிறது. நியாய தத்துவத்தின்படி ஈஸ்வரன்தான் (நித்ய ஞான இச்சா பிரயத்னம்) இவ்வுலகத்தின் முக்கிய காரணமாக இருக்கிறார். கணாத தர்மத்தைச் சேர்ந்த வைசேஷிகர்கள் பரமாணுக்கள் தான் பொருட் காரணம் என்று சொல்லுகிறார்கள். பதஞ்சலியினுடைய யோக தத்துவத்தின்படி க்லேச கர்மம், விபாகம், ஆசயம் ஆகியவைகளினால் தீண்டப்படாத விசேஷ புருஷன் (ஈஸ்வரன்) தான் இவ்வுலகின் மூலகாரணமாக இருக்கிறார். மீமாம்சைத் தத்துவத்தைச் சார்ந்த ஜைமினியின்படி கர்மங்கள் (தர்மங்கள், அதர்மங்கள்) தான் இவ்வுலகிற்குக் காரணமாக இருக்கின்றன. வேதாந்தக்

கருத்துப்படி மாயையில் உள்ள சுத்த சைதன்யத்தின் பிரதி பலிப்புத்தான் ஈஸ்வரனாக இருக்கிறார். மாயா சபளித (மாயையோடு கூடிய) சைதன்யம் தான் இவ்வுலகின் அபின்ன-நிமித்த-உபாதான காரணமாக இருக்கின்றது.

காலவாதிகள் இவைகள் எல்லாவற்றிற்கும் ஆணி வேராக விளங்குவது காலம்தான் என்று பகர்கின்றனர். காலமே எல்லாம். காலமே கடவுள். காலம் தான் பிரபஞ் சத்தின் விதை. மறுபடியும் காலம்தான் அதனுடைய விருப்பத்தில் ஒவ்வொரு பொருளையும் திருப்பி எடுத்துக் கொள்கிறது. ஆனால் காலம் ஜடமாக உள்ளது. நிரந் தரத் தன்மையில் காலம் ஒரு துளியைப் போன்றது. நிரந்தரம் என்பது பிரம்மனாக இருக்கிறது.

க்ஷணிக விஞ்ஞான வாதிகள் சொல்லுகிறார்கள்: ''ஒரே ஒரு விஞ்ஞானம் தான் இருக்கிறது. இவ்வுலகம் வெறும் எண்ணம் மட்டும்தான். எண்ணந்தான் பொரு ளாகத் தோன்றுகின்றன'' என்று சொல்லுகிறார்கள். சூன்ய வாதிகள் பொருள்களையும், விஞ்ஞானத்தையும் மறுக்கின்றனர்.

நிலம், நீர், நெருப்பு ஆகிய மூன்று மூலப் பொருட் களும் மூர்த்தம் (உருவமுடையது) என்றும், காற்றும், ஆகாயமும் அமூர்த்தம் (உருவமற்றது அல்லது அருவம்) என்றும் அழைக்கப்படுகின்றது.

கோடையின் வெப்பம் பூமியைக் காய வைத்து விடு கிறது. நிலம் பொடிந்து விடுகின்றது, ஆனால் தாவரங் களின் வேர்கள் நில மட்டித்திற்குக் கீழே அப்படியே இருக் கின்றன. மழைக் காலத்தில் எல்லா வேர்களும் மறுபடியும் முழுச் சக்தியுடன் முளைக்க ஆரம்பிக்கின்றன. இதே போல் பிரளய அக்னியால் முந்தைய உற்பத்திகள் எரிக்கப் பட்டு விடும்பொழுது சம்சாரமாகிய மரத்தின் வேர்கள் அவ்யக்தம் அல்லது பிரக்ருதியில் அழுந்தியிருக்கின்றன. அடுத்த கல்பம் ஆரம்பமாகும் பொழுது அந்த வேர்கள் மறு

படியும் முளைத்து உற்பத்தி ஆரம்பமாகி இந்த உலகம் முழுவதும் மறுபடியும் வெளிக் கொணரப்படுகின்றது.

சிருஷ்டி அல்லது உற்பத்தி இரண்டு வகைப்பட்டது. அதாவது : யுகபத் சிருஷ்டி, கர்ம சிருஷ்டி என்பன. யுகபத் சிருஷ்டியில் மஹத், அஹங்காரம் முதலிய ஐந்து மூலப் பொருட்களும், பிரபஞ்சத்தின் மற்ற பொருட்களும் ஒரே சமயத்தில் தோன்றுகின்றன. கர்ம சிருஷ்டியில் இந்த மூலப்பொருட்கள் ஒன்றன்பின் ஒன்ருக வருகின்றன. அவ்யக்தத்திலிருந்து பிறந்தது மஹத். மஹத்திலிருந்து அஹங்காரம் முதலியன. ஆகாசத்திலிருந்து வாயு பிறந்தது. வாயுவிலிருந்து நெருப்பும் இதைப் போன்று மற்றவைகளும் உற்பத்தி ஒன்றைத் தொடர்ந்து மற்ருென்று வருகிறது.

ஸ்ரீ வசிஷ்டர் ஸ்ரீ ராமரிடம் சொன்ஞர் ; ''ஒருசமயம் பிரபஞ்சம் அனைத்தையும் சிவன் உற்பத்தி செய்தார் ; மற்ருெரு சமயம் பிரம்மா, வேருரு சமயத்தில் விஷ்ணு, பிறகு முனிகள், இவ்வாருக. சில வேளைகளில் பிரம்மா தாமரையில் பிறக்கிருர். சில வேளைகளில் நீரிலும், சில சமயங்களில் அண்டத்திலும், சில சமயங்களில் ஆகாசத்திலும் பிறக்கிருர். ஒரு சிருஷ்டியில் சக்தி பொருந்திய மரங்கள் மட்டும் இப்பிரபஞ்சத்தில் இருக்கும். மற்ருென்றில் பூமி மட்டும் இருக்கும் ; வேருென்றில் கற்கள் மட்டும், இன்னுென்றில் மாமிசம் மட்டும், மற்ருேர் உற்பத்தியில் தங்கம் மட்டும் இருக்கும். இது மாதிரி இதற்கு நேர்மாருன வழிகளிலும் சில சமயங்களில் இருக்கும். சில சிருஷ்டிகளின் போது முதன் முதலாக இருப்பது ஆகாசமாகவும், சில வேளைகளில் வாயுவாகவும், சில சமயங்களில் அக்னியாகவும், சில சமயங்களில் அப்புவாகவும், சில சமயங்களில் பிருத்வியாகவும் இருக்கும். இங்கு நான் சுருக்கமாக ஒரு பிரம்மனின் சிருஷ்டியைப் பற்றி விளக்கியுள்ளேன். பரிணும வரிசைக் கிரமம் எல்லா யுகங்களிலும் ஒரே மாதிரியாக இருக்காது.

வெவ்வேறு யுகங்களுக்குத் தக்கபடி மாறுபாடடையும். கிருத, மற்றும் இதர யுகங்கள் திரும்பத் திரும்ப வரும். இவ்வுலகில் திரும்பத் திரும்ப வராத பொருளே கிடையாது.''

கொழுந்து விட்டெரியும் நெருப்பிலிருந்து ஒன்றைப் போன்ற பொறிகள் ஆயிரக்கணக்கில் கிளம்புகின்றன. அது போல அழியாத பிரம்மனிலிருந்து பல்வகையான ஜீவராசிகள் பிறந்து அவைகளும் பிரம்மனிடம் திரும்பிச் சென்றடைகின்றன.

சிலந்திக் கூடானது சிலந்திப் பூச்சியிலிருந்து வருவது போல, தீப்பொறிகள் தீயிலிருந்து வருவது போல, அந்த ஒரு ஆத்மனிலிருந்து சுவாசிக்கும் எல்லாப் பிராணிகளும், எல்லா உலகங்களும், எல்லா தேவர்களும், எல்லா ஜீவ ராசிகளும் தோன்றுகின்றன.

(பிருஹத். உபநிஷத் II - 1-20)

'' அவிநாசி து தத்வித்தி ஏன ஸர்வமிதம் ததம்
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித் கர்த்துமர்ஹதி ''

எதனால் இவ்வுலகம் முழுதும் வியாபிக்கப்பட்டிருக் கிறதோ அப்பொருள் நாசமற்றது என்று அறிந்து கொள். இப்படி நாசமடையமுடியாத ஒன்றை எதனாலும் எவராலும் அழிக்க முடியாது. (கீதை II – 17) இப்பிரபஞ்சமானது அதனுடைய எல்லா நிலைகளிலும், ஒரு போதும் பிரம்மனை விட்டு விலகி இருப்பதில்லை. புல் பூமியிலிருந்து வருகிறது. பிறகு பூமியோடு ஒன்று சேர்ந்து விடுகிறது. அதே போல் இப்பிரபஞ்சமும் பிரம்மனிலிருந்து வருகிறது. பிரம்மனில் நிலைத்திருக்கிறது. முடிவில் பிரம்மனில் கரைந்து விடு கிறது.

ஆத்மன் ஒரே மாதிரியான தன்மையையுடையது. உலகம் (பிரக்ருதி) பல்வேறு தன்மையையுடையது. இயற்கை பலவாக இருக்கின்றது. ஒன்று பலவாக ஆகி

யிருக்கின்றது. ஒன்ருக இருப்பது உண்மை. பலவாகத் தோன்றுவது உண்மையற்றது. பொய்த் தோற்றம்.

ஒரு சக்தி பொருந்திய தூரதிருஷ்டி கண்ணுடி மூலம் நீங்கள் சந்திரனை 75 மைல் தூரத்திற்குக் கொண்டு வந்து 20,000 அடி உயரம் அளவிற்குத் தென்படுகின்ற அங்குள்ள மலைகளைப் புகைப்படம் எடுக்க முடியும். மற்ற கிரஹங் களின் சீதோஷ்ண நிலைகள் பதிவு செய்யப்படுகின்றன. இது போன்ற பரிசோதனைகள் மிகவும் ஊக்கம் அளிக்கக் கூடியவைகளாக இருக்கின்றன. வானசாஸ்திரம் படித் தல், நேர்முக ஆராய்ச்சிகள் செய்தல் ஆகியவைகள் எல்லாம் உற்சாகம் அளிக்க வல்லவைகளாக இருக்கின் றன. அவைகள் மாணுக்கனை இறைவன் அல்லது சிருஷ்டி கர்த்தாவுடன் ஒன்று சேர்க்கின்றன. ஆனல் இவைகள் எல்லாவற்றையும் விட ஊக்கம் கொடுப்பது ஆத்மன் என்ற உயர்ந்த பொருளைப் பற்றித் தெரிந்து கொள்வதாகும். எல்லா கிரகங்களும், நக்ஷத்திரங்களும், உபகிரகங்களும் அந்த விசித்திரமான ஆத்மனில் தொங்கிக் கொண்டு அல்லது மிதந்து கொண்டு இருக்கின்றன. அவன் தான் எல்லா கிரஹ இயக்க முறைகளுக்கும் (solar system) ஆதாரம் அல்லது யோனி (கருவூலம்) யாக இருக்கின்ருன். தேவாதி தேவனின் மகிமை விளங்குவதாக!

நீங்கள் ஆத்ம ஞானத்தை அடைந்து விட்டால் வாழ்க்கையின் பொருள் ஒரு புதிராக இருப்பது ஒழிந்து விடும். நீங்கள் இப்பிரபஞ்சத்தின் காரணத்தைத் தெள் ளத் தெளியப் புரிந்து கொள்வீர்கள். பொருள்களினுடைய திட்டத்தின் காரணமும் முன்னேற்றமும் உங்களுக்கு தெளிவுபடும். மனித எண்ணத்திற்கு அப்பாற்பட்ட எல்லா விஷயங்களும் உங்களுக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்கும்.

இந்த உலகம் தோன்றுமுன் பிரம்மனிடம் ஒரு ஸ்பந்த னம் அல்லது அதிர்ச்சி இருந்தது. இதுதான் பிரம்மனின்

சங்கல்பமாகும். அவர் ''ஏகோஹம் பஹுஸ்யாம்''- நான் ஒன்ருக இருக்கின்றேன், நான் பலவாக ஆகக்கட வேணுக என்று எண்ணிஞர். இந்த அதிர்ச்சியானது நிலத்திற்குள்ளே விதையானது தண்ணீரால் நனேக்கப் பட்டு விரிவடைகின்ற செய்கையோடு ஒத்திருக்கின்றது. பிறகு உலகம் முழுவதும் வெளிக் கொணரப்பட்டது.

பிரம்மன் எண்ணத்திற்கப்பாற்பட்ட இப்பிரபஞ் சத்தை முக்குணங்களுடன் கூடிய மாயையாகிய மயக்கந் தரும் சக்தியின் மூலம் தன்னுடைய சொந்த லீலேக்காக வேண்டி சிருஷ்டி செய்திருக்கின்ருன். ஆனல் இந்நட வடிக்கைகள் அவனேச் சிறிதளவும் தீண்டுவது கிடையாது. அவன் ஆகாயத்தைப் போல் அசங்கமாகவும், நிர்லிப்த மாகவும், (பற்றற்று) இருக்கின்ருன். இந்த உலகமானது சமுத்திரத்தில் ஒரு மரக்கட்டை மிதப்பது போல் அவனி டம் மிதக்கிறது.

ஒரு சாதாரண வித்தைக்காரன், இந்திரஜாலம் அல்லது சம்மோஹன வித்தையின் மூலம் மாம்பழங்களே யும், பழங்களேயும், பணத்தையும், தித்திப்புப் பண்டங் களேயும், ஒரு கற்பனே அரண்மனே முதலியவற்றையும் கொண்டு வர முடிகிறதென்ருல் இவன் (சர்வ வல்லமை யுள்ளவன், எங்கும் நிறைந்த ஆட்சியாளன்) இந்த அற்ப உலகத்தை தன்னுடைய சொந்த விளேயாட்டிற்காக உற்பத்தி செய்ய முடியாதா? சாகுந்தன்மையுடைய ஒரு அரசன் தன்னுடைய அரண்மனேயை, மேஜை, நாற்காலிகள், படங்கள் (Curios), தோட்டம், நீரூற்று முதலியவைகளால் அலங்கரிக்கும்போது, சர்வ வல்லமை யுள்ள இறைவனுல் இந்த உலகத்திற்கு அழகாக நிலப் பரப்பையும், பிரகாசிக்கும் சூரியனேயும், சந்திரனேயும், நட்சத்திரங்களேயும், பெரும் நதிகளேயும், சமுத்திரங்களே யும் அளிக்க இயலாதா?

உங்களால் எண்ணற்ற கற்பனேப் படங்களே உண்டு பண்ணி கனவில் அவைகளுக்கு ஒளியையும், உயிரையும்

கூட கொடுக்கக் கூடிய அப்பேர்பட்ட சக்தி உங்களிடம் இருக்கும்போது இறைவனுக்கு சர்வ வல்லமைத் தன்மை யும், எல்லாம் அறியும் திறனும் இருக்காதா ?

ஒரு பிரசித்தி பெற்ற ஹார்லி தெரு விசேஷக்ஞர் (Specialist) புரொபஸர் A. M. லோ என்பவர் ஒரு திரவத் தைக் கண்டு பிடித்தார். அத்திரவமானது ஒரு குழந்தை பிறப்பதற்கு முன் எந்த ஒரு குழந்தையும் ஆணு அல்லது பெண்ணு என்பதை உறுதிப்படுத்திக் கூற முடியும் என்று அவர் உரிமை கொண்டாடுகின்றார். அவருடைய பரிசோதனைகளிலிருந்து 90 சதவீதம் வெற்றிகண்டிருப்ப தாகவும் கூறுகிறார். அவர் எல்லா பெற்றோர்களுக்கும் ஆண் அல்லது பெண் குழந்தையை உற்பத்தி செய்யும் திறன் உண்டு என்ற கொள்கையின் அடிப்படையில் வேலை செய் திருக்கிறார். புரொபஸர் லோ கூறுவதின்படி ஆண்டுக் கணக்கில் ஆராய்ச்சிக்குப் பின் கண்டு பிடித்த அந்த திரவ மானது ஆண் அல்லது பெண் குழந்தையின் பிறப்பை ஊர்ஜிதப்படுத்த இத்திறன்களின் மீது வேலை செய்கிறது. இந்தக் கண்டு பிடிப்புகள் எல்லாம் மிகவும் ஆச்சரியமூட் டக் கூடியவைகளே. ஆனால் இதை விட ஆச்சரியமூட்டக் கூடியது இந்த நிரந்தர ஆத்மா. இது எல்லா கண்டு பிடிப்புகளுக்கும், கொள்கைகளுக்கும் ஆதாரமாக இருப் பது. ஒரு விஞ்ஞானியின் சக்திக்கும், வாழ்க்கைக்கும் ஆதாரமாக இருப்பது, காஸ்மிக் சக்திக்கு ஆதாரமாக இருப்பது. விஞ்ஞானியானவன் அவனுடைய நிரந்தர ஆத்மாவின் ஒளியின் மூலமாகவே அவனுடைய சோத னைச் சாலையிலே வேலை செய்ய முடிகின்றது. இந்த ஆத்மன் இல்லாது அவனுடைய மனம் வேலை செய்ய முடியாது. அவனுடைய கண்கள் பார்க்க முடியாது. இந்த ஆத்மாவானது உள்ளங்களுக்கெல்லாம் உள்ளமாக வும், பிராணனுக்குப் பிராணனாகவும், காதுகளுக்கெல்லாம் காதாகவும், கண்களுக்கெல்லாம் கண்ணாகவும் விளங்கு கிறது. இப்பொழுது புரொபஸர் லோ அவர்கள் இந்த அழியா ஆத்மனைக் கண்டு பிடிக்க முயல்வாராக.

உபநிஷத்துக்கள், அல்லது ஸ்ருதிகள் ஆதாரபூர்வ மானவை. அவைகள் உங்களுக்கு வழிகாட்டும். அவை கள் உங்களை ஊக்குவித்து உயர்வளிக்கும். உங்களுக்கு அவைகளின் மீது அசையா நம்பிக்கை வேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் மாயை அல்லது சாவின் பிடிப் பிலிருந்து காப்பாற்றப்படுவீர்கள். உங்களுடைய தவருன பகுத்தறிவின் மூலம் அவற்றை அழித்து விடாதீர்கள். அறிவு என்பது சீக்கிரத்தில் பாவத்திற்கு இழுத்துச் செல்லக்கூடிய முடிவுள்ள ஒரு கருவியாகும். உங்களுடைய அறிவை மட்டும் நம்பிக் கொண்டிருக்க வேண்டாம். அம் மாதிரி செய்தால் இறவாத் தன்மையை அடைய எந்தவித மான நம்பிக்கையுமில்லை.

"இறைவன் இவ்வுலகத்தை என்ன காரணத்திற் காகப் படைத்தான்?" - இந்தக் கேள்வி மனித எண்ணத் திற்கு அப்பாற்பட்ட கேள்வி அல்லது அதிப்ரச்னையாகும். இறை நினைவை (God consciousness) நீங்கள் அடையும் பொழுதுதான் உங்களுக்கு அதன் நோக்கம் புலப்படும். காலம், இடம், காரணம், (causation) ஆகியவைகளுக்கு கட்டுப்பட்ட எல்லையோடு கூடிய மனமானது மனித எண்ணத்திற்கு அப்பாற்பட்ட விஷயங்களைப் பற்றிய ஒரு கேள்விக்கு பதில் கொடுக்க முடியாது.

இறைவன் இந்த உலகத்தை ஏன் படைத்தான் என்ற கேள்வியைப் பற்றி காரசாரமான விவாதத்தில் இறங்குவதின் மூலம் நீங்கள் உங்களுடைய நேரத்தை யும், சக்தியையும் வீணுக்குகிறீர்கள். இந்த உலகம் உண்மையோ இல்லையோ அதனுல் உங்களுக்கு ஒன்றும் பயனில்லை. அது போன்ற தர்க்கங்களில் இறங்குவதின் மூலம் நீங்கள் உருப்படியான பலன் எதையும் அடையப் போவதில்லை. மேலான ஆத்மனில் நிலைத்திருக்க நீங்கள் உள்ளத்தையும், வெளியிலே சென்று கொண்டிருக்கும் இந்திரியங்களையும், உள் பக்கமாகத் திருப்பி உங்களுடைய உள்ளக் கோயிலினுள் ஆழமாக மூழ்கிப் பார்த்தல் வேண்

டும். ஆகவே இந்த பயனற்ற வாக்கு வாதங்களைக் விட்டு விட்டு ஆத்மனைப் பற்றியும், அதை அறிவதைப் பற்றியு மான விஷயத்திற்கு நேரடியாகச் சென்று விடுங்கள். ஒரு மரத்திலிருக்கும் இலைகள் எத்தனை என்று எண்ணிக் கொண்டிருப்பதைவிட நேரடியாகப் பழத்தைச் சாப்பிட முயற்சி செய்யுங்கள். ஆத்மாவின் நிரந்தரப் பேரானந் தத்தை அனுபூதியின் மூலம் அனுபவிக்க முயற்சி செய்யுங் கள். இது ஞானமாகும்.

நீங்கள் ஆத்மனைப் பற்றிய ஞானத்தைப் பெற்றுவிட் டால் வாழ்க்கையினுடைய பொருள் புதிராக இருப்பது மறைந்து போகும். இப்பிரபஞ்சத்தின் காரணத்தைத் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்வீர்கள். பொருள் களின் திட்டத்தில் உள்ள நோக்கமும், அபிவிருத்தியும் உங்களுக்கு விளங்கி விடும். முறையான ஆத்மீக சாதனை மூலம் ஆத்ம ஞானத்தைப் பெறுங்கள்.

## 2. இந்த உலகம் என்பது என்ன?

ஒரு ஆரஞ்சுப் பழத்திற்கு உருவம், வர்ணம், ருசி ஆகியவற்றைக் கொடுத்தது மனம்தான். ஒரு விஞ்ஞா னிக்கு ஒரு ஆரஞ்சுப் பழம் எலெக்ட்ரான் அல்லது அணுக் களின் திரளாகத் தோன்றுகிறது. வைசேஷிக தத்துவத் தைச் சேர்ந்த ஒரு மாணுக்கனுக்கு அது ஒரு அணுவின் கூட்டு ஆக இருக்கிறது. ஒரு நுண் சிந்தையாளனுக்கு (clairvoyant) அது தன்மாத்திரைகளின் சேர்க்கையாக இருக்கிறது. ஒரு ஜீவன் முக்தன் அல்லது முனிவருக்கு அது பிரம்மனாக இருக்கிறது. உங்களுடைய கண்களின் மணியிலே (lens) ஏதோ சில குறைபாடு இருக்கிறது. ஆகவேதான் நீங்கள் புறப்பொருளை பார்க்கிறீர்கள். உங்க ளுடைய ஞானமாகிய அகக்கண் திறக்கப்பட்டால் அதே ஆரஞ்சுப் பழம் பிரம்மனாகத்தான் தெரியும்; இந்த உலகம் பிரம்மனாகத்தான் இருக்கிறது. இந்த உலகம் என்பது வெறும் தோற்றமேயன்றி வேறில்லை. இது கயிற்றில்

தோன்றும் பாம்பைப் போன்ற ஒரு வெறும் தோற்றம் மட்டுமேயாம். இவ்வுலகம் ஒரு உண்மைப் பொருளாக இருப்பின் இது உங்களுக்கு ஆழ்ந்த நித்திரையிலும் தோன்ற வேண்டும்.

இந்தப் பரந்த இந்திரியப் பிரபஞ்சமானது ஆத்ம சங்கல்பமாக பிரகாசிக்கின்றது. மனம் உள்ள மட்டும் இந்தப் பிரபஞ்சமும் இருக்கும். ஆழ்ந்த நித்திரையின் போது மனம் என்பது கிடையாது. ஆகவே இந்த உலகமும் அங்கு கிடையாது. எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நீங்கள் பொருள்களைப்பற்றி எண்ணுகிறீர்களோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக இந்த உடல் உண்மையானது போல் தோன்றும். நீங்கள் அடிக்கடி இந்திரியப் பொருள்களைப் பற்றி நினைத்தால் இப்பிரபஞ்சத்தின் உண்மைத் தன்மையாகிய அபிப்பிராயமும் அதிகரித்துக் கொண்டே போகும். விழிப்பு நிலைதான் இந்த சிருஷ்டியை நம் முன்னே கொண்டு வந்திருக்கின்றது. விழிப்பு நிலை என்பது உள்ளம் வெளிப்பட்டிருப்பதே தவிர வேறில்லை. ஆகவே இது மாயையாக இருக்கிறது. இந்தப் பிரபஞ்சமானது சாசுவதமானதாக இருந்தால் இது நமது ஆழ்ந்த நித்திரை அனுபவத்தின் போதும் இருத்தல் வேண்டும். மனமானது சங்கல்பத்தன்மையிலிருந்து விடுதலையடையும் போது பிரபஞ்சம் என்பது இல்லாமல் போய் விடுகிறது. இந்தப் பிரபஞ்சமானது ஆழ்ந்த நித்திராவஸ்தையில் இருப்பதில்லை.

ஆழ்ந்த நித்திரை நிலையில் இவ்வுலகத்தைப் பற்றிய உணர்வு இருப்பதில்லை. ஏனென்றால் அப்போது உள்ளம் என்பது கிடையாது. இதிலிருந்து தெளிவாவது என்னவெனில் மனம் என்பது இருக்கும் வரைதான் இந்த உலகமும் தோன்றும். மனம் தான் இந்த உலகத்தை உற்பத்தி செய்கிறது. இந்தக் காரணத்தால்தான் ஸ்ருதிகள் இந்த உலகம் 'மனோ மாத்ர ஜகத்' என்றும், 'மனக் கல்பித ஜகத்' என்றும் பகருகின்றன.

காலம் என்பது உள்ளத்தினுடைய ஒரு முறையாகும். காலம் என்பது ஒரு மனோ சிருஷ்டி. காலம் என்பது மனம் செய்கின்ற ஒரு மாயாஜாலம் அல்லது செப்பிடுவித்தை யாகும். காலம் என்பது ஒரு வெறுந் தோற்றமே யாகும். பிரம்மன் காலத்திற்கு அப்பாற்பட்டவன். அது (பிரம்மன்) சாசுவதமானது. ஸ்தலத்திற்கு ஏற்ப நேரம் இருக்கிறது. சென்னையில் பகல் 12 மணியாக இருந்தால், கல்கத்தாவில் 12-23 மணியாகவும், ரங்கூனில் மாலை 1 மணியாகவும், சிங்கப்பூரில் 1-30 மணியாகவும், லண்டனில் காலை 6-30 மணியாகவும், சிகாகோவில் இரவு 12-30 மணியாகவும், நியூயார்க்கில் இரவு 1-30 மணியாகவும் இருக்கிறது. இவையெல்லாம் என்ன? ஒரு ஒழுங்கு கிடையாது. காலம் என்பது ஒரு மனோ சிருஷ்டி என்பதை இது காட்ட வில்லையா? காலத்தைக் கடந்து சென்று காலமற்ற சாசுவதமான, அழிக்கவொண்ணாத பிரம்மனில் தங்கி யிருங்கள்.

நாளை என்பது இருக்கிறது. இன்றாக இருப்பது நேற்றாக ஆகிவிடுகிறது. எதிர்காலம், நிகழ்காலமாகவும், நிகழ்காலம் இறந்த காலமாகவும் ஆகிவிடுகிறது. இவை கள் எல்லாம் என்ன? இவையெல்லாம் மனத்தினுடைய சிருஷ்டி அல்லது தந்திரமே தவிர வேறில்லை. ஈஸ்வர னிடத்தில் எல்லாம் நிகழ்காலமே. எல்லாம் இங்கேயே தான். பிரம்மன் காலத்தைக் கடந்தவன்.

சூரியனிடம் பகலோ, இரவோ, நேற்றோ, நாளையோ கிடையாது. மனம் காலத்தையும், தூரத்தையும் ஏற் படுத்தி இருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சிகரமாக இருக்கும் பொழுது காலம் சீக்கிரம் சென்று விடுகின்றது. நீங்கள் மகிழ்ச்சியின்றி இருக்கும் பொழுது காலம் உங்களுக்கு நீண்டு கொண்டே போகின்றது. இது ஒரு சம்மந்தப் படுத்துகின்ற உலகமேயாகும். ஐன்ஸ்டீன் அவர்களுடைய சம்பந்த அல்லது சார்புக் கொள்கையானது (theory of relativity) மாயை, இந்த உலகம் ஆகியவற்றின் குணத் தைப் பற்றி நல்ல விளக்கம் கொடுக்கிறது.

ஒரு மந்திரவாதி ஆகாயத்தில் ஒரு கயிற்றை வீசி யெறிகின்ருன். அதைப் பிடித்துக்கொண்டு வானத்தின் மீது ஏறி மறைந்து விடுகின்ருன். ஐந்து நிமிடங்கள் கழித்து சிதறிய அங்கங்களுடன் இறந்து போய் நிலத்தில் வந்து விழுகின்ருன். இன்ெருரு ஐந்து நிமிஷம் கழித்து அதே மந்திரவாதி உங்கள் முன்னிலேயில் நிற்கின்ருன். இப்பொழுது சொல்லுங்கள் பார்க்கலாம். அந்த மந்திர வாதி இறந்தது உண்மையா அல்லது பொய்யா? இந்த நிகழ்ச்சியை நீங்கள் உங்களுடைய சொந்தக் கண்களா லேயே கண்டீர்கள். இதைப் போன்றதுதான் பொருள்கள், இந்திரியத் தொடர்பு ஆகியவைகளின் உண்மையும்.

நீங்கள் அலாகாபாத்தில் ஒரு மாத காலம் இருந்தால் நீங்கள் உங்களுடைய சொந்த ஊராகிய சென்னேயைப் பற்றியும், நண்பர்கள், உறவினர்களேப் பற்றியும் முற்றிலும் மறந்து விடுகிறீர்கள். அலகாபாத்தில் நீங்கள் உங்களு டைய சொந்தமானதொரு புதிய உலகத்தையே சிருஷ்டி செய்து கொள்கிறீர்கள். நீங்கள் சென்னேக்கு திரும்பி வரும்பொழுது அலகாபாத்தைப் பற்றி முற்றிலும் மறந்து விடுகிறீர்கள். ஒரு உலகத்தை உற்பத்தி செய்வதெல்லாம் மனம் தவிர வேறில்லே. இந்த மயக்கத்தை (illusion) ஏற் படுத்துகின்ற இந்த மனத்தை அழித்து விட்டால் உங்க ளுக்கு உலகம் என்பது இருக்காது.

இந்த மனத்தினுடைய தந்திரத்திஞல்தான் ஒரு பர்லாங் தூரம் வெகு தூரமாகவும், மூன்று மைல்கள் மிகக் குறைந்த தூரமாகவும், தோன்றுகிறது. நீங்கள் இதை உங்களது வாழ்க்கையிலே கவனித்திருக்கலாம்.

சமாதி நிலேயிலே மனம் அழிக்கப்பட்டு விடுகின்ற காரணத்தால் உலகம் என்பது கிடையாது. கயிற்றிலுள்ள பாம்பானது விளக்கைக் கொண்டு வந்ததும் எப்படி மறைந்து போய் விடுகின்றதோ அதேபோல் வெறும் தோற்றமாகிய இந்த உலகமும் ஒருவன் ஞான ஒளியைப்

பெறும் பொழுது, ஞான சூரியன் உதிக்கும்பொழுது இல்லாததாகி விடுகிறது.

இந்த உலகம் பாலும் (sex) ஆணவத்தையும் (ego) தவிர வேறில்லை. ஆணவம் தான் முக்கியப் பொருள். இதுதான் அடிப்படை. பாலானது (sex) ஆணவத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறது. ''நான் யார்'' என்ற விசாரத்தின் மூலம் இந்த ஆணவமானது அழிக்கப்பட்டு விட்டால் பாலானது தனக்குத் தானே ஓட்டம் பிடித்து ஓடிவிடும். விதியின் எஜமானனாக விளங்கும் மனிதன் அறியாமை காரணமாக தன்னுடைய தெய்வீக மகிமையை இழந்து ஆணவத்திற்கும், பாலுக்கும் அடிமையாகி அதன் கைப்பாவையாக ஆகிவிட்டிருக்கின்றான். பாலும், ஆணவமும் அவித்தையினால் உண்டாக்கப்பட்ட பொருள்கள். ஆத்மனைப் பற்றிய ஆன்மீக அருணோதயமானது ஆத்மாவுக்கு எதிரிகளான இந்த இரண்டு கொள்ளையர்களும் ஆதரவற்ற, அறியாத, சிறிய, பொய்யான ஜீவனை இந்த மாயமாகிய நாளைக் கொள்ளையடித்துக் கொண்டிருக்கின்றன.

உலகமானது பரிணாமநித்யம் (நிரந்தர மாறுபாடுடையது, ப்ரம்மம் கூடஸ்த்த நித்யம் (மாறுபாடில்லாதது).

உலகம் சத்யம் (அறிவின் சம்பந்தத்தால்). பிரம்மன் சத்யஸ்ய சத்யம் (உண்மைக்கு உண்மை). உலகமானது வ்யாவஹாரிக சத்தா (அனுபவ உண்மை). ப்ரம்மம் பாரமார்த்திக சத்தா (நிலையான உண்மை). கனவு ஜந்துக்கள் (Dream creatures) ப்ராதிபாசிக சத்தாவாகும்.

ஒரு பரிச்சின்ன (எல்லைக்குட்பட்ட) பொருளானது எப்பொழுதும் அநித்யமே (நிரந்தரமில்லாதது). இது உங்களுடைய தினசரி வாழ்க்கையின் அனுபவமாக இல்லையா? உள்ளம், உடல், இந்திரியங்கள் ஆகியவற்றின் காரணமான பிரம்மன் அல்லது ஆத்மாவானது அபரிச்சின்னமாகும் (முடிவில்லாதது). நித்தியமானது

(நிரந்தரமானது). ஆகவே பிரணவமாகிய ''ஓமை''ப் பாடுவதின் மூலம் ஆத்மனை உணருங்கள். எல்லா துன்பங்களும் ஒழியும். நீங்கள் ஒரு தத்தாத்ரேயராகவோ அல்லது சங்கரராகவோ ஆக முடியும்.

இந்த உலகமானது அத்யந்த மித்யை அல்ல. (Atyanta Mithya). ஆனால் இது மித்யையே. எதைப்போலவெனில், முயலின் காது, கொம்பு போல் தோன்றுவது போலும். ''மலடியின் மைந்தன்'' என்று சொல்மாத்திரமாயிருப்பது போலவும், ''ஆகாயத்தில் தாமரை'' என்று, கருத்து மாத்திரமாயிருப்பது போலவும், வெறும் தோற்றமும், சொல்லும், கருத்தும் மாத்திரமாயிருக்கிறது. பிரம்மத்தைப் போன்று சத்தியத் தன்மையுடையதல்ல. பிரம்மனோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இது உண்மை அல்லாததாக இருக்கிறது. எனவே உலகம் என்பது வெறும் தோற்றம் தான். அதுதான் மித்யா எனப்படுவது. இப்பொழுது அன்புள்ள சந்திரா, நீ விஷயத்தைத் தெளிவாகப் புரிந்து கொண்டாயா? இனிமேல் இந்த மித்யா என்ற பதத்தைப் பொறுத்த மட்டில் தவறுகள் செய்யாதே. ''மித்யா'' என்கிற வார்த்தைக்கு தவறுதலான அர்த்தம் புரிந்து கொண்ட காரணத்தால் இந்துக்களுடைய உள்ளத்தில் ஒரு கடுமையான நாசத்தை உண்டுபண்ணி யிருக்கிறது. இது இந்திய மக்களிடையேயும், பெரும்பான்மையான சந்நியாசிகளிடையேயும் கூட பெருந்தன்மை யற்ற மனத்தை மாற்ற முடியாத தன்மையையும் (ignoble inertia) தேக்கத்தையும் ஏற்படுத்தி யிருக்கின்றது.

நீங்கள் இந்த உலகத்தை ''சத்'' என்றே வைத்துக் கொண்டாலும் கூட நீங்கள் நிச்சயமாக உங்களுடைய, ஸ்ரீ சங்கரருடைய கேவல அத்வைத சித்தாந்தத்தைக் காத்துக் கொள்ளலாம் (keep up). நீங்கள் இம்மியளவும் பிறழவேண்டியதில்லை. இதை மனதில் வைத்துக் கொள்ளுங்கள். எப்படி உஷ்ணமும் வெளிச்சமும் நெருப்புக்கு த்வைத (இரண்டு) தன்மையைக் கொடுக்க முடியாதோ அதே போல இந்த உலகமும் பிரம்மனுக்கு த்வைத

தன்மையைக் கொடுக்க முடியாது. சத்தியத் தோற்றம் எப்படி உண்மையை பாதிக்க முடியும்?

இந்த உலகம் என்பது அனாதி அல்லது ஆரம்ப மில்லாதது. கர்மமும் அனாதியானதே. கர்மத்தின் வழி யானது விசித்திரமானது. ஆத்ம ஞானத்தைப் பெறுங்கள். கர்மத்தினுடைய ரகசியம் உங்களுக்குப் புரிந்துவிடும்.

இந்த உலகத்திலே நிறைய நோயும், துன்பமும் தூண்டுதலும் இருப்பதால் இது கெட்ட உலகம் என்று சிலர் சொல்லுகின்றனர். ஆனால் நீங்கள் நற்கருமங்கள் செய்தால், ஜபம், தியானம் ஆகியவற்றைப் பயின்று வந்தால், நீங்கள் சாஸ்வதமான பேரானந்தத்தை அடை யலாம். இந்த கெட்ட உலகமானது உங்களுக்கு இனிய அழகான ஸ்வர்க்கமாக ஆகி விடும். உங்களுடைய உள்ளத்தைத் திருத்தி அதைப் பக்குவப் படுத்துங்கள். உங்களுக்கு இந்த உலகத்தைப் பற்றி மாறுபட்ட திருஷ்டி ஏற்படும்.

கடவுள் என்கிற ஒரே ஒரு ‘‘உண்மை’’தான் இருக் கிறது. அதைத் தவிர வேறொன்றும் இல்லை. இந்த உலக மானது அவனுடைய விளக்கம் (Manifestation). எல்லா நடவடிக்கைகளும், சம்பவங்களும், காரியங்களும் அவ னுடையவையே. எல்லாம் அவனே. இந்த உலகமானது அற்ப ஆயுளுடையது. நகர்ந்து கொண்டிருக்கும் ஒரு காட்சி, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் இருக்கின்ற ஒரு அம்சம். தனிப்பட்ட நிலை பேறு (individual existence) என்பது கிடையாது. அந்த தனிப்பட்ட தன்மையானது வெறும் கற்பனையும், மனதின் அறியாத் தன்மையுமே யாகும்.

இரண்டு என்கிற எண்ணானது ஒன்று என்கின்ற எண் இருக்கின்ற காரணத்தால் இருக்கின்றது. நீங்கள் சுண்டு விரலிலிருந்து ஒன்று என்று எண்ண ஆரம்பித்தால் கட்டை விரல் ஐந்தாவது எண்ணாகும்; கட்டை விரலிலிருந்து

எண்ணிஞல் கட்டை விரல் ஒன்ருகவும் சுண்டு விரல் ஐந்தாகவும் ஆகிவிடும். ஒன்று ஐந்தாகவும் ஐந்து ஒன்ருகவும் ஆகிறது. ஒன்று, இரண்டு, மூன்று முதலியவைகள் சம்பந்தப்படுத்துகின்ற எண்களே. இந்தத் தோற்றத்திற்கு ஒரு மாருத, உண்மையான, நிரந்தரமான ஆதாரம் அல்லது அடிப்படை (Substratum) இருந்தாக வேண்டும். அந்த ஆதாரம்தான் பிரம்மன் அல்லது உன்னுடைய சொந்த ஆத்மா. உண்மையில் இரண்டுமில்லே, மூன்றுமில்லே, ஒரே நிலே பேறு (existence) அல்லது உண்மை அல்லது பிரம்மன்தான் இருக்கிறது.

இந்த உலகமானது கல்பம், பிரளயம், அல்லது பகல், இரவு என்று சொல்லப்படுகின்ற எப்பொழுதும் திரும்பத் திரும்ப வருகின்ற காலமாகிய செயலால் தோன்றப்படுவதும் தோன்றப்படாமலிருக்கின்றதுமான தன்மைக்கு உட்பட்டது. (The world is subject to the ever recurent periods of activity and passivity known as Kalpa and Pralaya or day and night).

வாஸ்தவத்திலே எந்தப் பொருளுக்கும் இறப்பு என்பது கிடையாது. ஒரு கல் துண்டிலோ அல்லது ஒரு மரக் கட்டையிலோ ததும்பும் ஜீவன் இருக்கின்றது. அணுக்கள், மோல்க்யூல்கள் (molecules) எலெக்ட்ரான்கள் (electrons) ஆகியவைகள் எல்லாம் அபாரமான வேகத்தில் அதிர்ந்து சுற்றுகின்றன.

ஒரு நிரீஸ்வரவாதிக்கும், ஒரு நாஸ்திகனுக்கும் ஒரு வித்தியாசமுண்டு. நிரீஸ்வரவாதி என்பவன் ஈஸ்வரன் இருப்பதை (ஈஸ்வர சத்தா) மறுப்பவன். கபில முனியைப் பின்பற்றுபவர்கள், நிரீஸ்வரவாதிகள். நாஸ்திகன் என்பவன் இவ்வுடலே விட்டுத் தனியாக ஒரு ஆத்மா இல்லே என்று கூறுபவன். அவன் இந்த உடல்தான் ஆத்மா என்று கூறுபவன். மேலும் அவன் கூறுவதாவது பசுமையுடைய வெற்றிலேயும், வெண்ணிறமான சுண்ணும்

பும் சேர்ந்து குழம்பும்போது அவ்விரு நிறமுங் கெட்டு புதியதொரு செந்நிறம் தோன்றுவது போல இயக்கம் ஏற்படுகிறது என்கிருன். (Charvakas) சார்வாகர்கள் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள்தான். இந்த உடல் அழிந்து அல்லது இறந்துபடும்பொழுது ஆத்மா அழிந்து விடுகிறது என்று அவர்கள் கூறுகின்றனர்.

கடவுளை அறிய முடியாது என்று சொல்கிறவன் (agnostic) நாஸ்திகன் அல்லன். அவன் கடவுள் அறியப்பட முடியாதவர் என்றுதான் கூறுகின்ருன்.

நெபுலார் (Nebulor theory) கொள்கைப்படி வான வீதி அமைப்பு (Solar system) ஒவ்வொன்றும் ஆரம்பத்தில் வாயுப் பொருளாலான ஒரு பெரும் திரளாக இருந்தது. அது எல்லா இடத்தையும் நிரப்பி, தன்னுடைய சொந்த அச்சிலேயே (axis) சுழன்று கொண்டிருக்கிறது. காலம் செல்லச் செல்ல அந்த வாயுப் பொருளானது நெருப்பைப் போன்ற நிலையை அடைந்தது. மத்திய பாகம் சுருக்கமடைந்தது. அந்த திண்மையானது (Mass) மிக வேகமாகச் சுழன்று வெளிப் பக்கமாக வளையங்களை வீசியெறிந்தது. அவைகள் நாளடைவில் குளிர்ச்சி பெற்று கிரஹங்களாக மாறின. இந்த கிரஹங்கள் நெடுங்காலம் வரைக்கும் உருகிய அல்லது திரவ நிலையில் இருந்தன. படிப்படியாக அவைகள் குளிர்ச்சியடைந்து கெட்டியாக மாறின.

ஒரு முனிவனுக்கு இவ்வுலகம் பிரம்மனுகவும், ஒரு பக்தனுக்கு இறைவனுகவும், ஒரு விஞ்ஞானிக்கு சக்தி அல்லது எலெக்ட்ரான்களின் சேர்க்கைப் பொருளா (Mass) கவும் தோன்றுகிறது.

வெளிப்பக்கம் வெறும் மின்சார அதிர்ச்சி மட்டும் தான் இருக்கின்றது. இந்த உலகத்தில் எலெக்ட்ரான்கள் மட்டுமேயுள்ளன. ஒவ்வொரு பொருளும் மின்சாரமாகவும் பல்வேறு துரித எண்ணிக்கையும் வெவ்வேறு அலை நீளமும் கொண்ட அதிர்ச்சியுமாகும்.

ஒரு பிடி தூளிலுள்ள (dust) சக்தியானது, விடுவித்து விடும்போது, ஒரு மலையையே ஊதித் தள்ளிவிட முடியும். இதுதான் தற்கால விஞ்ஞானிகளின் கொள்கை. அவர்கள் இதைப் பரிசோதனைகள் மூலம் செய்து காட்ட முயற் சித்துக் கொண்டிருக்கின்றனர்.

விஞ்ஞானி அணுக்களை வெடிக்க வைத்து, தன்னு டைய சோதனைச்சாலையிலே அதிலிருக்கும் எலெக்ட்ரான் களின் அசைவைக் ,கவனிக்கின்றான். அவன் தன்னுடைய வாழ்நாள் முழுவதும், பொருள், சக்தி ஆகியவைகளின் குணாதிசயங்களையும், ரகசியங்களையும் புரிந்து கொள்வதற் காகச் செலவிடுகின்றான். பல விஷயங்களைப் புதிதாகக் கண்டு பிடிக்கிறான்; இயற்கையின் சட்டத்தை ஆராய் கிறான். இருந்த போதிலும் அவனால் சிருஷ்டி, சிருஷ்டி கர்த்தா ஆகியவற்றின் புதிரையும், வாழ்க்கையின் அர்த் தத்தையும் மனதால் கிரஹிக்க முடியவில்லை. அவன் தன்னைத் தானே அறிந்து கொள்ள விருப்பமில்லாதவனாக இருக்கின்றான். அவன் தன்னுடைய உள்ளத்தின் உள்ளே ஆழமாகச் சென்று அந்த மனித சக்திக்கு மேம்பட்டவனை அல்லது அந்தரங்கவாசியைக் கண்டு பிடிக்க விரும்ப வில்லை. அந்த அந்தரங்க வாசியானவன் அவனுடைய தோற்றம் அல்லது பொய்யான நான் என்கின்ற அகந் தைக்குப் பின்னால் இருப்பவன். அணுவை ஆட்டி வைப்பவன். இந்த அணுக்களுக்கு ஜீவனைக் கொடுப் பவன். பிரபஞ்சத்தின் சக்திக் களஞ்சியமாக இருப்பவன். மறைந்து கிடக்கும் இந்த ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக இருப்பவனை, அவனுடைய அறிவுக்கும், இந்திரியங்க ளுக்கும், அவனுடைய அணுக்களுக்கும் ஒளியைக் கொடுக்கின்றவனை நேருக்கு நேர் பார்க்காத வரைக்கும் அவன் (விஞ்ஞானி) இருளிலே தடுமாறிக்கொண்டுதான் இருக்க வேண்டும்.

விஞ்ஞானத்தின் எல்லா சாதனைகளும், ஆராய்ச்சி யின் முடிவுகளும் மனிதத் தன்மைக்கு லாயக்கற்ற காரியங்

களுக்காகவே பயன்படுத்தப் படுகின்றன. விஞ்ஞானமானது மனிதனுடைய உண்மையான அமைதிக்காக எந்த உதவியும் செய்ய வில்லை. இது மனிதனுடைய வாழ்க்கையை மேலும் சிக்கலுள்ளதாகவும், படாடோபமுடையதாகவும் செய்திருக்கிறது. பல ஆடம்பரங்களை வாழ்க்கையின் அத்தியாவசியமாக ஆக்கிவிட்டன. நாம் இயற்கைக்குத் திரும்பிச் சென்று ஒரு சில தேவைகளுடன், நிறைந்த பக்தி, தியானம் ஆகியவற்றுடன் அமைதியான, திருப்தியான வாழ்க்கையை நடத்துவோமாக. போதும் விஞ்ஞானத்தைப் பற்றி. போதும் ஆராய்ச்சிகள். ஓ விஞ்ஞானிகளே ! மனதை உட்புறமாகத் திருப்புங்கள். ஆத்மீக ஆராய்ச்சி செய்து ஆத்மாவின் விலை மதிக்கவொண்ணாத செல்வங்களை வெளியே கொண்டு வாருங்கள்.

எந்த ஒரு பொருளைப் பற்றி தெரிந்து கொள்வதின் மூலம் மற்ற எல்லாப் பொருள்களும் தெரிந்துவிடுமோ, எதை அடைவதின் மூலம் மற்ற எந்தப் பொருளின் மீதும் விருப்பம் ஏற்படாதோ, எந்தப் பொருளை ஒருவன் உணர்வதின் மூலம் மரணம், பயம், ஆசை இலாப் பெருவாழ்வைப் பெற்று நிரந்தரமான அமைதி, ஆனந்தத்தில் நிலை பெற்று விடுகின்ருனோ அந்தப் பொருள் எது ? அது தான் பிரம்மன் அல்லது ஆத்மன் அல்லது முடிவான உண்மை. அதுவே வாழ்க்கையின் லக்ஷியமாக இருப்பது. இதுதான் பூமா ( Bhuma ) அல்லது மிக உயர்ந்தது அல்லது நிபந்தனையற்றதாகும். இந்த பூமா அல்லது மிக உயர்ந்த ஆத்மனை அடைவதின் மூலம்தான் நீங்கள் உண்மையான ஆனந்தத்தை அடைய முடியும்.

## 3. மறு பிறப்பின் தத்துவம்

மனிதனை ஒரு செடிக்கு ஒப்பிடலாம். அவன் செடியைப் போல வளருகிருன் ; செழிப்படைகிருன். முடிவிலே இறந்துபடுகின்ருன். ஆனல் முற்றிலும் இறப்பது இல்லை. செடியும் வளருகிறது. செழிக்கிறது. முடிவில் இறந்து

விடுகிறது. அது தனக்குப் பின்னால் ஒரு புதுச் செடியை உண்டாக்கவல்ல விதையை விட்டுச் செல்கின்றது. மனிதன் இறக்கும்பொழுதும் பின்னாலே அவனுடைய கர்மங்களை – வாழ்க்கையின் நல்வினை, தீவினைகளை விட்டுச் செல்கின்றான். இந்த ஸ்தூல சரீரம் சாகலாம், அழியலாம், ஆனால் அவனுடைய செய்கைகளின் பதிப்புகள் சாகிறதில்லை. இந்தச் செய்கைகளின் பலன்களை அனுபவிக்க அவன் மறுபடி மறுபிறவி எடுத்தாக வேண்டியிருக்கிறது. எந்த ஒரு வாழ்க்கையும், ஆதி அல்லது முதலாக இருக்க முடியாது. ஏனெனில் அது முன் செய்த வினைகளின் பலனாகும்; அல்லது கடைசியாகவும் இருக்க முடியாது. ஏனெனில் அதனுடைய கர்மங்கள் அதைத் தொடர்ந்து வரும் ஜன்மங்களில் ஈடு செய்யப்பட்டாக வேண்டும். ஆகவே சம்சாரமானது ஆதியும் அந்தமும் இல்லாதது. ஆனால் ஒரு ஜீவன் முக்தன் அல்லது விடுதலை பெற்ற ஆத்மாவுக்கு சம்சாரம் என்பது கிடையாது. அவன் தன்னுடைய சொந்த சத்-சித்–ஆனந்த ஸ்வரூபத்திலே நிலை பெற்று இருக்கின்றான்.

ஒரு மனிதன் இறக்கும்பொழுது அவன் தன்னுடன் 5 ஞான இந்திரியங்கள், 5 கர்ம இந்திரியங்கள், 5 பிராணுக்கள், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவைகளான இந்த நிரந்தரமான லிங்க சரீரத்தையும், அடுத்த ஜன்மாவினுடைய உருவை நிர்ணயிக்கின்ற மாறுபாடடைகின்ற கர்மாஸ்ரயத்தையும் (வேலைகளின் களஞ்சியம் ஆத்மாவின் செய்கைகள்) எடுத்துச் செல்கின்றான்.

ஆலந்தியிலுள்ள பிரஸித்தி பெற்ற யோகியான ஸ்ரீ ஞானதேவர் கீதா ஞானேஸ்வரியைப் பற்றிய தன்னுடைய விமரிசனத்தை அவருடைய பதினாறுவது பிராயத்திலேயே எழுதினார். அவர் பிறவிச் சித்தர். நீங்களும் சரியான மனோபாவத்துடன் முயற்சி செய்தால் ஒரு சித்தர் ஆக முடியும். ஒருவர் என்ன அடைகின்றாரோ அது மற்றவராலும் அடையப்பட முடியும்.

இப்பிறவியிலே ஒரு குற்றமும் செய்தறியாத ஒரு பச்சிளங் குழந்தையானது பெரும் துன்பத்திற்கு ஆளாகிற தென்றால் அது முற்பிறப்பிலே செய்த தீவினையின் பலன் தான். எவ்வாறு அந்த மனிதன் முற்பிறப்பிலே தீய செய்கைகளைச் செய்யத் தூண்டப்பட்டான் என்று நீங்கள் கேட்டால் அது அதற்கு முந்திய பிறவியிலே செய்த கெட்ட செய்கைகளின் பலனாகும். இது போலவே கர்ம பலன் தொடர்ந்து வரும்.

பல அறிவாளிகளான தந்தைமார்களுக்கு மந்த புத்தியுடைய பிள்ளைகள் இருக்கின்றனர். உங்களுடைய முற்பிறப்பிலே நீங்கள் பசியால் தவித்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு ஆட்டிடையன் உங்களுக்கு உணவும், தண்ணீரும் கொடுத்திருந்தால் அவன் இப்பிறவியில் உங்களுடைய சொத்தை அனுபவிக்க, குறைந்த புத்தி தீக்ஷண்யத்துடன், உங்கள் மகனாகப் பிறப்பான்.

ஜீவ ஜந்துக்கள் பிறந்தால் மடியிலிருந்து பாலை உறிஞ்சிக் குடிக்க ஒரு ஆர்வத்தையும், ஒரு விதமான பய உணர்ச்சியையும் காட்டுகின்றன. ஆகவே அவைகள் முற்பிறப்பிலே பால் குடித்ததையும், அனுபவித்த வலிகளையும் ஞாபகத்தில் வைத்திருக்கின்றன என்றாகின்றது. இது புனர் ஜன்மம் அல்லது மறுபிறப்பு உண்டு என்பதைக் காட்டுகிறது.

ஒரு குழந்தையும் கூட ஹர்ஷம் (சந்தோஷம்) சோகம் (துக்கம்), பயம், கோபம், மகிழ்ச்சி, துன்பம் ஆகியவைகளை அடைகின்றது. இவைகளுக்கு இப்பிறப்பினுடைய தர்மாதர்ம சம்ஸ்காரங்கள் காரணமாக இருக்க முடியாது. முற்பிறப்பின் சம்ஸ்காரங்களுக்கு ஒரு ஆதரவு (ஆஸ்ரயம்) இருந்தாக வேண்டும். இதிலிருந்து முற்பிறப்பில் ஜீவன் இருந்தது என்பதையும், ஜீவன் அனாதி அல்லது ஆரம்பமில்லாதது என்பதையும் முடிவு கட்டலாம். ஜீவன் அனாதி என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்ளாவிடில்

கிருதநாசம் (செயலழிவு), அக்ருதாப்யாகமம் (செய்யாமையடைவு) என்று சொல்லப்படுகின்ற இரண்டு தோஷங்களும் உள்ளே புகுந்து விடும். முன்பு செய்த நல்வினை, தீவினைகளின் பலன்களாகிய சுகமும், துக்கமும் அனுபவிக்கப் படாமலேயே அழிந்ததாக ஆகி விடும். இதுதான் கிருதநாசம் என்னும் தோஷம். ஆகையால் எப்படியும் முன்பு அவனால் செய்யப் பட்ட நல்வினை, தீவினைகளின் பலன்களாகிய சுக துக்கங்களை அனுபவித்தேயாக வேண்டி யிருக்கிறது. காரணமின்றி சுக துக்கானுபவமுண்டாகிறது என்று சொல்லப் படுவதுதான் அக்ருதாப்யாகமம் எனப்படுவது. இந்த இரண்டு தோஷங்களும் தட்டாமலிருப்பதற்காக ஜீவன் அனாதி அல்லது ஆரம்பமில்லாதது என்பதை ஒத்துக்கொள்ளவேண்டியதே.

"குண்டலினியை எழுப்புவது ஒருவன் சிரசாசனம், அல்லது பஸ்சிமோத்தானாசனம் அல்லது கும்பகம், அல்லது மகாமுத்திரை என்பவை எவ்வளவு நேரம் பயில வேண்டும்? யோகத்தைப் பற்றிய எந்தப் புத்தகத்திலும் இதைப்பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லையே" என்று சில யோக மாணாக்கர்கள் என்னைக் கேட்கின்றனர். ஒரு மாணவன் அவனுடைய சாதனையை முற்பிறப்பில் எந்த இடத்தில் அல்லது எந்த படியில் விட்டானோ அந்த இடத்திலிருந்து தான் அதைத் தொடங்குகிறான். ஆகவேதான் கண்ணபிரான் அர்ஜுனனிடம் சொல்கிறார்: "குருகுலத்தை மகிழ்விக்கும் அர்ச்சுனா! "அல்லது அவன் நல்ல யோகிகளின் குடும்பத்தில் பிறக்கலாம் அங்கு அவனுடைய முந்தைய உடலின் குணாதிசயங்களைத் திரும்பப் பெற்று மறுபடியும் அவன் பூர்ண நிலையை யடையப் பாடுபடுகின்றான்". — அத். VI-42-43. இது எல்லாம் தூய்மையின் தன்மை, பரிணாமமடைந்த நிலை, நாடிகள், பிராணமய கோசம் ஆகியவற்றின் தூய்மை பெற்ற அளவு வைராக்கியத்தின், அளவு, விடுதலை வேட்கையின் அளவு ஆகியவைகளைப் பொறுத்திருக்கின்றது.

சிலர் அவர்களுடைய முற்பிறப்பிலே தேவையான ஒழுக்கங்களை கடைப்பிடித்திருக்கின்ற காரணத்தாலே பிறக்கும் பொழுதே ஆத்மானுபூதிக்குத் தேவையான குணங்களுடனும் பிறக்கின்றார்கள். அவர்கள் பிறவிச் சித்தர்கள். குரு நானக், ஆலந்தியைச் சேர்ந்த ஞான தேவர் ஆகியோர்கள் இளம் பிராயத்திலேயே மேதைகளாக விளங்கியவர்கள். குரு நானக் பையனாக இருக்கும் பொழுதே பள்ளி ஆசிரியரை "ஓம்" என்ற பிரணவத்தின் முக்கியத்துவத்தைப் பற்றிக் கேட்டார். வாமதேவர் தனது தாயின் கர்பத்திலிருக்கும் போதே வேதாந்தப் பிரசங்கம் செய்தார்.

மனிதன் பலன்களை எதிர்யார்த்து காரியங்களைச் செய்கின்ற காரணத்தால் அந்தக் காரியங்களின் பலனை அனுபவிப்பதற்காக ஒரு பிறவி எடுக்கின்றான். அடுத்த பிறவியில் மேற்கொண்டு சில கர்மங்களைச் செய்வதால், அவன் மற்றொரு பிறவியை எடுக்கவேண்டியிருக்கிறது. இவ்வாறாக சம்சார சக்கரமானது என்றென்றும் நிரந்தரமாகச் சுழன்ற வண்ணமாக இருக்கிறது. ஆத்ம ஞானத்தை ஒருவன் அடையும் பொழுது அவன் இந்த பிறப்பிறப்பாகிய சுழலிலிருந்து விடுபடுகின்றான். கர்மம் ஆரம்பமில்லாதது. அதே போல் சம்சாரமும் ஆரம்பமில்லாதது. பலனை எதிர்பாராமல் தன்னலமற்ற மனோபாவனையில் ஒருவன் கர்மங்களைச் செய்தால் கர்மத்தினுடைய எல்லாச் சங்கிலிகளும் படிப்படியாக தளர்ந்து விடுகின்றன.

வாழ்வதற்காகச் சாவு. இந்தச் சிறிய "நான்"-ஐக் கொன்று அமரத்துவத்தை அடை. பிரம்மனில் வசி. நீ என்றென்றும் வசிப்பாய். ஆத்மாவை உடையவனாக இரு. உனக்கு சாஸ்வதமான வாழ்க்கை கிட்டும் உன்னுடைய ஆத்மாவுடன் அடையாளம் காட்டிக்கொள். நீ இறப்பு அல்லது சம்சார சாகரத்தைக் கடப்பாய். உன்னுடைய சத்-சித்-ஆனந்த ஸ்வரூபத்திலே தங்கியிரு. உனக்கு நிரந்தர வாழ்வுண்டு.

ஒரு அட்டையானது ஒரு புல்லின் இதழ்மீது நகர்ந்து கொண்டே சென்று அதன் நுனியை அடைகிறது. அது முதலில் மற்றொரு இதழை அதனுடைய உடலின் முன் பகுதியால் பற்றிக் கொண்டு பிறகு அதனுடைய பிற்பகுதியை அதற்கு (அது) இழுத்துக் கொள்கின்றது. இதே போல் இந்த ஜீவாத்மன் (தனிப்பட்ட ஆத்மா) சாகுந்தருவாயில் இந்த உடலை விட்டு விட்டு அவனுடைய எண்ணத்தின் மூலமாக அடுத்துவரும் தேகத்தை நிர்ணயித்துக் கொண்டு அந்த உடலிலே புகுகின்றது.

ஒரு நல்ல அல்லது கெட்ட செய்கையானது அதனுடைய நல்ல அல்லது கெட்ட பலனைக் கொடுக்கின்றது. ''எப்படி ஒரு கன்றுக் குட்டியானது அதனுடைய தாயை ஆயிரம் பசுக்களிடையிலும் கண்டு பிடித்து விடுகின்றதோ அதே போல முற்பிறப்பில் செய்த ஒரு வினையானது அதைச் செய்தவனைத் தொடர்ந்து வருகின்றது'' என்று மகாபாரதத்தில் நீங்கள் காணலாம்.

யாத்ரிசம் க்ரியதே கர்மா தாத்ரிசம் புஜ்யதே பலம்,
யாத்ரிசம் வப்யதே பீஜம் தாத்ரிசம் ப்ராப்யதே பலம்.

எப்படி ஒரு பழமானது விதைக்கப்பட்ட விதையைப் பொறுத்து இருக்கிறதோ அதே போல நாம் செய்த வினைகளின் பலன்களும் நாம் செய்கின்ற வினைகளின் தன்மையைப் பொறுத்திருக்கிறது. இது இயற்கையின் பொய்ப்பிக்க முடியாத ஒரு சட்டமாகும். மாங்கொட்டையை நட்ட ஒருவன் பலாப் பழத்தை எதிர்பார்க்க முடியாது. தன்னுடைய வாழ்நாள் முழுதும் தீவினைகளையே செய்து வரும் ஒருவன் அடுத்த பிறவியிலே சந்தோஷத்தையும், அமைதியையும், செழிப்பையும் எதிர்பார்க்க முடியாது.

''நாம் எல்லோரும் கடந்த காலத்தில் ஒன்று கூடி இருந்த தடவைகள் பல. அதேபோல பிரிக்கப்பட்டதும், இனிமேலும் நடக்கப் போவதும் அது போலவே. ஒரு

களஞ்சியத்திலிருந்து மற்ருெரு களஞ்சியத்திற்கு மாற்றப் பட்டுக் கொண்டிருக்கும் ஒரு தானியக் குவியலானது எப்படி சதா புதுப்புது முறையான அமைப்பு முறையையும் (Order of arrangement) புதுக்கலவையையும் அடைகின் றதோ அதே போன்றதுதான் இந்த ஏற்பாட்டின்படி இந்தப் பிரபஞ்சத்தில் ஜீவன்களின் (மனித வர்க்கம்) விஷயமும்'' (யோக வாசிஷ்டம்).

## 4. சாவு என்ருல் என்ன ? அதை வெல்லுவது எப்படி ?

மரணம் என்பது வேறும் உருமாற்றமேயாகும். மரணம் என்பது ஸ்தூல சரீரத்திலிருந்து சூக்ஷ்ம சரீரத் தைப் பிரிப்பதுதான். என் பிரியமுள்ள விஸ்வநாதா, சாவைப் பற்றி நீ ஏன் இப்படி பயப்படுகிருய் ?

தூக்கத்தைத் தொடர்ந்து விழிப்பு ஏற்படுவதைப் போல சாவைத் தொடர்ந்து பிறப்பு ஏற்படுகின்றது. உன் னுடைய முன் ஜன்மத்திலே நீ விட்டுச் சென்ற காரி யத்தை தொடர்ந்து செய்யப் போகின்ருய். ஆகவே சாவைக் கண்டு அஞ்சற்க.

இந்த சாவைப் பற்றிய எண்ணமானது மதம், மத வாழ்க்கை ஆகியவற்றின் மிகப் பலம் பொருந்திய சிந்தனு சக்தியாக (motive power) எப்பொழுதும் இருந்து வருகிறது. மனிதன் சாவிற்கு அஞ்சுகிருன். வயதான காலத்திலே இறைவனைப் பற்றி நினைக்க முயற்சி செய்கிருன். அவன் தன்னுடைய இளமைப் பருவத்திலிருந்தே கடவுளைப் பற்றி நினைத்து வந்திருந்தால் அவன் முதுமைப் பருவத்திலே நல்ல வளமான ஆத்மீக அறுவடையைப் பெறுவான். மனிதன் இறப்பதற்கு விரும்புவதில்லை. அவன் சாஸ்வத மாக வாழ விரும்புகின்ருன். இதுதான் தத்துவத்தின் ஆரம்ப கட்டம். தத்துவம் (Philosophy) விசாரிக்கிறது.

துப்பு துலக்குகிறது. இது ''ஓ மனிதா, சாவைக் கண்டு அஞ்சாதே; அழியாத வீடு ஒன்று இருக்கிறது. அது தான் பிரம்மன். அது உன்னுடைய ஆத்மாவாக இருக்கிறது. அது உன்னுடைய உள்ளமாகிய அறையிலே வீற்றிருக்கிறது. உன்னுடைய உள்ளத்தை தூய்மைப்படுத்தி இந்தத் தூய்மையான, அழியாத, மாற்றமில்லாத ஆத்மாவைத் தியானம் செய். நீ இறவாத தன்மையை எய்துவாய்'' என்று தைரியமாகப் பறை சாற்றுகிறது.

ஓ மனிதா, இறப்பைப் பற்றி எள்ளளவேனும் பயம் கொள்ளாதே. நீ இறவாதவன். இறப்பு என்பது வாழ்க்கைக்கு எதிரானது அல்ல. அது வாழ்க்கையின் ஒரு பகுதி மாத்திரமேயாம். வாழ்க்கை முடிவின்றி தொடர்ந்து வருகின்றது. பழம் அழிந்து போகின்றது. ஆனால் விதை ஜீவன் ததும்ப இருக்கிறது. விதை இறந்துவிடுகிறது. ஆனால் ஒரு பெரிய மரம் அதிலிருந்து வளருகின்றது. மரம் அழிந்து விடுகின்றது. ஆனால் அது ஜீவன் நிரம்பிய கரியாக ஆகிறது. தண்ணீர் மறைகின்றது. ஆனால் அது கண்ணுக்குத் தெரியாத ஆவியாக ஆகிறது. அதிலே ஒரு புது வாழ்வுக்கான விதை அடங்கியுள்ளது. கல் மறைந்து விடுகின்றது. ஆனால் அது ஜீவன் நிரம்பிய சுண்ணாம்பாக ஆகிவிடுகிறது. இந்த உடலாகிய உறை மட்டுமே எரித்து விடப்படுகிறது. ஆனால் ஜீவன் நிலைத்திருக்கிறது.

நண்பா, ''இந்த நிலப்பரப்பிலே சாவுக்கு அஞ்சாத யாராவது ஒருவன் இருக்கிறான் என்று உன்னால் சொல்ல முடியுமா? பயங்கரமான கஷ்டத்திலே அகப்பட்டுக் கொண்டு விழிக்கும்போது, உயிர் அந்தரத்திலே ஊசலாடிக் கொண்டிருக்கும்பொழுது, அல்லது அவன் தாங்கொணாத அவஸ்தைப் படும்பொழுது பகவானுடைய நாமத்தை உச்சரிக்காத எவனாவது ஒருவன் உண்டென்று சொல்ல முடியுமா?'' அப்படியிருக்க, ஓ சந்தேகப் பேர் வழிகளே, நீங்கள் கடவுள் இருக்கிறார் என்பதை மறுக்கின்றீர்களா? நீங்கள் கஷ்டத்திலே சிக்கிக் கொண்டிருக்கும்

பொழுது நீங்களே அவன் இருப்பதை ஒத்துக்கொள்கிறீர்கள். தவருன அறிவு காரணமாகவும், உலகாயுத போதை காரணமாகவும், நீ ஒரு நாஸ்திகனுக மாறியிருக்கின்ருய்' இது ஒரு பெருத்த முட்டாள் தனமல்லவா ? தீவிரமாக சிந்தனே செய்து பார். தர்க்கம் செய்வதை விட்டு விடு. அவனே ஞாபகத்தில் வைத்து இப்பொழுதே அழியாத் தன்மையையும், நிரந்தர அமைதியையும் பெறுவாயாக.

கருட புராணத்திலும், ஆத்ம புராணத்திலும் சாவினுடைய வலியானது 72,000 தேள்கள் கொட்டிய வலிக்குச் சமமாகும் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இது எதற்குக் கூறப்பட்டிருக்கிறதென்ருல் இதைக் கேட்பவர்கள், அல்லது படிப்பவர்களின் உள்ளத்தில் ஒரு திகிலே உண்டாக்கி (பயானக சப்தம்) மோக்ஷத்தை அடைய அவர்களே முயற்சி செய்விக்கும் பொருட்டுத்தான். அத்மீகத்திலே விளக்கமடைந்த ஆன்மாக்களிடமிருந்து கிடைத்துள்ள ஏகமனதான அபிப்பிராயம் என்னவென்ருல் சாகும் தருவாயில் இம்மியளவும் வலியென்பதே கிடையாது என்பதுதான். இறக்கும்பொழுது அவர்களுடைய அனுபவத்தை தெளிவாக்க வர்ணித்துக் கூறுகின்றனர். இந்த ஸ்தூல சரீரமாகிய பெரியதொரு சுமையிலிருந்து அவர்கள் விடுவிக்கப்படுவதாகவும், இந்த ஸ்தூல சரீரத்திலிருந்து அவர்கள் பிரிபடும்பொழுது அவர்கள் பூரணமான அமைதியை அனுபவித்ததாகவும், கூறுகின்றனர். மாயையானது உடலுக்கு வலிப்பு போன்ற உதறல்களே (Convulsive twitching) உண்டு பண்ணி பார்ப்பவர்களிடம் ஒரு வீணை பயத்தை ஏற்படுத்துகிறது. அது அவளுடைய குணமும் வழக்கமுமாகும். சாவு வலியைப் பற்றி பயப்படாதீர்கள். நீங்கள் அமரர்கள். (இறவாத தன்மையுடையவர்கள்.)

ஜபம், கீர்த்தனே, ஏழைகள் சேவை, தியானம் ஆகியவற்றின் மூலம் இறைவனிடம் வசிப்பதற்கு இடையருது உழையுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் காலத்தை அல்லது இறப்பை வெல்ல முடியும்.

யமன் உங்களுடைய உயிரை எடுத்துச் செல்ல வரும் பொழுது ''எனக்கு என்னுடைய வாழ்நாளில் கடவுளைத் தொழுவதற்கு நேரம் இல்லை'' என்ற உங்களுடைய சாக்குப் போக்குகளை ஏற்றுக் கொள்ளமாட்டான்.

நம்மை அறியாமை, சாவு என்ற பிடியிலிருந்து விடுவிக்க பிரம்ம ஞானம் ஒன்றினால் தான் முடியும். இந்த ஞானமானது நமக்கு நேரடியான ஒரு உணர்வாக தியானத்தின் மூலம் வரவேண்டும். வெறும் மேதாவித் தனமோ, அல்லது அறிவோ அல்லது மத சம்மந்தமான புஸ்தகப் படிப்போ நமக்கு வாழ்க்கையின் லக்ஷியத்தை அடைய உதவி புரியாது. இது நேர்முகமாக அனுபவித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமே யொழிய தர்க்கத்திற்கும், பகுத்தறிவுக்கும் உரிய விஷயமல்ல.

மானஸீகமான பிரச்சனைகளை (abstract problems) வழக்கமாக ஆராய்ந்து வருவதால் அது மானஸீகமாக எண்ணிப் பார்ப்பதற்கான நல்ல பக்குவப்படுத்தப்பட்ட சக்தியுடன் கூடிய மற்றொரு பூவுலக வாழ்க்கையைக் கொடுக்கும். ஆனால் மேம்போக்கான அவசரப்பட்ட, பொருளுக்குப் பொருள் பறந்து செல்கின்ற எண்ணமானது இவ்வுலகிலே மறுபடி தொடர்ந்து வரப் போகும் வாழ்க்கைக்கு அமைதியற்ற ஒழுங்கற்ற மனத்தையே விட்டுச் செல்லும்.

ஆத்ம ஞானமானது மனிதவர்க்கத்தின் துன்பத்திற்கு அடிப்படைக் காரணமான அவித்தை அல்லது அறியாமையை நீக்கி உங்களிடம் ஆத்மாவின் ஒருமைப்பாட்டு ஞானத்தை உண்டு பண்ணும். இதுதான் துயரம், மயக்கம், பிறப்பு, இறப்பாகிய பயங்கரப்பிணி சம்சாரத்துடன் சேர்த்து செல்லுதல் (Concomitants of Samsara) ஆகியவைகளை ஒழித்துக்கட்ட வழியாகும்.

தூய நினைவாகிய சூரியன் உன்னுடைய உள்ளத்தின் அறையிலே பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். சூரியர்

களுக்கெல்லாம் சூரியனுன இந்த ஆத்மீக சூரியன் சுய ஒளியுடையவன். இது வாக்கு, மனம், ஆகியவற்றைக் கடந்து நிற்கும் எல்லா ஜீவன்களின் ஆத்மாவாகும். இந்த ஆத்மனை நீங்கள் உணர்ந்துவிட்டால் நீங்கள் மறுபடியும் இந்த சாவுலகம் அல்லது மிருத்தியுலோகத் திற்குத் திரும்பி வரமாட்டீர்கள்.

பிறப்பும் இறப்பும் மாயையின் செப்பிடு வித்தையால் இந்த உலகமாகிய நாடகத்தில் உற்பத்தி செய்யப்படுகின்ற இரண்டு காட்சிகள். உண்மையில் யாரும் வருவதுமில்லை. யாரும் போவதுமில்லை. ஆத்மன் மட்டும்தான் எப்பொழுதும் இருக்கிறது. விசாரத்தின் மூலம் மோஹத்தையும், பயத்தையும் ஒழித்துக் கட்டிவிட்டு அமைதியில் நிலைத் திருங்கள்.

" சூரியனைப் போல் பிரகாசமுடையவனும், இருளைக் (அஞ்ஞானம்) கடந்து நிற்பவனுமாகிய அந்த தீர புருஷனை நான் அறிவேன். அவனை அறிவதினுல் மட்டுமே ஒருவன் இறப்பை வெல்லுகிருன். விடுதலை அல்லது மோக்ஷத்திற்கு இதைத் தவிர வழி கிடையாது.

(யஜுர் வேதம் XXXI–181)

யோகத்தை நோக்கிச் செய்யப்படும் ஒவ்வொரு முயற்சியும் ஒருபோதும் வீண் போவதில்லை. ஒரு சிறிதளவு யோகப் பயிற்சியின் மூலம்கூட அதன் பலனை உணருவீர்கள். இப்பிறப்பில் யோகத்தில் மூன்று அங்கங்களான இயமம், நியமம், ஆசனம் ஆகியவற்றைப் பயிலுவதிலே வெற்றி பெற்றுவிட்டால் உங்களுடைய பயிற்சியை அடுத்த பிறவியில் நான்காவது அங்கத்திலிருந்து தொடங்குவீர்கள். விவேகம், வைராக்கியம் என்கின்ற இரண்டு மார்க்கங்களை இப்பிறப்பில் அடைந்துவிட்ட வேதாந்தி ஒருவன், அடுத்த பிறவியிலே ஆறுவித நற்குணங்களாகிய சமம், தமம் முதலியவற்றிலிருந்து அவனுடைய பயிற்சியைத் தொடங்குவான். ஆகவே இப்பிறப்பில் நீங்கள் கைவல்யம் அல்லது விடுதலை, அல்லது முடிவான அசம்ப்ரக்ஞாத

சமாதி நிலையை அடையாவிட்டாலும் கூட நீங்கள் ஒரு சிறிது கூட அதைரியப்பட வேண்டியதில்லை. குறுகிய காலத்தில் பயின்ற ஒரு சில பயிற்சியும் கூட உங்களுக்கு அதிக பலத்தையும், சந்தோஷத்தையும், அதிக ஞானத்தையும் அளிக்கும்.

நீ இறக்க முடியாது, ஏனென்றால் நீ ஒரு போதும் பிறக்கவில்லை. நீ அழியாத ஆத்மாவாக இருக்கிறாய். மாயையினுடைய நாடகத்திலே பிறப்பும் இறப்பும் இரண்டும் பொய்யான காட்சிகளாகும். அவைகள் இந்த உடல் உறையோடு மட்டும் சம்மந்தப்பட்டவை. இது (இந்த உடல்) ஐந்து மூலப் பொருள்களின் சேர்க்கையால் ஏற்பட்ட ஒரு வஸ்துவாகும். பிறப்பு இறப்பு ஆகியவற்றைப் பற்றிய கருத்துக்கள் எல்லாம் வெறும் அஞ்ஞான பயமே தவிர வேறில்லை.

இந்த ஸ்தூல சரீரமானது களிமண் அல்லது பிருத்வியால் செய்யப்பட்ட ஒரு விளையாட்டு பொம்மை. இது இறைவனுடைய லீலைக்காகப் படைக்கப்பட்டது. அவன் தான் இந்த பொம்மையை ஆட்டி வைப்பவன். அல்லது சூத்திரதாரி. அவன் எவ்வளவு நேரம் விரும்புகின்றானோ அது வரைக்கும் அவனுடைய பொம்மையை ஆட்டிக் கொண்டிருக்கிறான். நாளடைவில் அந்த பொம்மையை உடைத்து அந்த உடைந்த துண்டுகளை (ஸ்தூல, சூக்ஷ்ம தேகங்களை) வீசி யெறிந்து விடுகின்றான். இரண்டினுடைய சேர்க்கை விளையாட்டு அதோடு முடிந்து விடுகின்றது. இப்பொழுது ஒன்றே ஒன்று மட்டும் இருக்கின்றது. இந்த தனிப்பட்ட ஆத்மா மேலான ஆத்மாவுடன் இரண்டறக் கலந்து விடுகின்றது.

ஆத்மனைப் பற்றிய ஞானமானது இறப்பைப் பற்றிய சகல பயத்தையும் அழித்து விடுகின்றது. மக்கள் அநாவசியமாக இறப்பைக் கண்டு பீதியடைகின்றனர். சாவு என்பது தூக்கத்தைப் போல. பிறப்பு என்பது தூங்கி

காலையில் விழிப்பதைப் போல. நீங்கள் எப்படி புது ஆடைகளை உடுத்திக் கொள்கிறீர்களோ அதுபோல் நீங்கள் இறந்தபின் புது உடலை அணிந்து கொள்கிறீர்கள். சாவு என்பது இயற்கையாக அதனுடைய போக்கிலே ஏற்படுகின்ற ஒரு சம்பவம். இது உன்னுடைய பரிணமத்திற்கு அவசியம் தேவைப்படுகின்றது. இந்த ஸ்தூல சரீரமானது மேல் கொண்டு காரியங்களுக்கும், உபயோகத்திற்கும் தகுதி யற்றதாகிவிடும்பொழுது ருத்ர பகவான் இதை எடுத்துக் கொண்டு ஒரு புது உடலைக் கொடுக்கின்றான். சாகும் பொழுது வலி அல்லது துன்பம் என்பதே கிடையாது. அறியாத பாமரர்கள் சாவைப்பற்றி அதிகமான பயத்தையும், பீதியையும் உற்பத்தி செய்து வைத்து விட்டனர்.

பிரம்மன் என்கின்ற ஒரே ஒரு உண்மை மட்டும் தான் இருக்கிறது. இந்த உலகமும் உடலும் எப்படி கயிற்றின் மீது பாம்பு சுமத்தப்பட்டதோ அதேபோல் பிரம்மன் மீது சுமத்தப்பட்டவைகள். எவ்வளவு நேரம் கயிறு என்று தெரியாமல் பாம்பினுடைய எண்ணம் இருந்து கொண்டிருக்கிறதோ அதுவரைக்கும் நீங்கள் பயத்திலிருந்து விடுபடுவதில்லை. இதைப் போலவே பிரம்மன் உணரப்படும் வரையிலும் உங்களுக்கு இந்த உலகம் ஒரு ஸ்தாபிக்கப் பட்ட உண்மையாகத் (solid reality) தான் இருக்கும். கயிற்றை ஒரு தீபம் கொண்டு பார்க்கும் பொழுது பாம்பு என்கின்ற மயக்கம் மறைந்து பயமும் தெளிகின்றது. இதே மாதிரிதான் நீங்கள் பிரம்மனை உணரும் பொழுது இந்த உலகம் மறைந்து பிறப்பு இறப்பு என்கின்ற பயத்திலிருந்து விடுபடுகின்றீர்கள்.

நீங்கள் சில சமயம் இறந்து விட்டதாகவும், உங்களுடைய உறவினர்கள் அழுது கொண்டிருப்பதாகவும் கனவு காண்கின்றீர்கள். அந்த கற்பனையான நிலையிலும் கூட நீங்கள் அவர்கள் அழுவதைப் பார்க்கவும், கேட்கவும் செய்கின்றீர்கள். இது நிஜமாக இறந்த பின்பும், ஜீவன்

உண்மையாகவே இருக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இந்த உடலாகிய உறை தூக்கி எறியப்பட்டு விட்ட பிறகும் நீங்கள் இருக்கிறீர்கள். இந்த இருப்பு அல்லது நிலைபேறு (existence) தான் ஆத்மா அல்லது பெரிய " நான் ".

நீங்கள் உங்களுடைய உள்ளத்திலே மறைந்து கிடக்கும் இந்த அழியாத ஆத்மனை உணர்ந்துவிட்டீர்களானால் அவித்தை (அறியாமை), காமம் (ஆசை), கர்மம் (செய்கை) என்கின்ற மூன்று முடிச்சுகளின் உருவமும் கீழ்க்கண்டவாறு பிளக்கப்பட்டு விடும். அறியாமை, பகுத்தறிவு, நான் என்கின்ற அகந்தை, விருப்பு, வெறுப்புகள், கர்மம், உடல் என்கின்ற இந்த அறியாமையாகிய சங்கிலி தகர்த்தெறியப்பட்டால் நீங்கள் பிறப்பு, இறப்பு என்கிற சுழலிலிருந்து விடுபட்டு இறவாத தன்மை நிலவுகின்ற அமர லோகத்தினுள் நுழைவீர்கள்.

## 5. மோக்ஷம்

மோக்ஷம் வாழ்க்கையின் இறுதி லக்ஷியமாகும். மோக்ஷம் என்பது வாழ்க்கையின் நோக்கத்தை ஈடேற்றுதலாகும். மோக்ஷம் அல்லது பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை யடையும்போது இந்தப் பூவுலக மட்டத்தில் வாழ்க்கை முடிவடைகின்றது. வாழ்க்கையில் உங்களுடைய உண்மையான நோக்கத்தை உணர்வதுதான் விடுதலை அல்லது மோக்ஷமாகும். மோக்ஷமானது உங்களுக்கு அழியாத பேரானந்தத்துடனும் நிரந்தரமான சந்தோஷத்துடனும் கூடிய சாஸ்வதமான வாழ்க்கையை உங்களுக்கு அளிக்கின்றது. மோக்ஷம் என்பது இல்லாத தாக்குவது அல்லது அழிப்பதல்ல. மோக்ஷம் என்பது இந்த சிறிய ஆத்ம மமதையான ஆணவத்தை மட்டும் இல்லாது செய்வதாகும். மோக்ஷம் என்பது இந்த ஜீவாத்மனுடைய அடையாளத்தை பரமாத்மனுடன் உணர்தலேயாகும். இந்தச் சிறிய 'நான்' ஐ இல்லாததாக்குவதின்

மூலம் நீங்கள் இந்த சகலவித உண்மையான விவரங்களை யும், உடையவர்களாக ஆகி ஒரு சாஸ்வதமான வாழ்க்கை அடைகின்றீர்கள்.

ஆத்ம ஞானத்தின் மூலம் முக்தி அடையப்படுகிறது. ஞானத்தை அடைவதற்கு உங்களுக்கு மன ஒருமைப்பாடு (ஏகாக்ரதா) வேண்டும். ஏகாக்ரதம் உபாசனையின்மூலம் வருகிறது. உபாசனை மனத் தூய்மை (சித்த சுத்தி) யின் மூலம் வருகிறது. சித்த சுத்தி நிஷ்காம்ய கர்ம யோகத் தின் மூலம் வருகிறது. அந்த நிஷ்காம்ய கர்மத்தைச் செய்வதற்கு நீங்கள் இந்திரியங்களை (புலன்களை) கட்டுப் படுத்தி யிருக்க வேண்டும். இந்திரியங்களை விவேகம், வைராக்கியம் ஆகியவையின் மூலம் கட்டுப்படுத்தலாம்.

மோக்ஷம் என்பது முன்பு இல்லாமலிருந்த ஏதோ ஒன்ருக ஆவதாகக் கருதக்கூடாது. மோக்ஷம் என்பது சாதிக்க அல்லது அடையக்கூடிய ஏதோ ஒரு பொருளல்ல. இது ஏற்கனவே அடையப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பொருளும் முழு முதல் அல்லது பரப்பிரம்மனுடன் ஒன்ருக இருக்கிறது. தனித்தனி என்கின்ற தன்மையாகிய உணர்வை (sense of separateness) இல்லாததாக்குவது தான் அடையப்பட வேண்டியதாக இருக்கிறது. மோக்ஷமானது நிரந்தரமாக நிலைத்திருக்கின்ற அந்தப் பொருளை நேரடி யாக உணர்தலேயாகும். ஆனல் அது இதுவரை அஞ் ஞானமாகிய திரையினுல் நம்மிடமிருந்து மறைத்து வைக்கப்பட்டிருந்தது. மோக்ஷம் என்பது மேலான பேரானந்தம் அல்லது அழியாத் தன்மையை அடைவதும், எல்லாவிதமான துன்பங்கள் அல்லது வலிகளையும் நீக்குதலு மாகும். மோக்ஷம் என்பது பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை பெறுவதாகும்.

விடுதலை அல்லது முக்தி உங்களுடைய உண்மை யான இயல்பாகும். இந்த உண்மையை நீங்கள் நேரடியான உள்ளுணர்வின் மூலமாகத்தான் (direct intuitive experience)

அறிய வேண்டியிருக்கிறது. ஆத்மனை தியானிப்பதின் மூலமாக அஞ்ஞானமாகிய திரையை நீங்கள் அறுத்தெறிய வேண்டியிருக்கிறது. பிறகு நீங்கள் உங்களுடைய ஆதி நிலையான அதி தூய்மையுடனும், தெய்வீக ஒளியுடனும் திகழ்வீர்கள்.

பிரம்மன், ஆத்மன், புருஷன், சைதன்யம், உணர்வு (Consciousness) கடவுள், அழியாத் தன்மை, விடுதலை பூர்ணத்துவம், அமைதி, பேரானந்தம், பூமா அல்லது நிபந்தனையற்றது ஆகியவை எல்லாம் ஒரே பொருளைக் கொடுக்கும் பல வார்த்தைகள். நீங்கள் ஆத்மானுபூதி அடைவதின் மூலமாகத்தான் இந்த பிறப்பு இறப்புச் சுழலி லிருந்தும் அதனால் ஏற்படுகின்ற துன்பங்களிலிருந்தும் விடுவிக்கப்படுவீர்கள். வாழ்க்கையின் லக்ஷியம் மோக்ஷத்தை அடைவதாகும். தன்னலமற்ற சேவை, ஜபம், ஆகியவற்றின் மூலம் தூய்மையும் உறுதியும் படுத்தப்பட்ட ஒரு உள்ளத்துடன் இடையருது தியானம் செய்வதினால் மோக்ஷத்தை அடைய முடியும்.

மோக்ஷம்தான் மிக உயர்ந்த லாபம், பரம பிரயோஜனம். ஞானம் என்பது அந்தரங்கத்திலே ஒருவன் பெறக் கூடிய லாபமாகும். (அவாந்தர பிரயோஜனம்) எப்படி ஒருவன் வாழைப் பழத்தை பெறும் பொழுது வாழைப்பழம் மிக உயர்ந்த பயனாகவும், இலைகள் முதலியன இடையிலே பழம் கிடைப்பதற்கு முன்பாக அவாந்தர பிரயோஜனமாக இருக்கின்றனவோ அதேபோல் மோக்ஷம் என்பது மிக உயர்ந்த பலனாகவும், ஞானம் அவாந்தர பிரயோஜனமாகவும், இருக்கின்றது. ஞானம் என்பது இந்த மிக உயர்ந்த பேரானந்தத்தை அடைய ஒரு வழி மட்டுமே (means) யாகும்.

இந்த ஜீவனானது இந்த உடல் மற்றும் ஆத்மாவல்லாத மற்றவற்றையும் தன்மீது ஒன்றன் மேல் ஒன்றாக போட்டுக் கொண்டு தன்னை அவற்றுடன் அடையாளம்

காட்டிக் கொள்கிறது. இந்த அடையாளம் காட்டிக் கொள்ளுதலானது பந்தத்தை ஏற்படுத்துகிறது. இந்த அடையாளம் காட்டிக் கொள்வதிலிருந்து விடுதலை பெறுவது மோக்ஷம். இந்த அடையாளம் காட்டிக்கொள்ளக் காரணமாக இருப்பது அவித்தை. இந்த அடையாளம் காட்டிக் கொள்வதை எது நீக்குகிறதோ அது வித்யா அல்லது வித்தை. ஆத்மனைப் பற்றிய ஞானத்தை அடைவதால் இந்த அவித்தையும் அதன் பலன்களும் ஒழிக்கப் படுகின்றன. மோக்ஷத்தினுடைய ஸ்வரூபமானது மேலான பேரானந்தத்தை அடைவதும், எல்லாவிதமான துயரங்களையும் விலக்குவதுமாகும்.

பிரம்மனைப் பற்றிய சரியான ஞானமானது அவன் ஒருவனுடைய சொந்த ஆத்மாவிலேயே ஒன்றாக இருக்கின்றான் என்பதை அறிந்து கொள்வதில் அடங்கியிருக்கிறது. ஜீவனுக்கும் பிரம்மனுக்கும் உள்ள வேறுபாடு உபாதி (limiting adjunct) யில் தான் இருக்கிறது.

ஜீவனானவன், உண்மையிலேயே பிரம்மனாக இருந்தபோதிலும், அந்தஹ்கரணம் அல்லது நான்கு வித மனத் (அந்தரங்கக் கருவி) தினுடைய உபாதியோடு அவனுடைய தொடர்பு காரணமாக அவன் இந்த உலக நிலையேற்றுத் துன்பங்களுக்கு ஆளாக வேண்டி இருக்கிறான். அவர்களுக்கிடையிலே உண்மையான வேறுபாடு இல்லாத காரணத்தால் பிரம்மனும் ஆத்மாவும் ஒரே மாதிரியானவர்கள் என்பது தெரிந்து கொள்ளப்பட வேண்டியதாகும். ஆகவே சரியான உண்மையை அறிந்தவர்கள் பிரம்மன் ஆத்மாவுடன் இணையானவன் என்று புரிந்து கொள்கிறார்கள் என்று உபநிஷத்துக்களின் மகா வாக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ''நான் பிரம்மனாக இருக்கிறேன்'' — ''இந்த ஆத்மா பிரம்மனாக இருக்கிறது'' அவைகள் தங்களுடைய சிஷ்யர்களுக்கும் கீழ்க்கண்ட வார்த்தைகளில் அதையேதான் சொல்லிக்கொண்டிருக்கின்றன. ''தத் த்வம் அஸி — நீ அதுவாக இருக்கிறாய்''

என்று. ஆகவே பிரம்மனுனவன் ஆத்மனேடு இணையாக இருப்பவன் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது.

பிரம்மனே அறிந்து கொள்பவன் பிரம்மனுகவே ஆகிருன். உயிருடன் இருக்கும் பொழுதே கூட பிரம்மனுக ஆகிவிடுகின்ற காரணத்தால் அவன் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுபடுகிருன். பிரம்மனைப்பற்றிய ஞானம் தான் மோக்ஷத்திற்கான வழியாகும்.

---

# அத்தியாயம் இரண்டு

## ஹிந்து மதம்.

### 1. ஹிந்து மதம்

ஹிந்து என்பவன் ஹிந்துஸ்தானத்தில் வசிப்பவன். இது ஒரு வகையான இலக்கணம். ஹிந்து என்பவன் சநாதன தர்மத்தை நம்புகிறவனும், கூடு விட்டுக் கூடு பாய்தல் (transmigration — பல பிறப்புகளைக் கொள்ளல்), ஆத்மாவின் அழியாத் தன்மை, வேதங்களின் உபதேசங்கள், வர்ணாஸ்ரம தர்மம் ஆகியவற்றை நம்புகிறவனும் ஆவான். ஹிந்துக்களின் பொது மறையானது கீதையும், பொது மந்திரம் காயத்ரியுமாகும். இறைவனுடைய பொதுவான பெயர் பிரம்மன், பரமாத்மன், பகவான் அல்லது ஈஸ்வரன் என்பதாகும்.

குறிப்பாக கவனித்தால் (Strictly speaking) ஹிந்து மதமானது ஆர்ய தர்மம் அல்லது மானவ தர்மமாகும். ஹிந்து மதம்தான் எல்லா மதங்களுக்கும் ஆதாரமான மதமாகும். இந்து மதத்திலே பிறந்து அதிலே வளர்க்கப் பட்ட புத்தர் அங்குமிங்கும் ஒரு சில மாறுதல்களைச் செய்து ஒரு புது மதத்தை "புத்த மதம்" என்ற பெயரில் அவருடைய காலத்தில் வாழ்ந்து வந்த மக்களின் மனப்பாங்கிற்கும், பரிணாமத்தின் படிக்கும் தக்கபடி ஏற்படுத்தினார். புத்த மதம் ஹிந்து மதத்தின் ஒரு கிளை வேர்தான். காஷ்மீரிலும், காசியிலும் தபஸ் செய்த பகவான் இயேசு நாதர் ஹிந்து மதக் கொள்கைகளையும் உபதேசங்களையும் கிரகித்து பாலஸ்தீன நாட்டு செம்படவர்களுக்குப் பொருந்தும்படியாக ஒரு மதத்தை ஏற்படுத்தினார். மகாவீரர் இங்கும் அங்கும் சில மாறுதல்களைச் செய்து புத்த மதத்தின் கிளைவேராக இருக்கும் ஒரு மதத்தை "ஜைனமதம்" என்ற பெயரில் ஸ்தாபனம் செய்தார். ஜொராஸ்ட்ரிய

மதம், கிருஸ்தவ மதம், மற்ற எல்லா மதங்களும் ஹிந்து மதத்தின் கிளை வேர்களேயாம்.

ஹிந்து மதத்தை ஒரு மதம் என்பதை விட ஒரு தத்துவம் (Philosophy) என்று கூறலாம். இது ஒரு சமுத்திரம் போன்றது. எப்படி எல்லா நதிகளும் சமுத்திரங்களில் சங்கமமாகின்றனவோ அதே போல் எல்லா மதங்களும் இந்து மதத்தில் ஐக்கியமாகின்றன. எல்லா மதங்களும் ஹிந்து மதத்திலிருந்து வெளி வந்தவைகளாகும். எந்தவித மனப்போக்குடனும், எந்த விதமான திறமையுடனும் கூடிய எந்த ஒரு மனிதனும் விடுதலைக்கான சுலபமான வழியை இந்து மதத்தில் கண்டு கொள்ள முடியும். இந்து மதத்தில் எந்த விதமான மனிதனையும் லக்ஷியத்திடம் கொண்டு சேர்க்க ஏராளமான பாதைகள் இருக்கின்றன. அதுதான் ஹிந்து மதத்திடமுள்ள அழகு. முற்காலத்திய ரிஷிகளின் உபதேசங்கள் ஹிந்துக்களுக்காக மட்டும் உரியவைகள் அல்ல. அவைகள் எல்லோரையும் அணைக்கக் கூடிய சமரசத் தன்மை வாய்ந்தவை. அவைகள் உலக முழுவதுமுள்ள எல்லா மக்களுக்காகவும் உபதேசிக்கப் பட்டவை. கீதையும், உபநிஷத்துக்களும் உலக மக்கள் அனைவருக்குமான புத்தகங்களாகும்.

இந்து மதப் புத்தகங்கள், தத்துவம் (Philosophy), சடங்குகள் (Rituals), உபதேசக் கதைகள் (Mythes) ஆகியவைகள் அடங்கப் பெற்றவைகளாகும். இந்த மூன்று பொருள்களும் அவசியமானவை. வேதங்களிலுள்ள கதைகள், புராண வரலாறுகள் ஆகியவைகளின் நோக்கம் என்னவென்றால் மனத்தை மதத்தினுடைய உண்மை வழிகளிலே நடத்திச் செல்வதேயாம். பழங்கால இந்திய முனிவர்கள் கதைகளையும், புராண வரலாறுகளையும் மதக் கோட்பாடுகளை மக்களின் மனத்திலே பதிய வைப்பதற்காகப் புகுத்தினர்.

நீங்கள் ஆழமாக மூழ்கி உண்மையும், ஞானமுமாகிய முத்துக்களை அவற்றைப் பதிய வைத்திருக்கும் சிப்பிகளி

லிருந்து தனியாகப் பிரித்து எடுக்க வேண்டியிருக்கிறது. நுனிப்புல் மேய்பவன்தான் (superficial observer) சிந்தனை யற்ற குறைபாடுகளையும், அறிவற்ற அநியாயமான குற்றச் சாட்டுகளையும், புராண இதிகாச வரலாறுகளைக் கண்ணுறும் போது சுமத்துகின்றான்.

நீங்கள் உங்களுடைய திருஷ்டி கோணத்தை மாற்றிக் கொண்டு விட்டால் பிறகு ஒவ்வொரு உலகாயத காரியமும் யோக நடவடிக்கையாக ஆகிவிடும். ஒரு ஏழை மனிதன் கூட சேவை, பக்தி, ஆகியவற்றின் மூலமாக லக்ஷியத்தை அடைய முடியும். அவனுக்கு பணம் தேவையில்லை. ஹிந்து தத்துவமானது எல்லாவற்றையும் அணைக்க வல்லது. ஒரு தோட்டி கூட தன்னுடைய வழக்கமான வேலையை நிஷ்காம்ய பாவத்துடன் செய்தால் மோக்ஷத்தை அடைய முடியும். பண்டைய மேதைகளான ரிஷிகள் வெவ்வேறு விதமான மக்களுக்கு வெவ்வேறு வித மான வழிகளை அவரவர்கள் ருசி, மனோபாவம், திறமை ஆகியவற்றிற்குத்தக வகுத்து வைத்திருக்கின்றனர்.

வேதாந்தத்தையும் அதன் உட்கருத்துக்களையும் சரியாகப் புரிந்து கொண்டு அவற்றை தினசரி வாழ்க்கை யிலே கடைப்பிடித்தால் அது நிச்சயமாக யுத்தம், மதப் பூசல்கள், சிறு சச்சரவுகள், மதச்சண்டைகள், ஆகிய வற்றால் குழப்பமடையச் செய்துவரும் இன்றைய உலகிற்கு அமைதியையும், ஆறுதலையும், சந்தோஷத்தையும் அளிப்பது உறுதி.

## 2. உண்மையான மதம்

ஆத்மா சம்பந்தமான உண்மையான ஆன்மீக வாழ்க்கையே மதமாகும். மதமும் வாழ்க்கையும் இரண் டல்ல. ஆனால் ஒன்றே. மதம் அல்லது "Religion" என் கின்ற ஆங்கிலப் பதமானது லத்தீன் வார்த்தைகளான (roots) "re" - பின்னால் 'ligare' - கட்டுப்படுதல் என்பவை களினடியாகப் பிறந்தது. இந்த உலகாயதப் பொருள்

களில் அலைந்து திரியும் இந்த மனமானது ஆதி ஸ்தான மாகிய ஆத்மாவுடன் பொருத்தப்படுகிறது. மதமின்றி உண்மையான வாழ்க்கை இருக்க முடியாது. நாம் மதத் தைப் பற்றிப் பேசுவது குறைவாகவும், கடைப்பிடிப்பது அதிகமாகவும் இருக்கட்டும்.

மதம் என்பது அழியாத ஆத்மாவோடு கூடிய நிரந் தரமான வாழ்க்கையாகும். மதம் என்பது பூர்ணத்துவம் அல்லது ஒருமைப்பாடாகும். மதம் என்பது ஒருமை அல்லது ஒற்றுமையாகும். மதம் என்பது மனம், இந்திரியம் ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டது. மதம் என்பது சாங்கியம் சடங்குகளுக்கு அப்பாற்பட்டது. மதம் என்பது இறைவனுடன் ஐக்கியமாவது. மதம் என்பது தெய்வீக உணர்வு அல்லது தெய்வீக ஞானத்தை அடை வது. மதம் என்பது அறியாமை, மயக்கம், சந்தேகம், பயம், துக்கம், குருட்டு நம்பிக்கை, ஆகியவற்றிலிருந்து விடுபடுதலாகும். மதம் என்பது ஆத்யாத்மிக க்ஷேத்திரத் திலே தர்ம யுத்தம் நடத்துவதற்கும், ஆத்மனை உயர்த்தி ஸ்ரேயஸ்களை அல்லது மோக்ஷத்தை அல்லது நிரந்தரப் பேரானந்தத்தை அளிக்கவல்ல புராதன தர்மங்களை நிலை நிறுத்துவதற்குமான செயலிலே காட்டச் சொல்லுகின்ற ஒரு அறை கூவலாகும்.

மதம் என்பது இறைவனை அறிந்து கொள்ளவும், அவனை வழிபடுதற்குமான ஒரு நம்பிக்கையாகும். இது ஒரு சங்கப் பலகையில் விவாதிக்கக் கூடிய விஷயமல்ல. இது உண்மையான ஆத்மனின் உணர்வாகும். மனித னிடமுள்ள மிக ஆழ்ந்த ஆவலைப் பூர்த்தி செய்தலாகும்.

ஆகவே மதத்தை உங்களுடைய வாழ்க்கையின் மிக உயர்ந்த பரிசாகக் கொள்ளுங்கள். அதனுடைய உணர் விற்காக உங்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடி யையும் வாழ்ந்து காட்டுங்கள். நடைமுறையில் இல்லாத மத வாழ்க்கை உண்மையான சாவாகும்.

மதம் என்பது ஒன்றுதான். உண்மையான மதம் அனுஷ்டிக்கத் தக்கது. உண்மையான மதம் இந்திரியங்களுக்கு அப்பாற்பட்ட ஆன்மீக வாழ்க்கையாகும். உண்மையான மதம் ஆத்மாவை உணர்வதேயாம். உண்மையான மதம் கடவுளை உணர்தலும், கடவுளைக் காணலும், கடவுளோடு பேசுதலுமாகும்.

நண்பர்களே, ஒரு மனிதனை ஏன் மாற்ற முயற்சிக்கிறீர்கள்? இந்த நிலப்பரப்பிலே ஒரே ஒரு மதம் மட்டுமே இருக்கின்றது. அந்த மதம்தான் அன்பு மதம். மாற்றம் செய்வது என்பது ஒரு பெரும் சமூகக் கேடாகும். வகுப்புவாதக் கலவரங்களுக்கும், தொந்தரவுகளுக்கும் இதுதான் சக்தி பொருந்திய மூல காரணமாகும். எவனொருவன் மற்றொருவனை மாற்ற முயற்சிக்கிறானோ அவன் விவேகமற்றவன். அவன் கலவரங்களுக்கான விதையை விதைத்து தேசத்தின் அமைதிக்கு பங்கம் விளைவிக்கின்றான்.

பல்வேறு மதங்களின் சிறு சிறு கொள்கைகளைப் பொறுத்து ஏன் சண்டை போட்டுக் கொள்கிறீர்கள்? எல்லா மதங்களின் முக்கியமான கொள்கைகளும் ஒன்றே. தேவையில்லாதவைகளைப் பற்றி ஏன் நீங்கள் சண்டை போட்டுக் கொள்கிறீர்கள்? மதத்தினுடைய சாரத்தைக் கவனிப்பதை விட்டுவிடாதீர்கள். பழத்தினுடைய சாரத்தை எடுத்துக் கொண்டு சக்கையையும், தோலையும் வீசி எறிந்து விடுங்கள். பருப்பை எடுத்துக் கொண்டு ஓட்டை எறிந்து விடுங்கள். பூரண சகிப்புத் தன்மையை அபிவிருத்தி செய்யுங்கள். நீங்கள் சகிப்புத் தன்மையுடனிராவிடில் நீங்கள் வளர்ச்சியடைய முடியாது. உங்களுடன் தொடர்புள்ள எல்லா ஜாதி, மத வர்க்கத்தினரையும் அணைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு எல்லையற்ற ஆனந்தமும், அமைதியும், சக்தியும் கிடைக்கும்.

நான் என்கின்ற அகந்தையை இல்லாததாக்குவது, விருப்பு, வெறுப்புகளை ஒழித்துவிடுவது, ஆத்மனை உணர்வது, எல்லா ஜீவன்களிடத்தும் அன்பு காட்டுவது, மனித

வர்க்கத்திற்கு ஆத்ம பாவத்துடன் தன்னலமற்ற சேவை செய்வது (தொண்டாற்றுவது) ஆகியவைகள் உண்மை யான மதத்தின் சாரமாகும்.

மதம் என்பது அனுஷ்டானத்திற்குரியது. மதமானது உங்களுடைய தினசரி வாழ்க்கையின் ஒரு பிரிக்க முடியாத அங்கமாக ஆகிவிட வேண்டும். வெறும் ஆர்வமும், கொந்தளிக்கின்ற சிறிது இளமை உற்சாகமும், உணர்ச்சி யும் மட்டும் உன்னுடைய ஆன்மீக வளர்ச்சிக்கும், பரிணமத்திற்கும் அவ்வளவாக உதவி புரிய முடியாது. போராட்டமும், பொறுமையான முயற்சிகளும் தேவை.

மதம் என்பது வாழ்க்கை விஞ்ஞானம். இது நமக்கு இறைவனிடம் வாழ்வதற்கும், இறவாத தன்மையை அடைவதற்கும் கற்றுக் கொடுக்கிறது. இது நிரந்தரப் பேரானந்தமும், இடைவிடாத அமைதியும் விளங்குகின்ற சாம்ராஜ்யத்தினுள் நுழைவதற்கு நமக்கு உதவிபுரி கின்றது. இது அஞ்ஞானமாகிய திரையை நீக்கி ஆத்ம மனின் உயர்ந்த ஒருமைப்பாட்டுணர்வைக் கொடுத்து நமக்கு உதவுகின்றது.

மதம் என்பது ஒரு ஆடம்பரம் என்று சிலர் சொல்லு கிறார்கள். மதம் என்பது ஒரு ஆடம்பரம் என்று சொல்லு கிறவர்கள் அஞ்ஞானத்திலும், உலகாயதத்திலும் மூழ்கி யிருக்கின்றவர்கள். மதமின்றி ஒரு மனிதன் எப்படி வாழ முடியும்? மதம் தான் அவனுக்கு குருட்டு நம்பிக்கையை யும், துக்கத்தையும், வலியையும், இறப்பையும், ஒழித்துக் கட்டவும், இறவாத்தன்மையாகிய வாழ்க்கை யின் இறுதி லக்ஷியத்தை அடையவும் உதவுகின்றது. மதத்தின் மூலமாகத்தான் அவன் பூர்ணத்துவத்தையும், குற்றமற்ற தன்மையையும் அடைய முடியும்.

## 3. இந்தியத் தாயின் மகிமை.

இந்தியா ஒரு ஆன்மீக நாடு. இந்தியா ஒரு பொழு தும் பிரதேசங்களை வெல்லவோ அல்லது ராஜ்யங்களை

விஸ்தரித்துக் கொள்ளவோ கிடையாது. ராணுவ வெற்றி என்பது அவளுடைய ஆசையல்ல. அவள் தன்னுடைய குழந்தைகளுக்கு ஆத்ம ஸ்வராஜ்யம் அல்லது பூரண விடுதலை வேண்டும் என்று விரும்பினாள். அவள் அவர்களை மற்றவர்கள் மீது அரசாட்சி செய்வதற்காக அழைக்கவில்லை. அகம், புறம் ஆகியவற்றின் குணங்களை அவர்கள் வெல்ல வேண்டுமென்றே அவள் விரும்பினாள். பிரகாசமான தெய்வீக குணங்களையும், உள்ளப் பண்பாடும் (moral stamina), ஆன்ம ஞானத்தினடியாகப் பிறந்த அந்தரங்க ஆன்மீகப் பலமும் அவர்களுக்கு இருக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள். ஆன்மீக வெற்றியை அடையவும், மற்றவர்களுடைய உள்ளங்களை வெற்றி கொள்ளவும் அவளுக்கு ஆசையாக இருப்பது அஹிம்சையே யாகும்.

இந்திய மக்கள் தங்களுடைய லக்ஷியமாக ஆத்மானுபூதியைக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் பொருட் செல்வத்தையும், முன்னேற்றத்தையும் சட்டை செய்வதில்லை. அவர்கள் யோகம் அல்லது இறைவனுடன் ஐக்கியமாவதை விரும்பிகின்றனர். அவர்கள் அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம் ஆகியவற்றைக் கடைப் பிடிக்கின்றனர். அவர்கள் பரிபூரண சாஸ்வதப் பேரானந்தத்தை அனுபவிக்க விரும்புகின்றனர். அந்தரங்க ஆத்மன் அல்லது பிரம்மனைக் கைக்கொள்ள அல்லது உணர்வதற்காக இந்த உலகப் பற்றுகளைத் துறப்பதற்கு எப்பொழுதும் தயாராக இருக்கின்றனர். இந்த அழியாத ஆத்மனை அடைய அவர்கள் எதை வேண்டுமானாலும் தியாகம் செய்யச் சித்தமாக இருக்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் ஆன்மீக உள்ளம் படைத்தவர்களாக இருக்கின்றனர்.

இந்தியா யோகிகளும், ரிஷிகளும், முனிவர்களும் நிறைந்த நாடு. இமயமலைக் காட்சி எவ்வளவு ரம்மியமானது! கங்கைத் தாய் எவ்வளவு இனிமையானவள்! அவைகளினுடைய அலை அதிர்ச்சிகள் எவ்வளவு இன்பம் பயப்பன! யோகிகளுடைய சத்சங்கம் எவ்வளவு ஆத்ம

உணர்வைத் தூண்டக் கூடியது! யோகிகளும், கங்கையும், இமயமலையும் கூடிய ரிஷிகேசம் எவ்வளவு அழகானது! நீங்கள் யோகத்தைப் பயில விரும்பினால் இந்தியாவிற்கு வந்து ரிஷிகேசத்தில் தங்கியிருங்கள். தனிமையின் அமைதியை அனுபவியுங்கள். ஆத்மப் பேரானந்தத்தை உணருங்கள். அமைதியில் (மௌனத்தில்) தியானம் செய்யுங்கள். வியத்தகு மோனத்திற்குள் நுழையுங்கள். நீங்கள் ஒரு யோகியாக ஆகக் கடவீர்கள்.

மகாத்மாக்கள் உலகின் எல்லாப் பகுதிகளிலும் தான் அவதரிக்கிறார்கள். ஆனால் மகாத்மாக்களின் எண்ணிக்கை உலகின் வேறெந்த பகுதியையும் விட இந்தியாவில் அதிகம். இதுதான் இந்தியாவினுடைய விசேஷ அம்சம். ஆகவேதான் இந்தியா ரிஷிகளும், முனிவர்களும் நிறைந்த நாடு என்று அழைக்கப் படுகின்றது.

இந்தியா யோகிகளும், ரிஷிகளும், முனிவர்களும், தீர்க்கதரிசிகளும் நிறைந்த நாடு. ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமானுஜர் போன்ற ஆச்சாரியர்களையும், கபீர், ராமதாஸ், துகாராம், கௌராங்க மகாபிரபு போன்ற முனிவர்களையும், ஞானதேவர், கோரக்நாதர் போன்ற யோகிகளையும், தத்தாத்ரேயர், சதாசிவ பிரம்மன் போன்ற பல துறவிகளையும் உற்பத்தி செய்த நாடு இந்தியா. இப்பொழுது கூட அவள் முனிவர்களாலும், மகாத்மாக்களாலும் நிறையப் பெற்றிருப்பவளாய் இருக்கின்றாள்.

சந்தன மரத்தை நீங்கள் எல்லாக் காடுகளிலும் காண முடியாது. எல்லாக் கடல்களிலும் நீங்கள் முத்தைக் காண முடியாது. பூமியின் எல்லாப் பகுதிகளிலும் நீங்கள் தங்கத்தைக் காண முடியாது. அதுபோல நீங்கள் முனிவர்களை உலகின் எல்லாப் பாகத்திலும் காண முடியாது.

முனிவர்களும், யோகிகளும், ரிஷிகளும், கங்கை, யமுனை, நர்மதை, கோதாவரி, சிந்து, காவேரி, ஆகிய புனித நதிகளும், பெருமிதம் வாய்ந்த இமயமலையும் கூடிய

இந்திய நாடே, உன்னை அறைகூவி அழைக்கின்றோம். புராதன மகிமை பொருந்திய நாடும், ஸ்ரீராமர், கிருஷ்ணர், வியாசர், சங்கரர், தத்தாத்ரேயர், பதஞ்சலி மகரிஷி, மற்றும் ஏனையோர்களுடைய திருவடிகளால் நடக்கப்பட்ட நாடுமாகிய பாரத வர்ஷமே, உன்னை அறைகூவி அழைக்கின்றோம். தபஸும், யோகமும் பயிலுவதற்கேற்ற இனிய இல்லமே, இன்னும் ரிஷிகளாலும், யோகிகளாலும், முனிவர்களாலும் நிறைந்துள்ள ஆரியாவர்த்தமே வருக, வருக. தேவர்களும் ஜீவன் முக்தர்களும் நிறைந்த அழகான காடுகளும், நைமிசம், ஜூஸி, உத்தரகாசி, ரிஷிகேசம் முதலிய தனிமையான தியான ஸ்தலங்களும், தன்னுடைய அமரகீதமாகிய கீதையின் மூலம், தனதன்பிற்குரிய சிஷ்யன் அர்ஜுனனுக்கு கண்ணபிரான் தன்னுடைய சக்தி பொருந்திய செய்தியை உபதேசித்த இடமாகிய குருக்ஷேத்திரம் போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களும் நிறைந்த தாய் நாடே வருக! இறைவன் உன்னுடைய குழந்தைகளுக்கு ஆசீர்வாதம் கொடுத்து நல்ல புரிந்துகொள்ளும் தன்மையையும், ஆத்ம ஞானத்தையும், உனக்குச் சேவை செய்யவும், உனது கொடியை உயர்த்திப் பிடிக்கவும் ஆன்மீக பலத்தையும் அருள்வாராக.

நாஸிக் கட்சி, பாஸிஸ்ட் கட்சி, போல்ஷ்விக் கட்சி மற்ற எல்லாக் ''கட்சி''களும் மனிதனுக்கு அமைதியைக் கொடுப்பதில் தோல்வியுற்றுவிடும். புனித இந்தியாவின் ''சாதுக் கட்சி'' அல்லது ''ரிஷிக் கட்சி'' அல்லது ''உபநிஷத் கட்சி'' தான் மனிதனுக்கு நிரந்தரமான சாந்தியைக் கொடுக்க வல்லது.

''சாதுக் கட்சி'' (Sadhuism) என்பது என்ன? சாதுக் கட்சி என்பது ஆன்மக் கட்டுப் பாட்டைப் பயின்று இறைவனில் வசிப்பதாகும். ''ரிஷிக்கட்சி'' (Rishism) என்பது என்ன? ரிஷிக் கட்சி என்பது தூய்மை, தன்னலமற்ற சேவை, தெய்வீக அன்பு, பக்தி, தியானம் ஆகியவற்றின் மூலம் இறவாத் தன்மையை அடைதலாகும்.

உபநிஷத் கட்சி (Upanishadism) என்பது என்ன? உபநிஷத் கட்சி என்பது உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கும் ஆத்மா அல்லது பிரம்மனைப்பற்றிய ஞானத்தை தன்னைப் பகுத்தறிதல், விசாரம், ஸ்ருதிகளைக் கேட்டல், சுய ஒளியுள்ள, எங்கும் நிறைந்த கண்ணுக்குப் புலப்படாத, காலமற்ற, இடமற்ற, இறப்பற்ற, ஆன்மாவின் மீது பிரதிபலித்தலும், தியானித்தலும் ஆகிய ஞானத்தைக் கைக்கொள்ளுதலாகும்.

இந்தியா அல்லது மற்ற எந்த ஒரு நாடும் ஸ்வராஜ்யத்தை அடைய வேண்டுமானால் அரசியல் நடவடிக்கைகளோடு ஆன்மீகப் பயிற்சியும், கைகோர்த்து இணைந்து சென்றால்தான் சாத்தியமாகும். ஒவ்வொரு காரியமும், யோகம் என்றும், இறைவனுக்குச் சமர்ப்பிக்கப்படும் ஒரு சமர்ப்பணம் என்றும் தொழிலாளிகள் கருத வேண்டும். அவர்கள் சுயநலம், பேராசை, காமம், வெறுப்பு ஆகியவற்றிலிருந்து விடுபட்டு உண்மை, சகிப்புத் தன்மை, ஆன்மக் கட்டுப்பாடு, இறையன்பு, பரந்த மனப்பான்மை, விசாலமான சகிப்புத் தன்மை, இறைவன் இருப்பதிலே தீவிர நம்பிக்கை ஆகியவற்றை உடையவர்களாக இருத்தல் வேண்டும்.

இந்தியா பல புண்ணிய நதிகளும், சக்தி பொருந்திய ஆன்மீக அலைகளையும் உடைய ஒரு புண்ணிய பூமி. பனி மூடிய வெண்மையான ஹிமாலயமானது அகில உலக மக்களையும் கவர்கின்றது. இது தெய்வ சிந்தனைக்கும், யோகப் பயிற்சிகளுக்கும் விசித்திரமான பொருத்தமுடைய ஒரு தேசம். ஒவ்வொரு தேசத்திற்கும் அதனதன் விசேஷமான கவர்ச்சிகரமான அம்சங்கள் உண்டு. இந்தியா யோகிகளும் முனிவர்களும் நிறைந்த நாடு. இதுதான் இந்தியாவுக்கான விசேஷமான கவர்ச்சி பொருந்திய அம்சம். இந்தக் காரணத்தினால்தான், இங்கிலாந்து, அமெரிக்கா, மற்றும் உலகின் எல்லா தேசங்களிலிருந்தும் மக்கள் யோகத்தைப் பயில இந்தியாவிற்கு வருகிறார்கள்.

இந்தியாவின் மகிமை விளங்குவதாக! ரிஷிகள், முனிவர்கள் ஆகியோரின் மகிமை விளங்குவதாக!

இந்தியா எல்லா நாடுகளையும் விட மிகச் சிறந்தது. கங்கை நதி எல்லா நதிகளையும் விட மிகச் சிறந்தது. இமயமலை எல்லா மலைகளையும் விட மிகச் சிறப்பு வாய்ந்தது. சத்தியம் எல்லா குணங்களிலும் மிகச் சிறந்தது. அனுபூதி பெற்ற ஒரு குரு எல்லா மனிதர்களையும் விட மிகச் சிறந்தவர். பிரியமுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றைக் காட்டிலும் ஆத்மா மிகச் சிறந்தது. ஆகவே இந்தியாவிலே கங்கைக் கரையிலே வாசம் செய்யுங்கள். உண்மையைப் பேசுங்கள். அனுபூதி பெற்ற ஒரு குருவிடம் அடைக்கலம் பெற்று ஆத்மாவை உணர்ந்து விடுதலை பெறுங்கள்.

---

# அத்தியாயம் மூன்று

# குருவும் சீடனும்.

## 1. ஒரு குருவின் அவசியம்

ஆத்ம ஞானமானது குருவினுடைய கருணை மூலம் தான் அடையப்பட முடியும். ஞானம் குருவிடமிருந்து சிஷ்யனுக்கு அனுப்பப்படுகிறது (transmitted).

தெரியாத அந்த வஸ்துவை (பிரம்மனை) நீங்கள் உங்களுடைய உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதின் மூலமும், பிரம்ம நிஷ்டை (உண்மையில் நிலைத்திருக்கும்) யாக உள்ள ஒரு குருவிற்கு சேவை செய்வதின் மூலமும், அவரிடமிருந்து பாடங்களைக் கேட்டுக் கொள்வதின் மூலமும் அறிய முடியும்.

ஒரு வைத்தியத் துறை மாணாக்கனுக்கு அத்துறையில் தேர்ச்சி பெற்ற ஒரு பேராசிரியரின் உதவி அவசியமாகத் தேவைப்படுகிறது. ஒரு ஜூனியர் வக்கீலுக்கு ஒரு சீனியர் அட்வகேட்டின் உதவி (guidance) தேவைப்படுகிறது. ஒரு சிறிய சமையல்காரனுக்கு பெரிய சமையல்காரனுடைய உதவி தேவைப்படுகிறது. இந்த உலகாயத விஷயங்களுக்கே இப்படியென்றால் மறைந்து கிடக்கும் சூக்ஷ்மமான ஆத்மாவைப் பற்றிய ஆத்யாத்மிக ஆன்மீக விஷயங்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஆத்மனை உணர்ந்த ஒரு குருவினுடைய உதவி சாதகனுக்கு வழி காட்டுதலுக்கு அத்தியாவசியமாகும். இல்லாவிடில் அஞ்ஞானம், அந்தகாரம் ஆகிய அடர்ந்த காட்டில் வழி தெரியாமல் தடுமாறிக் கொண்டுதான் இருப்பான்.

ஆத்மீக வழியிலே சாதகனுக்குத் தடைகளும், அபாயங்களும், வலைகளும் படுகுழிகளும் வருகின்றன.

அவன் சாதனையிலும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. ஏற்கனவே அந்தப் பாதைகளையெல்லாம் கடந்து லக்ஷியத்தை அடைந்துவிட்ட ஒரு குருவினுடைய உதவி அவனுக்கு வழி காட்டுவதற்கு மிகவும் அவசியம்.

இளஞ் சாதகர்கள் ஒரு சம்பூர்ண குருவினுடைய ஆதீனத்திலே சில வருஷங்கள் அவசியம் வசித்து வர வேண்டும். அவர்கள் அவர்கள், ஆதீனத்தின் கீழ் இருக்க வேண்டும். அவர்கள் பூர்ண பணிவையும். எளிமையையும் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் தங்கள் வழியிலே போய்க்கொண்டிருந்தால் அவர்கள் நியாயமற்ற உரிமை கொண்டாடுபவர்களாகவும் (arrogant) அகம்பாவம் உடையவர்களாகவும் (conceited) ஆகிவிடுகிறார்கள். ஆன்மீகத்தில் அவர்கள் இம்மியளவும் அபிவிருத்தியைக் காண முடியாது.

இயற்கையிலே எந்த இரண்டு மரங்களும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. எந்த இரண்டு இலைகளும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. எந்த இரண்டு அலைகளும் (vibrations) ஒரே மாதிரியாக இருப்பதில்லை; எந்த இரண்டு குணங்களும் (temperaments) ஒரே மாதிரியாக இருப்பதில்லை. ஆகவே வெவ்வேறு விதமான மனோ நிலைகளையுடைய மக்களுக்கேற்றவாறு உள்ளத்தைக் கட்டுப்படுத்த பல்வேறு விதமான வழிகள் இருக்கின்றன. ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்குப் பொருத்தமான சாதனையைக் கைக்கொள்ளலாம். உங்களுக்காக உங்களாலேயே வகுத்துக்கொள்ள இயலாவிட்டால் அதை ஒரு குருவிடமிருந்து பெற்றுக்கொள்ளுங்கள். ஒரு குருவிற்குக் கீழிருந்து யோகத்தைக் கற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது தான் நீங்கள் யோகத்திலுள்ள சூக்ஷ்மமான விஷயங்களைப் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் சோர்வுற்றிருக்கும் போது அவர் உங்களை ஊக்குவிப்பார். வழியிலே வழுக்கல் (stumbling blocks) குறுக்கிடும்போது உங்கள் சந்தேகங்

களை நீக்கி சரியான வழியை உங்களுக்குக் காட்டுவார்; ஏனெனில் அவர் ஏற்கனவே தானாக அந்தப் பாதையைக் கடந்து வந்திருக்கின்றார். நீங்கள் உண்மையாகவும், மனப் பூர்வமாகவும் மட்டும் இருந்தால் குருவினுடைய கருணையானது தைல தாரையைப் போல் – தொடர்ச்சியாக எண்ணெய் ஊற்றுவதைப் போல் – உங்கள் மீது பாயும். உங்களிடம் உண்மையான கிரஹிக்கும் சக்தியும், அவரிடம் மனப் பூர்வமான நம்பிக்கையும், பக்தியும் இருக்குமேயானால் அவர் உங்களிடம் சக்தியையும், அன்பையும், ஞானத்தையும், ஆன்மீக மின்னோட்டத்தையும் பொழிந்து தள்ளுவார். இப்பொழுது ஒரே வழியையும், ஒரே குருவையும் இறுகப் பற்றிக் கொள்ளுங்கள். சஞ்சலப் பட வேண்டாம். பொறுமையாக இருங்கள். மனப்பூர்வமாக (sincere) இருங்கள்.

சாதகர்கள் குருவினிடமும், ஸ்ருதிகளிடமும் அசைக்க முடியாத நம்பிக்கை கொள்வதில்லை. அவர்களிடம் பாதி அல்லது சஞ்சலமான நம்பிக்கை இருக்கிறது. ஆகவே தான் அவர்கள் யோகம் அல்லது ஞானத்தில் வெற்றி பெறுவதில் தவறி விடுகின்றனர்.

இறைவனும் குருவும் ஒன்றே. உங்களுடைய குருவினிடம் இறைவனைக் காண முயற்சி செய்யுங்கள். அப்பொழுதுதான் உங்களுக்கு ஆன்மீகப் பாதையில் முன்னேற்றம் ஏற்படும். அப்பொழுதுதான் நீங்கள் ஆத்மானுபூதியை அடைய முடியும். நீங்கள் உங்களுடைய குருவிடம் குற்றங்களைக் காண முயலுவீர்களேயானால் நீங்கள் இம்மியளவும் பயனடைய முடியாது. குரு உனது தந்தை. குரு உனது தாய். குரு உனது ரக்ஷகர். குரு உன்னுடைய ஒரே அடைக்கலமும், ஆதாரவுமாவார். ஆகவே குருவை இறைவனாகவே பாவித்து மரியாதை செய்.

ஒரு உண்மையான சாதகன் அவனுடைய குருவின் சரணாம்ருதத்தைப் பருக வேண்டும்; குருவினுடைய

உச்சிஷ்டத்தை உண்ண வேண்டும்; குருவின் உருவை பிரம்மனுகவே தியானிக்க வேண்டும்; அவனுடைய குரு மந்திரத்தை இடையருது ஜபிக்க வேண்டும். அப்பொழுது அவனுக்கு ஆத்மானுபூதி சுலபமாகக் கிடைக்கும்.

ஒரு சிப்பாயினுடைய கடமை அவனுடைய ஆணை யாளருடைய (Commander) உத்தரவிற்கு அப்படியே கீழ் படிந்து நடத்தல்தான். அவன் எதைப் பற்றியும் கேட்கக் கூடாது. இதே போல் தான் ஒரு சாதகனுடைய கடமை என்னவென்ருல் அவனுடைய குருவின் ஆணைக்கு அப்படியே கீழ்ப்படிந்து நடத்தலாகும். அப்பொழுதுதான் ஆன்மீகப் பாதையில் அவர் சீக்கிரம் முன்னேற முடியும்.

எவன் ஒருவன் குருவினிடம் பக்தி பூண்டும், உபாசனை செய்தும் இருக்கிருனே அவன்தான் வேதாந்த உபதேசங்களின் கருத்தாழங்களை உணர முடியும். ''எவ னொருவனுக்கு இறைவனிடமும், இறைவனைப் போலவே குருவினிடமும் மகோன்னத அன்பு இருக்கிறதோ அந்த மகாத்மனுக்கு இதில் கூறப்பட்டிருக்கும் உண்மைகள் பூர்ணமாக பிரகாசிக்கும்.'' (அதிகாரம் VI 23) என்று ஸ்வேத-ஸ்வதர உபநிஷத்திலே நீங்கள் காணலாம்.

இவ்வுலகில் போதிப்பவர் மூன்று விதம்; அதாவது ஆணையிடுபவர் ஒருவர், ஞானத்தைப் பகிர்ந்து கொடுப் பவர் மற்ருெருவர், விடுதலையையே கொடுக்கின்ற மிக மேலானவர் மூன்ருமவர். ஆணையிடுகின்றவர் வழியைக் காட்டுகிருர்; ஞானத்தைப் பகிர்ந்து கொடுப்பவர் மேலான இடத்தைப் போதிக்கிருர்; விடுதலை நல்குபவர் மேலான உண்மையை வெளிப்படுத்துகிருர்; அதை அறிந்துகொள்வதின் மூலம் நீங்கள் அமரத்துவத்தை அடைவீர்கள்.

ஒரு ஆற்றைக் கடந்த ஒரு சிலர், எல்லா பிரயாணி களும் உயிருடன் இருக்கிருர்களா என்று பார்க்க விரும்பு கின்றனர். ஆனுல் ஒவ்வொருவரும் தன்னைத் தவிர மற்ற

ஒன்பது பேர்களை எண்ணிவிட்டு ஒருவரைக் காணவில்லை என்று எல்லோரும் ஒருவர் காணமல் போனதற்காக விம்மி விம்மி அழத் தொடங்கினர். கடைசியில் மற்றொருவர் ஒவ்வொருவரிடமும் வந்து எண்ணுபவன் தான் அந்த பத்தாவது ஆசாமி என்று கூறிய பின்னர் அவர்களது மயக்கம் நீங்கப் பெற்றவராயினர்.

இரும்புத் தூளானது எவ்வாறு ஒரு காந்தக் கல்லின் முன்பாக காந்தமாக்கப் படுகின்றனவோ அதே போல் சாதகர்கள் அவர்களுடைய குருமார்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும் பொழுது காந்தமாக்கப் படுகின்றனர். ஒரு தத்துவ ஞானியினுடைய கல்லால் (ஸ்பரிச வேதி) எவ்வாறு இரும்பு தங்கமாக மாற்றப் படுகிறதோ அதே போல் தீய குணம் படைத்தவர்கள் முனிவர்களோடும், யோகிகளோடும் நெருங்கிய தொடர்பு கொள்ளும்போது அவர்கள் உண்மையான ரிஷிகளாக மாற்றப் படுகின்றனர்.

ஒரு குருவானவர் ஸ்தூல சரீரத்துடன் இருக்கும் பொழுது அவர் சாதகர்களுக்கும், சீடர்களுக்கும் அதிக அளவில் உதவி செய்ய முடியும். சீடனுக்கு குருவிடம் நம்பிக்கை இருந்தால், அவர் இந்த ஸ்தூல சரீரத்தை விட்டுப் பிரிந்த பிறகும் அவனுக்கு உதவி புரிவார். அத்வைத தத்துவத்தை ஸ்தாபித்த ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ தத்தாத்ரேயர், ஆலந்தி, ஸ்ரீ ஞானதேவர் ஆகியோர்கள் அவர்களிடம் பக்தி பூண்டுள்ள சாதகர்களை இன்னும் ஆசீர்வதித்து வருகின்றனர். அவர்களுக்கு பூமியில் உடல் கிடையாது. ஆனல் உங்களுடையது இருக்கிறது ; கைகளும் கால்களும் கிடையாது. ஆனல் உங்களுடையது இருக்கிறது ; (They have no body on earth but yours, no hands and feet but yours). உங்களுடைய கண்கள் மூலமாகத்தான் அவர்கள் இப் பிரபஞ்சத்தைப் பார்க்கின்றனர். அவர்கள் உங்களுடைய கால்களின் மூலமாக நகர்ந்து சென்று உலகிற்கு நன்மை செய்கின்றனர்.

## 2. குருவும் சீடனும்

வேதங்களில் தேர்ச்சி பெற்றவரும், பிரம்ம ஞானம் படைத்தவரும், ஒரே சீரான மனோநிலையையுடையவரும், கருணாசாகரமாக விளங்குபவரும், சாதகர்களுடைய சந்தேகங்களையும், தடைகளையும், ஆவரணத்தையும் நீக்கக் கூடியவரும் ஆகிய ஒருவர்தான் உண்மையான குரு ஆவார்.

ஒரு உண்மையான சத்குருவானவர் உணர்ச்சி (Passion), கோபம், சுயநலம், பேராசை, வெறுப்பு, அகந்தை (egoism) ஆகியவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டவர். அவர் இந்த உலகாயத தூண்டுதல்களுக்கு அப்பாற்பட்டவர். அவரால் மக்களுடைய அஞ்ஞானத்தைப் போக்க முடியும். அவரால் எந்தவிதமான சந்தேகத்தையும், நிவர்த்தி செய்ய முடியும். மனத்தையும், இந்திரியங்களையும் கட்டுப்படுத்த அனுஷ்டிக்கக் கூடிய, சுலபமான பாடங்களை அவரால் கொடுக்க முடியும். அவருடைய உபதேசங்கள் நன்றாகப் பதியக் கூடியவை (very impressive), மமதையும், கர்வமும் படைத்த ஒரு மனிதன் கூட அவருக்கு முன்பு தலை குனிகின்றான். அவரால் மாணாக்கர்களை மோக்ஷத்தின் வாயிற்படிக்கு அழைத்துச் செல்ல முடிகிறது. அவரால், வழியேயுள்ள தடைகள், தடுமாற்றங்கள், வலைகள் ஆகியவற்றை நீக்க முடியும். அவர் வேதங்களில் தேர்ச்சி பெற்றவர். அவர் பாவமற்றவர். அவர் கருணாசாகரமாகத் திகழ்பவர். அவர் எல்லோருக்கும் நண்பனாக விளங்குபவர்.

இந்நாட்களில் சில சத்துவ ஆத்மாக்கள் இருக்கின்றனர். ஆனால் பிரம்மானுபவம் பெற்ற முனிவர்கள் மிகவும் அரிது. இந்த சத்துவ ஆத்மாக்களுக்கு நேரடியாக அனுபவம் கிடையாது. அவர்கள் விடுபட்ட ஆத்மாக்களாகத் தவறுதலாகக் கருதப்படுகின்றனர். உண்மை வழியைக் கடைப்பிடித்து நற்குணங்கள் பொருந்தப் பெற்ற சத்துவ

சாதகர்கள் கூட பூஜிக்கத்தக்கவர்களே. அது போன்ற சாதகர்களும் மிகவும் அரிது. சில சுத்துவ ஆன்மாக்கள் ஜீவன் முக்தர்கள் என்று கூறிக் கொள்கின்றனர் (pose for). இது வருந்தத் தக்கது. அவர்களுடைய சீடர்கள் அவர்களை வழிபட ஆரம்பிக்கின்றனர். நாளடைவில் அவர்கள், மரியாதை, கௌரவம், வழிபாடு ஆகியவை களுக்கு அடிமையாகி வீழ்ச்சியடைகின்றனர். மாயை பலவிதமான வழிகளில் அழிவை உண்டு பண்ணுகிருள். அவளுடைய வழிகளையும், செய்கைகளையும், புரிந்து கொள்வது மிகவும் கடினம்.

உண்மையான குருமார்கள் கிடைப்பதற்கு பஞ்சம் தான் என்பதில் ஐயமில்லை. ஆனல் உண்மையான சிஷ்யர்கள் கிடைப்பதற்கு அதைவிடப் பஞ்சமாக இருக்கிறது.

''இந்நாட்களில் நல்ல குருமார்களை எங்களால் காண முடியவில்லை'' என்று சாதகர்கள் புகார்கள் செய்கிருர்கள். ''இந்நாட்களில் நல்ல சீடர்கள் கிடைக்கவில்லையே'' என்று குருமார்களும்தான் புகார் செய்கிருர்கள். இதிலே யார் சொல்வது சரி? யார் சொல்வது தவறு? கீழ் கோர்ட் இந்த விஷயத்தை தீர்மானிக்க முடியாது. இந்த விஷயம் நிச்சயமாக ஞானிகளுடைய மந்திரா லோசனை சபையில்தான் (Privy council) வைக்கப்பட வேண்டும். ஒரு நோயாளி டாக்டருடைய ஆலோசனை அறைக்குள்ளே (Consulting room) நுழைந்தவுடனேயே டாக்டருடைய குணுதிசயங்களை (merits) அளவிட்டுவிட முடியுமா? ஆத்மிக வழியிலே இம்மியளவும் அனுபவ மில்லாத அறியாத சீடர்கள் உடனே குருமார்களை பரீக்ஷை பண்ணி சோதிக்க ஆரம்பித்து விடுகின்றனர். அவர்கள் கடுமையான குறைபாடுகளையும், சில அவசரப்பட்ட தவருன முடிவுகளையும், தீர்மானங்களை யும் வெளித் தோற்றங்களிலிருந்தும், வாழ்க்கை முறை களிலிருந்தும் கூற ஆரம்பித்து விடுகின்றனர். பரமஹம் ஸர்களுக்கு வேறு விதமான விசித்திரமான வாழ்க்கை

முறை உண்டு. நீங்கள் அவர்களோடு தோளோடு தோள் பன்னிரண்டு ஆண்டுகள் பழகினுல் கூட அவர்களுடைய உள்ளத்தையும், ஞானத்தின் ஆழத்தையும் புரிந்து கொள்வது என்பது இயலாது. ஞானமும், ஆன்மீக அனுபவங்களும் முற்றிலும் அந்தரங்க நிலைகளாகும். மூடத்தனமான சீடர்கள் ஒரு குருவிடமிருந்து மற்றொரு குருவிடம் ஓடுகிறுர்கள். அந்தோ பரிதாபம் அவர்கள் நிலை.

தண்ணீரை அடைவதற்காக இங்கொன்றும் அங் கொன்றுமாக ஆழமற்ற குழிகளைத் தோண்டாதீர்கள். குழிகள் சீக்கிரம் உலர்ந்து விடும். ஒரே இடத்தில் ஆழ மாகத் தோண்டுங்கள். இங்கு உங்களுடைய சக்தியனைத் தும் ஒருமுகப்படுத்தி பிரயோகியுங்கள். உங்களுக்கு வருட முழுவதும் நல்ல நீர் கிடைக்கும். இதே போல ஆத்மீக விஷயங்களை ஒரே குருவிடமிருந்து பூர்ணமாக கிரஹிக்க முயற்சி செய்யுங்கள். ஒருவரிடமிருந்தே தாகம் தீரக் குடியுங்கள். அவருடைய பாதாரவிந்தங்களில் சில ஆண்டுகள் தங்கியிருங்கள். ஆர்வத்தினுலே ஒருவரிட மிருந்து மற்றொருவரிடம் குறுகிய காலத்தில் நம்பிக்கை இழந்து அலைந்து திரிவதில் ஒரு பயனும் இல்லை. சதா மாறிக்கொண்டிருக்கும் ஒரு விபசாரி மனத்தை உடைய வர்களாக இருக்காதீர்கள்.

ஒரு தீபத்தின் உதவி கொண்டு நீங்கள் பல தீபங்களை ஏற்றி வைக்கலாம். அதேபோல அனுபூதியடைந்த ஒரு ஆத்மா பல பேர்களை அவர் கொடுக்கும் ஒளியைக் கிரஹிக்கத் தகுதியுடையவர்களாக மட்டும் இருந்துவிட் டால் இறைவனை உணரச் செய்ய முடியும். ஆகவே உங்க ளுடைய குருவிற்கு மிகுந்த பக்தியுடன் சேவை செய்யுங் கள். இரக்கம் கொண்டு ஒரு சமயம் இல்லாவிட்டால் மற் ஜெரு சமயம் அவர் உங்களுக்கு ஞான ஒளியை அளிப்பார். அவர் உங்களை மேலே தூக்கிவிடுவார். பொறுமையாகக் காத்திருங்கள். பூர்ணமாக அவரிடம் சரணுகதி அடைந்து விடுங்கள்.

ஒரு குருவின் பாதகமலங்களில் அமர்ந்திருப்பவனும், ஆத்மனைப் பற்றிய ஞானத்தை உடையவனும், வேத ஞானத்திலே தேர்ச்சியுடைவனும் ஆகிய ஒருவன் தான் "உண்மை"யை உணர முடியும். கீதையில் கூட நான்காவது அத்தியாயத்திலே 34-வது ஸ்லோகத்திலே பகவான் கிருஷ்ணன் "அதை குருவினிடம் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, கேட்டு, சேவை செய்து தெரிந்து கொள். உண்மையை அறிந்த ஞானிகள் உனக்கு அந்த ஆத்மனைப் பற்றிய ஞானத்தை உபதேசிப்பர்" என்று கூறுகிறார்.

பிரம்மோபதேசமானது (initiation into the mysteries of Brahman) ஆசையற்ற சீடனுடைய உள்ளத்திலே தான் பலனைக் கொடுத்து அவனிடம் ஞானத்தை உண்டு பண்ணும்.

அடுப்புக்கரி தீப்பிடிக்க வெகுநேரம் பிடிக்கிறது; வெடி மருந்தை இமைப் பொழுதில் பற்றவைத்து விடலாம். அதே போல தூய்மையற்ற மனத்தையுடைய ஒருவனிடம் ஞானச் சுடரை பற்றவைப்பதற்கு காலம் அதிகமாகப் பிடிக்கிறது. ஆனால் மிகுந்த தூய உள்ளம் படைத்த ஒரு சாதகன் ஆத்ம ஞானத்தை இமைப் பொழுதில், ஒரு புஷ்பத்தை விரல்களால் கசக்கி எறிவதற்கு ஆகும் நேரத்திற்குள்ளாக அடைந்து விடுகிறான்.

நீங்கள் தூய்மையாக இருந்தாலொழிய ஒரு முக்தியடைந்த முனிவருடைய உண்மையான பெருமையை உணர முடியாது. அவர் உங்கள் முன்னிலையில் தோன்றும் பொழுது நீங்கள் அவரை ஒரு சாதாரண மனிதராகவே கருதுகின்றீர்கள். அதனால் நீங்கள் பயனடைவதில்லை. உங்களுடைய குற்றமே காணும் குணம் காரணமாக (தோஷ திருஷ்டி) அவரிடம் குறைகாண முயற்சிக்கிறீர்கள். கிருஷ்ண பகவானே அல்லது ஸ்ரீசங்கரரே உங்களிடம் தங்கியிருந்தாலும் கூட, நீங்கள் அவரை வரவேற்கத்

தகுதியுடையவர்களாக இல்லாவிட்டால், அந்த ஆன்மீக உபதேசங்களைப் பெற்றுக் கொள்ளத் தயாராக இல்லாவிட்டால் அவரால் உங்களுக்கு எந்த நன்மையும் செய்துவிட முடியாது.

குருவினுடைய வெறும் கருணை மாத்திரம், அவருடைய ஸ்பரிசம், பார்வை அல்லது சங்கல்பமானது அற்புதங்களைச் செய்யும்; ஆனால் அதற்காக சீடன் சோம்பேறித்தனமாக உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டுமென்பது பொருளல்ல. குருவானவர் வழியைக் காட்டுவார், தடைகளையும், வலைகளையும், படுகுழிகளையும் நீக்குவார். மாணாக்கன் தன்னுடைய கால்களை யோக ஏணியின் படிகளிலே வைக்க வேண்டியிருக்கிறது. கீதை சொல்லுகிறது. ''உத்தரேத் ஆத்மனா ஆத்மானம் ந ஆத்மானம் ந அவஸாதயேத் - அவன் ஆத்மனை ஆத்மன் மூலமாகவே உயர்த்தி கொள்ளட்டும், அவன் தன்னைத் தாழ்த்திக் கொள்ளாமல் இருக்கட்டும்.'' அத் VI 5

குருவினுடைய கருணை சிஷ்யனுக்குத் தேவைப்படுகிறது. இதன் பொருள் சிஷ்யன் சோம்பேறித்தனமாக உட்கார்ந்து கொண்டு குருவினிடமிருந்து தன்னை நேரடியாக சமாதியிலே தள்ளிவிடுவதற்கு அற்புதத்தை எதிர் பார்த்துக் கொண்டு இருக்க வேண்டும் என்பதல்ல. மாணவனுக்காக குரு சாதனை செய்ய முடியாது. அவர் மாணாக்கனுக்கு வழிகாட்ட முடியும், அவனுடைய சந்தேகங்களை நீக்கி, வழியை வகுத்துக்கொடுத்து, கண்ணிகள், படுகுழிகள், தடைகள் ஆகியவற்றை நீக்கி, வழியிலே ஒளியைக் காட்ட முடியும். சீடன்தான் ஆத்மீக வழியிலே ஒவ்வொரு அடியாக எடுத்து வைக்க வேண்டும். அவன் தான் யோக ஏணியின் ஒவ்வொரு படியிலேயும் தன்னுடைய அடியை எடுத்து வைக்க வேண்டும்.

ஆன்மீகப் பாதையிலோ, அல்லது யோக ஏணியிலோ நீங்கள்தான் ஒவ்வொரு அடியாக எடுத்து வைக்க வேண்டும். உங்களை நிர்விகல்ப சமாதியில் தள்ளி விடுவ

தற்கு எந்த அற்புதமும் சம்பவிக்காது. குருமார்கள் உங்களை ஊக்குவித்து உங்களுடைய சந்தேகங்களையும், படுகுழிகளையும் நீக்குவார்கள். ஆத்ம சோதனை செய்து, குறைபாடுகளைக் கண்டு பிடித்து அவைகளை நீக்கி விடுங்கள். உங்களுடைய தியானத்திலே தவருது முறையாக இருங்கள். லக்ஷியத்தை நீங்கள் சீக்கிரம் அடையலாம்.

அனுபூதியானது குருவினல் செய்யப்படும் ஒரு அற்புதத்தைப் போல் மாணுக்கனுக்கு வந்துவிடாது. பகவான் புத்தர், பகவான் இயேசுநாதர், ராமதீர்த்தர் ஆகிய எல்லோரும் ஆத்மீக சாதனை செய்திருக்கின்றனர். கண்ணபிரான் குறிப்பிடுகிருர் : ‘‘ வைராக்கியம், அப்யாசம் ’’ என்று. அவர் அர்ஜுனனிடம், ‘‘ நான் உனக்கு முக்தியை நேரடியாகக் கொடுத்து விடுகிறேன் ’’ என்று கூறவில்லை.

•

ஆன்மீக வழியிலே உறுதியான படிகளைக் கைக்கொள்ள வேண்டுமென்கின்ற தீவிர ஆர்வம் மனதிற்குள்ளே தோன்றிஞல் நீங்கள் தீவிரமான சாதனை செய்தாக வேண்டும். ஆனல் சாதனை நன்ருக ஒழுங்கு படுத்தப்பட்டதாகவும், படிப்படியாகவும் இருத்தல் வேண்டும். ஏணிப் படியில் ஏறுவது போலவும், டைபாயிட் ஜுரத்திலே உஷ்ண நிலை ஏறுவது போலவும் இருக்க வேண்டும். உங்களுடைய அடிகளை யோக ஏணியில் நீங்கள் எப்படி மாடிப் படிகளிலே கால் வைத்து ஏறுகிறீர்களோ அதைப் போல எடுத்து வைக்க வேண்டும்.

குருவுக்கும் சீடனுக்கும் இடையில், தூரம் ஒன்றும் செய்வதற்கில்லை. மனதினுடைய சாமீப்யமே தேவை. குருவுக்கும் சீடனுக்கும் இடையில் பூரண ஒற்றுமை இருத்தல் வேண்டும். அப்பொழுது தான் சிஷ்யன் அளவு கடந்த பயனடைவான்.

சூரியன் வெகு தொலைவில் இருக்கிருன் ; ஆனலும் தாமரையானது காலையில் சூரியனைக் கண்டவுடனே அக

மகிழ்கிறது. சந்திரன் வெகு தூரத்தில் இருக்கிறது. இருந்த போதிலும் அல்லி மலரானது (Lady of the lake) சந்திரனைக் கண்டதும் சந்தோஷத்தால் துள்ளிக் குதிக்கிறது. மேகங்கள் வெகு தொலைவில் இருக்கின்றன. இருந்த போதிலும் மேகங்களைக் கண்டதும் மயில்கள் நடனம் புரிகின்றன. இதேபோல் நண்பர்கள் வெகு தூரத்தினால் பிரிக்கப்பட்டிருக்கலாம்; சிநேகம், அன்பு என்கின்ற தளையினால் நன்றாக இணைக்கப்பட்டிருக்க முடியும். தூரம் ஒரு தடையாகாது. குருமார்களும், சீடர்களும் தொலைவான இடங்களில் இருக்கலாம். இருந்த போதிலும் குருமார்கள் தங்களுடைய பலம் பொருந்திய எண்ண ஓட்டத்தினால் (thought current) அவர்களுடைய சீடர்களுக்கு உதவி புரிய முடியும்.

இது ஒரு அதிசயமான உலகம். நாம் பல பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஒரு 'காலத்தில் தன்னுடைய குருவினிடம் பக்தி பூண்டிருந்த சீடன் கூட பிற்காலத்தில் தனது அன்பிற்குரிய சொந்த குருநாதனையே அழிக்க முற்படுகின்றான். அபிவிருத்தி யடைந்து வரும் சாதகனுக்குத்தான் ஒவ்வொரு படியிலும் இடையூறுகள் வந்துகொண்டிருக்கும். இவைகள் அவனுடைய ஆத்ம சக்தியையும், அந்தரங்க பலத்தையும், பொறுமை சக்தியையும் அபிவிருத்தி செய்யும். பாதகமான நிலையில் சிக்க வைக்கப்படும் பொழுது சாதகன் தன்னுடைய பலத்தைக் காட்ட வேண்டும். அவன் ஒன்றும் நடந்து விடவில்லை என்று எண்ணவும் வேண்டும்.

உங்களுக்கு குரு இல்லா விட்டால் இறைவனை, கிருஷ்ண பகவானை, சிவபெருமானை, அல்லது ராமபிரானை உங்களுடைய குருவாக ஏற்றுக்கொள்ளுங்கள். அவனிடம் பிரார்த்தியுங்கள். அவனைத் தியானியுங்கள். அவன் நாமத்தைப் பாடுங்கள். அவனை நினையுங்கள். அவன் உங்களுக்கு தகுதியான ஒரு குருவை அனுப்பி வைப்பான். குருமார்களுக்கெல்லாம் குருவாக விளங்கும் அவன்தான்

உங்களுக்கு இறைவனை அடைய வழிகாட்டி, வழியிலுள்ள வலைகளையும், பள்ளம் படுகுழிகளையும் நீக்க முடியும்.

## 3. சாதகர்களுடைய யோக்யதாம்சங்கள்

*இறவாத் தன்மையையடைய தகுதி பெற்றவன் யார்?*

இந்த உலகாயுத அழுக்குகளைக் களைந்து, உலகாயதத்தை நீக்கி, எல்லாவிதமான பந்தங்களையும் அறுத்தெறிந்து விடுகிற ஒருவன்தான் யோக மார்க்கத்தைக் கடக்கத் தகுதி வாய்ந்தவன். அவனிடம் உள்ளத் தூய்மையும், வாழ்க்கைத் தூய்மையும் வேண்டும்.

ஏராளமான தபஸ்சர்யத்தின் மூலம் தன்னுடைய பாபங்களை நீக்கியவனும், சாந்தமுடையவனும், பந்தத்திலிருந்து விடுபட்டவனும், (வீதராக புருஷன் அதாவது ஆசையற்ற மனிதன்) சம்சாரத்திலிருந்து விடுபட விரும்புவனும் ஆகிய ஒருவன்தான் வேதாந்தத்தைப் பற்றிய புத்தகங்களையும், இதர ஆத்ம ஞான புத்தகங்களையும் படிக்க உரிமையுள்ளவன்.

பல தவங்களின் மூலம் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொண்டவர்களும், அமைதியான மனம் படைத்தவர்களும், எல்லாவித பந்தங்களிலிருந்தும் விடுபட்டிருப்பவர்களும், குருவினிடத்திலும், ஸ்ருதிகளிடத்திலும் அசையா நம்பிக்கை கொண்டிருப்பவர்களும், விடுதலைக்காக ஏங்கிக் கொண்டிருப்பவர்களுமாகிய சாதகர்கள்தான் (ஆத்ம) ஞானத்தை அடையத் தகுதியுடையவர்கள் ஆவர். அவர்கள் பிரம்ம நிஷ்டை குருவை அணுகி உபதேசங்கள் பெறுவதற்கு அதிகாரிகளாவர்.

உலகத்தினிடமும், அதன் பொருள்களிடமும் வைராக்கியத்தையும், இறைவனிடமும், ஆன்மீக சாதனையிடத்தும் பிரேமையும் கொள்ளுங்கள்.

ஞானமடைந்த முனிவருடைய வழிகள் பாப மற்றவை. விடுதலை அல்லது பூரண சந்தோஷம், அமைதி ஆகியவற்றின் வழி யாதெனில் உள்ளம், மனம், ஒவ்வொரு செயல், நடத்தை, வாழ்க்கை ஆகிய வற்றின் தூய்மையும், ஆத்மக் கட்டுப்பாடும், மனக்கட்டு பாடும், தூய்மையான, சுய ஒளியுள்ள, பிரிக்க முடியாத, எங்கும் நிறைந்த ஆத்மனை ஒழுங்காக தியானிப்பதுமாகும்.

ஒரு இளமங்கையினுடைய முகத்திலே ஒரு சிறு வெண் தேமல் (Leucoderma) இருந்தாலும் கூட அது நிச்சயமாக அவளுடைய அழகைக் கெடுத்து விடுகிறது. இதேபோல ஒரு சாதகனிடமும் ஒரு சிறு குறையிருப்பினும், அது அவனுடைய வாழ்க்கையையும், நடத்தையையும், சந்தேகமின்றி அழித்து விடுகிறது. ஒரு சாதகனானவன் எல்லாவிதமான குற்றங் குறைபாடுகளிலிருந்தும் முற்றிலும் விடுபட்டவனாக இருக்க வேண்டும். அவன் எல்லா நற்குணங்களும் பொருந்தப் பெற்ற ஒரு லக்ஷண புருஷனாக (ideal person) இருத்தல் வேண்டும்.

நேரடியாக ஆத்மானுபூதியைப் பெறுவது விடுதலைக்கான ஒரு வழியாகும். விடுதலைக்கான நான்கு மார்க்கங்களையும் உடையவன் ஆத்மனை உணர முடியும். விவேகம், வைராக்கியம், ஷட்-சம்பத்து, முமுக்ஷுத்துவம் என்று சொல்லப்படுகின்ற இந்த நான்கு யோக்யதாம்சங்களையும், தன்னுடைய குலத் தொழிலில் தவறாது கடைப் பிடித்து வருவதின் மூலமும், தபஸ், தன்னலமற்ற சேவை ஆகிய வற்றின் மூலமும், தன்னுடைய சொந்த இஷ்ட தேவதையின் அன்பிற்குப் பாத்திரமாவதன் மூலமும், குரு சேவை மூலமும் அடையலாம்.

கத்தரிக்கோல், ஊசி, நூல் ஆகியவைகள் இல்லாமல் நீங்கள் தையல் வேலை செய்ய முடியாது. ஒரு மண்வெட்டி (spade) இல்லாமல் உங்களால் நிலத்தைத் தோண்ட முடியாது. இதே போல விவேகம், வைராக்

கியம், ஷட் சம்பத்து, முமுக்ஷுத்துவம் ஆகிய நான்கு மார்க்கங்களையும் உடையவர்களாக இல்லாமல் உங்களால் பிரம்ம ஞானத்தை அடைய முடியாது. தன்னலமற்ற சேவை அல்லது நிஷ்காம கர்ம யோகத்தைச் செய்து மனத் தூய்மை பெற்ற அந்த மனிதனுடைய உள்ளத்தில் தான் வேதாந்தத்தின் உபதேசங்கள் நுழையும்.

சாதகனுக்கான 'சந்தோஷம், வீத்ராகம், நிஸ்ப்ருக (பற்றற்ற தன்மை), சர்வ ஸங்க பரித்யாகம், ஆஸ்திகம், சதாச்சாரம், ஜிதேந்திரியம், உண்மையான தீவிர வைராக்கியம்; உறுதியான தீர்மானம், பொறுமை, சகிப்புத் தன்மை, பணிவு, எளிமை' முதலிய குணாதி சயங்களை நீ உடையவனாக இல்லா விட்டால் ஒரு அவதாரம் கூட உனக்கு உதவி செய்ய முடியாது.

ஒரு வேதாந்த மாணாக்கனுக்குரிய அடிப்படை யோக்கியதாம்சம் என்னவென்றால் உண்மையைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமென்கின்ற ஒரு ஆவலேயாகும். அவன் இந்த ஆசையை எப்பொழுதும் வைத்திருக்க வேண்டும். இதுவே சாதகனுக்குரிய அடிப்படைத் தேவையுமாகும். ஒருவனிடம் இந்த யோக்யதாம்சங்கள் இருந்து விட்டால் எல்லா யோக்கியதாம்சங்களும் அவனைத் தொத்திக் கொள்ளும். எல்லா நற்குணங்களும் தானாகவே வந்தடையும். அப்பொழுதுதான் உண்மை வழியில் சுலபமாக நடக்கமுடியும்.

மனுஷ்யத்துவம் (மனிதப் பிறவி) முமுக்ஷுத்துவம் (விடுதலை வேட்கை), சத்சங்கம் (முனிவர்களின் சேர்க்கை), குரு சேவை, ஸ்ருதிகளைக் கேட்டல், பிரதி பலிப்பு, இடைவிடாத, நீண்ட ஆழ்ந்த தியானம் ஆகிய வைகள் முக்தியை அடைய அவசியம் தேவை.

நம்பிக்கை, வைராக்கியம், தன்னடக்கம், மன ஒருமைப்பாடு, உள்ளத் தூய்மை, பக்தி, விடுதலைக்கான

ஆசை, தியானம் ஆகியவைகள் சாதகனுக்குரிய விடுதலைக் கான அவசரத் தேவைகள். எவனொருவன் இந்த குணங் களை உடையவனாக இருக்கின்றானோ அவன் அமரத்துவத் துவத்தையும், ஞானத்தையும் அடைகின்றான்.

ஆணவமின்மை, நற்குண அபிவிருத்தி, உற்சாக முடைமை, ஆத்ம சரணாகதி, உணர்ச்சியும் கோபமும் இல்லாமை, எல்லா நேரங்களிலும் சீரான மனோநிலையுட னிருத்தல், மரியாதை, அவமரியாதை இரண்டையும் ஒரே உணர்வுடன் நோக்குதல், இந்திரியப் பொருள்கள், உஷ்ணம், குளிர்ச்சி ஆகியவற்றிடம் ஒரு வெறுப்புணர்ச்சி; ஆகியவைகள் அனுபூதி மார்க்கத்திலே இருப்பவனிடம் காணப்படும் சில அறிகுறிகளாகும். இவைகள் இரண் டொரு நாட்களில் அடையப்படக் கூடியவை அல்ல. இது வருஷக் கணக்கான இடைவிடாத நீண்ட சாதனையின் வேலையாகும்.

ஆன்மீக வழியிலே பட்டதாரிகளுக்கோ, எம். ஏ. க்க ளுக்கோ, அல்லது தத்துவத்துறை மேதைகளுக்கோ (Doctor of philosophy) ஒரு முன் பாத்யதையும் (preference) கிடையாது. இந்தக் கடுமையான உண்மை வழியிலே சர்வகலாசாலை யோக்யதாம்சங்கள் அதிகமாக ஒரு மனித னுக்கு பயனளிக்காது. எவனொருவனிடம் வைராக்கிய மும், விவேகமும், பணிவும், பக்தியும், சகிப்புத் தன்மை யும், இருக்கின்றதோ, எவனொருவன் மனதையும், இந்தி ரியங்களையும் அடக்கி வைத்திருக்கின்றானோ அவனே இந்த வழிக்குத் தகுதியுடையவன். நீங்கள் அதிகமாகத் தர்க்கம் செய்தால் நீங்கள் எங்கும் இல்லாமல் போய்விடுகி றீர்கள். (you are nowhere if you argue too much). இன்றைய கல்வி முறையானது எப்பொழுதும் அநாவசிய மான தர்க்கங்களிலும், கருத்து வேற்றுமைகளிலும் புகும் படி தூண்டிவிடுகிறது. அவன் லக்ஷியத்தை மறந்து விடு கின்றான். அவன் ஒரு வரட்டு வாய்ப் பேச்சுப் பண்டிதனாக மட்டும் ஆகிறான்.

குருவானவர் விடுதலை வேட்கை உடையவனுக்கும், சாஸ்திரங்களின் ஆணைக்கு முறையாகக் கீழ்படிபவனுக்கும், உணர்ச்சிகளையும், இந்திரியங்களையும் கட்டுப்படுத்தியவனுக்கும், அமைதியான உள்ளம் படைத்தவனுக்கும், தயை, ஜீவ காருண்யம், பொறுமை, பணிவு, சகிப்புத் தன்மை, தன்னடக்கம் முதலிய நற்குணங்களை உடையவனுக்கும்தான் ஆத்மீக உபதேசங்களைப் பகிர்ந்து கொடுப்பார். உத்தம அதிகாரிகளுக்குத்தான் (முதல்தர சாதகர்கள்) ஆத்மானுபூதி 3 நாட்களில் கிடைக்கும். மத்யம அதிகாரிகள் (நடுத்தர சாதகர்கள்) நீண்ட காலம் கடுமையான சாதனை செய்ய வேண்டும்.

ஒரு சாதகன் மேருவைப் போன்ற உறுதியையும், ஆகாயத்தைப் போன்ற சுதந்தரத்தையும், மல்லிகையைப் போன்ற மணத்தையும், வானத்தைப் போன்ற விசாலத்தையும், பூமியைப் போன்ற சகிப்புத் தன்மையையும், பெற்றோர்களைப் போன்ற மன்னிக்கும் சுபாவத்தையும், சூரியனைப் போன்ற பிரகாசத்தையும், சிங்கத்தைப் போன்ற பயமற்ற தன்மையையும் உடையவனாக இருக்க வேண்டும்.

“நான்” என்கின்ற தன்மையும், பற்றுதலும் இல்லாமல் வாழுங்கள். இந்திரியங்களைக் கட்டுப்படுத்துங்கள். நன்னடத்தைக்கான சட்டங்களைக் கடைப் பிடியுங்கள். உள்ளத் தூய்மையை அடையுங்கள். உண்மைக்குச் செவி சாயுங்கள். ஆத்மனில் வசியுங்கள். ஆனந்தமடையுங்கள்.

ஒரு சுயநலக்காரன் அதர்மியாக இருக்கின்றான். பற்றுதலும், தனி உணர்ச்சியும், அவனிடம் ஒரு கணிசமான அளவு காணப்படும். யோகத்திற்குத் தேவையான குணங்களை அவனால் அபிவிருத்தி செய்ய முடியாது. ஒரு யோகியாக ஆக வேண்டும், யோகத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்கின்ற ஆவல், தன்னலமற்றவனும், தர்மத்தைக் கடைப்பிடிப்பவனும், மதத்திலே பற்று உடைய

வனும் ஆகிய ஒருவனிடத்தில்தான் உண்டாகும். சுயநல மானது உள்ளத்தை இறுகச் செய்து மற்றவர்களுக்குத் துன்பம் செய்யத் தூண்டி, கெட்ட வழிகளிலே மற்றவர் களுடைய சொத்தை அபகரிக்கத் தூண்டுகிறது. ஒரு மனிதனைப் பாப காரியங்களைச் செய்யத் தூண்டுவது சுய நலமேயாகும்.

கட்டுப்பாடு (Austerity), மத நூல்களைப் பயிலுதல், மந்திர ஜபம் செய்தல், இறைவனிடம் பக்தி பூண்டிருத் தல், இறைவனிடம் சரணுகதி அடைதல் ஆகியவைகள் எல்லாம் சேர்ந்து கிரியா யோகம் என்பது பதஞ்சலி மகரிஷியின் கூற்று. இரண்டாவது அத்தியாயத்தில் ''சாதன பாதா'' விலே உள்ள முதல் சூத்திரம் இதுதான். இது ஒழுங்கு யோகமாகும். இந்தக் கிரியா யோகத்தைப் பயிலுவதானது யோக மாணுக்கனை சமாதி நிலையில் நுழை வதற்குத் தயார் செய்கிறது. இது மனதைத் தூய்மை யாக்கி, அவித்தை, அஸ்மிதம், ராகம், துவேஷம், அபினிவேசம், (அறியாமை, ஆணவம், அன்பு, வெறுப்பு, உலக வாழ்க்கையைப் பற்றிக் கொள்ளுதல்) ஆகிய ஐந்து விதமான துன்பங்களையும் இல்லாததாக்கி விடுகிறது (thins out) தூய்மையானவனும், தன்னலமற்றவனும் தான் தெய்வீக ஒளியைப் பெறுவதற்கும், அமரத்துவ மாகிய தேவாமிர்தத்தைப் பருகவும், முற்றிலும் தகுதி பெற்றவனுகின்றுன்.

ஞானிகளிடம் உனக்குத் தெரியாததைப் பற்றி நீ கேட்கத் தவறி விட்டால் நீ உன்னுடைய வாழ்க்கை முழு வதும் மந்தமாகத்தான் இருப்பாய் (dunce).

உன்னுடைய குருவின் பாதகமலங்களில் பாவத்துட னும் (Bhav), நம்பிக்கையுடனும் அமர்ந்திரு. அவருக்கு மனப்பூர்வமாகவும், பணிவோடும், அன்போடும் சேவை செய். காலையிலும், மாலையிலும் அவர் முன்னிலையில் சாஷ்டாங்கமாக விழு. உன் சந்தேகங்களைப் போக்கிக்

கொள். ஸ்ருதிகளை அவரிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொள் பிரதிபலித்துப் பார். தியானம் செய். மேலான எண்ணத்திற்கப்பாற்பட்ட ஒளிகளுக்கெல்லாம் ஒளியான அந்தப் பரம்பொருளைப் பார். ஞானும்ருதத்தை நன்ருகப் பருகி அமரத்துவத்தை அடை.

ஒரு குருவை அணுகுவதற்கு நீ தகுதியாவதற்கு முன்பு உன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக நீ சிறு சாதனைகளைச் செய்தாக வேண்டியிருக்கிறது. ஒரு சாதகனுக்கு வேண்டிய ஆரம்ப யோக்கியதாம்சங்களை நீ உடையவனுக இருக்க வேண்டும்.

யோக மாணுக்கன் அவனுடைய ஆகார விஷயத்தில் மிதமாக இருக்க வேண்டும். அவன் சோம்பேறித்தனம், சொகுசு, வழக்கமான சோர்வு (habitual langour), மிதமிஞ்சிய தூக்கம் ஆகியவைகளைத் தவிர்க்க வேண்டும். தன்னுடைய உடலமைப்பின் உறுதிப்பாட்டிற்காக மௌனத்தையும், அவ்வப்போது லேசான விரதத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். அவன் சரியான பழக்கங்களை அபிவிருத்தி செய்துவர வேண்டும். அவன் விசாரம் (enquiry) எண்ணிப் பார்த்தல் (thinking), விவேகம் (discrimination), ஆகியவற்றின் மூலம் எல்லாவிதமான ஆசைகளையும் தடுத்து நிறுத்தி உலகாயத ஆசைகளை எதிர்த்து நிற்க வேண்டும். அவன் இந்த ஏமாற்றும் உள்ளத்தினிடம் ''ஏ மனமே, நான் உன்னுடைய தந்திரங்களை அறிவேன். என்னிடம் இப்பொழுது வைராக்கியமும், விவேகமும் இருக்கிறது. இப்பொழுது உன்னுடைய வாலை ஆட்டாதே. அதை ஈவிரக்கமின்றி நறுக்கி எறிந்து விடுவேன். நான் பல பாடங்களை கற்றிருக்கிறேன். அறியாமைதான் ஒரு மனிதனை நிரந்தரமான பயனை விட்டுவிட்டு, பொய்யான லாபத்தை மேற்கொள்ளச் செய்கின்றது. இந்த இந்திரிய சுகங்களை நான் மறுபடியும் விரும்பவில்லை. அவைகள் எனக்கு வாந்தி எடுத்த பொருளைப் போல இருக்கின்றன. நான் சாஸ்வதமான அமைதி, எல்லையற்ற

பேரானந்தம், மேலான சந்தோஷம் ஆகிய சுதந்திரமான தும், நிரந்தரமானதுமாகிய யோகப் பலன்களை அடைய முடிவு செய்துவிட்டேன்'' என்று கூறல் வேண்டும்.

நீங்கள் ஒரு மீனைத் தண்ணீரிலிருந்து எடுத்து கரையின்மீது போட்டால் தாங்கொணுத் துன்பத்தினுல் துடிதுடிக்கிறது. அது மறுபடியும் தண்ணீருக்குள் போவதற்கு தவித்துக்கொண்டிருக்கும். கங்கையின் குளிர்ந்த ஜலத்திலே ஒரு பையனைச் சிறிது நேரம் வைத்திருப்பீர்களேயாகில் அவன் மிகவும் கிளர்ச்சி யடைந்த நிலையில் காணப்படுவான். அவன் கூச்சல் போட்டு கூக்குரலிடுவான். அவன் தண்ணீரை விட்டு வெளியே வர ஆவலுடையவனுக இருப்பான். ஒருவனுடைய வீடு தீப்பற்றிக் கொண்டால் அவன் உடனே நகராண்மை அலுவலகத்திற்கு ஓடிப்போய் நெருப்பை அணைக்க தீயணைக்கும் படையினரை வரவழைக்க ஏற்பாடு செய்வான். அவன் உடனடியான ஏற்பாடுகளைச் செய்கிருன். அதுபோல உங்களுக்கு விடுதலையடைய வேட்கையும், அவாவும் இருத்தல் வேண்டும்.

ஒரு சில மாதப் பயிற்சியினுல் ஒரு யோகி ஆகிவிடலாம் என்கின்ற எண்ணத்தை விட்டுவிடு. அதற்கு வருடக்கணக்காக மனப்பூர்வமான சாதனையும் பிரம்மச்சரிய அனுஷ்டானமும், அஹிம்சையும் தேவை. ஒரு பட்டதாரியாகி ஒரு சொற்பத் தொகை சம்பளம் பெறுவதற்கு நீ பல வருஷங்கள் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருக்கிறது. அப்படியிருக்க ஒரு யோகியாக ஆவதற்கும், அமரத்துவத்தை அடைவதற்கும் இன்னும் எவ்வளவு அதிகமாகக் கஷ்டப்பட வேண்டும்.

ஓ சாதகர்களே, ''நான் இப்பொழுது கடவுளை உணர்ந்தே தீருவேன். இல்லாவிடில் இறந்து படுவேன்'' என்கின்ற உறுதியான தீர்மானத்தை உடையவர்களாக இருங்கள்.

"நான் என்னுடைய அடுத்த பிறவியிலே உணர்ந்து கொள்கிறேன்" என்று சொல்ல வேண்டாம். நான் உங்களைப் புடைப்பதற்கு ஒரு தொன்னையை (cudgel) எடுத்துக்கொள்வேன். நான் மிகவும் கோபப்படுவேன். நீங்கள் இறைவனுக்காக மட்டும் ஏங்கி, மனப்பூர்வமான கடுமையான சாதனை செய்து வருவீர்களேயாகில் இந்த க்ஷணத்திலேயே உங்களால் உணர முடியும்.

## 4. சஞ்சித, புருஷார்த்த, பிராரப்த கர்மங்கள்

அம்பறுத் தூணி நமது சஞ்சித கர்மத்தைக் குறிக்கிறது; எய்துவதற்குத் தயாராக இருக்கும் அம்பு நமது ஆகாமி கர்மத்தைக் குறிக்கிறது. வில்லை விட்டுச் சென்று, குறியிலே போய் துளைக்க வேண்டியதும், மறுபடி திரும்பி வர முடியாததுமான அம்பு பிராரப்த கர்மத்தைக் குறிக்கிறது.

சேமிப்பு அறை (Store room) சஞ்சிதம். கடையிலே விற்பனைக்காகப் போட்டு வைத்திருக்கும் சாமான்கள் பிராரப்தம். தினசரி விற்பனைத் தொகை ஆகாமி.

சஞ்சித கர்மங்கள் என்பவை சேர்த்து வைக்கப்பட்ட காரியங்கள்; பிராரப்த கர்மங்கள் முற்றிய அல்லது பலனளிக்கவல்ல காரியங்கள்; கிரியமாண ஆகாமி கர்மங்கள் இப்பொழுது நடைபெற்றுவரும் காரியங்கள்.

ஒரு பெரிய நெற்களஞ்சியம் சஞ்சித கர்மத்தைக் குறிக்கிறது. நடைமுறை வருஷத்தின் உபயோகத்திற்காக அதிலிருந்து தனியாக எடுக்கப்பட்ட நெல்லானது பிராரப்தத்திற்கு ஒப்பானது; இந்த ஆண்டு வயலில் விளைந்து கொண்டிருக்கும் நெல்லானது ஆகாமி கர்மம் அல்லது கிரியமாணத்தைக் குறிக்கிறது.

சஞ்சித மனம் பிரம்ம ஞானத்தால் அழிக்கப்படுகிறது. எப்படி இருந்தாலும் ஒருவன் பிராரப்தத்தை (விவகார

திருஷ்டி மட்டும்) அனுபவித்தே தீர வேண்டும். கிரிய மாண கர்மங்கள், காரியங்கள் அல்ல. ஏனெனில் ஞானிக்கு அகர்த்தா அல்லது சாக்ஷி பாவம் இருக்கிறது.

இறைவனும், புருஷார்த்தமும் ஒரே பொருளைத் தரும் சொற்கள். அவைகள் ஒரே பொருளைக் குறிக்கும் இரண்டு பெயர்கள்.

மகாபாரதத்தில் புருஷார்த்தமும், பிராரப்தமும் சேர்ந்து பலன்களைக் கொண்டு வருவதை நீங்கள் காண லாம்.

நீங்கள் நோயுற்றிருந்தால் நீங்கள் புருஷார்த்தம் செய்தாக வேண்டும். நீங்கள் மருந்து சாப்பிட வேண் டும். முடிவை பிராரப்தத்திற்கு விட்டு விடுங்கள்.

யோக வாசிஷ்டத்தில் நெடுகிலும் வசிஷ்டர் ஸ்ரீராம ருக்குப் புருஷார்த்தத்தைத்தான் சிபாரிசு செய்கிறார். மார்க்கண்டேயர் புருஷார்த்தத்தின் மூலமாகத்தான் மரணத்தை வென்றார். மனிதன் சந்தேகமின்றி, தன்னு டைய விதியின் எஜமானனாக இருக்கின்றான்.

புருஷார்த்தத்தினால் எதையும் செய்ய முடியும். மாற்றியமைக்கவும் முடியும். மார்க்கண்டேயர் தனது விதியை தனது தபஸின் மூலமாக மாற்றினார். விதியை நம்புதலானது அசாதாரண மந்தத்தை உற்பத்தி செய்யும். (Fatalism will produce abnormal inertia). யார் தனக்குத் தானே உதவிக் கொள்கிறார்களோ அவர்களுக்கு இறைவன் உதவுகின்றான். எழுந்திருந்து செய்த வண்ணமாக இரு. மனிதன் அவனுடைய விதியின் எஜமானன். பிராரப்தம் என்பது உன்னுடைய சொந்த எண்ணங்கள், கர்மங்கள் ஆகியவற்றின் விளைவேயாகும். நீ எண்ணுகின்ற முறையை மாற்றியமை. "நான் அழியாத ஆத்மா" என்று நினை. அந்த அழியாத ஆத்மாவாக நீ ஆவாய். நீ எவ்வாறு நினைக்கிறாயோ அவ்வாறே ஆகிறாய். இது மாற்ற முடியாத சட்டமாகும்.

இப்பொழுது உனக்கு ''நான் உடல். நான் மனம். நான் பிராணன். நான் இந்திரியம்'' என்று இவ்வாறு எண்ணுகின்ற வழக்கம் இருந்து வருகிறது. இப்போது இப்படி எண்ணுகின்ற வழக்கத்தை ''நான் பிரம்மன், நான் எங்கும் நிறைந்த அறிவாக விளங்குகின்றேன்'' என்று மாற்றிக் கொள். நீ உன்னுடைய விதியை வென்று விடுவாய்.

நீ இப்பொழுது சாய்ந்து எழுதும் வழக்கமுடைய வனுக இருந்தால் உன்னுடைய வழக்கத்தை மாற்றி செங் குத்தாக எழுத உன்னுல் முடியும். இதேபோல் நீ எண்ணு கின்ற வழக்கத்தையும் உன்னுல் மாற்ற முடியும். வழக் கத்தை வெற்றி கொள்வதானது விதியை வெல்வதாகும்.

விதி என்பது உன்னுடைய சொந்த கர்மங்களி னுடைய சிருஷ்டியேயாகும். நீதான் உன்னுடைய விதி யின் எஜமானன். நீ எண்ணுகின்ற விதத்தை மாற்றிக் கொள். '' நான் இந்த உடல் '' என்று மூடத் தனமாக எண்ணுவதற்குப் பதிலாக '' நான் ஆத்மா; எங்கும் நிறைந்தவன் '' என்று எண்ணு.

பிராரப்தம் யாரை வேண்டுமானுலும் எவ்வளவு உயரம் வேண்டுமானுலும், இறைவனுடைய திருமுடி அளவுக்குக் கூட உயர்த்திவிட முடியும். ஜேம்ஸ் ராம்ஸே மாக்டொனுல்டு அவர்களின் வாழ்க்கை இங்கு குறிப்பிடத் தக்கது. அவர் ஒரு புருஷார்த்தம் நிறைந்த மனிதர். அவர் ஏழ்மையிலிருந்து அதிகாரத்திற்கு உயர்ந்தவர். வயலிலே கூலியாளாக இருந்து இங்கிலாந்தின் பிரதமராக ஆனவர். அவர் முதன்முதலில் வாரம் 10 ஷில்லிங் கூலிக்கு கவர் எழுதிக் கொடுக்கலானுர். ஒரு தேத் தண்ணீர் கூட வாங்கிக் குடிக்க முடியாது. அவ்வளவு பரம ஏழையாக இருந்தார். ஆகவே அதற்குப் பதிலாக தண்ணீரையே குடித்துக் கொண்டார். மாதக் கணக்காக அவருடைய தினசரி முக்கிய ஆகாரம் மூன்று பென்னி

விலையுள்ள வேகவைத்த இறைச்சித் துண்டுதான் (three-penny-beef-steak pudding). அவர் ஒரு மாணவ ஆசிரிய ராக இருந்தார். அவர் அரசியலிலும், விஞ்ஞானத்திலும் அதிக ஆர்வமுடையவராக இருந்தார். அவர் ஒரு பத்தி ராதிபராகவும் (journalist) இருந்தார். அவர் படிப்படியாக சரியான முயற்சி (பிராரப்தம்) மூலமாக வாழ்க்கையில் தற்போதைய நிலைக்கு உயர்ந்துள்ளார். நீ உன்னுடைய எண்ணங்களைப் பாதுகாத்துக் கொள். காரியங்கள் தங்க ளைத் தாங்களாகவே பாதுகாத்துக் கொள்ளும். வினை என்பது எண்ணங்களைத் தொடர்ந்து வருகின்றது. பழக்கம் நடத்தையை உற்பத்தி செய்கிறது. நடத்தை விதியை சிருஷ்டிக்கிறது. ஆகவே உன்னுடைய விதி உன்னுடைய கைகளில் இருக்கிறது. எல்லா விதமான கெட்ட எண்ணங் களையும் மூடிவிடு. நல்ல எண்ணங்களை அனுமதி. நம் முடைய எண்ணங்கள் எப்படி ஆக்கியிருக்கின்றனவோ அப்படியே நாம் இருக்கிறோம். இனிமேலும் நம்மை அவைகள் எப்படி ஆக்கப் போகின்றனவோ அது மாதிரியே இருக்கப் போகிறோம்.

நீ கட்டுப்பட்டவன் அல்ல. உனக்கு சுதந்திரமான விருப்பம் உண்டு. உன்னுடைய அனுபவங்களை, பிராரப் தத்தின் பலன்களை உன்னால் மாற்ற முடியாது. ஆனால் உன்னுடைய எதிர் காலத்தை சரியான எண்ணம், சரியான செய்கை மூலமாக மாற்றியமைத்து உன்னுடைய எண்ணத்தை (will) தூய்மை யுடையதாகவும், தடுக்க முடியாததாகவும் செய்ய முடியும். ஒரு சக்தி பொருந்திய விருப்பத்தின் மூலம் நீ ஆத்மானுபூதியை அடைய முடியும்.

அரிசிக்குத் தவிடும், தாமிரத்திற்குக் களிம்பும் இயற்கையாக இருந்த போதிலும், அவைகள் முயற்சியின் மூலமாக மறைந்து விடுகின்றன. இதே போல ஜீவனைப் பற்றிக் கொண்டிருக்கும் அஞ்ஞானத்தை இடைவிடாத ஆத்ம விசாரத்தின் மூலம் மறையும்படி செய்து விடலாம்.

அவித்தையை அழித்துவிடு. நீ உனது சொந்த ஆத்மனில் இணையற்ற உறுதிப் பாட்டுடன் நிலைத்திருப்பாய்.

புருஷார்த்த தத்துவத்தை எடுத்துச் சொல்லுகின்ற மனிதன், ''இங்கும் அங்கும் அலைக்கழிக்கப்படுவதற்கு நான் என்ற ஒரு வைக்கோலா? நான் என்னுடைய பிராரப்தத்தை மாற்றியமைக்க முடியும். வேதாந்தப் பயிற்சியின் மூலம் அதை மாற்றியமைக்க முடியும். எனக்கென்று சொந்தமான ஒரு சுதந்திர விருப்பம் இருக்கிறது. நான் அதை தூய்மையாகவும், பலமுடையதாகவும், எதிர்க்க முடியாததாகவும் செய்ய முடியும். நான் என்னுடைய விடுதலைக்கு வழிவகுத்துக் கொள்வேன். நானாகவே என்னை விடுவித்துக் கொள்வேன்'' என்று கூறுகின்றான்.

மற்றொரு தத்துவ ஞானி, ''எல்லாம் அந்த மாபெரும் திட்டத்திலே முன்னேற்பாடாகச் செய்து வைக்கப்பட்டிருக்கிறது. ஒரு மனிதன் தாவர வாழ்க்கையிலிருந்து (Mineral Life) அவன் ஒரு ஜீவன் முக்தனாகும் வரை அவனுடைய பரிணாம விவரங்கள் முழுவதையும் இறைவன் அறிவான். உண்மையில் எல்லாம் பிராரப்தமே. மனிதன் சரியான வழியிலே வேலை செய்வதற்காகவும், அவனுக்கு ஊக்கத்தைக் கொடுப்பதற்காகவும் நாம் புருஷார்த்தத்தைப் போதிக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிடில் அவன் சோம்பேறியாகவும் மந்தமாகவும் ஆகிவிடுவான்'' என்று உரைக்கின்றார்.

ஒரு மனிதன் அவனுடைய முயற்சிகளிலே வெற்றி பெற்று விட்டால் அவன் அதை புருஷார்த்தம் என்று அழைக்கின்றான். ''உண்மையிலேயே நான் அதிக சிரமப்பட்டேன். நான் வெற்றியடைந்து விட்டேன்'' என்று அவன் சொல்கிறான். அவன் தோல்வியுற்றிருந்தால் அதே மனிதன் ''நண்பா, என்னால் என்ன செய்ய முடியும்? எல்லாம் பிராரப்தம். அவனின்றி ஒன்றும் செய்வதற்கில்லை. அவனன்றி ஓரணுவும் அசையாது, காற்றில் ஓர் இலையும் ஆடாது'' என்று கூறுவான்.

பிராரப்தம் என்பது முற்பிறப்பின் புருஷார்த்தமே யொழிய வேறில்லை.

கடைசியாக விதி என்பதுதான் என்ன? இது ஒருவனுடைய சொந்த ஏற்பாடு. நீ சில பொருள்களை உற்பத்தி செய்தாய். உன்னால் அவைகளை அழிக்கவும் முடியும் அல்லது மாற்றியமைக்கவும் முடியும். நீ ஒரு வழியில் எண்ணிக் கொண்டிருக்கிறாய். "நான் திருவாளர் இன்னாராக (so and so) இருக்கிறேன். நான் ஒரு பிராம்மணன், நான் ஒரு டாக்டர். நான் கொழுத்து இருக்கிறேன். நான் ஒரு கிருஹஸ்தன்" என்று. இது பிராரப்தம். இந்தக் குறிப்பிட்ட எண்ணுகின்ற முறையை நீ மாற்றியமைக்க முடியும். "நான் பிரம்மன். நான் எல்லாம் வல்லவன். நான் ஒரு சாக்ஷி. நான் கடவுள். நான் உடலுமல்லன் மனமுமல்லன். நான் எங்கும் நிறைந்த உண்மைப் பொருள் அல்லது தூய உணர்வாக இருக்கின்றேன்" என்று எண்ணு. இது புருஷார்த்தம். செங்குத்தாக எழுதுகின்ற வழக்கம் உனக்கு இருக்கிறது. இது பிராரப்தம். அதை உன்னால் சாய்வாக எழுத மாற்றிக் கொள்ள முடியும். இது புருஷார்த்தம்.

நீ ஒரு வினையை விதைக்கிறாய், ஒரு விருப்பத்தை (tendency) அறுக்கிறாய். நீ ஒரு விருப்பத்தை விதைக்கிறாய்; ஒரு பழக்கத்தை அறுக்கிறாய். நீ ஒரு பழக்கத்தை விதைத்து உன்னுடைய நடத்தையை அறுக்கிறாய்.

நீ உன்னுடைய நடத்தையை விதைத்து உன்னுடைய விதியை அறுக்கிறாய். ஆகவே விதி என்பது உன்னுடைய சொந்த சிருஷ்டியேயாகும். நீ உன்னுடைய பழக்கத்தை மாற்றினால் நீ உன்னுடைய விதியின் எஜமானனாக ஆக முடியும்.

கடவுள் ஒருபொழுதும் தண்டிப்பதுமில்லை, வெகுமதி அளிப்பதுமில்லை. அவர் கையிலே கழியை வைத்துக் கொண்டு மக்களை தண்டிப்பதற்கு உட்கார்ந்து கொண்டு

இருக்கவில்லை. வாழ்க்கை என்பது அடிப்படை தெய்வீக வாழ்க்கைச் சட்டங்களால் ஆட்சி புரியப்பட்டு வருகிறது. சட்டம் வேலை செய்கிறது. மனிதன் அவனுடைய வினைகளின் பலன்களை அறுவடை செய்கிறான்.

யாரும் ஒரு வினாடி கூட சும்மாயிருக்க முடியாது. யாரும் விதியை நம்புபவனாக ஆக முடியாது. உள்ளே இருந்து வேலை செய்யச் சொல்லி ஒரு தூண்டுதல் இருக்கிறது. ஆகவேதான் கீதை ''அல்லது யாரும் ஒரு வினாடி கூட செய்கையற்றிருக்க முடியாது; இயற்கையிலிருந்து பிறந்த குணம் காரணமாக ஒவ்வொருவரும் ஆதரவின்றி வினை செய்ய விரட்டப்படுகின்றனர். பிராரப்தக் கொள்கையானது யாரையும் விதியை நம்பிக்கொண்டிருப்பவனாகச் (fatalist) செய்ய முடியாது'' என்று கூறுகின்றது.

உன்னுடைய உடல்களுக்கு வெளியே வாழ்க்கையை நடத்து. ஒதுங்கி நின்று மனம், உடல் ஆகியவற்றின் செய்கைகளைக் கவனித்துக்கொண்டிரு. ஒரு கால் பந்து விளையாட்டுப் போட்டியிலே அம்பயரைப் போல சாக்ஷி அல்லது திருஷ்டாவாக இரு. இது ஞானம். இந்த ஸ்தூல சரீரத்தை எந்த நேரத்திலும் உனக்குப் பணிந்து நடக்கும்படி பழக்கி வை. இதை பலமுடையதாகவும், ஆரோக்கியமானதாகவும் வைத்துக் கொள். ஒரு மூடத் தனமான மாயாவாதியாக ஆகாதே. மாயா வாதத்தைச் சரியான முறையில் புரிந்து கொள். உடலின் மேல் மோஹம் கொள்ளாதே. அதை எந்த க்ஷணத்திலும் தியாகம் செய்யத் தயாராக இரு. தெய்வீக அழைப்பு வரும் பொழுது இந்த சரீரத்தைத் தியாகம் செய். இந்த உடலானது லக்ஷியத்திற்கு உன்னை எடுத்துச் செல்லும் குதிரை போன்றது. அல்லது சம்சார சாகரத்தைக் கடப்பதற்குரிய தோணி போன்றதாகும்.

ஒரு பக்தனுக்கு எல்லாம் பிராரப்தம் மட்டுமே. ஏனெனில் அவன் ஒரு ஆத்ம சரணாகதி அடைந்தவன்.

அவன் இறைவனுடைய சக்தியின் மகிமையை விளங்க வைக்க வேண்டியிருக்கிறது. ஒரு வேதாந்திக்கு எல்லாம் புருஷார்த்தம் மட்டுமே. ஏனெனில் அவன் ஒரு தன்னம் பிக்கை யுள்ளவன் (Man of self reliance). அவன் தன் னுடைய ஆத்ம பலத்தினுடைய மகிமையை விளங்க வைக்க வேண்டியிருக்கிறது. அவரவர் நிலேயில் இருவரும் சரியானவர்களே.

ஒவ்வொரு ஆத்மாவும் தெய்வீக ஞானத்தை யடைய தெய்வீகச் சட்டத்தை (கர்மம்) நிறைவேற்றியே தீர வேண்டும். ஒவ்வொரு ஆத்மாவும் வாயிற்படியில் தனி யாக உட்கார்ந்து தான் ஆகவேண்டும். யாரும் அவனே உள்ளே பிடித்துத் தள்ளிவிட மாட்டார்கள். குருவானவர் அவனே வாயிற்படி வரைக்கும் தான் வழிநடத்திச் செல் வார். ஒவ்வொருவரும் ஆத்ம சுத்தி, மன ஒருமை, உள்ளக் கட்டுப்பாடு ஆகிய அவனுடைய யுத்தங்களேச் செய்து தீர வேண்டும்

ஒரு தத்துவஞானி கேட்கிருர்: ''புருஷார்த்தம் எவ்வாறு விளேவுகளே உண்டுபண்ணுகிறது? பிராரப்தம் எவ்வாறு வேலே செய்கிறது?'' என்று. இது சொல்லுவ தற்கு மிகவும் கடனம்.

''இந்த உலகத்தில் ஒரு நல்ல மனிதன் துன்பப்படு கிருன். ஒரு கெட்டவன் நல்ல ஸ்திதியில் இருக்கிருன். இது எப்படி'' என்று மக்கள் கேட்கின்றனர். இதற்கு பதில் என்னவென்ருல் இப்பிறப்பில், முற்பிறப்பின் நல் வினே தீவினேகளுக்கான தண்டனேகள் அல்லது பலன்கள் அளிக்கப்படுகின்றன என்பதேயாகும்.

எப்படி ஒரு தனிப்பட்டவனுக்கு பிராரப்தம் என்று இருக்கிறதோ அதேபோல் உலகத்திற்கும் பிராரப்தம் என்பது உண்டு. இது கூட்டு பிராரப்தமாகும். நாட்டில் புரட்சி, கலவரம் ஆகியவற்றிற்குப் பின்பு பூரண அமைதி

யும், செழிப்பும் இருக்கும். இயற்கையின் செய்கைகளைப் பகுத்துணரும் நிலையில் நீ இல்லை. ஏனெனில் உனக்கு இயற்கையின் சட்ட திட்டங்களைப் பற்றிய ஞானம் இல்லை.

நாட்டிலே ஜனத்தொகை பெருகி விட்டால், மக்களுக்குத் தேவையான உணவுப் பொருள் கிடைக்காத நிலை ஏற்பட்டு விட்டால் தெய்வீக சக்தியானவள் அதிகப்படியான ஜனத்தொகையை பஞ்சம், கொள்ளை நோய், பிளேக், பூகம்பம், எரிமலை வெடித்தல், யுத்தம் ஆகியவை மூலமாக நீக்கி விடுகிருள்.

---

# அத்தியாயம் நான்கு

## கடவுளும் அவதாரமும்

### 1. கடவுளின் சகுண, நிர்குண அம்சங்கள்

உபநிஷத்துக்களிலே பிரம்மன் என்றும், ஸ்மிருதி களிலே பரமாத்மன் என்றும், எந்தப்பொருள் கூறப்படு கிறதோ அது பாகவதத்தில் பகவான் என்றும் கூறப்படு கிறது.

உள்ளம் ஹரியாகவுடைய என்னுடைய சிவபெரு மான் உபநிஷத்துக்களின் நிர்குண பிரம்மனோடு ஒத்திருக் கிறார்.

காற்று உருவமற்றதாக இருந்த போதிலும் அது எப்படி சூருவளியாக உருவெடுக்கின்றதோ அதே போல உருவமற்ற பிரம்மன் ஒரு உருவத்தை எடுக்க முடியும்.

கடவுள் அவருடைய பக்தனுக்குப் பனிக் கட்டியைப் போல உருவத்துடனும் (சாகாரம்) ஞானிக்கு நீராவியைப் போல் உருவமற்றும் (நிராகாரம்) இரண்டு விதமாகவும் இருக்கின்றார்.

எப்படி தண்ணீரானது $H_2O$ என்கின்ற ரூபத்தில் நிராகாரமாகவும் (உருவமற்றும்) பனிக்கட்டி ரூபத்தில் சாகாரமாகவும் (உருவத்துடனும்) இருக்கின்றதோ அதே போல் பிரம்மன் நிராகாரமாகவும், சாகாரமாகவும் இருக் கின்றார். அவர் ஒரு அவதாரமாகவும் உருவெடுக்கலாம்.

........... (Microcosm) என்பது பிண்டமாகும். அது பிரம்மாண்டமாக இருக்கிறது. சமஷ்டி என்றால் கூட்டுத் தொகையாகும். வியஷ்டி என்றால் தனி (individual) என்று பொருள். ஒரு மரம் வியஷ்டியாகும்; ஒரு தோப்பு

சமஷ்டியாகும். ஒரு ஒற்றைத் தீக்குச்சி வியஷ்டியாகும். ஒரு தீப்பெட்டி சமஷ்டியாகும். இந்த காரண சரீரம் (macrocosmic causal body) அல்லது ஜீவனுடைய எல்லா காரண சரீரங்களின் சமஷ்டியோடு அடையாளம் காட்டிக் கொள்பவன் ஈஸ்வரன். இந்த எல்லா சூக்ஷ்ம சரீரத்தோடு அடையாளம் காட்டிக் கொள்பவன் ஹிரண்யகர்ப்பன் அல்லது சூத்ராத்மா; இந்த (macrocosmic) அல்லது தனிப்பட்ட சூக்ஷ்ம சரீரத்தோடு அடையாளம் காட்டிக் கொள்பவன் தைஜஸன் (Taijasa). எல்லாம் சேர்ந்த கூட்டு ஸ்தூல சரீரத்தோடு அடையாளம் காட்டிக் கொள்பவன் விராட் அல்லது வைஸ்வானரன் (Vaishvanara) தனிப்பட்ட ஸ்தூல சரீரத்தோடு அடையாளம் காட்டிக் கொள்பவன் விஸ்வன். ஈஸ்வரன் தானே சத்துவ ரஜஸ் தமஸின் மூலமாக பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய ரூபங்களை எடுத்து இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாகவும், காப்பவனுகவும், அழிப்பவனுகவும் ஆகின்ருன். பிரம்மன் விராட்டிலும், விஷ்ணு ஹிரண்யகர்ப்பனிலும், ருத்ரன் ஈஸ்வரனிலும் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

கிருஷ்ண பரமாத்மா முனிவர்களுக்கு முன்பு பரப்பிரம்மனுகவும், யோகிகளுக்கு முன்பு மேலான தத்துவமாகவும், கோபிகளுக்கு முன்பு மன்மதனுகவும், வீரர்களுக்கு முன்பு வீரனுகவும், வசுதேவருக்கும் யசோதைக்கும் முன்பு குழந்தையாகவும், கம்சனுக்கு முன்பு யமனுகவும், அரசர்களுக்கு முன்பு சக்கரவர்த்தியாகவும், பார்ப்பவர்களுடைய திருஷ்டிக்கும் மனப் பாங்கிற்கும் தக்கபடி தோற்றமளிக்கின்ருர். பொருள் ஒன்றுதான். ஆனுல் பார்ப்பவர்களின் திருஷ்டி கோணத்திற்குத் தக்கபடி அது வெவ்வேறு விதமாகத் தோன்றுகிறது.

மேலை நாட்டுத் தத்துவ ஞானிகள் கூறுகின்ற "over soul" ஆனது உபநிஷத்துக்களில் கூறப்படும் பிரம்மன் அல்லது வேதாந்திகளின் ஆத்மாதான். இந்த ஜீவாத்மாவுக்கு ஆதாரமாக இருக்கும் பரமாத்மன்தான் அந்த "over

soul" ஆகும். The "over soul" is the "Substance" of "Spinoza" or the "Thing in itself of" Kant"................
..............................

வேதாந்தத்தின் சாரமானது மெதுவாக மேலை நாட்டு தத்துவ ஞானிகளின் மனதிலே புகுந்திருக்கிறது. அவர்கள் இப்பொழுது உடல், உள்ளம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டிருக்கும் ஒரு நிரந்திரமான பொருள் அல்லது அழியாத ஆத்மா இருப்பதை ஒத்துக்கொள்கிறார்கள்.

ஸ்ரீராமானுஜருடைய சவிசேஷ பிரம்மன் வேலை செய்கிறது. அவர் கருணையே வடிவாக இருக்கின்றார். அவர் நற்குணவான்களுக்கு வெகுமதிகள் வழங்குகிறார். ஆனால் ஸ்ரீ சங்கரருடைய நிர்விசேஷ பிரம்மனவர் உதாசீனனாக இருக்கிறார். ஒரு உதாசீனனாக இருப்பதுதான் மிக மிக உயர்ந்த நிலை.

"ஏ பிரபு! நான் உன்னுடையவன். நீயல்ல நான். அலைகள் சமுத்திரத்தைச் சேர்ந்தவை. ஆனால் சமுத்திரம் என்பது அலையல்ல". இதுதான் ராமானுஜரின் உபதேசம். இதுதான் விசிஷ்டாத்வைதம்.

கடவுளைப் பற்றிய...........கொள்கையானது (Anthropomorphic conception) மனிதன் கடவுளுக்கு மனித குணங்களைக் கொடுப்பதாகும். முகம்மதியர்களுடைய கடவுளைப் பற்றிய அபிப்பிராயம் இந்த ரகத்தைச் சேர்ந்ததுதான்.

அமானுஷ்ய அம்சமானது (நிராகார, நிர்குண) பிரம்மன் என்றும் அல்லது ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் அவர்கள் சொல்லுவது போல "தெரிந்து கொள்ள முடியாதது (Unknowable)" என்றும், ஸ்கோபன்ஹரர் (Schopenhauer) அவர்கள் கூறுவது போல் "விருப்பம் (will)" என்றும், Absolute Noumenon என்று சிலராலும், ஸ்பினோஜா (Spinoza) அவர்கள் கருதுவது போல "பொருள்" (Substance) என்றும் அழைக்கப்படுகிறது.

அந்தப் பரம்பொருளின் சாகார அம்சமானது ''ஈஸ்வரன்'' அல்லது அல்லா, ஹரி, ஜெஹோவா, பரமபதத்திலுள்ள பிதா, புத்தர், சிவன் முதலிய பெயர்களால் அழைக்கப்படுகிறது.

எப்படி நீராவியானது உருவமற்றதோ அதே போல இறைவன் அவனது புலப்படாத அம்சத்தில் உருவமற்றவனுக இருக்கின்ருன். அவன் தன்னுடைய பக்தர்களை மகிழ்விப்பதற்காக ஒரு உருவத்தை எடுக்கின்ருன். அவனுடைய பக்தர்களின் பக்திகலந்த வழிபாட்டிற்காக ஒரு உருவை மேற்கொள்ளுகிருன். அவன் அவனுடைய பக்தர்களுக்கு அவர்கள் எந்த ரூபத்தில் வழிபடுகின்ருர்களோ அந்த ரூபத்தில் தரிசனம் வழங்குகின்ருன். பிரேம நிஷ்டையுடன் கூடிய ஒரு பக்தனுக்கு ஒரு உருவம் தேவைப்படுகிறது. அவன் பர பக்தியை அபிவிருத்தி செய்து கொள்ளும் பொழுது உருவம் மறைந்து அவன் எங்கும் நிறைந்த அந்த தூய உணர்விலே ஐக்கியமாகி விடுகின்ருன்.

கிருஷ்ண பகவான் ஈஸ்வரனுடைய பிரேமை அம்சம். சிவபெருமான் ஈஸ்வரனுடைய ஞான அம்சம். தேவி ஈஸ்வரனுடைய சக்தி அம்சம். விராட் ஈஸ்வரனுடைய புலப்படும் அம்சம். ஹிரண்யகர்ப்பன் ஈஸ்வரனுடைய அந்தரங்க அம்சம். ஹனுமான் சிவபெருமானுடைய ருத்ர அம்சம். தத்தாத்ரேயர் ஈஸ்வரனுடைய கூட்டு அம்சம். பிர்மா ஈஸ்வரனுடைய படைக்கும் அம்சம். விஷ்ணு ஈஸ்வரனுடைய காக்கும் அம்சம். சிவன் ஈஸ்வரனுடைய அழிக்கும் அம்சம். உனக்குப் பிடித்த எந்த அம்சத்தை வேண்டுமானுலும் தியானித்து இறைவனேடு ஐக்கியத்தை அடைந்து இந்த சம்சார சாகரத்தைக் கடந்துவிடு.

விமல் குமாரி, முதல் தடவைக்குப் பின்பு அவளுடைய கணவன் வீட்டிற்கு வந்தாள். அவளுடைய சகோதரனுடைய பெயர் சந்திரா. அவளுடைய கணவனுடைய

பக்கத்து வீட்டுக்காரனுக்கும் சந்திரா என்ற பெயருடைய நாய் ஒன்று இருந்தது. அவளுடைய கணவனுடைய நாயின் பெயர் மோதி. விமல் குமாரியினுடைய சகோதர னுக்கு ஒரு எதிரி இருந்தான். அவன் பெயரும் மோதி தான். சந்திரா, மோதி என்கின்ற இரண்டு நாய்களும் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. விமல் குமாரியி னுடைய கணவன் பக்கத்து வீட்டுக்காரனுடைய நாயாகிய சந்திராவை திட்டிக்கொண்டும், தன்னுடைய நாயாகிய மோதியைப் புகழ்ந்து கொண்டும் இருந்தான். விமல் குமாரி தனது கணவன் தன்னுடைய சகோதரனைத் திட்டிக் கொண்டும் அவனுடைய விரோதியைப் புகழ்ந்து கொண்டும் இருப்பதாக எண்ணினாள். அவளுக்கு கணவன் மீது சற்று வெறுப்பு ஏற்பட்டது. விமல் குமாரி கணவனை சரியாகப் புரிந்து கொள்ளாத காரணத்தால் மன திற்குள்ளே வேதனைப்பட்டாள். வெறும் பெயர்களால் ஏமாற்றப்பட்டாள். இதேபோல வைஷ்ணவர்களும், சைவர்களும் சிவ புராணத்திலும், விஷ்ணு புராணத்தி லும், முறையே ஹரியைப் பற்றியும், சிவனைப் பற்றியும் குறை கூறப்பட்டிருப்பதைக் கண்டு வேதனைப்படுகின்ற னர். சிவபுராணத்தில் ஹரியைப் பற்றிக் குறை கூறப்பட்டி ருப்பதின் காரணம் மாணக்கனுக்கு சிவபெருமானிடம் உள்ள நம்பிக்கையை அதிகப் படுத்துவதற்காகத்தான். இதே போலத்தான் மற்றதும். இதைத் தவிர வேறொரு காரணமும் கிடையாது. உலகத்திலே தினந்தோறும் இது போன்று வெறும் சப்தங்கள், பெயர்கள் ஆகியவைகளால் ஏற்படும் காரணமாக சண்டைகள் நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன. ஒரு ஞானி சப்தங்கள், பெயர்கள், ஆகிய வைகளைக் கடந்து சப்தமற்ற நாமமற்ற பிரம்மனில் நிலைத் திருக்கின்றார்.

நீ உன்னை சகுண பிரம்மனோடு அடையாளம் காட்டிக் கொண்டால் உலகத்தை உன்னுள்ளே காண்பாய். ஈஸ்வரன் இந்த உலகத்தைத் தன்னுள்ளே வைத்துக் கொண்டிருக்கின்றான். அவனுக்கு வெளியே ஒன்றும்

கிடையாது. ஒரு ஜீவன் அகந்தை காரணமாக, தான் வேறு என்று நினைக்கின்ற காரணத்தால் அவன் உலகத்தை வெளியில் காண்கின்ருன். நீ உலகை வெளியிலே காணு கின்ற காரணத்தால்தான் பொருள்களின் மீது கவர்ச்சி ஏற்படுகின்றது. ஒருவன் உள்ளுக்குள்ளே உலகத்தைக் கண்டால் எல்லாப் பொருள்களின் மீது உள்ள கவர்ச்சியும் இறந்து பட்டு விடும்.

ஒரு வரட்டு வேதாந்த பண்டிதர் பக்தியைப் பற்றி இழிவாகப் பேசுகிருர். ''பக்தியானது மனிதனுடைய துன்பங்களைப் போக்க முடியாது. பக்தியானது முக்தி யைக் கொடுக்காது'' என்று அவர் கூறுகின்ருர். இது ஒரு மிகப் பெரிய தவருகும். பக்தியானது மனித வர்க்கத்தின் எல்லா துன்பங்களையும் அழித்து கிரம முக்தியைக் கொடுக்கவல்லது. ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தைச் சேர்ந்த பக்தன் (Sectarian Bhakta) அத்வைத - நிர்குண - நிராகார பிரம்மனை மறுக்கின்ருன். அவன் ஞானத்தைப் பற்றி இழி வாகப் பேசுகின்ருன். ''நான் ரசம் என்பதே இல்லாத ஒரு வரட்டு பிரம்மனை விரும்பவில்லை. என்னுடைய லீலா - கிருஷ்ணனைத்தான் விரும்புகின்றேன். கோலோ கத்திற்கப்புறம் ஒன்றுமே கிடையாது'' என்று அவன் கூறு கின்ருன். இதுவும் ஒரு பெருந்தவருகும். இருவரும் குறுகிய மனப்பாங்குடையவர்கள். கோலோகத்திற்கு அப்பால் லீலா கிருஷ்ணனுக்கு அப்பால் லீலா கிருஷ்ண னுக்கு ஆதாரமாக இருக்கும் நிர்குண அத்வைத பிரம்மன் இருக்கின்ருன். மஹா பிரளயத்தின்போது லீலா கிருஷ்ணன் நிர்குண பிரம்மனில் ஐக்கியமாகி விடுகின்ருன்.

ஸ்ரீ சங்கரர் அவர்களுக்கு மிக உயர்ந்த பரிபூரண அத்வைத, நிர்குண, பிரம்ம அனுபூதி இருந்த போதிலும் அவர் ''என்னுடைய உள்ளத்தை கிருஷ்ணபரமாத்மாவின் பாதகமலங்களிலே பதியவைக்க வேண்டுமென்கின்ற தீவிர ஆசையும் அவனுடைய நேசமான பாதாரவிந்தங்களை என்னுடைய கண்களிலிருந்து பெருகும் கண்ணீரால் கழுவ

வேண்டுமென்கின்ற அவாவும் என்னை விட்டகலவில்லை ’’ என்று உரைக்கின்றார்.

ஒளி இருப்பதை ஆந்தை ஒத்துக் கொண்டாலும், கொள்ளாவிட்டாலும் வெளிச்சம் எப்போதும் இருக்கத் தான் செய்கிறது. நீ கடவுள் இருப்பதை ஒத்துக் கொண்டாலும் ஒத்துக் கொள்ளாவிட்டாலும் அவர் எப்போதும் இருக்கவே செய்கின்றான். அவன் முக்காலத்திலும் சதா பிரகாசித்த வண்ணமாகவே இருக்கின்றான். நீ அவனைத் தேட ஆரம்பிப்பதற்கு முன்பிருந்தே அவன் இருக்கின்றான். அவன் உன்னுடைய சுவாசத்தைக் காட்டிலும், உனக்குப் பக்கத்திலும், உன்னுடைய கை கால்களைக் காட்டிலும் உனக்கு (பக்கத்திலும்) அருகாமையிலும் இருக்கின்றான்.

பிரஜையானவன் மஹாராஜாவைப் பார்த்திராவிட்டாலும், அவனுக்கு ராஜ்ய முழுவதும் நிலைநாட்டப் பட்டிருக்கும் ஒழுங்கிலிருந்து அந்த ராஜ்யத்தை ஆட்சி புரிந்து வரும் ஒரு மஹாராஜா இருக்கிறார் என்பது தெரியும். இதைப் போலவே நீ கடவுளை நேருக்கு நேராகப் பார்த்திராவிட்டாலும், இப்பிரபஞ்சத்தில் நிலைநாட்டப் பட்டிருக்கும் ஒழுங்கிலிருந்து அவன் இருப்பதை நீ அறிய முடியும்.

மனம், வாக்கு, காதுகள், கண்கள் மற்றும் இதர உறுப்புகள் எல்லாம் உறங்கிக் கொண்டிருக்கும் பொழுது பிராணன் மட்டும் விழித்துக் கொண்டிருக்கிறது. பிராணனுடைய அதிர்ச்சிக்குக் காரணமாக இருப்பது எது? இந்தப் பிராணனுக்கு ஆதாரமாக இருப்பது எது? அது தான் பிரம்மன். அவன் தான் ஒவ்வொன்றிற்கும் யோனி அல்லது கருவூலமாக இருக்கின்றான்.

களிமண்ணாலான விளையாட்டுப் பொம்மையாகிய இந்த ஸ்தூல சரீரத்தைப் பல்வேறு விதங்களில் ஆட்டி வைப்பவன் யார்? இந்த உடலின் சூத்திரதாரி (ஆட்டி வைப்பவன்) யார்? அவனைக் கண்டுபிடி.

''நான் இருக்கின்றேன்'' என்று நீ உணருகின்ருய். இதுவே கடவுள் இருக்கின்ருர் என்பதைத் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கின்றது. இருத்தல் அல்லது இருப்புதான் (existence) கடவுள் அல்லது பிரம்மமாகும். உனக்கு சொத்துக்களும், எல்லா விதமான செளகரியங்களும் இருந்த போதிலும் கூட உனக்கு இன்னும் ஏதோ தேவைப் படுகிறது. திருப்தி உணர்ச்சி இருப்பதில்லை. உன்னுடன் தயையே வடிவான இறைவனைச் சேர்த்துக் கொண்டால் உனக்கு நிறைவு ஏற்பட்டுவிடும். நீ ஒரு கெட்ட காரியத்தைச் செய்யும்போது அஞ்சுகிருய். உன்னுடைய மனச்சாட்சி உன்னைக் குத்துகிறது. இதுவும் கடவுள் இருக்கிருர் என்பதையும், அவர் உன்னுடைய எல்லா எண்ணங்களையும், செயல்களையும் சாக்ஷிபோல் நின்று கவனித்துக் கொண்டிருக்கிருர் என்பதையும் நிரூபித்துக் காட்டுகிறது.

வடமதுரைக்குப் பக்கத்திலே தகேட்டா (Dagheta) என்ற ஒரு கிராமம் இருக்கிறது. 1934-ம் வருஷம் அக்டோபர் மாதம் 10ந் தேதி ஸ்ரீ ஸ்வாமி கிருஷ்ணனந்தா அவர்கள் அவருடைய குழுவினரோடு இரவில் கீர்த்தனம் செய்து கொண்டிருந்தார். கீர்த்தனத்திலே மிகவும் ஆர்வமுள்ள ஒரு மாது, ஒரு பக்தை தன்னுடைய சிறிய பெண் குழந்தையை வீட்டிலே போட்டு பூட்டிவிட்டு கீர்த்தனத்திற்கு சென்று விட்டாள். குழந்தையைத் தவிர வீட்டில் வேறு யாரும் இல்லை. அவள் திரும்பி வந்தபொழுது குழந்தை விளையாடிக் கொண்டும், சிரித்துக் கொண்டும் இருப்பதைக் கண்ணுற்ருள். அவள் குழந்தையைப் பார்த்து ''குழந்தாய், நீ யாருடன் விளையாடிக் கொண்டிருக்கிருய்?'' என்று கேட்டனள். அதற்கு குழந்தை ''நான் இந்தக் கிழவரோடு விளையாடிக் கொண்டிருக்கிறேன். நீ அவரைப் பார்க்கவில்லையா?'' என்று பதில் அளித்தது. குழந்தை இந்த வார்த்தைகளை மூன்று முறைத் திருப்பித் திருப்பிச் சொல்லிற்று. தாயார் கிழவரைப் பார்க்க முடியவில்லை. கிழவர், கிருஷ்ண பரமாத்மாவைத் தவிர வேறு யாருமல்ல. மறைந்து விட்டார்.

எங்கு பக்தியும் நம்பிக்கையும் இருக்கின்றதோ அங்கு இறைவன் எப்பொழுதும் இருக்கின்ருன். காமன் (passion) இருக்குமிடத்தில் ராமன் இருக்கமாட்டான்.

மீரட் நகரத்திலே, சந்நியாசிகள் தங்கியிருக்கும் சங்கர் குடியாவிற்கு எதிரிலே வக்கீல் சங்கர் தயாள் அவர்களுடைய பங்களா ஒன்று இருக்கிறது. சங்கர் தயாளுக்கு ஒரு மகள் இருக்கிருள். அவள் ஒரு பக்தியுள்ள சிறுமி. அவள் தினந்தோறும் கிருஷ்ண பரமாத்மாவுக்குப் பூஜை செய்து வருவாள். இதற்கு எல்லாம் அவளுடைய பூர்வ புண்ணிய சம்ஸ்காரங்களே காரணம். அவள் தினந்தோறும் தோட்டத்திலிருந்து பூஜைக்காக மலர் கொய்வது வழக்கம். ஒருநாள் அவள் இவ்வாறு மலர் கொய்து கொண்டிருக்கும்பொழுது தலையிலே மயிலிறகு சொருகிக் கொண்டு ஒரு சிறுவன் அவளிடம் வந்து ‘‘குழந்தாய் இந்த மந்திரத்தை ஜபி’’ என்று சொல்லி ஜபத்திற்காக சில மந்திரங்களை உபதேசித்து விட்டு மறைந்து விட்டான். அந்தச் சிறுவன் கிருஷ்ண பரமாத்மாதான். இந்தச் சம்பவம் 1934ஆம் ஆண்டு அக்டோபர் 5ந் தேதி நடந்தது. இந்தக் கலியுகத்திலே கூட மிக நுண்ணிய அளவு நம்பிக்கையும், பக்தியும் உன்னிடம் காணப்படுமாகில் இறைவன் அவனுடைய தரிசனத்தைக் கொடுக்க எப்போதும் தயாராக இருக்கின்ருன்.

ஷிகோஹாபாத் ஜங்ஷன் வழியிலே உள்ள பருக்காபாத்தில் 1934 நவம்பர் 14ந் தேதி நான் ஒரு பையனைச் சந்தித்தேன். அவன் ஒரு சிவ பக்தன். அவன் சில மாதங்கள் ஓம் நமச்சிவாய என்று ஜபித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு இறைவனுடைய தரிசனம் கிட்டவில்லை. இதனுல் அவன் வருத்தமுற்ருன். ஒரு நாள் எப்படியாவது தன்னை மாய்த்துக்கொள்வது என்று விரும்பினுன். அவன் சில மூர்க்கத்தனமான காரியங்களைச் செய்தான். உடனே பிரகாசம் பொருந்திய ஒரு நீலநிற ஒளிக்கு மத்தியிலே சிவபிரான் தோன்றினுர். அவர் உடனே

மறைந்து விட்டார். ''குழந்தாய் உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்கின்ற ஒரு சப்தத்தைக் கேட்டான். பையன் அதற்கு ''எனக்கு தங்களுடைய தரிசனம் இரண்டாவது தடவையாக வேண்டும்'' என்று பதிலளித்தான். ஆனல் சிவ பெருமான் இரண்டாவது முறையாக அவனுக்கு முன்பு காட்சியளிக்கவில்லை. நீங்கள் அந்தப் பையனை இன்றைக்கும் பருக்காபாத்திலே பார்க்கலாம். பக்தர் டெபுடி கலெக்டர் ஸ்ரீ பகவத் பிரசாத் அவர்கள் அந்தப் பையனை சரஸ்வதி பவனில் என்னிடம் அழைத்து வந்தார்.

பாகவதர்கள் இரண்டு விதம். (1) எந்த ஒரு அடையாளமுமில்லாது எந்த ஒரு அடையாளத்தினுடைய உதவியையும் ஏற்றுக் கொள்ளாது, வழிபடுகின்ற அப்ரதீகாலம்பனர்கள் (2) ஒரு அடையாளத்தின் உதவியை எடுத்துக் கொள்பவர்களான ப்ரதீகாலம்பனர்கள். முதல் ரகத்திலே தேவர்களும், ஆண்டவனை எங்கும் நிறைந்திருப்பவனைக் காணும் இதரர்களும் சேர்ந்தவர்கள். எல்லா தேவதைகளும், ரிஷிகளிலே நூறு பேரும், கந்தர்வர்களிலே நூறு பேரும் இந்த ரக அதிகாரிகளைச் சேர்ந்தவர்கள். இந்த ப்ரதீகாலம்பனர்கள் இருவகைப்படுவர். (1) தேஹாலம்பனர்கள் (2) ப்ரதிமாலம்பனர்கள். இறைவனை அவனுடைய உடலிலே காண்பவர்கள் தேஹாலம்பனர்கள். மத்யம அதிகாரிகள் என்று அழைக்கப் படும். ரிஷிகள் முதலானவர்கள் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஆத்மாவை உடலில் பார்ப்பவர்கள். இறைவனை ஒரு மூர்த்தியிலே (image) காண்பவர்கள் பிரதிமாலம்பனர்கள். அவர்களால் ஒரு உருவமின்றி அவனை யூகிக்க முடியாது (இயலாது). சாதாரண மனிதர்கள் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள்.

கிருஷ்ண பரமாத்மாவினுடைய உடல் நீல நிறமாக இருக்கிறது. ஏனெனில் நீல வர்ணமானது இறைவனுடைய சர்வ வியாபகத் தன்மையைக் குறிக்கிறது. நீல வர்ணம் வியாபகமாக இருக்கிறது.

ஹரி பகவானுக்கு ஏன் நான்கு கைகள் இருக்கின்றன? நான்கு கைகள் தர்ம, அர்த்த, காம, மோக்ஷத்தைக் குறிக்கின்றன. ஹரி பகவான் எல்லோரையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் வரவேற்கின்றார் என்பதை அந்த நான்கு கைகளும் குறிக்கின்றன. அவர் சகலத்தையும் அணைக்கும் குணம் படைத்தவர்.

சிவலிங்கமானது, பிரம்மன் உருவமற்றவர் (நிராகாரம்) என்பதைக் குறிக்கின்றது. இது பிரம்மன் இரண்டாவது என்பது இல்லாத ஒன்றாக இருக்கிறார் என்பதை விரலால் சுட்டிக் காட்டுவதைப் போல சுட்டிக் காட்டுகிறது.

சக்தி அல்லது தேவியை வழிபடுவதும் பிரம்மனை வழிபடுவதாகும். பிரம்மனும் தேவியும் அபின்னமாக (பிரிக்க முடியாது) இருக்கின்றனர். அவர்கள் ஒரே மாதிரியானவர்கள். ராமனை வழிபடுவதானது சீதையினுடைய வழிபாடும் சேர்ந்ததேயாகும். ராதைக்குச் செய்யும் வழிபாடு கிருஷ்ணனுக்கும் போய்ச் சேருகிறது. சைவர்கள் சிவனை மட்டும் வழிபடுகின்றனர். சாக்தர்கள் தேவியை மட்டும் வணங்குகின்றனர். சிலர் சிவன், பார்வதி இருவரையும் வணங்குகின்றனர்.

இறைவனுடைய ஐக்கியத்தில் கண் இமைப்பு இல்லாமல் போய் விடுகிறது. ரேசக பூரகம் (உட்சுவாசம், நிச்சுவாசம்) நின்று விடுகிறது. மனிதனுடைய சங்கல்ப விகல்பங்களும் இல்லாமல் போய் விடுகின்றன. இதுதான் ராஜ யோகிகளுடைய மிக உயர்ந்த நிலையாகிய உன்மனி அவஸ்தையாகும். ராம நாமமானது ஆன்ம ஞானத்திற்கும், நிரந்தரமான வாழ்விற்கும், நிரந்தரப் பேரானந்தத்திற்கும், நிரந்தரமான திருப்திக்கும் ஒரு குறையாத களஞ்சியமாகும். ராமநாமம் புனிதமானது. புனிதத்திலும் புனிதமானது. இந்தக் கலியுகத்திலே இருப்பவர்களின் பாவங்களை அழிக்க வல்லது. இறைவனோடு ஐக்கிய பாவத்தை அடையும் ஆன்மீக மார்க்கத்திலே இது சாத



கர்களுக்கு ஒவ்வொரு படியிலும் ஆன்மீக உணர்வாக விளங்குகின்றது.

மேலான தேவனும், குருவும், எல்லா உலகங்களுக்கும் மூலகாரணமாக விளங்குபவனும் சம்சாரத்தின் அந்தகாரத்தை அழிப்பவனுமாகிய ஹரிபகவானை ஞாபகத்தில் வைத்திருங்கள். அவன் இந்த பிரபஞ்சம் முழுவதும் ஊடுருவி நிற்கின்றான். அவனே ஆதியில்லாதவன். ஆனால் அவன்தான் இப்பிரபஞ்சத்திற்கு மூல காரணமாக இருப்பவன். அவன்தான் முதற்காரணமாக இருப்பவன். அவன் எல்லா ஜீவன்களினுடைய உள்ளத்திலும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றான். அவனே தூய உணர்வாக இருப்பவன். இப்பிரபஞ்ச வலையில் அவன்தான் பாவாகவும் (Warp) ஊடையாகவும் (Woof) இருப்பவன். அவன்தான் உண்மையானவனும், சாஸ்வதமானவனும்; எல்லையற்றவனும், மனதிற் கெட்டாதவனும், தெரியாதவனுமாக இருக்கின்றான். அவனை தினந்தோறும் தியானம் செய்யுங்கள். அவனுடைய குணாதிசயங்களை தியானம் செய்யுங்கள். அவன் பெயர் பாடுங்கள். நீங்கள் அமரத்துவத்தையும், நிரந்தரப் பேரானந்தத்தையும் அடைவீர்கள்.

இறைவன் இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவும், நிர்வாகியும் ஆவான். அவன் எல்லா ஜீவன்களுக்குள்ளும் வாசம் செய்பவன். அவன் இவ்வுலகத்திற்கு ஆதாரமாக விளங்குபவன். அவனே இவ்வுலகத்தை காப்பவனாகவும், அழிப்பவனாகவும், விளங்குகின்றான். அவனே ஆணையாளனாகவும் (Governor), அந்தரங்க அரசனாகவும், இருக்கின்றான். அவன்தான் பாதுகாவலன், ரக்ஷகன், மீட்பவன். அவன்தான் மேலான அமைதியையும், அமரத்துவத்தையும் அளிப்பவன். அவன்தான் ஓஜஸையும் (ஆன்மீக சக்தி) தேஜஸையும் (தெய்வீக ஒளியையும்) பலத்தையும், ஐஸ்வரியத்தையும், (ஆன்மீக செல்வத்தையும்) யசஸையும் (fame) (புகழையும்) ஆரோக்கியத்தையும்,

தீர்க்காயுசையும் (நீண்ட வாழ்க்கையையும்) புஷ்டியையும் (செழிப்பையும்) துஷ்டியையும் (திருப்தியையும்) சாந்தியையும் (அமைதியையும்) ஸ்ரேயஸையும் (சுதந்திரத்தையும்), வித்யாவையும் (தெய்வீக ஞானத்தையும்) மோக்ஷத்தையும் (விடுதலையையும்) அளிப்பவனுக இருக்கின்ருன்.

## 2. இறைவனுடைய குணுதிசயங்கள்

இறைவன் காரண காரியம், காலம், இடம், மனம், வாக்கு ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டவன்.

ஆனுலும் சமீபத்திலும் சமீபமாகவும், மனதிற்குள்ளே வசிப்பவனுக, உயிருள்ளதும், நகருகின்றதுமான ஜீவராசிகளின் உயிராகவே விளங்குகின்ருன. ஆத்மானுபூதியை அடைய விரும்பும் ஒவ்வொரு சாதகனுலும் இந்த உள்ளக் குகை தேடிக் கண்டுபிடிக்கப்பட வேண்டும். பேரானந்தம் நிறைந்த இந்த மேலான ஆத்மா இந்த குகையிலேதான் வசிக்கிறது.

கடவுள் மறைந்து கிடக்கின்ற அன்பாகும். கடவுள் மறைந்து கிடக்கும் சக்தியாகும். கடவுள் மறைந்து கிடக்கும் அழகாகும். கடவுள் மறைந்து கிடக்கும் ஒளியாகும். பிரம்மன் கடவுளர்களுக்கெல்லாம் கடவுளாக விளங்குபவன். பிரம்மன் அறிவின் வடிவம். மறைந்திருக்கும் கடவுளிடம் ஒரு மறைவான வாழ்க்கையை நடத்துவாயாக.

கடவுளுக்கு இலக்கணம் கூறுவது கடவுளை மறுப்பதாகும். நீ ஒரு முடிவான பொருளுக்குத்தான் இலக்கணம் கூற முடியும். ஒவ்வொரு பொருளுக்கும் ஆதாரமாகவும், முடிவான காரணமாகவும் இருக்கின்ற எல்லையற்ற அல்லது முடிவே இல்லாத ஒரு பொருளை நீ எவ்வாறு வரையறுத்துக் கூற முடியும்? நீ கடவுளுக்கு இலக்கணம் கூறினுல் நீ எல்லையற்ற ஒன்றை எல்லைக்குட்படுத்துகிறவனுகிருய்,

அவனை மனதினுடைய எண்ணத்திற்குள் கட்டுப்படுத்து கிறவனுகிருய் என்றுதான் பொருள். கடவுள் அசுத்த மனத்தின் பிடிக்கு அப்பாற்பட்டவர். ஆனால் அவனை தூய, சூக்குமமான ஏகாக்ர மனத்துடன் தியானம் செய்வதின் மூலம் உணரலாம்.

கடவுள் உண்மையாக விளங்குபவர். கடவுள் அன்பாக இருப்பவர். கடவுள் ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக இருப்பவர். கடவுள் அமைதியே வடிவாக இருப்பவர். கடவுள் ஞான வடிவாக இருப்பவர். கடவுள் பேரானந்தமே உருவானவர். கடவுள் சத்-சித் ஆனந்தமாக விளங்குபவர். சாஸ்வதமே கடவுள். அனந்தமே (infinity) கடவுள். கடவுள் அவிஞசியாக, மேலான வஸ்துவாக விளங்குபவர். கடவுள் எங்கும் நிறைந்த சத்து அல்லது சாரமாக விளங்குபவர். கடவுள் ஒன்றுதான் சாரமான வஸ்து. கடவுள் எல்லையற்ற அழகாக இருப்பவர்.

ஒரு பானை அல்லது மேஜையைச் செய்பவன் ஒருவன் இருக்கின்ருன். ஆகவே இந்த அற்புதமான உலகத்திற்கும் ஒரு சிருஷ்டி கர்த்தா இருந்தாக வேண்டும். அந்த சிருஷ்டி கர்த்தாதான் கடவுள்.

கடவுள் இப்பிரபஞ்சத்தைத் தன்னுடைய சொந்த விருப்பத்திஞல் சிருஷ்டி செய்து அதனுள் புகுந்து கொண்டார். அவர் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும், இருதயத்திலும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு இருக்கிருர். தேவர்களிலே இவர்தான் முதன்மையானவர். இவர்தான் இவ்வுலகத்தைக் காப்பவர்.

ஒரு கெட்ட மனிதன் ஒரு குற்றத்தைப் புரிந்து விட்டு கைதியாக சிறையினுள் புகுகின்ருன். சிறையில் அவனுக்கு சுதந்திரம் கிடையாது. அவன் ஒரு அடிமையாக இருக்கின்ருன். சில சமயங்களில் அரசனும் கைதிகளின் நிலை எவ்வாறு இருக்கிறது என்பதைப் பார்ப்பதற்காகத்

தன்னுடைய சொந்த விருப்பத்தின் பேரில் சிறைக்குள் செல்லுகின்றான். கைதிகளுக்கு நன்மை செய்வதற்காகவும், அவர்களுடைய குறைகளைத் தீர்ப்பதற்காகவும் அவன் சிறைக்கு விஜயம் செய்கின்றான். அவன் முற்றிலும் சுதந்திரமானவன். ''அரசன் இப்பொழுது எங்கு இருக்கிறார்'' என்று மக்கள் கேட்டால் அதற்கு அந்தரங்க காரியதரிசி ''அரசர் இப்பொழுது சிறையில் இருக்கிறார்'' என்று சொல்லுகிறார். குற்றவாளியும் சிறை புகுந்திருக்கின்றான். அரசனும் சிறை புகுந்திருக்கின்றான். ஆனால் வித்யாசப்பட்ட உலகம் அங்கு இருக்கின்றது. இதேபோல இந்த அற்ப ஜீவனானவன் அவனுடைய ஆசைகள், கர்மங்கள் காரணமாக இந்த உலகத்திலே பிறவி எடுத்திருக்கின்றான். அவன் அறியாமையால் ஆட்டிவைக்கப்படுகின்றான். அவனுக்கு சுதந்திரமென்பது கிடையாது. அவன் உணர்ச்சிகளுக்கு அடிமையாக இருக்கிறான். அவன் அவித்தையின் பலிப் பொருளாக இருக்கின்றான். அவன் ராகம், துவேஷம் (விருப்புகள், வெறுப்புகள்) என்கின்ற இரண்டு நீரோட்டங்களால் இங்குமங்கும் அலைக்கழிக்கப் படுகின்றான். ஆனால் அதே சமயத்தில் இறைவன் இந்த உலகத்தில் தர்மத்தையும், தர்ம சிந்தனையுடையவர்களையும் காப்பதற்காகவும், துஷ்டர்களைத் தண்டிப்பதற்காகவும், தன்னிச்சையாக அவதாரமாக அவதரிக்கின்றார். அவன் முற்றிலும் சுதந்திரமானவன். மாயை அவனுடைய பூர்ணமான கட்டுப்பாட்டில் இருக்கின்றாள். அவன் எல்லாம் வல்லவன். எல்லாம் உணர்ந்தவன். அவனிடத்தில் சத்ய – காமமும், சத்ய – சங்கல்பமும் இருக்கிறது.

இந்த உடலானது ஒரு சிக்கலான இயந்திரமாகும். பிரபல வைத்தியர்கள்கூட இந்த உடலின் பல்வேறு உறுப்புகளின் செயல்களைப் பூரணமாக உணர்ந்தாரில்லை. ஒரு முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இந்த சூக்கும கோளங்களைப் பற்றிய (endocrine glands) ஞானமே கிடையாது. இப்பொழுது அவர்கள் இந்த சூக்கும கோளங்கள் இயற்கையான நிர்வாகத்திலே மிகவும் முக்கிய பங்கு வகிக்கின்

றன என்று கூறுகின்றனர். இன்னும் அவர்கள் இந்த சிக்கலான இயந்திரத்தினுடைய தன்மையைப் பற்றியும், இயக்கத்தைப் பற்றியும், சோதித்துக் கொண்டும், ஆராய்ந்து கொண்டும் இருக்கின்றனர். இந்த இயந்திரத்தை இயக்குபவனுடைய ஞானத்தை நீங்கள் பெற முடிந்தால்தான் உங்களால் இந்த மனித சரீரத்தினுடைய பூரணமான ஞானத்தையும் அடைய முடியும். அந்த இயக்குநன்தான் (Driver) கடவுள் அல்லது அந்தர்யாமி.

சத்தியமே கடவுள். இது சத்திய வஸ்துவாக இருக்கிறது. இது சத்தியமாக (உண்மையாக) நித்தியமாக (நிரந்தரமாக) அவிநாசியாக (அழிக்க முடியாததாக) நிர்விகாரமாக (மாற்றமடையாததாக) ஏகரசமாக (ஒரே சஜாதீய ரசமாக) இருக்கின்றது. இது சுயம்புவாக, சுயம் பிரகாசமாக, சுதந்திரமாக எக்காலத்திலும் இருக்கிறது. இதற்கு முதல், நடு, முடிவு என்பது கிடையாது (அநாதி, அனந்தம்). இது இறந்த, நிகழ், எதிர்காலங்களில் இருக்கிறது. இது ஆத்ம ஞானமாக (சித், சம்வித், விஞ்ஞான, ப்ரஞ்ஞானமாக) இருக்கிறது. இது காரணமற்றது. இது காலம், இடம், உற்பத்தி ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டது. இது ஒன்றாக இருப்பது. இது அகண்ட அபரிச்சின்னமாக இருப்பது.

கடவுள், அமைதி, இரண்டும் ஒரு பொருளைத் தரும் சொற்களாகும். கடவுளானவர், காமம், கோபம், பேராசை, ஆணவம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டிருப்போருக்கு மிகச் சமீபத்தில் இருக்கின்றார்.

கடவுளுக்கு ஆசை கிடையாது. அவன் பரிபூர்ணமாக இருப்பவன். அவன் இந்த உலகத்தை அவனுடைய லீலைக்காக சிருஷ்டி செய்கிறான். இது அவனுடைய சுபாவம். இறைவன் உயிருள்ள அல்லது உயிரற்ற, உணர்ச்சியுள்ள அல்லது உணர்ச்சியற்ற, நிலைத்திருக்கும் எல்லாப் பொருள்களின் முழுமையாக விளங்குகின்றான். அவன்

தீமைகளிலிருந்தும், கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுபட்டவன். அவன், எல்லாம் வல்லவன். எங்கும் நிறைந்தவன். எல்லாமுணர்ந்தவன். அவனுக்கு முதல், நடு, கடை என்பது கிடையாது. அவன் எல்லா ஜீவன்களுக்குள்ளும் அந்தர்யாமியாக விளங்குபவன். அவன் உள்ளுக்குள் இருந்து கொண்டே கட்டுப்படுத்திக் கொண்டிருப்பவன். இறைவன் அழியாத் தன்மை, சுதந்திரம், பூர்ணத்துவம், அமைதி, பேரானந்தம், அன்பு ஆகியவைகள் எல்லாம் ஒரே பொருளைக் குறிக்கின்ற அல்லது ஒன்றுக்கொன்று பதிலாகக் கூடிய சொற்களாகும்.

ஸ பர்யகாச்சுக்ரம் அகாயம் அவ்ரணம்
அஸ்நாவிரம் சுத்தம் அபாபவித்தம்
கவிர்மனீஷீ பரிபூ: ஸ்வயம்புர் யதா
தத்யதோ அர்த்தான் வ்யததாத் சாஸ்வதீப்ய:
சமாப்ய:

(ஈச உபநிஷத் - மந்திரம் 8)

அவன் எங்கும் வியாபித்து ஒளி பொருந்தி, உடலற்று, தீமையற்று, ஊனற்று, பாவத்தினுல் தீய்க்கப்படாது தூய்மையாகவும், தூரதிருஷ்டியுடனும், எல்லாமுணர்ந்தவனுகவும், மனம் கடந்தவனுகவும், சுயமாகத் தோன்றியவனுகவும், இருந்து மற்ற சாஸ்வதமான சிருஷ்டிகர்த்தாக்களுக்கு அவரவர்களுடைய முறையான தொழில்களைக் கொடுத்திருக்கின்றுன்.

கடவுள் சர்வ சக்திமான். ஆனுல் அவன் இருப்பதை அவனுலேயே மறுக்க முடியாது என்கின்ற பொருளிலே அவன் சக்தியற்றவனுகவே இருக்கின்றுன்.

அரசனை சாதாரண ஜனங்களும், விவசாயிகளும் பார்க்க முடியாது. ஆனுல் அவர்கள் தினந்தோறும் திவானையும், தாசில்தாரையும், மற்ற உத்தியோகஸ்தர்களையும் பார்க்கிருர்கள். இதன் மூலம் அவர்கள் ராஜ்

யத்தை ஆட்சி புரிகின்ற ஒரு மேலான அரசன் இருக்கிருன் என்பதை அறிகின்றனர். இதே போல எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக விளங்குகின்றதும், எல்லா ஜீவன்களுக்குள்ளும் அந்தர்யாமியாக இருக்கின்றதுமான அந்த மேலான ஆத்மா காணப்பட முடியாததாக இருக்கின்றது. ஆனுல் அவன் இருப்பதை சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் மற்றும் பிரபஞ்சத்தின் இதர அற்புதமான வஸ்துக்கள் ஆகியவைகள் எல்லாம் அவனுடைய மேலான மகிமைகளேயும், வர்ணிக்க முடியாத சிறப்பையும் அறிவிப்பதிலிருந்து நீங்கள் அவன் இருப்பதை ஊகிக்க முடியும்.

வர்ணமும் அவயவப் பொருத்தமும் ஸ்தூல சரீரத்திற்கு அழகைக் கொடுக்கின்றன. உடலழகு அழியுந்தன்மையது. ஆகவே இது மாயமானது. ஆனுல் தெய்வீக அழகு அழியாதது. உண்மையானது. இறைவன் அழகுகளுக்கெல்லாம் அழகானவன். அவன்தான் அழகின் ஊற்றுச் சிகரமாக விளங்குபவன். அவன் அழகே வடிவானவன். அவன் அழகே ஆனவன். (He is beauty itself).

உங்களுடைய தலேயிலிருக்கும் கேசத்தின் மீது உங்களுக்கு மிகுந்த அன்பு இருக்கிறது. நீங்கள் அதை தினந்தோறும் வாரிவிட்டு கூந்தல் தைலம் தடவுகிறீர்கள். ஆனுல் அதே கேசமானது ஒரு கோப்பைப் பாலில் விழுந்து விட்டால் அதைத் தூக்கி வீசி விடுகிறீர்கள். அதைத் தொடுவதை வெறுக்கின்றீர்கள். கேசத்தை நேசிப்பதானது உங்களுடைய சொந்த ஆத்மாவையே நேசிப்பதுதான். கேசம் அழகாகவும், கவர்ச்சிகரமாகவும் இருப்பதாகத் தோன்றுகிறது. ஏனெனில் அது ஜீவனுடைய உடலோடு கொண்டுள்ள தொடர்பு காரணமாகவும், அது இந்த உடலின் பின்புறம் இருக்கிறது என்று சைதன்யத்தோடு (உணர்வோடு) கொண்டிருக்கும் தொடர்பு காரணமாகவும்தான். ஒரு பட்டுப் புடவையை கடையில் பார்க்கும்போது அது கவர்ச்சிகரமாக இருப்பதில்லே; ஆனுல் அதே புடவை ஒரு பெண்ணினுடைய

உடலின் மீது இருக்கும்போது அது மிகவும் அழகாகவும், கவர்ச்சிகரமாகவும் இருக்கிறது; ஏனெனில் இப்பொழுது அது சைதன்யத்தோடு சம்மந்தப்பட்டிருக்கிறது. இது கடவுள் இருக்கின்றார், கடவுள் அழகே வடிவானவர் என்கின்ற குறிப்பை உணர்த்துகின்றது.

## 3. இறைவனுடைய கருணை

பக்தி என்பது முயற்சி அல்லது செய்கை மூலமாக பெறப்படுவதல்ல. அது பிரபுவினுடைய கருணை, தயை ஆகியவை மூலமாகப் பெறப்படுவதாகும். இது கிரியா சாத்யமாகவும், கிரியா சாத்யமல்லாமலும் இருக்கிறது. (It is Kriya Sadhya and not Kriya Sadhya)

ஒரு மானிடப் பிறவி, ஒரு விடுதலை வேட்கை, ஒரு சத்குருவின் பாதுகாப்பு ஆகிய இந்த மூன்று பொருள்களும் கிடைத்தற்கரிது. இவைகள் தெய்வீக கருணையினால் மட்டுமே கிடைக்கவல்லது. ஆனால் ஒரு நற்குணமுள்ள பெருந்தன்மையான ஆத்மா இந்தப் பொருள்களை அடைய முடியும். ஸ்வாமி விவேகானந்தா, கோரக்நாதர், பர்த்ருஹரி, நித்யானந்தா ஆகியோரிடம் இந்த அரிய மூன்று பொருள்களும் அமைந்திருந்தன.

நீ கோடிக்கணக்கான கல்பங்கள் முயற்சி செய்தாலும் கூட இறைவனுடைய தரிசனம் உனக்குக் கிட்டாது. ஆனால் நீ அவன் தயவைப் பெற்று விட்டால் அவனுடைய தரிசனம் இமைப் பொழுதில் உனக்குக் கிட்டும். ஆகவே உன்னுடைய விருப்பத்தை அவனுடைய பாத கமலங்களில் சரணமடையச் செய்து விட்டு "இறைவா, என்மீது கருணை கூர்" என்று மனப்பூர்வமாக இறைஞ்சு.

இறைவனுடைய கருணையின் மூலமாகத்தான் ஒருவனுக்கு வழிகாட்ட அனுபூதியடைந்த குருவும், மற்றும் உணவு, இருக்கை, உடை முதலிய விடுதலைக்கான நான்கு சாதனங்களையும் அடைய முடியும். ஆகவே இறைவழிபாடு இன்றியமையாதது.

இறைவனுடைய கருணையானது எல்லாவிதமானபயத்திற்கும் மருந்தாகும். எவனிடம் இறைவனுடைய கருணை இருக்கிறதோ அவனால் சம்சார சாகரத்தைக் கடந்து விட முடியும். எல்லையற்ற பேரானந்த சாம்ராஜ்யத்தினுள் நுழைவதற்கு இறைவனுடைய கருணை ஒரு அனுமதிச் சீட்டாகும் (Passport). ஆத்ம சரணாகதி, தூய அன்பு, வழிபாடு ஆகியவை மூலமாக அவனுடைய கருணையைப் பெறுங்கள்.

நெருப்பிலே மிக மிக அசுத்தமான ஒரு பொருளை எறிந்தாலும் நெருப்பானது அதைத் தூய்மையாக்கி அதற்குத் தன்னுடைய சொந்த ஒளியையும் உருவையும் பகிர்ந்து கொடுக்கிறது. இதேபோல இறைவன் மிக மிக மோசமான பாவியையும் தூய்மைப்படுத்தி அவனைத் தன்னைப் போலவே ஆக்கி விடுகின்றார். இதுதான் இறைவனுடைய தன்மை.

எவன் கடவுளை நேசிக்கின்றானோ, அவனிடம் மட்டும் மகிழ்ச்சியடைகின்றானோ, அவனிடத்தில் மட்டும் ஆனந்தம் கொள்ளுகின்றானோ, அவனுக்குச் சேவை செய்கின்றானோ, அவனைப் பூஜிக்கின்றானோ அவன் கடவுளுடைய குழந்தையாகின்றான். அவன் ஒரு உண்மையான பாகவதனாக இருக்கின்றான். எல்லா விதமான சித்திகளும் அவனுடைய கால்களுக்குக் கீழே உருளும்.

செல்வவந்தன் மாளிகையிலே வசிக்கிறான், காரிலே செல்கிறான், ஏராளமான உணவு இருக்கிறது. ஆனாலும் அவன் சந்தோஷமாக இருப்பதில்லை. அவன் அஜீர்ணம், நீரிழிவு, இரத்தக் கொதிப்பு ஆகிய நோய்களால் அவஸ்தைப்படுகின்றான். அவனுடைய மனம் கவலைகள், பொறுப்புகள், தொல்லைகள் ஆகியவற்றால் நிரப்பப்பட்டுள்ளன. அவன் பலஹீனனாக இருக்கின்றான். அவனால் நன்றாக திருப்தியான சாப்பாடு சாப்பிட முடியாது. வைத்தியர் அவனுக்கு ஆரோரூட் கஞ்சியும், பார்லித்

தண்ணீரும் force ம் தான் சாப்பிடச் சொல்லியிருக்கிறார். அவனுக்குக் குழந்தைகள் இல்லை. ஒரு ஏழைப் பாட்டாளிக்கு நல்ல ஆரோக்கியமும், நல்ல பசியும், சகிப்புத் தன்மையும் ஏராளமான குழந்தைகளும் இருக்கின்றன. ஆனால் அவன் வீடற்றவனாக இருக்கின்றான். சாப்பாட்டிற்கு சொற்பமே கிடைக்கிறது. அவன் கந்தையால் போர்த்தப்பட்டிருக்கிறான். இயற்கையினுடைய ஒழுங்கிலே இதுதான் சமன் செய்யும் முறையாக இருக்கிறது. இறைவன் நீ கேட்பதை யெல்லாம் கொடுத்தருளுகின்றான். நீ செல்வம் வேண்டினால் அவன் உனக்கு செல்வத்தைக் கொடுக்கிறான். நீ ஆரோக்கியம் வேண்டினால் அவன் அதையே கொடுக்கிறான். நீ மோக்ஷம் வேண்டினால் அவன் உனக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிறான்.

கர்மம் அல்லது காரியம்தான் ஒருவனுடைய செய்கைகளுக்குப் பலனைக் கொடுக்கிறதே யொழிய ஈஸ்வரனல்ல என்பது மீமாம்சகர்களுடைய துணிபு. கர்மமே எதிர் காலத்தில் பலன்களை அளிக்க வல்லது என்று அவர்கள் கூறுகின்றனர். இது தவறு. ஈஸ்வரன்தான் அவனவனுடைய காரியங்களுக்குத் தக்க பலன்களைக் கொடுக்க முடியும். காமம் உணர்ச்சியற்றது அல்லது அறிவற்றதும், அற்ப ஜீவியமுள்ளதுமாகும். அழிக்கப்படுவதற்கு முன்னால் கர்மத்தினால் உண்டுபண்ணப் படுகின்ற அபூர்வ தத்துவம் கூட அறிவற்ற தன்மை வாய்ந்ததே. ஏதாவது அறிவுள்ள ஒன்றினால் (ஈஸ்வரனால்) இயக்கப்பட்டாலொழிய அதனால் செயல்பட முடியாது. ஈஸ்வரன்தான் செய்கைகளுக்கான பலன்களைக் கொடுப்பவன். ஏனெனில் அவன் செய்கைகளுக்கே காரணமாக இருக்கின்றான்.

இறைவன் பக்தனுடைய எண்ணங்களை அல்லது அவன் அஞ்சலி செலுத்துகின்ற சமயத்து கூறுகின்ற வார்த்தைகளை விட அவனுடைய உள்ளத்தைத்தான் கவனிக்கிறார்.

மகன் ஏதாவது குறும்புத்தனம் செய்யும்போது தாய் அவனை அடிக்கிறாள். அவளுக்கு மகனிடம் ஏதாவது

வெறுப்பு உண்டா? கிடையாது. அவள் அவனைத் திருத்தி நல்வழிப் படுத்துவதற்காகவே அடிக்கின்றாள். இதேபோல் இறைவன் துஷ்டர்களை தண்டிப்பதின் காரணம் அவர்களைத் திருத்தி நல்வழிப் படுத்துவதற்குத்தான். அவர் பட்சபாதமாகவோ அல்லது கெட்டவராகவோ இல்லை.

ராதை நேசித்ததைப் போல இறைவனை நேசி. இது தான் வழிபாட்டிலே மிகச் சிறந்த முறையாகும். ராதையினுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல். கிருஷ்ண பரமாத்மாவுக்காக ராதையைப் போல உருகு. நேசம் படிப்படியாக விருத்தியடையும். நீ அமரத்துவத்தையும் இறை உணர்வையும் பெறுவாய்.

"கருணையே வடிவான ஏ ராமபிரானே! உனக்கு நமஸ்காரங்கள். உன்னுடைய அன்பு கூர்ந்த கருணை காரணமாக நான் என்னுடைய பழைய உருவைப் பெற்றேன். உன்னுடைய கருணையாலேதான் கல் ஒரு மனித உரு எடுத்தது. நீ கருணாசாகரமாகவும், அன்புக் கடலாகவும் இருக்கின்றாய். அகமும், புறமும் உள்ளவனும் எங்கும் நிறைந்தவனுமாகிய நிர்க்குண பிரம்மன் அல்லது விராடன் கூட இந்தக் கல்லை என்னுடைய பழைய ரூபத்திற்கு மாற்ற முடியவில்லை. அது உன்னால் தான் முடிந்தது. ஆகவே நீ நிர்குண பிரம்மனையும், விராடனையும் விட மேலானவன். உனக்கு சாஷ்டாங்க நமஸ்காரங்கள். தேவே, என்னைக் காப்பவனே, ஓ ராமபிரானே, உனது மகிமை விளங்குவதாக" என்று அகல்யை கூறுகின்றாள்.

ராமனின்றி உன்னால் அமைதியில் நிலைத்திருக்க முடியாது. அவனை தியானித்துக் கொண்டிருப்பவனும், அவனுடைய திருநாமத்தைப் பாடிக்கொண்டிருப்பவனுமாகிய மனிதன் எவ்வளவு பாக்கியசாலி! ராம பக்தன் எல்லா விதமான கவலைகள், துன்பங்கள், பயங்கள், துக்கங்கள், வலிகள், இடுக்கண்கள், ஆகியவற்றிலிருந்தும் விடுபட்டவனாக இருக்கின்றான். அவனுடைய உடலை

ராமன் கவனித்துக் கொள்கிருன். அவனுடைய புறத் தேவைகளை ராமன் கவனித்துக் கொள்கின்ருன். எழுந் திருந்து பார். அவன் எவ்வளவு கருணை வாய்ந்தவன்! அவனுடைய பாத கமலங்களைப் பற்றிக்கொள்.

இராவணன் சிவபெருமானை அவனுடைய தோத்திரப் பாக்களால் வயப்படுத்திஞன். புஷ்பதந்தன் சிவ பெருமானை அவனுடைய சிறப்பு வாய்ந்த ''சிவ மஹிம்ஞ ஸ்தோத்திரம்'' என்கின்ற ஸ்தோத்திரத்திஞல் (இது இப்பொழுது கூட இந்தியா முழுதும் எல்லா பக்தர் களாலும் பாடப்பட்டு வருகிறது) மகிழ்வித்து, எல்லாவிதமான ஐஸ்வரியங்கள் அல்லது சித்திகளையும், முக்தியையும் பெற்ருன். சிவஸ்தோத்திரங்களின் பெருமை வர்ணிக்க வொண்ணுதது. நீங்களும் ஏன் சிவஸ்தோத் திரங்களைப் பாடி அவனுடைய கருணையைப் பெற்று புலப் படாத எதிர் காலத்திலன்றி இந்த விஞடியிலேயே முக்தியை அடையக்கூடாது? நீங்கள் சிவபெருமானை சுலபமாக மகிழ்விக்கலாம். சிவராத்திரி அன்று பூர்ண விரதமிருங்கள். இதைச் செய்ய முடியாவிடில் பாலும் பழமும் எடுத்துக் கொள்ளுங்கள். இரவு முழுவதும் பூர்ண மாக கண் விழித்திருந்து அவனுடைய தோத்திரங்களைப் பாடுங்கள். சிவபிரானுடைய ஆசிகள் உங்கள் அனைவருக் கும் ஏற்படுவதாக!

''தீயை அணைக்கத் தண்ணீராலும், இருளைப் போக்க சூரியனுலும், கலியுகத்திலே எண்ணிறந்த பாவங்களை அழிக்க தேவியின் நாமாக்களை ஜெபிப்பதனுலும் முடி கிறது'' என்று கூர்ம புராணம் கூறுகிறது. ''மேலான சக்தியை எவர்கள் முறையாகவோ, முறையில்லாமலோ வழிபடுகிருர்களோ அவர்கள் சம்சாரத்தில் அகப்படுவ தில்லை. அவர்கள் ஜீவன் முக்தர்கள் என்பதில் ஐயமென் பதே கிடையாது'' என்று பிரம்ம புராணம் பகர்கின்றது.

பிரகிருதியானவள் ஆன்மீகப் போராட்டத்திற்காக உன்னை விதவிதமான வழிகளில் தயார் செய்கின்ருள்.

அவளுடைய தங்குதடையற்ற விளையாட்டில் உன்னுடைய உள்ளத்தையும் உடலையும் தகுதி வாய்ந்த கருவிகளாக ஆக்கிக் கொண்டிருக்கிருள். இதை உணர். அன்னையிடம் எப்பொழுதும் நன்றியுடையவனுக இரு.

இறைவனைத் தனிமையாக சிந்தித்துப் பார். உனதன்பிற்குப் பாத்திரமான அவனைத் தவிர வேறு எதைப் பற்றியும், மற்ற எந்தப் பொருளைப் பற்றியும் எண்ணுதே. உன்னுடைய ''இஷ்டத்தை''த் தவிர வேறு எதையும் கண்ணெடுத்துப் பாராதே. இறைவனை மட்டும் நேசி. அவனுக்காகவே வாழ். எல்லா நாம ரூபங்களிலும் அவனுக்குப் பணிவிடை செய். இனிமையான பிருந்தாவனமும், அழகான பிருந்தாவனமும், தேவலோகம் போன்ற பிருந்தாவனமும், மின்னுகின்ற யமுனு நதியின் ஜலமும், கடம்ப மலர்களும், காடுகளும், உன்னுள்ளேயே இருக்கின்றன. உள்ளுக்குள்ளே பார். கிருஷ்ண பரமாத்மாவின் அற்புதமான குழலோசையாகிய அந்தரங்க ஆத்ம கீதத்தைக் கேட்டு அவனேடு ஐக்கியமாகி விடு.

பயமற்ற தன்மையும், அமரத்துவமுமாகிய அக்கரைக்குச் செல்ல கிருஷ்ண பரமாத்மாவின் திருக்கண்கள் உனக்குத் தோணியாக உதவுகின்றன. உன்னுடைய உள்ளத்தை அவனுடைய திருக்கண்களிலே பதிய வை.

கிருஷ்ணு என்கின்ற பதம் ''கிருஷ்'' அதாவது ''இழு'' என்ற மூலத்தின் அடியாகப் பிறந்ததாகும். கிருஷ்ணன் என்கின்ற பதத்திற்கு எது எல்லாப் பொருள்களையும் தன்பக்கம் இழுத்துக் கொள்ளக் கூடியதோ அது என்பது பொருள். அவ்வளவு சக்தியுடன் கவர்ந்து ஆட்கொள்ளக் கூடிய அந்தப் பொருள் எதுவாக இருக்க முடியும்? அது பரிபூரண அன்புதான். கிருஷ்ணன் பரிபூர்ண அன்பு மயமானவன்.

கிருஷ்ணன் எவ்வளவு தயை நிறைந்தவன். அவனுடைய திருநாமம் எவ்வளவு சக்தி வாய்ந்தது. கிருஷ்ண

பிரானுடைய நாமமானது தேவாமிர்தமாகும். இந்தப் பயங்கர சம்சார சாகரத்தைக் கடக்க அது தோணியாகும். இந்த ராக்ஷஸ மனத்தைக் கொல்ல அது ஒரு சக்தி பொருந்திய ஆயுதமாகும்.

கிருஷ்ண பரமாத்மா சத்-சித்-ஆனந்த விக்ரஹம் அல்லது ஞானப் பேரானந்த வடிவாக இருக்கின்றான். அவனுக்கு ஆதியுமில்லை ; அந்தமுமில்லை. அவன் தான் எல்லாக் காரணங்களுக்கும் காரணமாக விளங்குபவன். அவன்தான் எல்லாவற்றிற்கும் இருப்பிடமாகவும், ஆதாரமாகவும், தேவனாகவும் இருக்கின்றான்.

கிருஷ்ண பரமாத்மா வெண்ணெய் திருடித் தின்பவன் என்று கூறப்படுகிறது. காரணம் என்னவென்றால் அவனுக்கு கோபிகளிடம் உள்ள அளவு கடந்த காதல் காரணமாக அவன் அவர்களுடைய வீட்டில் திருட்டுத் தனமாக வெண்ணெயுண்பது வழக்கம். ஆனால் உண்மையில் அவன் பக்தர்களுடைய உள்ளத்தில் உள்ள கெட்ட எண்ணங்களைத்தான் திருடி அவர்களுடைய உள்ளங்களில் தெய்வீக எண்ணங்களை நிரப்புகின்றான். இந்த வெண்ணெய் திருடுவதானது அவன் சிறுவனாக இருக்கும்போது அவனுடைய பக்தைகளாக விளங்கிய கோபிகைகளுடைய உள்ளத்திலே உவகையை ஊட்டுவதற்காக அவன் புரிந்த ஒரு வகையான லீலையாகும். கோபிகள் இதை அளவு கடந்து விரும்பினர். கண்ணன் எப்போது வந்து அவர்களுடைய வெண்ணெயை உண்பான் என்று அவர்கள் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். அவன் உண்மையாகவே அவர்களுடைய உள்ளத்தையும், மனத்தையும் கொள்ளை கொண்டு அவர்களை இந்த உலகை மறக்கச் செய்து, அவர்களுடைய உள்ளங்களைத் தன்னுடைய ஆசீர்வதிக்கப்பட்ட பாதகமலங்கள் பக்கமாக இழுத்து அவர்களை சாஸ்வதமான அமைதியையும், பேரானந்தத்தையும் அனுபவிக்கச் செய்கின்றான். அவன் பக்தர்களுடைய ''தாஸோஹம்'' த்திலிருந்து ''தா'' என்

கின்ற எழுத்தைத் திருடி வேதாந்த சூத்திரமாகிய ''ஸோஹம்'' (நான் அவனாக இருக்கின்றேன் என்று) அல்லது பரமாத்மாவுடன் சரியான முக்கியத்துவத்தை அவர்கள் உணரும்படிச் செய்கின்றான். கீதையிலே பகவான் கிருஷ்ணன், ''நான் என்னுடைய பக்தர்களுக்கு விவேகம் என்கின்ற யோகத்தை அருளுகின்றேன்'' என்று அத்தியாயம் ஒன்பதிலே பத்தாவது ஸ்லோகத்தில் கூறு கின்றார். கண்ணபிரான் எவ்வளவு கருணை நிறைந்தவன்! அவனுடைய பெருமையே பெருமை! அவன் நாமத்தின் மகிமையே மகிமை!

கண்ணனுடைய அழகை யாரே வர்ணிக்க வல்லார்? அவனுடைய திருமுகத்தின் ஜோதி கோடி சூரியப் பிரகாசத்தையும் விஞ்சி நிற்கிறது. அவன் அழகுகளுக் கெல்லாம் அழகாக விளங்குபவன். அவன் அழகே உருவானவன்.

''எப்படி ஒரு மரத்தின் வேர் பாகத்தில் தண்ணீர் விடுவதினால் அதனுடைய அடிமரம், கிளைகள், வாதுகள் ஆகிய எல்லா பாகமும் உயிரூட்டப்படுகின்றனவோ, எப்படி ஆகாரத்தின் மூலம் பிராணன் அல்லது ஜீவ சக்தியை ஊட்டுவதின் மூலம் இந்திரியங்கள் திருப்தியடை கின்றனவோ அதேபோல கிருஷ்ண பரமாத்மாவை அல்லது அச்சுதனை வழிபடுவதானது எல்லா தேவதைகளையும் திருப்திப்படுத்துகிறது''. (ஸ்கந்தம் 4, அத். 21-127) என்று பாகவதம் பகர்கின்றது.

கண்ணபிரான் இந்த உலகத்தில் தங்கியிருந்த வரை பல்வேறு பாகங்களில் நடித்திருக்கின்றான். அவன் அர்ஜுனனுடைய தேரை ஓட்டினான். அவன் ஒரு பெரிய ராஜதந்திரியாக இருந்தான். அவன் ஒரு சங்கீத வித்வா னாக இருந்தான். அவனுடைய குழலின் கீதம் கோபிகள் மற்றும் எல்லோருடைய உள்ளத்தையும் சிலிர்க்க வைத் தது. நந்தகோபனிலும், கோகுலத்திலும் ஒரு மாட்டிடை

யனுக இருந்தான். அவன் குழந்தையாகவும், சிறுவனுக வும் இருந்தபோது கூட அவன் அற்புதங்கள் பல காட்டினுன். அவன் காளியனைக் கொன்று அவனுடைய தாய்க்கு விஸ்வரூபத்தைக் காட்டினுன். நாரதர், கௌரங்கர், ராதை, கோபிகள் போன்ற பக்தர்களால் மட்டும் புரிந்து கொள்ளக்கூடிய ரகசியங்கள் நிரம்பிய ராஸ லீலையைப் புரிந்தான். அர்ச்சுனனுக்கும், உத்தவனுக்கும் யோகம், வேதாந்தம் ஆகியவற்றின் உண்மைகளை உபதேசித்தான். அவன் பதினுறு கலைகள் அல்லது கிரணங்களுடன் கூடிய ஒரு அவதாரமாகக் கருதப்படுவதற்குக் காரணம் இது தான்.

## 4. அவதாரம் தோன்றுவதின் காரணம் :

அவதாரங்கள் கார்ய பிரம்மன் (ஹிரண்ய கர்ப்பன்) அல்லது பிரம்மா, விஷ்ணு, சிவனிடமிருந்து அவதரிக்கின்றன. காரணப் பிரம்மனிலிருந்து (ஈஸ்வரன்) நேரடியாக எந்த அவதாரமும் தோன்றுவதில்லை.

எல்லா அவதாரங்களும் பிரம்மா, அல்லது விஷ்ணு, அல்லது சிவனிலிருந்து தோன்றுகின்றன. அவைகள் நேரடியாக ஈஸ்வரனிடத்திலிருந்து வருவதில்லை.

பக்தன் அவனுடைய இஷ்ட தேவதையை மனித உருவில் பார்க்க விரும்புகின்றுன். இதுதான் அவதாரத்திற்குக் காரணம். உருவமற்ற பிரம்மனுனவன் அவனுடைய பக்தர்களை மகிழ்விப்பதற்காக ஒரு மனித உரு எடுக்கக் கட்டாயப்படுத்தப்படுவதற்கு இதுதான் காரணம். உண்மையான பக்தர்கள் சிந்துகின்ற கண்ணீரின் காரணமாகத்தான் அவதாரம் தோன்றுகிறது.

மனிதன் மேலே செல்லும் பொருட்டு இறைவன் கீழ் நோக்கி இறங்குகின்றுன். தேசத்திலே கேடு விளைகின்ற பொழுதும், அநீதி ஆட்சி புரியும் பொழுதும் இறைவன் தர்மத்தை நிலை நாட்ட பூவுலக மட்டத்திற்கு இறங்கி வரு

கின்றான். இந்த ஸ்தூல மட்டத்திற்கு (physical plane) அவன் மனித உருவை எடுத்துக்கொள்கிறான். அவன் ஒரு அவதாரம் என்று அழைக்கப்படுகின்றான். அவதாரங்கள் பல வகைப்படும். பூர்ண அவதாரம் (முழு), அம்ச அவதாரம் (பாகம்), ஆவேச அவதாரம், பிரபஞ்சத்தைக் காக்கும் பொருட்டு விராட் புருஷனுடைய லீலா அவதாரங்கள் முதலியன.

பாரெங்கும் பக்தியைப் பரப்பவும், மக்களை ஆன்மீக வழியிலே தூண்டிவிடவும், எல்லாம் வல்ல பரம்பொருளானவர் அடிக்கடி உலகத்திற்கு தூதர்களை அனுப்பி வைக்கிறார். கௌராங்க மஹாபிரபு, கபீர்தாஸர், ராமதாஸர், கோஸ்வாமி, துளஸிதாஸர் ஆகியோர் எல்லாம் அவருடைய இனிய, உண்மையான தூதுகளாவர். இறைவன் எவ்வளவு அன்பும், பிரியமும், கருணையும் நிறைந்திருக்கின்றார்! ஏ சந்தேகவாதிகளே, உலகாயத வாதிகளே, நாஸ்திகர்களே, எப்பொழுது உங்களுடைய கண்களையும், காதுகளையும் திறக்கப் போகின்றீர்கள்? எழுந்திருங்கள். ஒரு விநாடிகூட காலந் தாழ்த்த வேண்டாம். யமன் உங்களை விழுங்குவதற்கு வாயைப் பிளந்துகொண்டிருக்கின்றான். இறைவனிடம் கூப்பிய கரங்களுடன் அவனது பாவனை (Bhav) நிறைந்த உள்ளத்தோடு அடைக்கலத்திற்காக ஓடிப்போய் "ஏ இறைவா, கருணை வை" என்று கூறுங்கள்.

"கிருஷ்ணனை நாம் எவ்வாறு இறைவன் அல்லது பகவான் என்று ஏற்றுக்கொள்வது? அவன் பிறவி எடுத்தான், இறந்து போனான். அவன் ஒரு மனிதன்தான்" என்று சிலர் சொல்கின்றனர். இது ஒரு பொய்யான கூற்றாகும். இது ஒரு அறியாக் குழந்தையின் பிதற்றலாகும். கிருஷ்ண பரமாத்மாதான் அப்போதைக்கு மனித சமுதாயத்தின் க்ஷேமத்திற்காகத் தன்னை வெளிப்படுத்திக் காட்டிக் கொண்டு பிறகு மறைந்து விட்டார். கிருஷ்ண பகவான் ஹரிதேவனேதான். இதிலே எள்ளளவும் சந்தேக

மில்லை. அவருக்கு ஒரு சின்மய தேகம் இருந்தது. அவருடைய உடல் மாமிசத்தால் உண்டானதல்ல. அவரிடம் முழு நம்பிக்கை வையுங்கள். இந்த பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து அவர் உங்களை விடுவிப்பார். "ஓம் நமோ பகவதே வாசுதேவாய" என்கின்ற அவருடைய நாமத்திற்கு மரியாதை செய்யுங்கள். "ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே, ஹே நாதா நாராயணா வாசுதேவா" என்று அவன் கீர்த்தனத்தைப் பாடுங்கள்.

சில வேளைகளில் அரசன் சிறைக்குச் சென்று, அங்கே நிலைமை எவ்வாறு இருக்கிறது என்று பார்ப்பததற்காக ஒரு கைதியனுடைய அறைக்குள்ளே நுழைந்து பார்க்கிறான். இதை அவன் கைதிகளின் நன்மைக்காகச் செய்கின்றான். அவன் பூரண சுதந்திரத்தோடு இருக்கிறான். இருந்த போதிலும் அவன் தன்னுடைய சொந்த விருப்பத்தின் பேரிலேயே தானே சிறைக்குள் புகுகின்றான். இதுபோலவே ஒரு அவதாரமானது தன்னுடைய சொந்த விருப்பத்தின் பேரில் மனிதனுடைய ஏற்றத்திற்காக ஒரு மாமிச உடலை எடுக்கிறது. அவன் அரசனைப் போல பூர்ண சுதந்திரத்துடன் இருப்பதோடு மாயையைப் பூரணமாகக் கட்டுப்பாட்டிலும் வைத்திருக்கின்றான். அதே சமயத்தில் ஜீவனவன் ஆத்மானுபூதி கிடைக்காத வரையிலும் அவித்தைக்கு ஒரு அடிமையாக இருக்கின்றான்.

ஒரு தேவன் அல்லது தேவதை அல்லது ஆவி, உருக்கொண்டு ஒரு ஸ்தூல வடிவத்தை எடுக்க முடியும். இந்த உருத் -தோற்றமானது மூன்று வகைப்படும். அதாவது பூர்ண உருக் கொள்ளுதல், உணரக்கூடிய ஆனால் புலப்படாதபடி (partial materialisation) உணரக்கூடியபடியும், புலப்படுகின்றபடியும் பகுதி உருக் கொள்ளுதல் என்பவைகளாம். ஒரு உருக் கொண்ட தேவதை அல்லது உன்னுடைய இறந்துவிட்ட நண்பர்களுடைய உருக் கொண்டுள்ள ஆவியோ உன்னுடன் நன்றாகக் கை குலுக்க முடியும்.

நீங்கள் ஒரு தேவதையைப் பார்க்க நேரிட்டால், அந்த தேவதையினுடைய கால்கள் பூமியில் மோதாமல் இருப்பதைக் காண்பீர்கள். கண்கள் நிலையாக இருக்கும். கண்ணிமைகள் இமைப்பதோ மூடுவதோ இருக்காது.

## 5. விக்ரஹ ஆராதனை — உருவ வழிபாடு

விக்ரஹம் அல்லது மூர்த்தி, சூரியன், அக்னி, தண்ணீர், கங்கை, சாலிக்ராமம், லிங்கம் ஆகியவைகள் எல்லாம் இறைவனுடைய அடையாளங்கள் அல்லது பிரதீகங்களாகும். இவைகள் சாதகர்களுக்கு மன ஒருமைப் பாட்டையும், உள்ளத் தூய்மையையும் அடைவதற்கு உதவி புரிகின்றன. மனத்தைப் பதிய வைப்பதற்கு ஒரு அடையாளம் அத்தியாவசியமாகிறது. கிருஸ்தவர்கள்கூட சிலுவையாகிய அடையாளத்தைக் கொண்டிருக்கின்றனர். ஒரு பருமனை மனத்திற்கு (gross mind) ஒரு ஸ்தூலமான அடையாளம் முட்டுக்கால் அல்லது (பற்றுக்கோடாக) ஆலம்பனமாகத் தேவைப்படுகிறது; ஒரு சூக்ஷ்ம மனத் திற்கு மானசிகமான ஒரு அடையாளம் தேவைப்படுகிறது. ஒரு வேதாந்திக்குக்கூட அவருடைய அலைந்து திரியும் மனத்தை ஒரு நிலைப்படுத்த "ஓம்" என்கின்ற அடையாளம் தேவைப்படுகின்றது.

பக்தனானவன் அந்த ஸ்தூல விக்ரஹத்தின் மீது இறைவனையும், அவனுடைய குணாதிசயங்களையும் சுமத்து கின்றான் (Super-imposes). அவன் அந்த விக்ரஹத்திற்கு ஷோடஶோபசாரம் அல்லது இறைவனுக்குச் செய்யும் பதினாறு வித மரியாதைகளை அல்லது சேவைகளைச் செய் கின்றான். அவைகளாவன: பாத்யம் (பாதங்களைக் கழுவத் தண்ணீர்), அர்க்யம் (கை கழுவுதல்), ஆசனம் (இருக்கை) ஸ்நானம் (குளித்தல்) ஆடை அணிவித்தல், ஆசமனம் (அருந்துவதற்குத் தண்ணீர்), சந்தனம் பூசுதல், புஷ்பங்கள் சாத்துதல், (அர்ச்சனை), வாசனைப் புகை போடுதல், தீப தூபம் காட்டுதல், மஹா நைவேத்

தியம் முதலியன. இந்த விதமான வழிபாட்டால் அலைந்து திரியும் மனமானது இப்பொழுது பதிய வைக்கப்படுகிறது. சாதகன் படிப்படியாக கடவுளுடைய சாமீப்யத்தை உணருகின்றான். அவன் உள்ளத் தூய்மை பெற்று மெது வாக அவனுடைய ஆணவத்தை இல்லாது செய்கிறான்.

ஒரு சிறு விக்ரஹத்தை வழிபடும்போது கூட அவன் புருஷ சூக்தத்தை ஜபிக்கவும், எண்ணற்ற முகங்களையும், எண்ணற்ற கண்களையும், எண்ணற்ற கைகளையும் உடைய வனும், பிரபஞ்சத்தைக் கடந்து விரிந்து நிற்பவனுமாகிய விராட் புருஷனையும், எல்லா ஜீவராசிக்குள்ளும் வாசம் செய்கின்ற இறைவன் அல்லது ஆத்மனையும் நினைக்க வேண்டியிருக்கிறது.

ஒரு பக்தன் அல்லது முனிவனுக்கு ஜடம் அல்லது உணர்வற்ற பொருள் என்று எதுவும் கிடையாது. ஒவ்வொரு பொருளும் வாசுதேவன் மயம் அல்லது சைதன் யம், வாசுதேவஸ் ஸர்வம் இதி. பக்தன் விக்ரஹத்தில் இறைவனையே காணுகின்றான். நர்ஸிம்ம மேத்தாவானவர் ஒரு அரசனால் இந்த சோதனைக்குட்படுத்தப்பட்டார். "ஏ நர்ஸி, நீ கிருஷ்ண பரமாத்மாவின் உண்மையான பக்தன் என்றால், நீ சொல்லுகின்றபடி இந்த விக்ரஹம் கிருஷ்ண பரமாத்மாவேயானால், இந்த விக்ரஹம் நகரட் டும்" என்று அரசன் கூறினான். நரசிம்ம மேத்தாவின் பிரார்த்தனைக் கிணங்க விக்ரஹம் நகர்ந்தது. சிவ பெருமான் சிலைக்கு முன்பாக இருந்த ரிஷபமாகிய நந்தி துளசிதாசரால் கொடுக்கப்பட்ட உணவை உண்டது. மீராபாயுடன் மூர்த்தி விளையாடிற்று. அவளுக்கு அது ஜீவனும் சைதன்யமும் நிரம்பியதாகவே இருந்தது.

ஹிந்துமத தத்துவமும் ஹிந்துக்களின் வழிபாட்டு முறையும் எவ்வளவு உயர்ந்தது? இது விக்ரஹ வழிபாட் டுடன் மட்டும் நின்று விடுவதோ அல்லது முடிந்து விடு வதோ இல்லை. விக்ரஹத்தை வழிபாடு செய்வதின்

மூலமாக சாதகன் படிப்படியாக பக்தி, சமாதி ஆகிய உயர்ந்த பக்தி நிலைகளுக்கு கொண்டு செல்லப்படுகின்றான். அவன் விக்ரஹத்தை வழிபாடு செய்தாலும் கூட அவனுடைய மனக்கண் முன்பாக எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனையே கொண்டு வந்து நிறுத்த வேண்டியிருக்கிறது. இறைவனுடைய பிரசன்னத்தை தன்னுடைய உள்ளத்திலும், எல்லாப் பொருள்களிலும் அவன் உணர வேண்டியிருக்கிறது. ஹிந்து சாஸ்திரங்களிலே கூறப்பட்டிருக்கும் வழிபாட்டு சட்ட திட்டங்களும், முறைகளும், பூஜா விதிகளும், இரகசியங்களும், விஞ்ஞான ரீதியாக எள்ளளவும் பிசகில்லாதவைகளாகவும், உயர்ந்த விவேகமுள்ளவைகளாகவும், இருக்கின்றன. சாஸ்திரங்களைக் கற்றறியாத பக்தர்களுடனும், மகாத்மாக்களுடனும் தொடர்பு கொள்ளாத அறிவீனர்கள் தான் விக்ரஹ ஆராதனையை நிந்திக்கின்றனர்.

மஹாத்மாவிடமிருந்து பிரசாதத்தைப் பெறும்பொழுது ஆங்கிலம் கற்ற பல பேர்கள் அந்தப் பிரசாதத்திற்கு முக்கியத்துவமே அளிப்பதில்லை. இது ஒரு பெருந்தவறாகும். பிரசாதம் ஒரு மகத்தான தூய்மையாக்கும் பொருளாகும். அவர்கள் மேலைநாட்டு வாழ்க்கை முறையிலே வளர்க்கப் பட்டு வருவதால் அவர்கள் மேலை நாட்டாருடைய மனோ நிலையை கிரஹித்துக்கொண்டு, பண்டைய ரிஷிகளின் உண்மையான குழந்தைகளின் மனப்போக்கை மறந்து விட்டனர். ஒரு வாரம் பிருந்தாவனத்திலோ, அல்லது அயோத்தியிலோ, அல்லது காசியிலோ, அல்லது பண்டரி புரத்திலோ வசித்துப் பாருங்கள். பிரசாதத்தினுடைய மகிமையையும், அற்புதமான பலன்களையும் நீங்கள் உணர்வீர்கள். பல தீர்க்கப்பட முடியாத நோய்களெல்லாம் தீர்க்கப்படுகின்றன. பல உண்மையான பக்தியுள்ள சாதகர்கள் வெறும் பிரசாதத்திலிருந்து அற்புதமான ஆத்மீக அனுபவங்களைப் பெறுகின்றனர். பிரசாதமும் ஒரு சர்வ ரோக நிவாரணியாகும். பிரசாதம் ஒரு ஆத்மீக தாது புஷ்டி மருந்தாகும் (elixir). பிரசாதமானது இறைவனுடைய

கருணையாகும். பிரசாதமானது ஒரு சர்வரோக நிவாரணியும், ஒரு நல்ல ஊக்க மூட்டும் மருந்துமாகும். (an ideal pick-me-up). பிரசாதம் சக்தியின் ஒரு வடிவமாகும். பிரசாதம் பிரத்யக்ஷமாகக் காணப்படும் தெய்வீகமாகும்.

கண்ணபிரானுடைய பக்தர்கள் ஒவ்வொரு உருவத்தையும் கண்ணபிரானுடைய வடிவாகவே உணர்தல் வேண்டும். அவர்கள் இந்த மனோபாவத்தையே ஒரு கொலைகாரன் அவர்களைக் கொல்ல அவர்கள் முன்பு தோன்றும் போதும் கொள்ள வேண்டும். இந்த பாவத்தில் (தன்மையில்) அவர்கள் நிலைபெற்று விட்டால் கொலையாளியினுடைய குணம் மாறிவிடும். அல்லது வேறு யாராவது ஒருவன் அந்தக் கொலையாளியைக் கொன்று விடுவான். இந்த பாவம் (தன்மை) மாறினால் அதைத் திரும்பத் திரும்ப பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அவனுடைய பிரசன்னத்தை எப்பொழுதும் உணருங்கள். எங்கு பார்த்தாலும் அவனுடைய பிரசன்னத்தை அங்கீகாரம் செய்யுங்கள். நீங்கள் நடந்து செல்லுமிடமெல்லாம் அவனுடைய பிரசன்னத்தை எடுத்துச் செல்லுங்கள். அவனை எப்பொழுதும் மனதில் நினைத்துக் கொண்டிருங்கள். அவனிலேயே வசித்திருங்கள். நீங்கள் பல புத்தகங்களைப் படிக்க வேண்டிய அவசியமில்லை. நீங்கள் குருமார்களைத் தேடிக்கொண்டு அலைந்து திரிய வேண்டியதில்லை. நீங்கள் பன்னிரண்டு ஆண்டுகள் தலைகீழாக நிற்க வேண்டியதில்லை. குண்டலினியைத் திறப்பதற்கு நீங்கள் அஸ்வினி முத்திரையைச் செய்ய வேண்டியதில்லை. நான் உங்களுக்கு எல்லா சாதனைகளினுடைய சாரத்தைக் கொடுத்திருக்கிறேன். இதுவே எல்லா வேதங்களின் சாராம்சமாகும். இதைப் பயிற்சி செய்யுங்கள். என்னை நம்புங்கள். இது மிகவும் சுலபமானது. இது உங்களுக்கு நிச்சயமாக மோக்ஷத்தை அளிக்கும். நான் உங்களுக்கு உறுதியளிக்கின்றேன்.

ஹிரண்ய கர்ப்பனை வழிபாடு செய்பவர்கள் பிரம்ம லோகம் அல்லது சத்திய லோகத்திற்குச் செல்லுகின்றனர். அவர்கள் அங்கு பிரம்மாவினுடைய ஆயுட்காலம் வரைக்கும் காத்திருக்கின்றனர். பிரளயத்தின் போது பிரம்மாண்டமானது கரையும் பொழுது அவர்கள் பரமாத்மா அல்லது பரப்பிரம்மனுள் ஹிரண்ய கர்ப்பனோடு நுழைந்து விடுகின்றனர். அப்பொழுதுதான் அவர்கள் தனித்தன்மை உணர்ச்சியை இழக்கின்றனர். ஹிரண்யகர்ப்பன் உபாசனையானது ஈஸ்வரனுடைய வாழ்க்கை அம்சத்தை வழிபடுவதாகும்.

சகுண பிரம்மத் தியானமானது துயரத்தைத் துடைக்கின்றது. பக்தன், அவன் விரும்பாவிட்டாலும் சக்திகள் அவனை வந்தடைகின்றன. சித்திகள் அவனுடைய கால்களுக்குக் கீழே உருளுகின்றன. அவன் படிப்படியாக விடுதலை பெறுகின்றான். இதற்கு கிரம முக்தி என்று பெயர். இது ஒரு ஞானியால் அடையப்படும் சத்யோ முக்திக்கு (உடனடியாக விடுதலை) மாறுபட்டதாகும். பக்தன் முதலில் பிரம்மலோகத்திற்குச் சென்று பிறகு நிர்குணப் பிரம்மனில் நுழைகின்றான். இது கிரம முக்தி என்று அழைக்கப்படும் ஞானி நேரடியாக நிர்குணப் பிரம்மனோடு இரண்டறக் கலந்து விடுகின்றான். இதுதான் வித்தியாசம்.

சகுண உபாசகர்கள் அல்லது இறைவனுடைய உருவத்தை வழிபடுகின்றவர்கள், முதலில் திறந்த கண்களுடன் த்ராடக் பயிற்சியைத் தெளிவான படம் மனதில் பதியும் வரை பழகிவர வேண்டும். பிறகு அந்தப் படத்தை மூடிய கண்களோடும் அவர்களால் பார்க்க முடியும். படமானது உள்ளத்திற்கும், கண்களுக்கும் மிகவும் இனிமை பயக்கத்தக்கதாக இருக்க வேண்டும். அதற்கு நல்ல, பொருத்தமான பின்னணி இருத்தல் வேண்டும். ஒரே உருவத்தைத் தொடர்ந்து தியானிக்கும் பயிற்சியின் மூலமாக உன்னுடைய தேவதையின் மானசீக உருவை நன்ருகப் பதிய வைத்துக் கொண்ட பிறகு அந்த மானஸீக

உருவை படத்தை மாற்றுவதின் மூலம் தொந்தரவு செய்தல் கூடாது. ஒரே படத்தை விடாமல் பற்றிக் கொண்டு திருப்பித் திருப்பி திராடக் பயிற்சியின் மூலமாகவும், காட்சியின் மூலமாகவும், அந்த உருவத்தை இடையருது தியானிப்பதின் மூலமாகவும், அந்த மானஸீக உருவத்திற்கு ஊட்டம் கொடுத்து பலப்படுத்தல் வேண்டும்.

பழக்கத்தின் கட்டாயம் காரணமாக அதே உருவமானது உன்னுடைய மனத்திலே மிகவும் சுலபமாகத் தோற்றமளிக்கும். சில சமயங்களிலே உள்ளம் சோர்வடைந்திருக்கும் போதோ அல்லது பல்வேறு ரகங்களை விரும்பும் போதோ நீ உன்னுடைய மந்திரத்தைக் கூட மாற்றிக் கொள்ளலாம்; ஆனல் மானஸீக உருவத்தை அல்லது பாவத்தை (Bhav) ஒரு பொழுதும் மாற்றவே கூடாது.

மூடிய கண்களோடு இறைவனுடைய பூரணத் தோற்றம் அல்லது காட்சியை உன்னல் காண முடியாவிட்டால் அதற்காகக் கவலை கொள்ள வேண்டாம். உன்னுடைய பயிற்சியைத் தொடர்ந்து தீவிரமாகச் செய்துவா. நீ வெற்றியடைவாய். தேவைப்படுவதெல்லாம் இறைவனிடம் பிரேமை ஒன்றுதான். இதை மேலும் மேலும் விருத்தி செய்து கொண்டு வா. இது இடையருது தன்னைத் தானே பாய்ந்தோடட்டும். இது காட்சியைவிட மிகவும் முக்கியமானதாகும்.

ஒரு சாதாரண வெள்ளைக் காகித அல்லது வர்ணக் காகிதத் துண்டுக்கு மதிப்பு கிடையாது. ஆனல் அந்தக் காகிதத்தின் மீது அரசன் அல்லது சக்கரவர்த்தியின் முத்திரை இருந்து விட்டால் (ரூபாய் நோட்டாக இருந்தால்) நீங்கள் அதை பத்திரமாக உங்களுடைய பணப் பையிலோ அல்லது இரும்புப் பெட்டியிலோ வைத்துக் கொள்கிறீர்கள். இதே போல உங்களுக்கு ஒரு சாதாரண கல் துண்டுக்கு எந்தவித மதிப்பும் கிடையாது. நீங்கள்

அதை எறிந்து விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் பண்டரிபுரத்திலுள்ள கிருஷ்ண பரமாத்மாவின் கல் விக்ரஹத்தையோ, அல்லது கோயில்களிலுள்ள இதர மூர்த்தியையோ பார்த்தால் நீங்கள் உங்களுடைய தலையை கூப்பிய கரங்களுடன் வணங்குகிறீர்கள். ஏனென்றால் அந்த கல்லின் மீது இறைவனுடைய முத்திரை இருக்கிறது. பக்தன் அந்தக் கல் விக்ரஹத்தின் மீது தன்னுடைய அன்பிர்க்குரியவனையும், அவனுடைய எல்லா குணாதிசயங்களையும் சுமத்துகின்றான். ஆரம்ப சாதகர்களுக்கு உருவ வழிபாடு மிகவும் அவசிய மாகும்.

ஒரு பிரதிமையை வழிபட்டால் கூட ஈஸ்வரன் மிகவும் உளம் பூரிக்கின்றான். அந்தப் பிரதிமையானது ஐந்து மூலப் பொருட்களால் ஆனது. ஐந்து மூலப் பொருட்களும் இறைவனுடைய தேகத்தை உண்டாக்குகின்றன. விக்ரஹம் விக்ரஹமாகவே இருக்கிறது. ஆனால் வழிபாடு இறைவனைப் போய்ச் சேருகிறது. ஆரம்பத்தில் ஒரு விக்ரஹத்தை வழிபடுவதில் எந்தவிதமான தவறும் கிடையாது. நீங்கள் அந்த விக்ரஹத்தின் மீது இறைவனையும், அவனுடைய குணாதிசயங்களையும் உட்செலுத்திப் பார்க்க வேண்டும். அந்த விக்ரஹத்திற்குள் மறைந்திருக்கும் அந்தர் ஆத்மாவைப் பற்றி நினைக்க வேண்டும்.

பாவ சமாதியில் (Bhav Samadhi) பக்தனுடைய மனமானது தூய்மையான உணர்ச்சி, பக்தி ஆகியவை மூலமாக மிகவும் உயர்த்தப்படுகிறது. அவன் உடலையும் உலகையும் மறந்து விடுகின்றான். அவனுடைய மனம் பூர்ணமாக இறைவனோடு ஐக்கியமாகி விடுகிறது.

தெய்வீக நாதத்தை (Divine Whisper) அமைதியில் கேளுங்கள். நம்பிக்கையின் சக்தியை உணர்ந்து பாருங்கள். இறைவனுடைய ஆதரிக்கின்ற கருணையை உணருங்கள். தப்பித்துச் செல்லும் மார்க்கத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். பக்திக் கோயிலை உங்களுடைய இருதய

கமலத்திலே கட்டுங்கள். அமைதியில் நுழையுங்கள். மனம் கடந்த வாழ்க்கையை அனுபவியுங்கள்.

பிரபஞ்சத்தை மறந்து விடுங்கள்; உடலை மறந்து விடுங்கள்; எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். நாம மகிமையை தியானியுங்கள். அவனுடைய நாமத்திலே நிலைபெற்றிருங்கள். அவனுடைய நாமத்திலே உங்களை ஐக்கியப் படுத்திக் கொள்ளுங்கள். அவனுடைய நாமம் லட்சோப லட்சம் மக்களை இந்த பிறப்பு இறப்புச் சுழலி லிருந்து காப்பாற்றியிருக்கின்றது. ஆகவே அவனுடைய நாமாவின் மேல் ருசியை விருத்தி செய்து கொள்ளுங்கள். நீங்கள் உணவை மட்டும் உண்டு ஜீவிக்க முடியாது; ஆனால் கிருஷ்ண பரமாத்மாவின் நாமத்தை மட்டும் கொண்டு ஜீவிக்கலாம். எல்லாவிதமான தெய்வீக சக்தி களும் அவனுடைய நாமத்திற்குள்ளே மறைந்து கிடக்கின் றன. அவனுடைய நாமாவினுள் மறைந்து கிடக்கும் மந்திர சைதன்யத்தை இடைவிடாத ஜபத்தின் மூலமாக எழுப்பிவிட்டு அவனோடு சாஸ்வதமான ஐக்கியத்தை அடையுங்கள்.

இறைவன் நேர்மையானவன், அவன் துஷ்டர்களை நல்ல வழியிலே திருப்பி, திருத்தி அறிவுபுகட்டும் பொருட்டு அவர்களை தண்டிக்கிறான். அவன் தன்னுடைய குழந்தை கள், செய்த கெட்ட காரியத்தையே திரும்பச் செய்வதை விரும்புவதில்லை. இதுதான் அவனுடைய கருணை. இதுவே அவனுடைய அன்பு.

இறைவனுடைய வழிகள் மிகவும் விநோதமானவை. வலி, துன்பம், நோய், நஷ்டம், ஏமாற்றம், தோல்வி ஆகியவைகள் எல்லாம் அவனுடைய குழந்தைகளை பலப் படுத்தி தன் பக்கத்தில் எடுத்துக் கொள்வதற்காகச் சொரி கின்ற வேற்றுருவிலுள்ள ஆசிகளாகும். எனதன்பிற்குரிய ராமா, அவனுடைய வழிகளைக் கற்றுக் கொண்டு ஞான வானாக ஆகு. வாழ்க்கையிலே ஏற்படுகின்ற அற்ப சம்பவங்

களுக்காக மனம் கலங்காதே. பலமாக வளர்ச்சியடை. பரிணமி.

இறைவன், ஒருவனைத் தன் பாதகமலங்களுக்கு அழைத்துக் கொள்ள விரும்பினுல் அவன் அவனுடைய செல்வம், மனைவி, மகன் முதலியவற்றை அபகரித்துக் கொள்கிறுன். எனதன்பார்ந்த ப்ரேம், முணு முணுக் காதே. தைரியமாக "இறைவா நீயே எனக்குப் போது மானது" என்று சொல்லி ஆனந்தமடை. அவனிடம் பூர்ண நம்பிக்கை வை. மனப்பூர்வமாகப் பிரயத்தனப்படு. மிகுதியை இறைவனிடம் விட்டு விடு.

நீ எக்காரணத்தைக் கொண்டும் சோர்வடைய வேண்டிய அவசியமில்லை. தவத்தின் மூலமாக நீ எதை யும் அடையலாம். கீதையிலே ஒன்பதாவது அத்தியாயத் தில் 31-வது ஸ்லோகத்தில் பகவான் கிருஷ்ணன் மிகவும் அழுத்தம் திருத்தமாக உறுதியளிக்கின்றுர். "கௌந்த் தேய, ப்ரதிஜானீ ஹி நமே பக்த: ப்ரணஸ்யதி – ஓ குந்தி மகனே என்னுடைய பக்தன் ஒரு பொழுதும் அழிவதில்லை. என்பது உறுதி என்பதை அறிந்து கொள்". என்று எப்பொழுதும் உற்சாகத்துடனிரு. நீ கிருஷ்ண பரமாத்மா வினுடைய ஒரு பக்தனுக இருக்கும் பொழுது புலம்பலுக்கு இடமேது. அவன் தன்னுடைய பக்தர்களுக்கு ஒவ்வொரு வெகுமதியையும் வழங்குகின்றுன். நீ உன்னுடைய சாதனையைச் செய்து கொண்டே போய்க் கொண்டிரு. உன்னுடைய நேரத்தை நல்ல முறையில் செலவிடு. உன் னுடைய நேர்மையான குணமும் (ஆர்ஜவம்) எளிமையும் உனக்கு பெரும் ஆன்மீகச் செல்வங்களாகும். ஒரு நல்ல எதிர்காலம் உனக்காகக் காத்திருக்கின்றது. உழைத்துக் கொண்டே யிரு. விடா முயற்சியுடன் பிரயோகப் படுத்து. உன்னுடைய தர்மத்தை விருத்தி செய். தர்மம் எண்ணற்ற பாவங்களை மூடிவிடுகின்றது. இது உள்ளத்தைச் சுத்தி செய்யும் ஒரு மகத்தான பொருளாகும். "யக்ஞோ தானம் தபஸ் சைவ பாவனுனி மனீஷிணும்"

(கீதை அத். XVIII 5)

நீ என்னுடைய ஆன்மீக உபதேசங்களைக் கடுமையாக பின்பற்றாத காரணத்தால் உன்னுடைய ஆன்மீக முன்னேற்றம் மிகவும் அற்பமாக இருக்கிறது. மனப்பூர்வமான உணர்ச்சிகள் உன்னிடம் மிகவும் அதிகமாகத் தேவைப்படுகின்றன. நீ ஆன்மிக சாதனையிலே மனப்பூர்வமாகவும், முறையாகவும் இருந்திருந்தால் ஏதாவது ஒரு ரூபத்தில் தெய்வீக கருணையினுடைய க்ஷண தரிசனங்கள் (glimpses) உனக்குக் கிடைத்திருக்க வேண்டும்.

பிருந்தாவன கோபியர்கள் கிருஷ்ண பகவானுடைய அற்புதமான பக்தைகளாவர். அவர்கள் இறைவனிடம் தங்களைப் பரிபூரணமாக ஒப்படைத்தவர்கள். ஒரு நாள் நிலவு காய்கின்ற இரவிலே கண்ணபிரான் அவனுடைய குழலை வாசித்தான். கோபியர்கள் தங்கள் காதலன் இருக்குமிடந்தேடி ஓடோடியும் வந்துவிட்டனர். அவர்கள் உள்ளங்கள் எல்லாம் கிருஷ்ணனிடம் ஐக்கியமாகிவிட்டன. அவர்கள் அந்த குழலோசையைக் கேட்டதும் சகலத்தையும் மறந்தனர்.

அன்புப் பாதையாகிய சந்து மிக மிகக் குறுகலானது தான். அதில் இரண்டு பேருக்கு இடம் கொள்ளாது. "நான்" என்பது இருக்குமிடத்தில் இறைவன் இல்லை. இறைவன் எங்கு இருக்கின்றானோ அங்கு இந்த "நான்" இல்லாமல் போய்விடுகிறது.

## 6. மானஸீக பூஜை

மானஸீக பூஜையானது மூர்த்திக்கு புஷ்பங்கள் முதலியன போட்டு அர்ச்சித்துச் செய்யும் புற பூஜையை விட மிகவும் சக்தி வாய்ந்தது. பீமன் எந்தவிதமான வழிபாடும் செய்வதில்லை என்று அர்ச்சுனன் எண்ணினான். அவன் சிவபெருமானுக்குத் தான் செய்யும் புற வழிபாட்டைப்பற்றிப் பெருமிதம் கொண்டிருந்தான். அவன் வில்வத் தழைகளை அர்ச்சித்து வந்தான். ஆனால் பீமன் மானசீகமாக உலகத்திலுள்ள தழைகளை மானஸீகமாக

வழிபட்டு வந்தான். சிவபெருமானுடைய ஏவலாளர்களால் சிவபெருமானுடைய திருமுடியிலிருந்து பீமனால் அர்ப்பணிக்கப்பட்ட வில்வ தளங்களை அப்புறப்படுத்த முடியவில்லை. ஒரு சமயம் ஒரு மாபெரும் கூட்டத்தினர் கூடை கூடையாக வில்வ தளங்களைச் சுமந்து செல்வதை அர்ச்சுனன் கண்டான். அவன் மனத்திற்குள்ளே இவையனைத்தும் தன்னால் சிவபெருமானுக்கு அர்ச்சிக்கப் பட்டவைகளாகத் தான் இருக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டு அவர்களைப் பார்த்து ''சகோதரர்களே, இந்த வில்வ தளங்களை எங்கிருந்து சுமந்து வருகிறீர்கள்'' என்று வினவினான். அதற்கு அவர்கள், ''ஓ அர்ச்சுனா! இவைகள் எங்களுடைய பெருமானுக்கு மானஸீக பூஜையின் மூலமாக பீமனால் அர்ப்பணிக்கப் பட்டவைகள்'' என்று பதிலிறுத்தனர். அர்ச்சுனன் ஆச்சரியத்தினால் திகைத்து நின்றான். மானஸீக பூஜையானது புற வழிபாட்டைக் காட்டிலும் அதிக சக்தி வாய்ந்தது என்பதும், பீமன் அவனை விட சிறந்த பக்தன் என்பதும் அவனுக்குப் புலனாயிற்று.

சிறிது காலம் புஷ்பம் முதலிய வழிபாட்டுப் பொருள்களைக் கொண்டு பூஜை செய்து வந்த ஒருவன் மானஸீக வழிபாடு செய்யலாம். மானஸீக பூஜையிலே பக்தன் இறைவனுக்கு எல்லாவிதமான காணிக்கைகளையும் மானஸீகமாக சமர்ப்பிக்கின்றான். இது அபிவிருத்தியடைந்த வழிபாட்டு முறையாகும்.

மானஸீக பூஜையானது முன்னேற்றமடைந்த மாணக்கர்களால் செய்யப்படக்கூடியதாகும். ஆரம்ப நிலையிலுள்ளவர்கள் அவசியம் புஷ்பங்கள், சந்தனங்கள், தூப தீபங்கள் முதலியவைகளைக் கொண்டு தான் வழிபாடு செய்ய வேண்டும். நீங்கள் மானஸீக பூஜை செய்யும் பொழுது உங்களுக்கு அதிகமான மன ஒருமைப்பாடு கிடைக்கும். இறைவனை மானஸீகமாக வைரம், வைடூரியம், முத்து முதலிய நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட சிங்காதனத்திலே அமர்த்தவும், அவருக்கு ஆசனத்தை அளிக்க

வும், அவருடைய நெற்றிக்கும், திருமேனிக்கும் சந்தனம் தடவவும், அர்க்யம், மதுபர்க்கம், (வடை, பாயசம்) மற்றும் பல வகையான புஷ்பங்கள், ஆடையாபரணங்கள் முதலியவற்றை அணிவிக்கவும், தூப தீபம் காட்டவும், கற்பூரம் ஏற்றி வைக்கவும், பலவகையான பழவர்க்கங்களை யும், தித்திப்புப் பண்டங்களையும், மஹா நைவேத்தியம் ஆகியவற்றை அர்ப்பணிக்கவும், உலக முழுதுமுள்ள பழங் கள் அனைத்தையும் இறைவனுக்கு சமர்பிக்கவும் கூடும்.

மானஸீக பூஜையில் கூட கஞ்சத்தனமாக இருக்க வேண்டாம். மானஸீக பூஜையில் ஒருவன் ஒரே ஒரு அழுகிய வாழைப் பழத்தையும், ஒரு பிடி பருப்பையும் கொடுத்தானும். அந்தோ பரிதாபப் படத்தக்க உலோபி. மானஸீக பூஜையில் கூட அவனால் பெருந்தன்மையாகவும், தாராளமாகவும் இருக்க முடியவில்லை. இந்த உலகில் இது போன்ற பரிதவிக்கத்தக்க உலோபிகள் ஏராளமாக இருக்கின்றனர். கடைசியாக ''காயேன வாசா மன ஸேந்தரியைர்வா புத்யாத்மானு வா ப்ரக்ருதேஸ் ஸ்வ பாவாத் கரோமி யத்யத் சகலம் பரஸ்மை நாராயணுயேதி சமர்ப்பயாமி'' — மனே, வாக்கு, காயத்தாலும், அல்லது என்னுடைய சொந்த இயற்கைக் குணத்தினுலும் நான் செய்த எல்லா கர்மங்களையும் பகவான் நாராயணனுக்கே சமர்பிக்கின்றேன் - என்று மானஸீகமாக ஜபிக்கவும். தவிர ''ஓம் தத் ஸத் பிரம்மார்ப்பணமஸ்து'' என்றும் கூறவும். இது உங்களுடைய உள்ளத்தைத் தூய்மையாக்கி வெகு மதியை எதிர்பார்க்கும் தன்மையாகிய நஞ்சை நீக்கி விடும்.

---

# அத்தியாயம் ஐந்து

# பக்தி யோகம்.

## 1. எது பக்தி

பக்தி என்பது "பற்றிக்கொண்டு அல்லது இணைந்து இரு" என்று பொருள் படும்படியான "பஜ்" (Bhaj) என்ற வார்த்தையிலிருந்து வந்திருக்கிறது. இது மரியாதை யுடன் கலந்த தூய்மையான தன்னலமற்ற அன்பாகும்.

எல்லா மத வாழ்விற்கும் பக்திதான் ஆதாரமாக இருக் கின்றது. பக்தி, வாசனைகளையும், ஆணவத்தையும் அழிக் கிறது. பக்தி உள்ளத்தை மகத்தான உயரத்திற்கு உயர்த் துகிறது. பக்திதான் ஞானமாகிய அறையைத் திறப்பதற்கு உரிய திறவுகோலாகும். பக்தி ஞானத்திலே போய் முடி கிறது. பக்தி இரண்டிலே ஆரம்பித்து ஒன்றிலே போய் முடிகிறது. எது உயர்ந்தது, பக்தியா அல்லது ஞானமா? என்ற சர்ச்சையில் ஈடுபட்டிருப்பவர்கள் இருளிலே தடவிக் கொண்டிருக்கின்றவர்களாகின்றனர். அவர்கள் உண்மை யான தத்துவத்தைப் புரிந்து கொள்ளவில்லை. பரபக்தியும் ஞானமும் ஒன்றேதான்.

அனுராக (தெய்வப்பற்று) ரூபத்திலே உள்ள பக்தி யானது மிக உயர்ந்த நன்மை அல்லது இறையுணர்விற்கு அழைத்துச் செல்கின்றது. பற்று எவ்வளவுக் கெவ்வளவு அதிகரிக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு உணர்வு சீக்கிரம் கிடைக்கின்றது.

"ஓ ஹரிதேவா, உலகாயத மக்கள் இப்பிரபஞ்சத் தின் நிலையில்லாத பொருள்களிடத்து எவ்வளவு விருப்பம் காட்டுகின்றனரோ, அதே மாதிரியான ஆழ்ந்த, நீடித்த அன்பு எனக்கு உன்னிடம் இருக்குமாக. நான் உன்னை நினைக்கும்போது அந்தப் பேரானந்தம் மறையாது இருக் கட்டும்" என்று பிரகலாதாழ்வார் கூறுகின்றார். பக்திக்கு

எவ்வளவு அழகான இலக்கணம்! இந்த எண்ணங்கள் பிரகலாதாழ்வாருடைய மனத்தினடியிலிருந்து கிளம்பி யிருக்கின்றன. அவைகள் தீவிரமான உணர்ச்சியாலும், பக்தியாலும் நிரப்பப்பட்டிருக்கின்றன.

அழகாக இருக்கும் ஒரு பொருளை வைத்திருப்பது சுலபம். கடவுள் அழகுகளுக்கெல்லாம் அழகாக விளங்கு பவர். கடவுள் எல்லா அழகுகளுக்கும் ஆதாரமாக விளங் குபவர். கடவுள் அழியாத அழகின் வடிவமாகத் திகழ் பவர். ஆகவே கடவுளை நேசிப்பது மிகவும் சுலபம்.

மனைவி, மகன் போன்ற முடிவுள்ள, அழியக்கூடிய பொருளின்மீது நீங்கள் பற்றுக் கொண்டிருந்தால் உங்க ளுடைய மனைவியோ அல்லது மகனோ இறந்து போகும் பொழுது நீங்கள் பரிதவிக்கும் நிலையை அடைகின்றீர்கள். ஆனால் நீங்கள் இறைவனோடு பற்றுக்கொண்டிருந்தால் உங்களுக்கு நிரந்தரமான, முடிவற்ற பேரானந்தமும், அமைதியும் கிட்டுகிறது. ஆகவே ஒரு பக்தன் அழியாத, முடிவற்ற ஏதோ ஒன்றை விழைக்கின்றான்.

அன்பில்லாவிடில் மனிதனுடைய வாழ்க்கை சூன்ய மானதாகும். அன்பின்றி மனிதன் வீணாக வாழ்கின்றான். அன்பே ஜீவாதாரமானது. அது சர்வ வியாபகமாக உள்ளது. அன்பு என்பது ஒரு மாபெரும் சக்தியாகும். அன்பு வாழ்க்கையின் சாரமாகும். அன்பைக் கொடு. அது உனக்குக் கொடுக்கப்படும். இந்த அன்பை சேவை, ஜபம், சத் சங்கம், தியானம் ஆகியவற்றின் மூலமாக விருத்தி செய்.

மனித அன்பு எல்லாம் கபடமானது. இது வெறும் மிருகக் கவர்ச்சியேயாகும். இது காமம். இது சரீர அபிமானமுள்ள சிற்றின்ப அன்பாகும் (Carnal love). இது சுயநலத்தோடு கூடிய அன்பாகும். இது சதா மாறிக் கொண்டே இருக்கக் கூடியது. இது எல்லாம் வெளிவேஷ மும் வெறும் பகட்டுமாகும். கணவன் வேலையில்லாது

இருந்தால் மனைவி அவனை சட்டை செய்வது கிடையாது. அவள் அவன் மீது அக்கினியைக் கக்குகிறாள் (frowns at him). ஏதாவது நாட்பட்ட நோயின் (chronic disease) காரண மாக மனைவியினுடைய அழகு குன்றிவிட்டால் கணவன் அவளை வெறுத்துத் தள்ளுகிறான். நீங்கள் உண்மையான, நிரந்தரமான அன்பை இறைவனிடம் மட்டும் தான் காண முடியும். அவனுடைய அன்பு மாற்றம் என்பதையே அறியாதது.

ஒரு சுயநலக்காரன் அவனுடைய தேகத்தை மட்டும் நேசிக்கிறான். பிறகு அவனுடைய அன்பை அவனுடைய மனைவி, குழந்தைகள், நண்பர்கள் ஆகியோரிடம் விஸ்தரிக்கின்றான். அவன் சிறிது பரிபக்குவமடையும் பொழுது தன்னுடைய ஜாதியாரையும் தனது ஜில்லாவைச் சேர்ந்தவர்களையும் நேசிக்க ஆரம்பிக்கின்றான். பிறகு தன்னுடைய மாகாணத்து மக்களை நேசிக்கின்றான். அவ னுடைய உள்ளம் மேலும் விரிவடைகின்றது. அப்பொழுது அவன் தன்னுடைய தேசத்து மக்களை நேசிக்கின்றான். நாளடைவில் சர்வதேச சகோதரத்துவ உணர்ச்சியை வளர்த்துக் கொள்கிறான். அவன் உலகின் எந்த பகுதியி லுள்ள எந்த மனிதனையும் நேசிக்க ஆரம்பிக்கின்றான்.

பக்திதான் விதை. நம்பிக்கையே வேர். பாகவதர் களுடைய சேவை மழைத்துளி. ஆத்ம சரணாகதி புஷ்பம். இறைவனோடு ஐக்கியமாதல் பழம். இதுதான் பக்தியோக மார்க்கம்.

பக்தி யோகத்தில், கல்வியோ, வேதங்களில் ஆழ்ந்த புலமையோ தேவையில்லை. தேவைப்படுவதெல்லாம் பக்தி மிகுந்த, உண்மையான மனமேயாகும். யார் வேண்டு மானாலும் அவனுடைய நாமத்தைப் பாடலாம் அல்லது ஜபிக்கலாம். துகாராம் ஒரு படிப்பு வாசனையில்லாத விவசாயி. அவரால் அவருடைய கையெழுத்து கூட போட முடியாது. பக்தி, கிருஷ்ண பகவானின் கருணை ஆகியவை மூலமாக அதி அற்புத சாகச ஞானத்தைப்

பெற்றுர். அவருடைய புகழ் பெற்ற கீர்த்தனைகள் (Abhangas) பம்பாய் சர்வகலாசாலை M. A மாணவர்களுக்கு பாட புத்தகங்களாக இருக்கின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூட எழுத்தறிவில்லாதவர்தான். அவர் தக்ஷிணேஸ்வரர் ஆலயத்தில் இருந்து வரும் பொழுது காளிதேவியின் கருணையாலும் அத்வைத குரு ஸ்ரீ ஸ்வாமி தோத்தாபுரி அவர்களுடைய கருணையாலும் தெய்வீக ஞானத்தைப் பெற்றுர். இந்த இரு முனிவர்களின் வாழ்க்கையைக் கூர்ந்து கவனிக்கும் பொழுது ஞான ஊற்ருனது இருதயத்திற்குள்ளேயே இருக்கின்றது என்பதும், யாரும் இதை உண்மையான பக்தியின் மூலம் அடையலாம் என்பதும் தெள்ளத் தெளிவாகிறது. ''நான் பகவான் நாராயணமூர்த்தியையோ, அல்லது சிவபெருமானையோ, அல்லது கிருஷ்ண பகவானையோ வணங்குகின்றேன்.'' இது பக்தி யோகம். "நான் எல்லாவற்றுள்ளும் ஆத்மாவாக இருக்கிறேன்.'' இது ஞான யோகம்.

மனிதர்கள் அவர்களுடைய சமுதாய, குடும்ப உறவுகளிலே அன்பு, பிரியம், பிரேமை, பிரீதி, உவப்பு, உபசாரம், மரியாதை மற்றும் இதர உணர்ச்சிகளையும் அபிவிருத்தி செய்கிருர்கள். இது வாழ்க்கையின் லக்ஷியத்திற்குப் பயன்படாது. ஒருவன் இறைவனிடம் பக்தி செலுத்தும்போதுதான் ஒருவனுடைய வாழ்க்கையின் உண்மையான நோக்கம் பெறப்படுகின்றது. பக்தியானது மேற்கூறிய உணர்ச்சிகளின் நிறைவே (consummation) யாகும்.

உபாசனையானது பிரத்தியாகாரத்தை அப்பியஸிப்பது இல்லை என்று சிலர் கருதுகின்றனர். அவன் இறைவனுடைய பிரேமையில் தன்னை மூழ்கடித்துக் கொள்ள முயற்சிக்கிருன். அவன் அவனுடைய மனத்தை இறைவனுடைய பாத கமலங்களிலாவது அல்லது கவர்ச்சி பொருந்திய திருமுகத்திலாவது பதிய வைக்க முயலுகின்ருன். அதன் பயனுக பிரத்யாகாரம் உணர்வில்லாமலேயே

அதைத் தொடர்ந்து வருகின்றது. ஒரு ராஜயோகி பிரத்தியாகாரத்தை ஆலோசனை பூர்வமாகப் (deliberately) பயிலுகின்றான். ஒரு ஞான யோகி பிரத்தியாகாரத்தைப் பயிலுவதில்லை. ஆனால் எல்லாப் பொருள்களிலும் மறைந்து கிடக்கும் ஆத்மாவோடு தன்னை ஒப்பிட்டுக்கொள்ள முயற்சிக்கின்றான். அவன் வேதாந்த நிதித்யாசனத்தின் சக்தி மூலம் பொருள்களுக்குள்ளே இருக்கும் ஆத்மாவை மறைத்துக்கொண்டிருக்கும் திரையை நீக்க முயற்சிக்கின்றான். அவன் நாமங்களையும், ரூபங்களையும், இல்லாததாக்கித் தன்னை எங்கும் நீக்கமற நிறைந்தும் மறைந்துமிருக்கின்ற உணர்வோடு ஒப்பிட்டுக் கொள்கின்றான்.

" இந்த உலகம் ஆனந்தத்திலிருந்து வந்திருக்கிறது. இது ஆனந்தத்தில் நிலை பெற்று இருந்து ஆனந்தத்திலேயே கரைந்து விடுகிறது " என்று ஒரு முனிவர் சொல்கின்றார். ஒரு பக்தன் சொல்லுகின்றான் : " இந்த உலகம் அன்பிலிருந்து வெளிவந்திருக்கிறது. அன்பிலேயே கரைந்து விடுகிறது " என்று. ஆனந்தத்தில் அன்பு மறைந்திருக்கிறது. முனிவர் தன்னுடைய சொந்த ஆத்மாவை நேசிக்கிறார். அவர் அவருடைய ஆத்மாவிடம் பக்தி செலுத்துகின்றார். அன்பில் ஆனந்தம் மறைந்திருக்கிறது. பக்தன் அவனுடைய அன்பிற்குரியவனை காதலிக்கின்றான். ஆனந்தத்தால் கூத்தாடுகின்றான்.

தத்துவார்த்த ஏணியிலே, த்வைதமும், விசிஷ்டாத்வைதமும் வெவ்வேறு படிகளாகும். கடைசி உச்சி தான் அத்வைதம். த்வைதம், விசிஷ்டாத்வைதம் ஆகியவைகளின் உணர்வும், அவர்களுடைய நிலையில் முற்றிலும் உண்மையே. மேற்கொண்டும் சற்று அதிகமான சாதனையும், யூகமும் அவர்களை தூய்மையான அத்வைத உணர்விலே கொண்டு நிறுத்தும்.

பக்தி யோகத்திலே மூன்று பொருள்கள் இருக்கின்றன. அவைகளாவன : காதலன், காதலி, காதல்.

காதலன் எப்பொழுது தான் காதலியோடு அனன்னியமாக (identical) இருப்பதாக அறிகின்றுனே அப்பொழுது பக்திக்கு முடிவு ஏற்பட்டு விடுகிறது. ஞானம் உதிக்கிறது. த்வைதம் மறைகின்றது. இப்பொழுது யார், யாரைக் காதலிப்பது ?

அத்வைத வேதாந்தியின் கொள்கையின்படி பக்தி என்பது ''நானே அவன்'' நானே பிரம்மன் என்ற சூத்திரத்தை இடை விடாது எண்ணிக்கொண்டிருத்தலே யாகும்.

ஒரு பக்தன் சொல்கிறுன்; ''இறைவனைப் பற்றிய ஞானத்தை முதலில் பெறு. பிறகு தான் உனக்கு அவனிடம் பிரேமை, அன்பு அல்லது பக்தி ஏற்படும்'' என்று. ஒரு ஞானி இதற்கு மாருகக் கூறுகின்றுர். ஞானம் என்பது பக்தியின் பலனுகும் என்று.

பூரண ஞானம் என்பது எல்லாம் அன்பே. பூரண அன்பு என்பது எல்லாம் ஞானமே.

ஆகாரம் புசிக்கப்படுவதானது எப்படி துஷ்டியையும் (திருப்தி) புஷ்டியையும் (உடல் வலிமை) கொடுத்து பசியையும் தணிக்கின்றதோ அதே போல பக்தியானது வைராக்கியத்தையும், ஞானத்தையும் ஒரே சமயத்தில் அளிக்க வல்லது.

தீயானது எப்படி மரத்தை அழிக்கின்றதோ அதே போல பக்தியானது ஆணவத்தையும், வாசனைகளையும் அழிக்கிறது. பக்தர்கள் முக்தியைப் பற்றிக்கூட கவலைப் படுவதில்லை. அவர்கள் எப்போதும் இறைவனைப் பற்றியே ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்வதையும், பாகவதர்களுக்கு சேவை செய்வதையும், ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் தொண்டு செய்வதையும் அவனுடைய நாமங்களையும், புகழையும் பாடுவதையும், அவனுக்காக சகலத்தையும் தியாகம் செய்வதையும், அவனுக்கு சாஷ்டாங்க

மாக நமஸ்கரிப்பதையும், அவனையே தங்களுடைய மேலான லக்ஷியமாகக் கொள்வதையும், அவனிடம் நிபந்தனையற்ற, பரிபூரண ஆத்ம சரணாகதி அடைவதையும் தான் மேலாக விரும்புகின்றனர். முக்தி அவர்களிடம் கேளாமலேயே வருகிறது. முக்தி அவர்களுடைய பணிப் பெண் போல. இறைவனுடைய விபூதிகளும், சித்திகளும் ரித்திகளும் அவர்கள் அவற்றை விரும்பாவிடினும் அவர்களுடையவைகளே.

இறைவனிடம் நேர்மையான பக்தியும், பாகவதர்களுடைய சேர்க்கையும், மேலான பேரானந்தத்தை அடைய வழிகளாகும்.

பூஜை என்பது இறைவனை வழிபடுதலாகும். இது பக்தனை இறைவனுக்கு அருகாமையில் அமரவோ அல்லது அவனோடு ஐக்கியமாகவோ உதவுகின்ற உபாசனையாகும். இது இருதயத்தைத் தூய்மையாக்கி மனதை ஒரு நிலையில் உறுதிப்படுத்துகிறது. இது மனத்தை சுத்த பாவனையாலும் (Bhav) இறைவனுக்கான பிரேமையாலும் நிரப்புகிறது. இது நாளடைவில் படிப்படியாக மனிதனை தெய்வீக ஜீவனாக மாற்றியமைக்கிறது.

கிருஷ்ண பரமாத்மாவின் நாமத்திலே தீவிரமான நம்பிக்கை கொள். (பகவான் நாமப் பிரேமை) உன்னுடைய எல்லாத் துன்பங்களுக்கும் முடிவேற்பட்டுவிடும். திரௌபதி பெருந்துயரில் இருந்த பொழுது அவனுடைய நாமத்திலே அடைக்கலம் புகுந்தாள். பகவான் அவளைக் காப்பாற்றினான்.

ஹரியினிடத்தில் நம்பிக்கை அல்லது பக்தியே விடுதலையையளிக்க வல்லது. உன்னுடைய இருதயத்திற்குள்ளே ஒரு பொன்னம்பலத்தை (Golden temple) நிர்மாணி. கிருஷ்ண பரமாத்மா உன்னுடைய மனப்பூர்வமான பக்தியைத்தான் வேண்டுகிறார்.

இறைவன் அன்புமயமாக இருக்கிறார். அன்பு ரக்ஷிக்கிறது, ஐக்கியப்படுத்துகிறது, உயர்த்துகிறது. அன்பிற்கும் அருளும், ஆனந்தத்திற்கு கீதமும் பதிலாக இருக்கின்றன. அன்பைவிட மேலான நற்குணம் கிடையாது. அன்பை விட உயர்ந்த செல்வம் வேறொன்றும் இல்லை. அன்பைவிட உயர்ந்த மதம் வேறு இல்லை, ஏனெனில் அன்பே சிவம், சிவமே அன்பு, அன்பு தூய்மைப்படுத்துகிறது, அன்பு வேற்றுருவாக்குகிறது, அன்பு காக்குகிறது, அன்பு சாதுவாக்குகிறது. ஆகவே எனதன்பார்ந்த பிரேம், உன்னுடைய இருதயத்திலே உள்ள அன்புச் சுடரைத் தூண்டிவிடு.

அன்பை விடப் பெரிய சக்தி வேறொன்றுமில்லை. உருவமற்ற பிரம்மன் அன்பின் காரணமாக அவனுடைய பக்தர்களை மகிழ்விப்பதற்காக நான்கு கரங்களுடன் கூடிய ஹரியாக உருவெடுக்கிறான். இறைவன் தன்னுடைய கைகளிலே அன்னத்தையும் தண்ணீரையும் எடுத்துக் கொண்டு அவனுடைய பக்தர்களைத் தேடிக் கொண்டு காடுகளுக்கும் ஓடுகின்றான்.

பகவான் புத்தர், பகவான் இயேசுநாதர், ஏகநாதர் மற்றும் பல முனிவர்கள் வேதாகமங்களின் ரகசியங்களை மனித வர்க்கத்திற்கு எடுத்து உபதேசிக்கத் தூண்டியது அன்பே தான். அன்பு என்பது பக்தனுடைய கையிலுள்ள ஒரு மந்திரக் கோலாகும். அவன் அதை ஒரு கம்பீரமான முறையில் பயன்படுத்தி அகில உலகத்தையும் அவனுடைய ஆட்சிக்குட்படுத்தி விடுகின்றான். தூய்மையான அன்பு படைத்தவன் எவனோ அவனே இந்த மூவுலகங்களுக்கும் உண்மையான சக்ரவர்த்தியாவான்.

பிரேமை என்பது இறைவனிடத்துச் செலுத்தப்படுகின்ற தீவிரமான, தன்னலமற்ற, தூய்மையான அன்பாகும். பிரேமையானது பக்தனை இறைவனுக்கு முன்பு நேருக்கு நேராகக் கொண்டு போய் நிறுத்துகிறது. பக்தி

பிரேமையில் போய் முடிகிறது. பிரேமை என்பது தேவாமிர்தமாகும். பிரேமையானது வலிகளையும், துன்பங்களையும் அழித்து ஒருவனை அமரனாக பேரானந்த சொரூபியாக, அமைதி வடிவாகச் செய்கின்றது. பிரேமையினுடைய தன்மையை வர்ணிப்பதென்பது கடினம். அதை நீங்களே அனுபவித்து உணர்தல் வேண்டும். அதை ஜபம், ஸ்மரணை, கீர்த்தனை, சத்சங்கம், பிரார்த்தனை, பக்தர்களுக்குச் சேவை செய்தல், ராமாயணம், பாகவதம் போன்ற நூல்களை வாசித்தல் ஆகியவற்றின் மூலமாக பண் படுத்துங்கள்.

மதத்திலே அன்பு காட்டுவது என்பது ஒரு கலை (Science). இது ஒரு பக்தன் தன்னுடைய காதலியின் மீது மனதைப் பொங்கி வழியும்படி செய்தலாகும். உள்ளத்திலுள்ள அழுக்குகளும், தடுமாற்றங்களும் நீக்கப்படும்பொழுது இது ஒரு பக்தனிடம் ஏற்படுகின்ற இயற்கையான விளைவாகும். அன்பிலே ஆனந்தம் இருக்கிறது. அன்பு என்பது மனிதனை தெய்வீகமாக்குகின்ற ஒரு மாயமான தெய்விக சக்தியாகும். இறைவனோடு உண்மையான ஐக்கியத்தை ஏற்படுத்துவது அன்பே ஆகும்.

அன்பு செலுத்த வேண்டும் என்கின்ற மனப்பாங்கு இயற்கையானது. இது எல்லாருடைய உள்ளத்திலும் பதிய வைக்கப்பட்டிருக்கிறது. அன்பு செலுத்த வேண்டுமென்கின்ற இயற்கையான மனோபாவமும், அன்பு காட்டப்படும் பொழுது அதற்கு இணங்காத தன்மையும் உடைய எப்பேர்ப்பட்ட ஒரு மனிதனும் உண்மையில் கிடையாது. இந்த இயற்கையான அன்புணர்வை ஒரு கணிசமான அளவு நீங்கள் அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டியுளது. நீங்கள் எல்லாவிதமான சுயநலத்தையும் அழிப்பதன் மூலம் அதைத் தூய்மைப் படுத்த வேண்டும் நீங்கள் அதை சர்வ வியாபகமாகச் செய்ய வேண்டும்.

இன்றைய உலகின் தேவை அன்புச் செய்தியேயாகும். அவனுடைய உள்ளத்திலே உள்ள அன்புச்

சுடரைத் தூண்டி விடவும். எல்லோரையும் நேசி. உன்னுடைய அன்புப் பிடியிலே எல்லா ஜீவராசிகளையும் சேர்த்து அணைத்துக் கொள். தூய்மையான அன்பின் மூலமாகத்தான் தேசங்களை ஐக்கியப் படுத்த முடியும். பரஸ்பர அன்பின் மூலமாகத்தான் உலக யுத்தங்களை ஒரு முடிவிற்குக் கொண்டுவர முடியும். சர்வ தேச சங்கத்தினால் ( League of Nations ) ஒன்றும் அதிகம் சாதித்து விட முடியாது. அன்பு என்பது எல்லோருடைய உள்ளங்களையும் ஒன்று சேர்க்கின்ற ஒரு அதிசயமான தெய்வீகப் பசையாகும். இது மிக உயர்ந்த வலிமையுடன் கூடிய ஒரு தெய்வீக மாந்திரீக நிவாரணியாகும். செய்கின்ற ஒவ்வொரு காரியத்தையும் தூய்மையான அன்பால் நிரப்பு. கபடம், பேராசை, குறுகிய மனப்பான்மை, சுயநலம் ஆகியவற்றைக் கொன்றுவிடு. விஷ வாயுவைப் பிரயோகித்து மற்றவர்களுடைய உயிரைக் கொல்வது கொடுமையிலும் கொடுமையாகும். இது ஒரு தலையாய பாவமாகும். சோதனைச் சாலையிலே இந்த வாயுவைத் தயாரிக்கும் விஞ்ஞானி இறைவனால் தண்டிக்கப்படுவான். நீதி வழங்கும் அந்த நாளை மறந்துவிட வேண்டாம். அதிகாரம், ராஜ்யங்கள், செல்வம் ஆகியவற்றைத் துரத்திச் செல்லும் ஏ - மனிதர்களே, அப்பொழுது இறைவனிடம் என்ன சொல்லப் போகின்றீர்கள் ? தூய்மையான மன சாட்சியும் நேசமான இருதயத்தையும் உடையவர்களாக இருங்கள். நீங்கள் இறைவனுடைய சாம்ராஜ்யத்திற்குள்ளே நுழைவீர்கள். சமரச அன்பை அபிவிருத்தி செய். இது நீ எல்லோருடனும், எல்லா ஜீவராசிகளுடன் அமைதியாக வாழ உனக்கு உதவி புரியும். அன்பும் அமைதியும் பிரிக்க முடியாதவைகள். எங்கு அன்பு இருக்கிறதோ அங்கு அமைதியுண்டு. எங்கு அமைதி இருக்கிறதோ அங்கு அன்பு உண்டு.

இறைவனுடைய நாமத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே கண்ணீரை அள்ளிச் சொரியும் உள்ளத்தை விருத்தி செய். அன்பாகிய அலைகளை உன்னுடைய இரு

தயத்திலே இடை விடாது எழச் செய்து கொண்டிரு. தெய்வீக அரவணைப்பின் கதகதப்பை உணர். தெய்வீக அன்பாகிய வெயிலிலே குளிர் காய். சாஸ்வதத்தின் பேரானந்தத்தைச் சுவைத்துப் பார். தெய்வீக அன்பாகிய அமிர்தத்தை ஆழ்ந்து குடித்துப் பார்.

உனக்கு உண்மையாக கடவுள் வேண்டுமா? நீ உண்மையாகவே அவனுடைய தரிசனத்திற்காக ஏங்கு கிருயா? உனக்கு உண்மையான ஆன்மீகப் பசி இருக் கிறதா? நீ பக்தியைப் பற்றி சிலிர்க்க வைக்கும் சொற் பெருக்குகள் ஆற்றலாம் பக்தி யோகத்தைப் பற்றி நீ பல பெரும் புத்தகங்கள் எழுதிக் குவிக்கலாம். இருந்தாலும் உன்னிடம் எள்ளளவும் பக்தி இல்லாமலிருக்கலாம். இறை வனுடைய தரிசனத்திற்காக எவனொருவன் ஏங்குகின் ருனே அவன் அன்பை வளர்த்து வருவான். அவனிடம் இறைவன் தன்னைக் காட்டிக் கொள்வான். கடவுளானவர் ஒரு தேவை, விநியோகப் பிரச்சினையாக இருக்கிருர். ( God is a question of supply and demand). கடவுளுக்கான கிராக்கி (demand) எங்கு மனப்பூர்வமாக இருக்கிறதோ அங்கு சரக்கும் (supply) உடனே வந்து விடும்.

பக்தி மார்க்கத்திலே ஐந்து பொருள்கள் இன்றியமை யாதவைகளாகும். (1) பக்தி நிஷ்காம்ய ரகத்தைச் சார்ந்ததாக இருக்க வேண்டும் (2) இது அவ்வியபி சாரினியாகவும் (மாறுபடாததாக) இருத்தல் வேண்டும். (3) இது சாதத் (தொடர்ச்சியாகவும்)தாக இருக்க வேண் டும். (4) சாதகனிடம் பூரணமான சதாச்சாரம் (நன் னடத்தை) இருக்க வேண்டும் (5) சாதகன் மிகவும் தீவிரமாகவும் (serious) பயிற்சிகளைச் செய்வதில் மனப் பூர்வமாகவும் இருக்க வேண்டும. அப்பொழுது அனுபூதி சீக்கிரம் வருகிறது.

வரைபடமோ, அல்லது திசை காட்டும் கருவியோ இல்லாமல் சமுத்திரத்திலே ஒரு கப்பலை ஓட்டுவது என்பது

மிகக் கடினம். இதேபோல ஒரு ஒழுங்கு படுத்தப்பட்ட வாழ்க்கையும் நன்னடத்தையும், இறைவனிடம் பக்தியும் இல்லாமல் இந்த சம்சாரமாகிய சாகரத்திலே பத்திரமாகப் பிரயாணம் செய்வது என்பது மிகவும் கடினம்.

அன்பு மொழி என்பது கண்ணீரின் மொழியேயாகும். இறைவனுடைய பாத கமலங்களை உன்னுடைய பச்சாத் தாபம், விரஹம், பிரேமை ஆகிய கண்ணீரால் இடை யருது உன்னுடைய உள்ளக் கோவிலில் நீராட்டிக் கொண் டிரு. இப்பொழுது நீ உன்னுடைய காதலியைச் சந்திப்பாய் இப்பொழுது நீ இறைவனோடு ஐக்கியமாகும் போது ஏற்படுகின்ற பேரானந்தத்தை அனுபவிப்பாய்.

கால் வினாடி கூட, இமைப்பொழுதுகூட உன்னுடைய உள்ளம் இறைவனுடைய திருவடித் தாமரையை விட்டு ஓடாமல் இருந்தால், அதாவது உன்னுடைய பக்தி எக் காலத்திலும் தைல தாரையைப் போல் இருந்தால் இந்த மூவுலகங்களின் செல்வமனைத்தும் உனக்குச் சொந்தமாகி விடும் இதற்காக இறைவன் நிச்சயமாக ஒரு வாக்குறுதி யளிக்கின்றான். அவன் அப்பேறபட்ட பக்தன். செல்லு மிடமெல்லாம் பின் தொடர்ந்து செல்கின்றான். அந்த பக்த னுடைய பாத தூளியை இறைவன் தன்னுடைய நெற்றி யில் திலகமாக வைத்துக் கொள்கிறான்.

சுதாமர் அவருடைய தோழனான கண்ணபிரானைப் பார்க்க வந்தார். அப்போழுது ராதையோடு பேசிக் கொண்டிருந்தார். சுதாமர் கந்தை உடுத்தியிருந்த கார ணத்தால் அரண்மனைக்குள் நுழையத் தயங்கிக் கொண் டிருந்தார். வாயிற்காப்போன் கண்ணபிரானிடம் வந்து, ''தேவே, சுதாமன் என்ற பெயரையுடைய ஒரு ஏழை பிராமணர் கந்தலாடையுடன் வாயிலில் காத்துக்கொண் டிருக்கிறார்'' என்று கூறினான். அந்த காவலாளியை அதற்கு மேல் பேச விடவில்லை. சுதாமர் என்ற வார்த்தை யைக் கேட்டதுதான் தாமதம். இருந்த இடத்தை விட்டு வெறுங்காலுடன், ''எனதன்பார்ந்த சுதாமா, எனது

இனிய நண்பா'' என்று கதறிக்கொண்டு ஓடினார். ராதை சற்று கலக்கமடைந்தாள். ஏனென்றால் கண்ணபிரான் திடீரென்று அவளிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் அறையை விட்டுச் சென்று விட்டார். சில நிமிஷ நேரம் கழித்து கண்ணன் சுதாமரோடு அரண்மனைக்குள் நுழைந்தார். ராதை வருத்தமுற்ற நிலையில் இருப்பதைக் கவனித்தார். அவளுக்குக் காரணம் என்ன என்பது தெரியும். அவர் ராதையைப் பார்த்து, "அன்புள்ள ராதே, என்னை மன்னித்துவிடு. நான் என்னுடைய பக்தர்களின் அடிமை. நான் அவர்களை என்னுடைய சொந்த ஆத்மாவை விட அதிகம் நேசிக்கிறேன்'' என்று கூறினார். கண்ணன் சுதாமரைத் தன்னுடைய சொந்த ஆசனத்தில் அமர்த்தி, சுதாமர், தான் கொண்டுவந்திருந்த அற்பமான அன்பளிப் பாகிய அவலைக் கொடுக்கக் கூச்சப்பட்டுக்கொண்டிருந்த காரணத்தால் கண்ணனே அந்த அவல் மூட்டையைப் பிடுங்கிக் கொண்டார். பரந்தாமன் அந்த அவலைத் தன்னுடைய வாயிலே போட்டு சுவைத்துக் கொண்டே பரமானந்தக் களிப்பெய்தியவராய் ராதையைப் பார்த்து, "ஓ ராதே, நான் இதற்கு முன்பு ஒருபொழுதும் இதுபோன்ற மதுரமான ஒரு பொருளைச் சுவைத்ததே கிடையாது'' என்று கூறினார்.

நீ ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ஜபமோ, தியானமோ செய்வதாகத் தீர்மானித்துக் கொண்டால், நீ அதை மெதுவாக பக்தியுடன் செய்தல் வேண்டும். எப்படி ஒரு கட்டிட குத்தகைக்காரன் (Contractor) உதவாக்கரை சாமான்களைப் போட்டு வேலையைச் சீக்கிரமாக முடித்து அதன் சொந்தக்காரனை ஏமாற்றுகிறானோ அது போல நீ வேறு வேலைகளை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு சஞ்சலமான மனத்துடன் அவசர அவசரமாக விரட்டக் கூடாது. நீ கடவுளை ஏமாற்ற முடியாது. நீ உன்னையே ஏமாற்றிக் கொள்வாய். ஜபம், தியானம் ஆகியவற்றின் முழுப் பயனையும் உன்னால் அடைய முடியாது.

இடைவிடாத இறை வழிபாட்டிற்கு நிஷ்டை என்று பெயர். பக்தன் இறைவனிடம் செலுத்துகின்ற பக்தியிலே நன்ருகத் தன்னை ஸ்திரப்படுத்திக் கொள்கின்ருன். பக்தன் அவனுடைய பக்தியிலே அபிவிருத்தி அடையும்பொழுதும் அதன் விளைவாக ஆழ்ந்த தியானத்திற்குச் செல்லும்பொழுதும் ஆசக்தி (Asakti) அல்லது இறைப்பற்றைப் பெறுகின்ருன்.

இறைவனுடைய நாமங்களைப் பாடு. அவனுடைய குணாதிசயங்களைப் பாடு. அவனை ஞாபகப் படுத்திக் கொண்டிரு. அவன் குணாதிசயங்களைத் தியானம் செய். இதுதான் பக்தி யோகத்தின் சாரமாகும்.

உனக்கு இறைவனிடத்திலே பரிபூரண பிரேமை ஏற்பட்டுவிட்டால், அகில உலகமும் உன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும்.

## 2. பக்தியின் பல ரகங்கள்

பக்தன் சிறிது நேரம் இறைவனை நேசித்து விட்டு பிறகு அவனுடைய மனைவி, மகன், பணம், வீடு, ஆடு, மாடுகள், சொத்து முதலியவைகளையும் நேசித்தால் அது வியபசாரிணி பக்தியாகும். இந்த அன்பு பிரிக்கப்படுகிறது. மனத்தினுடைய ஒரு பகுதி இறைவனுக்கு அளிக்கப்படுகிறது. மிகுதியுள்ள பகுதி குடும்பத்திற்கும், சொத்து சுகங்களுக்கும் கொடுக்கப்படுகிறது.

அவ்வியபசாரிணி பக்தி என்பது எது? இது பகுக்கப்படாத அன்பாகும். பக்தன் இறைவனையன்றி வேறு எதையும் நேசிப்பதில்லை. அவனுடைய உள்ளம் எப்பொழுதும் இறைவனுடைய பாத கமலங்களிலேயே பதிந்திருக்கும். சித்தம், மனம், ஆத்மா ஆகியவைகள் இறைவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டு விடுகின்றன. இது அவ்வியபசாரிணி பக்தியாகும்.

நீங்கள் செல்வம், பிள்ளை அல்லது நோய் நிவாரணம் ஆகியவை பெறுவதற்காக பக்தி செய்தால் அது சகாம்ய பக்தி அல்லது சஹேதுக பக்தி அல்லது கௌண பக்தி (இரண்டாந்தரமான) யாகும்.

நீங்கள் இறைவனிடமிருந்து அவனுடைய பிரேமையைத் தவிர வேறெதையும் விரும்பாவிடில் அது நிஷ்காம்ய பக்தி அல்லது முக்கிய பக்தியாகும்.

ஒரு பக்தனுக்கு ஹரிதேவன், சிவபெருமான், தேவி, ராமன், கிருஷ்ணன் ஆகிய எல்லோரிடமும் பக்தி பூண்டு ஹரியே, சிவன், ராமன், தேவி அல்லது கிருஷ்ணன் என்று எண்ணினால் இது சமரச பக்தியாகும். அவனிடம் சமநோக்கு இருக்கிறது. இதுவும் பக்தியிலே உயர்ந்த நிலையாகும். அவன் ராமனுக்கும், கிருஷ்ணனுக்கும், சிவனுக்கும், ஹரிக்கும், கிருஷ்ணனுக்கும் தேவிக்கும் இடையே எந்த வித்தியாசமும் பாராட்டுவதில்லை. அவன் ராதையும், சீதையும், துர்க்கையும், கிருஷ்ண பகவான், ராமன், சிவன் ஆகியோருடைய பிரிக்க முடியாத சக்திகள் என்பதை அறியவும் உணரவும் செய்கின்றான்.

உன்னுடைய மனைவி இளமையோடும் கட்டழகோடும் இருக்கும் பொழுது நீ அவளுடைய சுருண்ட கூந்தலையும் ரோஜா மலர் போன்ற கன்னங்களையும், அழகான மூக்கையும், மினு மினுப்பான தோலையும், முத்துப் பற்களையும் புகழ்கின்றாய். தீராத நோய் காரணமாக அவள் அவளுடைய அழகை இழந்து விட்டால் நீ அவள் பக்கம் கவரப்படுவதில்லை. நீ இரண்டாவது திருமணம் செய்து கொள்கின்றாய். நீ உன்னுடைய மனைவியை ஆத்ம பாவத்தோடு நேசித்திருப்பாயேயானால் உன்னிடமுள்ள ஆத்மாவும் அவளிடமுள்ள ஆத்மாவும் இரண்டும் ஒன்றுதான் என்கின்ற சற்று விரிந்த மனோபக்குவம் இருந்திருந்தால் அவளிடம் ஏற்பட்ட உன்னுடைய அன்பு தூய்மையானதாகவும், தன்னலமற்றதாகவும் நிரந்தரமானதாகவும்,

அழியாததாகவும், மாருததாகவும் இருந்திருக்கும். நீ எப்படி பழைய கற்கண்டை மேலும் மேலும் விரும்புகிருயோ அதேபோல உன்னுடைய மனைவிக்கு வயதாகி விட்டாலும் கூட, உனக்கு ஞானத்தின் மூலமாக ஆத்ம பாவம் ஏற்பட்டிருக்கின்ற காரணத்தால் நீ அவளை மேலும் நேசிக்க வேண்டும். ஞானமானது பிரேமையைத் தீவிரப்படுத்தி அதைத் தூய்மையானதாக ஆக்கும். அவ்வளவே.

ஆரம்பத்தில் விக்கிரகத்தை வழிபடும் சாதகன் இறைவனை எங்கும் கண்டு பர பக்தியை விருத்தி செய்கிருன். அவன் பர பக்தியிலிருந்து ராகாத்மிக பக்தி அல்லது பிரேம பக்திக்குச் செல்லுகின்ருன். அவன் இந்த உலகமனைத்தையும் இறைவனுகக் காண்கின்ருன். நல்லது, கெட்டது, சரியானது, தவருனது, துஷ்டன் முதலிய எண்ணங்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன அவன் இறைவனை ஒரு கொடியவனிடத்திலும், எறும்பு, நாய், மரம், கொள்ளைக்காரன், நாகப் பாம்பு, தேள், மரக்கட்டை, கல், சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், நெருப்பு, தண்ணீர், பூமி, முதலிய எல்லாப் பொருள்களிலும் காண்கின்ருன். அவனுடைய திருஷ்டி அல்லது அனுபவம் வர்ணிக்க வொண்ணுதது. இந்த பூவுலகிலே கண்கண்ட தெய்வங்களாக விளங்குகின்றவர்களும், இந்தச் சம்சாரச் சேற்றிலிருந்து மற்றவர்களை மேலே தூக்கி விட்டு அவர்களை மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்றுகின்றவர்களுமாகிய அவர்களின் புகழ் வாழ்க !

பகவத் தர்மம் என்பது என்ன? எது உன்னை இறைவனிடம் அழைத்துச் செல்கின்றதோ, எது உன்னுடைய வாசனைகளையும், அகந்தையையும், விருப்பு வெறுப்புக்களையும் அழித்தொழிக்கின்றதோ அது பகவத் தர்மமாகும் எது உன்னை பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுவிக்கின்றதோ, எது உன்னை பயமற்றவனுகவும், ஆசையற்றவனுகவும், "நான"ற்றவனுகவும் செய்கின்றதோ அது பகவத் தர்மம். எது உன்னுடைய மனத்தை கிருஷ்ண பரமாத்

விடம் செலுத்தப்படும் அன்பால் நிரப்புகின்றதோ, எது உன்னை அந்த மேலான ஒப்பற்ற தத்துவமாகிய கண்ணனை எங்கும் பார்க்க உதவுகின்றதோ அது பகவத் தர்மமாகும்.

எவனொருவன் நாராயணனை மட்டும் எங்கும் காண்கின்றானோ, எல்லாப் பொருள்களையும் ஒன்றாகக் குறைத்துவிட்டானோ, எல்லாப் பொருள்களையும் நாராயணனிடத்தில் காண்கின்றானோ, இறைவனுடைய பிரசன்னத்தை எங்கும் உணர்கின்றானோ, ஒருமையுணர்வையுடையவனாயிருக்கின்றானோ, எல்லா வேற்றுமைகளுக்கும் பின்னால் இருக்கின்ற ஒற்றுமைக்குள்ளே பார்ப்பதன் மூலம் எல்லா வேற்றுமைகளையும் உருக்கிவிட்டிருக்கின்றானோ, அவன் நிச்சயமாகப் பூரணத்துவத்தை அடைந்துவிட்டவனாவான். அவன் பரிபூரண அமைதியையும் பேரானந்தத்தையும் அனுபவிக்கின்றான். அவன் ஒரு பரிபூரண சித்தனாவான். அவன் ஒரு பரிபூர்ண ஜீவன் முக்தனாவான்.

மரங்கள், மலர்கள், நெருப்பு, நிலம், நீர், ஆகாயம், சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மிருகங்கள், பறவைகள், மலைகள், நதிகள், சமுத்திரங்கள், மனிதவர்க்கங்கள், ஆகியவைகள் எல்லாம் இறைவனுடைய உடலை அமைக்கின்றன. நீ அவைகள் அனைத்தையும் வேறுபாடின்றி வணங்க வேண்டும். நீ அவற்றை இறைவனாகவே கருத வேண்டும். அப்பொழுதுதான் உனக்கு சமநோக்கும், தேய்வீக அன்பும் ஏற்படும். அப்பொழுதுதான் நீ அமைதியைக் காண முடியும். அப்பொழுதுதான் நீ இப்பூவுலகில் சொர்க்கத்தைக் காண்பாய். "ஸ்ரீ சீதாராமன் எங்கும் காண்கின்றான். இந்த உலகம் சீதாராமனால் நிரம்பியிருக்கிறது. ஆகவே ஒவ்வொரு பொருளையும் கூப்பிய கரங்களோடு வணங்குகின்றேன்" என்று ஸ்ரீ துளசிதாஸர் கூறுகின்றார். இது விராட் வழிபாடு ஆகும்.

பிரகலாதன் தன்னுடைய சொந்த ஆத்மாவையே ஹரியாக தியானித்தான். இது அபேத பக்தியாகும். இது பக்தியிலே உயர்ந்த நிலையாகும்.

## 3. பக்தியிலே பாவனை (Bhav)

பக்தி யோகத்திலே ஐந்து விதமான பாவங்கள் (மனோ நிலைகள்) இருக்கின்றன. அவைகளாவன : சாந்த பாவம், மதுர பாவம், வாத்ஸல்ய பாவம், தாஸ்ய பாவம், சக்ய பாவம் என்பன. மதுர பாவம் என்பது காந்த பாவம் என்றும் அழைக்கப்படும். சாக்ய பாவமானது மதுர பாவத்தின் ரகத்தில் வந்து விடுகிறது. உன்னுடைய போக்கிற்குத் தக்க எந்த பாவத்தை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொண்டு பக்தியை உச்ச அளவிற்கு அபிவிருத்தி செய்.

சந்நியாசி பக்தர்களுக்கு சாந்த பாவம் இருக்கிறது. சாந்த பாவ ரகத்தைச் சார்ந்த பக்தன் எளிதில் மனக் கிளர்ச்சி யடைபவனாக இருக்க மாட்டான். அவன் அதிக உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் காட்ட மாட்டான். அவனால் ஆடவோ, கதறவோ முடியாது. இருந்த போதிலும் அவனுடைய உள்ளமானது தீவிரமான பக்தியினால் நிரம்பியிருக்கிறது. ஸ்ரீ அரவிந்த மகாராஜ் அவர்கள் இந்த ரகத்தை விரும்புகின்றார். ஆடுதலும், கதறலும் ஒருவிதக் குறைபாடு என்று அவர் கதறுகின்றார்.

மதுர பாவத்திலே பக்தன் காதலன், காதலி மனப்பான்மையை ஏற்படுத்திக் கொள்கிறான். அவன் தன்னை ராமன் அல்லது கண்ணனுடைய மனைவியாக பாவித்துக் கொள்கின்றான். முகமதிய ஸூபிகள் (Sufis) கூட இந்த மனோ பாவத்தைத்தான் உடையவர்களாக இருக்கின்றனர். பிருந்தாவனத்திலும், வடமதுரையிலும், நதியாடிலும் மதுர பாவத்துடன் கூடிய பக்தர்களை ஏராளமாகக் காணலாம். அவர்கள் பெண்களைப் போல உடை உடுத்திக் கொண்டு பெண்களைப் போலவே பேசவும், நடந்து கொள்ளவும் செய்கிறார்கள். அவர்கள் மூர்ச்சையடையும் நிலை வரையிலும் ஆடி பிறகு மிகுந்த களைப்புற்று கீழே விழுந்து விடுகின்றனர்.

சகி பாவத்திலே பக்தன் தன்னை சீதை அல்லது ராதையினுடைய சகி அல்லது தோழியாக பாவித்துக் கொள்கின்ருன்.

வாத்ஸல்ய பாவத்திலே பக்தன் கண்ணபிரானைத் தன்னுடைய மகனுக, ஒரு பத்து வயது பாலகனுக எண்ணிக் கொள்கின்ருன். இந்த பாவத்தின் கவர்ச்சி மிக்க அம்சம் என்னவென்ருல் பக்தன் கண்ணனுடைய தந்தையாக இருக்கின்ற காரணத்தால் அவன் எல்லாவித மான பயங்களையும் ஒழித்து விடுகின்ருன். அவன் தன்னுடைய சிறு பாலகனிடமிருந்து எதையும் எதிர்பார்க்க முடியாத காரணத்தால் அவன் எல்லாவிதமான சுயநல எண்ணங்களையும் அழித்து விடுகிருன். வல்லபாச்சாரியாரைப் பின்பற்றுகிறவர்கள் வாத்ஸல்ய பாவத்தைக் கடைப்பிடிக்கின்றனர்.

தாஸ்ய பாவத்திலே, பக்தன் தன்னை தாஸன் அல்லது வேலைக்காரனுகவும் கண்ணபிரானை அல்லது ராம பிரானை எஜமானனுகவும் எண்ணுகின்ருன். ஸ்ரீ ஹனுமானிடத்திலே இந்த பாவம் இருந்தது. அயோத்தியில் பெரும்பான்மையோரிடத்தில் இந்த பாவம் காணப்படுகிறது. அவர்கள் தங்களுடைய பெயர்களை ராம்தாஸ், சீதாராம்தாஸ் முதலியவைகளைப் போல வைத்துக் கொள்கின்றனர்.

சக்ய பாவத்திலே, பக்தன் கண்ணபிரானைத் தனது தோழனுகக் கொள்கின்ருன். இந்த பாவத்திற்கு தூய்மையும், தைரியமும், யூகமும் வீரமும் தேவைப்படுகிறது. சாதாரண ஜனங்கள் இந்த பாவத்தைக் கைக்கொள்வது கடினம். ஆனல் பக்தி அபிவிருத்தியடைந்து பக்குவமடையும் பொழுது இந்த பாவம் தானுகவே வந்துவிடும். அர்ஜுனனிடம் இந்த பாவம் இருந்தது. இந்த பாவத்திலே, வழிபடுகிறவன், வழிபடப்படும் பொருள் இரண்டிற்குமிடையேயும் சமத்துவம் இருக்கின்றது. சக்யபாவமானது வேதாந்த தியானத்திலே ஒரு மிதமான ஏகமாகும்.

இது அபேதத்திலே போய் முடிவடையும். அப்பொழுது பக்தன் "கோபாலோஹம் – நான் கோபாலனாக இருக்கின்றேன்" என்று கூறுகின்றான்.

## 4. பரபக்தி

சிவபெருமானுடைய தரிசனம் உனக்கு இந்த ஜன்மத்திலேயே கிடைக்கும். பலர் உணர்ந்திருக்கின்றார்கள். நீயும் உணரலாம். எதை மற்றொருவர் அடைந்திருக்கிறாரோ அதை நீயும் அடைய முடியும். இதைப் பற்றி சந்தேகம் என்பதே கிடையாது. இறைவனிடமிருந்து எந்த வரத்தையும் கேட்க வேண்டாம். வரம் கேட்க ஆரம்பித்து விடும்பொழுது உண்மையான பக்தியில்லாமல் போய் விடுகிறது. இது கூலிக்கு வேலை செய்வது போலாகி விடுகிறது. இது கடை வைத்தல் அல்லது வியாபாரமாகி விடுகிறது. நீ கடவுளோடு வியாபாரம் செய்யக்கூடாது. அவனை அன்பிற்காகவே நேசி. பரிபூரணமான நிஷ்காம்ய, அனன்ய, பக்தியை உடையவனாக இரு. முக்தியைக் கூட கேட்க வேண்டாம். ராணியைப் போன்ற தலையாய பக்திக்கு முக்தி என்பது பணிப்பெண் போல. இது தனக்குத்தானே வந்து விடுகிறது.

இஷ்ட தேவதையினுடைய தரிசனம் மட்டும் கிடைத்து விட்டால் போதாது. ஆத்மனைப் பற்றிய ஞானமும் தேவை. நாமதேவருக்கு கண்ணபிரானுடைய தரிசனம் பலமுறை கிடைத்திருந்தது. இருந்த போதிலும் அவர் ஒரு பூரண பரிபக்குவமடைந்த முனிவராக இல்லை. ஒருசமயம் கோரா என்கின்ற குயமுனிவர். (Saintly Potter) பக்தர்கள் கூடியிருக்கும் ஒரு கூட்டத்தில் நாமதேவருடைய தலையைத் தட்டிப் பார்த்து அவர் கச்சாவாக அல்லது அரை வேக்காடுடையவராக இருக்கின்றார் என்று கூறினார். பிறகு நாமதேவர் மல்லிகார்ஜுன ஆலயத்திலுள்ள விஷோபாகேசர் என்கின்ற ஒரு வேதாந்தியிடம் கைவல்ய ரகசிய தீக்ஷை பெற்றுக் கொள்வதற்காகச் சென்றார்.

கோவிலிலே நாமதேவர் விஷோபகேசர் அவர்களை ஒரு விநோதமான நிலையிலே இருப்பதைக் கண்ணுற்றார். கேசர் அவர்கள் தியான நிலையிலே இருந்தார். அவர் கீழே படுத்துக் கொண்டு கால்களை சிவலிங்கத்தின் மீது போட்டுக் கொண்டு இருந்தார். நாமதேவர் "மதிப்பிற் குரிய ஓ ஸ்வாமி ஜி, தாங்கள் தங்களுடை பாதங்களை சிவலிங்கத்தின் மீது வைத்துக் கொண்டு படுத்திருப்பதன் காரணம் என்ன" என்று வினவினார். அதற்கு கேசர் என்னுடைய பாதங்களை சிவலிங்கம் இல்லாத இடத்தில் தயவு செய்து வையுங்கள் என்று பதிலிறுத்தார். நாம தேவர் அவருடைய பாதங்களைப் பல இடங்களில் வைக்க முயற்சித்தார், ஆனால் அவர் எங்கெங்கெல்லாம் பாதங் களை கொண்டு வைக்கின்றாரோ அங்கெல்லாம் ஒரு சிவலிங் கம் இருப்பதைக் கண்டார். நாமதேவர் திகைப்புற்று நின்று விட்டார். அவர் கேசருடைய பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து அவரைத் தனக்கு ஆத்மனைப் பற்றிய மந்திர தீக்ஷையை அளிக்கும்படி மன்றாடிக் கேட் டுக்கொண்டார். நாமதேவர் பண்டரிபுரத்திற்கு ஆத்ம ஞானத்துடன் திரும்பி வந்தார். இப்பொழுதுதான் அவர் நன்றாக வேகவைக்கப்பட்ட அல்லது பக்காவாக ஆனார். அதாவது அவர் பூர்ணத்துவம் அல்லது உச்ச ஞானத்தை அடைந்தவராக ஆனார்.

இறைவன், ஜீவாத்மா, உலகம் ஆகியவைகள் உண்மையிலேயே ஒரு ஐக்கியமாகும். அவைகளின் தனித்தனியான தோற்றம் வெறும் மாயை அல்லது மயக்கமேயாகும். எல்லா மயக்க வேறுபாடுகளையும் உருக்கி விடவும், மனிதனை மனிதனிடமிருந்து பிரிக்கும் எல்லா தடைகளையும் நீக்கி விடவும், ஆதாரமாக இருக் கின்ற ஐக்கியத்தை உணர்ந்து விடுதலையுடன் இருங்கள்.

பிரகலாதன் ஹரிதேவனை அடி மனத்திலிருந்து "தேவா, நான் எந்தப் பிறவியெடுத்தாலும், எனக்கு உன்னுடைய பாதார விந்தங்களிடம் மாறாத பக்தி வேண்

டும்''. என்று பிரார்த்திக்கின்றான். இந்த உலகத்திற்கு இன்று தேசத்தின் நாலா பக்கங்களிலும் பக்தியைப் பரப்ப அது போன்ற பக்தர்கள் தேவைப்படுகின்றனர்.

இருதயம் தூய்மையாக்கப்படும் பொழுது மனம் இயற்கையாகவே கடவுள் பக்கம் திரும்பி விடுகிறது. சாதகன் கடவுளின் பக்கம் கவரப்படுகின்றான். நாளடைவில் தூய்மையான அன்பு, ஆத்ம சரணாகதி, வழிபாடு ஆகியவை மூலம் அவன் இறைவனோடு ஐக்கியப்படுத்தப் படுகிறான். இப்பொழுது பக்தன் ஒரு தெய்வீக வஸ்துவாக ஆகின்றான். அவனிடம் இறை வாழ்வு அமையப் பெறுகிறது. அவனுக்கு ஒரே தொடர்ச்சியான வாழ்க்கை ஏற்படுகிறது தனித்தன்மையானது தெய்வீக வஸ்துவாக ஆகிறது.

ஞானம் என்பது என்ன? துணியிலே நூலையும், குடத்திலும், கூஜாக்களிலும் களிமண்ணையும், நகைகளிலே தங்கத்தையும் பல்வேறு வகையான கருவிகளிலே இரும்பையும், நாற்காலிகள், பலகைகள், கதவுகள் ஆகியவற்றில் மரத்தையும் காணுவது ஞானமாகும். உயிருள்ள ஜீவன் ஒவ்வொன்றிலும் இறைவன் அல்லது ஆத்மனைக் காண்பதும், இறைவன் உன்னுடைய இருதயத்திலேயும் எல்லோருடைய இருதயங்களிலேயும் அமர்ந்திருக்கின்றான் என்பதை உணர்வதும் ஞானமாகும். (வாசுதேவஸ் ஸர்வம் இதி) பக்தி கனியும் பொழுது ஞானத்தைக் கொடுக்கிறது. பக்தி பக்குவமடையும் பொழுது ஞானம் தானாகவே உதயமாகின்றது. அனன்ய பக்தியின் பழம்தான் ஞானமாகும்.

உபாசனை இரண்டு வகைப்படும். அதாவது பிரதீகோபாசனை, அஹம்கிரஹோபாசனை. முதல் வகையில் பிரதீகை அல்லது அடையாளம் தியானத்திற்காக உபயோகப்படுத்தப்படுகிறது. இரண்டாவது வகையில் பிரதீகை அல்லது அடையாளம் தன்னுடைய சொந்த ஆத்மா

வுக்கே தியானப் பொருளாகின்றது. முன்னது பக்தனு டைய முறை. பின்னது அத்வைத வேதாந்தியினுடைய தாகும். முதல் வகை உபாசனையில் தேர்ச்சிபெற்று விட்ட ஒருவன் அதற்கு மேற்பட்ட அஹம்கிரஹ உபாசனையை மேற்கொள்ளும்படி சிபாரிசு செய்யப்படுகின்றான். அதிலே அவன் தன்னுடைய சொந்த ஆத்மாவையே தன்னுடைய சொந்த தூய்மையான ஆத்மாவாக தியானிக்கின்றான்.

ஞானம் என்பது பக்தியின் விளைவு. பக்தியானது வெறுப்பு, பொறுமை, காமம், வெகுளி, பேராசை ஆகிய வற்றை ஒழித்து உள்ளத்தை தெய்வீக அன்பால் நிரப்பி, மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து வைக்கும் எல்லா தடைகளையும் நீக்குகிறது. இது நடந்தேறும்பொழுது சாதகன் எங்கனும் ஒருமைப்பாட்டைக் காண்கிறான்; ஆத்மனின் ஐக்கியத்தை உணர்கின்றான். வர்ணனைக் கப்பாற்பட்ட தெய்வீகக் காட்சியை அனுபவிக்கின்றான்.

அத்வைத வேதாந்தத்தின்படி, ஆத்மனை நேசிப்பது பக்தியாகும். இதுதான் மிக உயர்ந்த பக்தியாகும். இதிலே பிரேம பக்தி, பரபக்தி, அபரபக்தி ஆகியவைகள் அடங்கியிருக்கின்றன. ஒரு அத்வைத வேதாந்தி சிவ பெருமான், ஹரி, ராமன், கிருஷ்ணன், துர்க்கை, காயத்ரி, அல்லா, ஜெஹோவா முதலியவற்றை வழிபடுபவ ராவார். அவர் வகுப்புவாத பக்தனல்ல. அவருடைய மனம் எல்லையற்று விரிவடைந்திருக்கிறது.

ஆத்மனை நேசிப்பதுதான் மிக உயர்ந்த பக்தியாகும். இது "பாரமார்த்திக பக்தி" என்று வழங்கப்படுகின்றது. ஞானயோக மாணாக்கன் தன்னுடைய சொந்த ஆத்மனையே ஆத்மனாக வழிபடுகின்றான். "நான் சத்-சித்-ஆனந்த-அகண்ட பரிபூர்ண பிரம்மனாக" இருக்கின்றேன். இதைவிட உயர்ந்த பக்தி ஏதாவது உண்டா ?

ஹிரண்யகசிபுவின் புனித மகனான பிரகலாதன் தன்னுடைய தூய உள்ளத்தின் மூலம் தியானித்து மேலான,

வேற்றுமையில்லாத நிர்விகல்ப சமாதியில் பேரானந் தத்தை அனுபவித்தான். அவன் நிர்விகல்ப சமாதியில் கற்சிலை போன்று 5000 வருடங்கள் அசையாமல் அமர்ந் திருந்தான்.

இறைவனுடைய பிரசன்னத்தை எங்கனும் உணருங் கள். இறைவனிடம் உங்கள் மனத்தைப் பதியவைக்க இடையருது உழையுங்கள். இந்த உருவங்கள் அனைத்திலும் உங்களுடைய அன்பிற்குரியவனைக் காணுவதற்கு ஓயாது முயற்சி செய்யுங்கள். மௌனமாக அவனுடைய நாமங் களை ஜபியுங்கள். சில நேரங்களில் அவன் பெயரைப் பாடுங்கள். மௌனமாகக் கீர்த்தனை செய்யுங்கள். மனதை அவனிடம் உருக்குங்கள். அவனிடம் அமைதியில் களிப் பெய்துங்கள்.

இந்த உடல் ஒரு நடமாடும் கோவில். உன்னுடைய அலுவலகம் அல்லது வியாபாரஸ்தலம், ஒரு பெரிய கோவில் அல்லது பிருந்தாவனம் என்றும், நடத்தல், உண்ணுதல், சுவாசித்தல், பார்த்தல், கேட்டல், படித்தல் முதலியவை போன்ற ஒவ்வொரு காரியமும் இறைவனுக் கான காணிக்கை என்றும் உணர். வேலையே வழிபாடா கும். சரியான மனப் பான்மையுடன் செய்யும் போது வேலையே தியானமாகின்றது. வேலையை வேலைக்காகவும், எந்தவித நோக்கமுமின்றியும், காரணகர்த்தா (நான் தான் செய்பவன், நான் தான் அனுபவிப்பவன்) என்கின்ற அபிப்பிராயமின்றியும், பலன்களை எதிர்பாராமலும் செய்தல் வேண்டும். இறைவனுடைய திருக்கரங்களிலே நீ ஒரு கருவி என்பதையும் அவன் உன்னுடைய உறுப்புகளின் மூலம் வேலை செய்கின்றுன் என்பதையும் உணர். இந்த உலகம் இறைவனுடைய தோற்றம் அல்லது விஸ்வ பிருந்தாவனம் என்பதையும், உன்னுடைய குழந்தைகள், மனைவி, தந்தை, தாய், மற்ற உற்ருர் உறவினர்கள் யாரும் இறைவ னுடைய பிரதிமைகள் அல்லது குழந்தைகள் என்பதையும் உணர். ஒவ்வொரு முகத்திலும், ஒவ்வொரு பொருளிலும்

இறைவனைப் பார். நீ இம்மாதிரியான மாறுபட்ட திருஷ்டியையும், தெய்வ பாவனையையும், நீடித்த, இடை விடாத பயிற்சியின் மூலம் விருத்தி செய்து வந்தால் எல்லா செய்கைகளும் இறைவனுடைய பூஜையாக ஆகிவிடும். இது முற்றிலும் போதுமானது. உனக்கு இறையுணர்வு விரைவில் கிட்டும். இது சக்தி யோகமாகும். இது ஒரு சுலபமான சாதனையாகும். இனிமேல் "ஸ்வாமி ஜி, ஆன்மீகப் பயிற்சிகளைச் செய்ய எனக்கு நேரமில்லை" என்கின்ற நொண்டிச் சாக்குகளைக் கூருதே.

இந்தச் சக்தி யோகத்தை நீ மூன்று மாதம் பயின்ருல் கூட நீ ஒரு முற்றிலும் மாறுபட்ட ஜீவனுக ஆகிவிடுவாய். இப்பொழுதே உன்னுடைய அபேதத்தை உணர்ந்து, எல்லா ஜீவன்களுக்கும், எறும்புகளுக்கும், நாய்களுக்கும், யானைகளுக்கும், புலிகளுக்கும், முகமதியர்களுக்கும், கிருஸ்தவர்களுக்கும் உள்ள உறவை உணரவும். வெளிப்பாட்டிலே தான் ஒரு சிறிதளவு வித்தியாசம் இருக்கிறது. எல்லா உருவங்களும் இறைவன் அல்லது சகுணப் பிரம்மனுக்குச் சொந்தம். நீ ஒரு மரத்தையோ அல்லது சிறு செடியையோ, ஒரு சீக்கியனையோ அல்லது ஒரு முகமதியனையோ பார்க்கும்பொழுது இந்த உருவமாகிய திரைக்குப் பின்புறம் மறைந்து இருக்கும் உண்மையான உணர்வைக் காண முயற்சி செய். நீ இதைச் சிறிது காலம் செய்து வந்தால் சொல்ல முடியாத ஆனந்தத்தை நீ உணர்வாய். எல்லா விதமான வெறுப்புகளும் இல்லாமல் போய் விடும். உன்னிடம் இறையன்பு அல்லது உணர்வு ஒற்றுமை விருத்தியடையும். இது ஒரு மகத்தான அனுபவமாகும்.

கபீர் கூறுகின்ருர் :—"முகம் கழுவி பல் துலக்கி என்ன பயன்? மசூதியிலே மண்டியிட்டு நமஸ்கரித்து என்ன புண்ணியம்? இதயத்திலே சூது வைத்துக் கொண்டு பிரார்த்தனை செலுத்தப்படுகிறது. மெக்காவிற்கு யாத்திரை செய்தென்ன பயன்? இந்துக்கள் 24 ஏகாதசி நாட்களில் விரதம் இருக்கின்றனர். முகம்மதியர்கள் 30 நாட்கள்

விரதம் இருக்கின்றனர். ஆனால் பதினொரு மாதங்களைக் கழித்து விட்டு ஒரே ஒரு மாதத்தை மட்டும் இறைவனுக்கு ஆக்கியது யார் என்பதை எனக்கு விளக்கம் கொடுக்கும் படி பிரார்த்திக்கின்றேன். ஹரி கிழக்கேயும், அல்லா மேற்கேயும் வாசம் செய்யும்படி வைக்கப்பட்டிருக்கின்றார்கள். ஆனால் அவனை (இறைவனை) உன்னுடைய உள்ளத்தினுள்ளே தேடு. நீ அங்கே அந்த கரிமையும் இராமனையும் காண்பாய். கடவுள் மசூதியில் மட்டும் இருந்தால் வெளியிலுள்ள தேசம் யாருக்குச் சொந்தமானது? ராமன் புண்ணிய ஸ்தலங்களிலும் அவனுடைய சிலைகளிலும் இருப்பதாகக் கருதப்படுகிறது. ஆனால் அவர்கள் இன்னும் இரண்டிலும் கண்டாரில்லை. வேதங்களும், குரானும் பொய் என்று யார் சொன்னது ? சிந்தித்துப் பார்க்காதவர்களுக்கு அவைகள் அப்படித்தானிருக்கும். எல்லா சரீரங்களிலும் ஒன்றைத் தவிர இரண்டாவது ஒன்றுமில்லை. ஆணோ, பெண்ணோ அவர்கள் உன்னுருவன்றி வேறில்லை. கபீர் அல்லாவின் குழந்தையன்றி வேறல்லவென்றும், தனக்கு குருவாகவும் பீராகவும் (Pir) இருக்கின்றான் ".

தூய்மையான அன்பு ஒன்றுதான் மனிதனிடமிருந்து மனிதனைப் பிரித்து வைக்கும் எல்லா தடைகளையும் நீக்க வல்லது. தூய அன்பு ஒன்றுதான் எல்லாவிதமான அறிவுக்கொவ்வாத வெறுப்புகளையும், துரபிமானங்களையும், சகிப்பற்ற தன்மையையும், வெறுப்பு முதலியவற்றையும் ஒழிக்கவல்லது. தூய அன்பு ஒன்றுதான் ஒரு யூதனையும், ஒரு கிருஸ்துவனையும், ஒரு ஹிந்துவையும், ஒரு முகமதியனையும், ஒரு கத்தோலிக்கையும், ஒரு பிராட்டஸ்டண்டையும், ஒரு பிராமணனையும், ஒரு பிராமணனல்லாதானையும், ஒரு வைஷ்ணவனையும், ஒரு சைவனையும், ஒரு சமாஜிகனையும் (Samajist) ஒரு சனாதனியையும், ஒரு ராமாநந்தியையும், ஒரு சாக்தனையும், ஒரு ஜெர்மானியனையும், ஒரு ஆங்கிலேயனையும், ஒரு சந்நியாசியையும், ஒரு வைராகியையும், ஒரு சைனாக்காரனையும், ஒரு ஜப்பானி

யனையும் ஒரு பொது மேடையில் உடலாலும் உள்ளத்தாலும் ஒன்று படுத்த முடியும்.

சாதகன் சிறிது சிறிதாக அவன் வழிபடும் இறைவன் விக்ரஹத்திலும், எல்லா ஜீவராசிகளிடத்திலும் இப்பிரபஞ்சத்தின் எல்லா நாம ரூபங்களிலும் இருக்கின்றுன் என்பதை உணர ஆரம்பிக்கின்றுன். அவனுடைய பிரசன்னத்தை எங்கும் உணர ஆரம்பிக்கின்றுன்.

விக்ரஹத்தில் மட்டும் இறைவனைக் காணுபவன் ஒரு மட்டரகமான பக்தன்தான். பக்தர்களிடம் மட்டும் இறைவனைக் கண்டு அதே நேரத்தில் ‘‘இவன் ஒரு கெட்ட மனிதன், இவன் ஒரு பக்தன் அல்ல’’ என்கின்ற எண்ணத்தை வைத்திருக்கின்றுனே அவன் நடுத்தர ரகத்தைச் சார்ந்தவன். எங்கு பார்த்தாலும் இறைவனையே காண்பவனும், உலகமனைத்தையும் கண்ணனுகக் காண்பவனும் (வாசுதேவஸ் ஸர்வம் இதி) முதல் ரகத்தைச் சார்ந்த பக்தனுவான்.

எப்படி சர்க்கரையானது மிட்டாயின் எல்லா பாகத்திலும் ஊடுருவியிருக்கின்றதோ அதே போல கடவுள் உலகமனைத்திலும் ஊடுருவி இருக்கின்றுர். அகில உலகமும் இறைவனிடம் அடங்கியிருக்கிறது. ஈசாவாஸ்ய உபநிஷத்திலே முதல் மந்திரம் ‘‘ஈசா வாஸ்யம் இதம் ஸர்வம் - இந்த உலகமானது இறைவனுல் வாசம் செய்யப்படுகிறது’’ என்பதாகும். திருச்யத்தை (நாம ரூபங்களை) இல்லாததாக்கி அந்த இடத்திலே எங்கனும் ஹரியைப் பார். இந்த உடலை மறந்து விடு. சூழ்நிலையையெல்லாம் மறந்து விடு. ஹரி உணர்விலேயே இரு. இது பக்த சமாதியாகும். இறைவன் ஒவ்வொரு ஜீவனிலும் இருக்கிறுன். இறைவனை எல்லாப் பொருள்களிலும், எல்லா தோற்றங்களிலும் பார். அவன் மூச்சிலே இருக்கின்றுன். குரலிலே இருக்கின்றுன் உன்னுடைய கண்களிலே இருக்கின்றுன். அவன் உன்

னுடைய வாழ்விற்கு வாழ்வாகவும், ஆன்மாவிற்கு ஆன்மா வாகவும் இருக்கின்றுன். ஒரு இந்துவிற்கும் ஒரு முக மதியனுக்கும், ஒரு பிராட்டஸ்டன்ட்டுக்கும் ஒரு கத்தோ லிக்கனுக்கும், ஒரு சைவனுக்கும், ஒரு வைணவனுக்கும் இடையே பாகுபாடு ஏற்படுத்த வேண்டாம்.

கந்தையுடுத்திய பிச்சைக்காரன் ஒருவனைப் பார்க்கும் பொழுது அவனுக்கு முன்பு கூப்பிய கரங்களுடன் வணக்கம் செலுத்தவும். உருவம் எவ்வளவு தான் கோணலாக (distorted) இருப்பினும் அது இறைவனுடைய உருவமே.

ராமன் ஹனுமானைப் பார்த்து அவன் தன்னைப் பற்றி என்ன நினைத்தான் என்று கேட்டபொழுது அதற்கு ஹனுமான் ''தேவா, நான் தேக பாவனையாக இருக்கும் பொழுது தங்களுடைய சேவகன் என்றும், நான் ஜீவனுக இருக்கிறேன் என்று உணரும் பொழுது தங்களுடைய அம்சம் என்றும், நான் ஆத்மன் என்று உணரும் பொழுது நீங்களும் நானும் ஒன்று என்றும் காண்கிறேன்'' என்று பகர்ந்தான்.

உயர் நிலையையடைந்த பக்தன் தன்னை அந்த நேசிக்கும் பொருளோடு ஐக்கியப்படுத்தி விடுகிருன். அவன் தன்னுடைய வியக்தித்துவத்தை (personality) அவனுடைய வழிபாட்டுப் பொருளில் (அவனுடைய இஷ்டம்) மூழ்கடித்து விடுகிருன். அந்த தெய்வீகப் பொருளில் அவன் ஆழமாகப் பாய்ந்து விடுகிருன். அவன் தெய்வீகப் பேரானந்தமாகிய சமுத்திரத்தில் ஆழமாகக் குதித்து விடுகிருன். அவன் அவனைச் சுற்றி இறைவனை யன்றி வேறெரு பொருளையும் பார்ப்பதில்லை. அகில உலக மும் இறைவனுடைய தோற்றமாகவே அவனுக்குக் காட்சி யளிக்கிறது. அவன் ஒரு மரத்தினிடமும், ஒரு மலரிடமும், ஒரு நாயினிடமும் ''ஓ கிருஷ்ணு, ஓ தேவா, நான் இந்த உருவங்கள் எல்லாவற்றிலும் உன்னையே பார்க்கின்றேன்'' என்று பேசுகின்றுன். அவனுக்கு அகில உலகமும் பிருந்தா வனமாவே இருக்கிறது. (விஸ்வ பிருந்தாவனம்)

ஹரி நீரில் இருக்கின்றான்; ஹரி நிலத்தில் இருக்கின்றான். ஹரி ஆகாயத்தில் இருக்கின்றான், ஹரி விசிறியில் இருக்கின்றான்; ஹரி உள்ளத்தில் இருக்கின்றான்; ஹரி ஊன்று கோலில் இருக்கின்றான், ஹரி பாலிலும் இருக்கின்றான். இந்த உலகம் முழுவதும் ஹரியாய் நிரப்பப் பட்டிருக்கிறது.

இனிமையான குளிர்ந்த தென்றல் காற்று உண்மையான அன்பைப் பற்றிய அழகான கீதங்களை உன்னிடம் பாடுகின்றன. ஆனால் நீயோ அவைகளைக் கேட்பதற்கில்லாமல் செவிடாய் இருக்கின்றாய். ஒவ்வொரு சிறு புயலும் ஹரி, ஹரி என்று உன்னிடம் கதறுகின்றது; ஆனால் உன்னால் அதைக் கேட்க முடியவில்லை.

ஒரு உண்மையான கிருஷ்ண பக்தன் இந்த உலக முழுவதிலும் கிருஷ்ணனைத் தவிர வேறு எதையுமே பார்ப்பது கிடையாது. அவனிடம் புது விதமான ஒரு யோகக் கண்ணும், ஒரு புதுவிதமான ஆன்மீக திருஷ்டியும் இருக்கின்றன. உன்னுடைய இருதயத்தை இறைவனுடைய பாத கமலங்கள் பக்கமாகத் திருப்பு. அஞ்ஞானத்திரை தூரமாக விலக்கப்பட்டுவிடும். யாராலும் வர்ணிக்க முடியாத ஒரு ஜோதி தரிசனத்தை நீ காண்பாய். ஓ சாஸ்வதத்தின் குழந்தாய், ஓ தேவாமிர்த மகனே, ஆத்மாவின் நிரந்தரமான கீதத்தைக் கேள். ஒவ்வொரு பொருளிலிருந்தும் அந்தக் குரலைக்கேள். மின்னுகின்ற தாரகைகள், நீல வானம், பிரகாசம் பொருந்திய சூரியன், சலசலக்கும் நீரோடைகள், சமுத்திரத்தின் அலைகள், புன்னகை பூக்கும் புஷ்பங்கள் இமயமலையின் பனி மூடிய சிகரங்கள் ஆகியவைகள் எல்லாம் ''கடவுள் இங்கே இருக்கிறார்'' என்று உன்னிடம் ஓதுகின்றன. உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களுக்குமிடையிலும் மின்னுகின்ற அந்த தெய்வீக ஒளியைப் பார்.

## 5. தெய்வீக அன்பை விருத்தி செய்

ஓ மனிதா, நீ கடவுளை எங்கே தேடுகிறாய்? இந்த உருவங்கள் எல்லாம் இறைவனுடைய தோற்றங்களே. இந்த உருவங்களில் இறைவனைப் பார். நீ எல்லா ஜீவன்களுக்கும் நாராயண பாவத்துடன் சேவை செய்வாயேயானால், நீ உண்மையிலேயே இறைவனுக்கு சேவை செய்கிறாய். மனித வர்க்கத்தின் சேவை இறைவனுடைய சேவையாகும். மனித சமுதாய சேவை உண்மையிலேயே உன்னுடைய இஷ்ட தேவதையின் வழிபாடாகும். இறைவனுடைய இந்தத் தோற்றங்கள் அல்லது கண்கண்ட தெய்வங்களை உன்னால் நேசிக்க முடியாவிடில் கண்ணுக்குப் புலப்படாத ஒன்றிற்கு நீ எவ்விதம் சேவை செய்யவோ அல்லது அதை நேசிக்கவோ முடியும்?

இரண்டற்ற ஆத்மனின் மேலான பேரானந்தத்தை நீ உண்மையிலேயே அனுபவிக்க விரும்பினால், நீ உண்மையான, அனுஷ்டான அத்வைத வேதாந்தி அல்லது முனிவனாக விரும்பினால் துயருற்றோரின் துன்பத்தைத் துடைக்க முயற்சி செய். ஏழைகளுக்கு உதவி செய். நோயாளிக்கும் பணிவிடை செய். எல்லா ஜீவன்களிடமும் மறைந்து கிடக்கும் அந்த ஒரு ஆத்மனைப் பார்க்க அல்லது உணர முயற்சிக்கும் எவனாவது மனித வர்க்கத்திற்கு சேவை செய்யாமல் சும்மா இருக்க முடியுமா? எல்லா உருவங்களும் அந்த மேலான பரம்பொருளின் தோற்றங்களேயாகும். எல்லா உடல்களும் அவனுக்குச் சொந்தமானவை. நீ ஒரு நோயாளியின் கால்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்தால் நீ இறைவனுடைய கால்களை, விராட் அல்லது சகுண பிரம்மனுடைய கால்களைப் பிடித்து விடுகிறாய் என்று ஞாபகத்தில் வைத்துக் கொள். பிராணிகளுக்கும் சேவை செய். எல்லா ஜீவராசிகளிடத்தும் இரக்கத்தையும் அன்பையும் விருத்தி செய்.

நீ ஒவ்வொருவரையும் மதித்து மரியாதை செய்யாதிருக்கும் வரை எல்லா ஜீவராசிகளிடத்துமிருக்கின்ற

இறைவனை நீ எவ்வாறு வழிபட முடியும்? ஒவ்வொருவரையும் மரியாதையாக நடத்து. எல்லோரையும் சம நோக்குடன் பார். நல்ல காரியங்களைச் செய். எல்லா ஜீவன்களிடத்தும் இறைவனைப் பார். எல்லா ஜீவன்களையும் வணங்கு. இறைவனிடம் தீவிரமான பரிபூரண பக்தி கொள். உன்னுடைய எண்ணங்கள் முழுவதையும் அவனிடமே செலுத்து. எதற்கும் ஆசைப்படாதே; மோக்ஷத்தைக் கூட விரும்பாதே. நீ விரைவில் மரணத்தைக் கடந்து, பயமற்ற, சாசுவதப் பேரானந்தமும் மேலான அமைதியும் நிறைந்த பெருவீட்டை அடைவாய்.

பிரம்மன் சூரியனைப் போலவும், கங்கையைப் போலவும், மாமரத்தைப் போலவும் இருக்கின்றான். சூரியன் நல்லவன், கெட்டவன் எல்லோர் மேலும் கிரணத்தை வீசுகின்றான். ஒரு கயவனும் ஒரு முனிவனும் கங்கையினுடைய நீரைப் பருக முடியும். மாமரம் அதை வளர்ப்பவனுக்கும் அதன் கிளைகள் வெட்டுபவனுக்கும் இருவருக்கும் அதனுடைய பழங்களைக் கொடுக்கிறது. சூரியன், கங்கை, மாமரம் ஆகியவற்றைப் போல சமநோக்கை விருத்தி செய்.

நாம ரூபங்கள் வேறுபட்ட போதிலும், அடிப்படையான சாராம்சம் ஒன்றே ஒன்று தான். இந்த நாம ரூபங்கள் அனைத்தும் அந்தச் சாராம்சத்திலே தொங்கிக் கொண்டு அல்லது மிதந்து கொண்டிருக்கின்றன. ஆகவே நாமெல்லோரும் பொதுவான அடித்தளத்தில் ஒன்றாக இணைக்கப்பட்டிருக்கின்றோம். சர்வதேச சகோதரத்துவம் இந்த ஐக்கியத்தை ஸ்தாபிப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது. இது ஒரு தனி மனிதனை அத்வைத நிலைக்கு உயர்த்தி அத்வைத உணர்ச்சியை (பிரம்மானுபவத்தை) ஊட்டுகிறது.

உனக்கு அருகில் இருப்பவனை நேசி. அவனுக்கு சேவை செய். நீ உனக்காக எதை மிகவும் நேசிக்கின்

ருயோ அதை சந்தோஷமாக மனப்பூர்வமாக மற்றவர்களுக்குக் கொடு. இது தெய்வீக அன்பையும், ஒற்றுமையையும், சமநோக்கையும் உன்னிடம் வளர்க்கும். நீ விரைவில் பிரம்ம ஞானத்தை (ஆத்ம ஞானத்தை) அடைவாய். நீ விரைவில் எல்லா ஜீவன்களையும் ஆத்மனிலும் ஆத்மனை எல்லா ஜீவன்களிலும் காணுவாய் (சாம்யக திருஷ்டி). தனது ஒன்பது மக்களையும் இழந்துவிட்ட பிறகு ஒரு தாயானவள் தன்னுடைய ஒரே ஒரு மகனை எவ்வளவு அளவு கடந்து நேசிப்பாளோ, அது போல எல்லா ஜீவன்களிடத்தும் எல்லையற்ற அன்பை வளர்த்து வா. இது தான் ஒரு சாதகனுக்குரிய மிக உயர்ந்த தகுதியாகும். இம்மாதிரியான எல்லையற்ற அன்பு உடையவனுடைய சூக்கும சரீரமானது அழகான பிரகாசம் பொருந்திய, கண்ணைப் பறிக்கும் வர்ணத்துடன் மிளிரும். வர்ணிக்க முடியாத காந்தியுடன் கூடிய ஒரு பளபளப்பு இருக்கும்.

எல்லோரிடமும் அன்பாக இரு. எல்லோரையும் நேசி. மற்றவர்களுடைய மனதைப் புண்படுத்தாதே. எல்லோரிடமும் ஒன்றுக இரு. ஒரு இனக் கூட்டை (clannishness) ஒழித்து விடு. எல்லோருக்கும் சேவை செய். எல்லோருக்கும் மரியாதை செய். உன்னிடம் எது இருப்பினும் (உடல், அறிவு, ஆன்மீக சம்பந்தமாக) அதை மற்றவர்களோடு பகிர்ந்து கொள். இந்த உலகம் முழுவதையும் நாராயண ரூபமாக எடுத்துக் கொள். (அநேக ரூப-ரூபாய விஷ்ணவே பிரப விஷ்ணவே) உலகத்திற்கு முன்பாகவும் ஒவ்வொருவருக்கு முன்பாகவும் கூப்பிய கரங்களுடன் வணக்கம் செய். நாவிதன், வண்ணான், சக்கிலி முதலிய எண்ணங்களை விட்டு விடு. நாவிதன் நாராயணனே. சக்கிலியும் நாராயணனே. ஒரு தோட்டிக்கு முன்பு கூப்பிய கரங்களுடன் வணங்கு. நீ நாராயணனையே வணங்குவதாக உணர். கூச்சப்படுபவர்கள் மானசீகமாக வணங்கலாம். முன்னர் கூறியது தான் சமநோக்கை வளர்த்துக் கொள்ள மிகச் சிறந்த வழியாகும். முன்னே சொன்ன பயிற்சியின் மூலம் வேதாந்த ஞான

சமதர்சித்துவம் அல்லது -சமத்துவ மனப்பான்மையின் சாரத்தை நீ அனுபவிப்பாய்.

நீ ஒரு நல்ல காரியத்திற்காக உன்னுடைய வாழ்க்கையையே விட்டுவிட சித்தமாயிருக்கலாம். நீ உன்னுடைய விரோதிக்காகவும் உன்னுடைய வாழ்க்கையைத் தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நீ ஐக்கியத்தை உணர முடியும்.

ஒரு மனிதன் உன்னை வெறுத்தபோதிலும், நீ அவனை நேசிக்க வேண்டும். நீ எல்லோரையும் நேசிக்க வேண்டும். நீ ஒரு திருடனை, ஒரு குடிகாரனை, ஒரு போக்கிரியை, ஒரு பிச்சைக்காரனையும் நேசிக்க வேண்டும். மல்லிகை மலரிலிருந்து எப்படி மணம் கிளம்புகிறதோ அதுபோல அன்பு மணமானது உன்னிடமிருந்து கிளம்பி எல்லோரிடமும் எல்லா திக்குகளிலும் பாய்ந்தோட வேண்டும். அப்பொழுது தான் அது தெய்வீக அன்பு அல்லது சமரச அன்பு அல்லது விஸ்வப்ரேம் என்று அழைக்கப்படும். கங்கை உனக்கு எப்பொழுதும் குளிர்ந்த, தூய நீரைக் கொடுக்கிறது. அது பிரதிப் பயனுக உன்னிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதில்லை. சூரியன் எந்த விதமான வெகுமானத்தையும் எதிர்பாராமல் எல்லோர் மேலும் அதனுடைய ஒளியை வீசுகின்றது. அவைகளிடமிருந்து பாடங்களைக் கற்றுக் கொள். எப்பொழுதும் கொடு, கொடுத்துக் கொண்டே இரு. பிரதிப் பயனுக எதையும் கேட்காதே. பதிலுக்கு எதையும் எதிர்பார்க்காதே. புகழ்ச்சி, ஆதரவு அல்லது அங்கீகாரத்தைக் கூட எதிர்பார்க்காதே.

நாலா பக்கங்களிலும் ஆனந்தத்தைப் பரப்பு. எல்லா பக்கங்களிலும் உற்சாகத்தை வீசு. எல்லோரிடமும் ஐக்கியம் அல்லது ஒருமைப்பாட்டை உணர். எல்லோரையும் நேசி. கொடு. பறவைகளோடு சேர்ந்து பாடு. சூரியனேடு சேர்ந்து சிரி. அகண்டப் பிரம்மனின் கண்கண்ட பிரதிநிதியாக விளங்கும் நீலவானத்தோடு புன்னகை

செய். சலசலக்கும் கங்கையுடனும், வீசுகின்ற தென்றலோடும் ஓம் என்ற பிரணவத்தை உச்சரி. இடியோடு சேர்ந்து உறுமு. மரங்களோடு சேர்ந்து கூத்தாடு. மரங்களோடும், மலர்களோடும் சுவாசி. உபநிடத அழகையும், ''சர்வம் கல்விதம் பிரஹ்ம - எல்லாம் பிரம்ம மயம்'' என்ற கூற்றிலே உள்ள உணர்ச்சியையும் அனுபவி. விரிவடை. வளர்ச்சியடை. வளர்ச்சியடை.

உன்னால் கர்மத்தின் மூலம் அஞ்ஞானத்தை நீக்கிவிட முடியாது. ஏனெனில் கர்மம் அஞ்ஞானத்திற்கு எதிரானதோ அல்லது விரோதியோ, அல்லது பரிகாரமோ அல்ல. ஞானம் ஒன்றினால் தான் அஞ்ஞானத்தை நீக்க முடியும். எப்படி குளிரினால் ஏற்படுகின்ற நடுக்கத்தை உஷ்ணம் போக்குகின்றதோ அதே போல இந்த ஞானமாகிய அக்னி அஞ்ஞானத்தை அழித்து விடுகின்றது. ஆகவே ஐக்கிய பாவத்தின் ஞானத்தை அடைய உழை.

சகோதர பாவம் நாளடைவில் வேதாந்த ஐக்கியம் அல்லது ஒருமைப்பாட்டை அடைய வழி கோலுகின்றது

எந்த ஒரு மதம் அல்லது இனத்திலும் செய்யப்படுகின்ற ஒவ்வொரு தூய்மையாக்கும் காரியமும் அந்த மதம் அல்லது இனம் முழுவதினுடைய நலனையும் விருத்தி செய்கின்றது. ஏனெனில் அவைகள் அதிலே ஒரு அங்கமாக இருப்பதால் அதை ஊக்குவிப்பது வேண்டற்பாலது.

ஒரு ஞானி ஒரு எடுத்துக் காட்டாக விளங்கும் கர்மயோகியே. கர்மங்களை பரிபூர்ண நிஷ்காம்ய பாவத்துடன் ஒரு ஞானியால் மட்டுமே செய்ய முடியும்.

ஜனகராஜன் எவ்வாறு வாழ்ந்தார் என்பதையும் பாருங்கள். ராஜ்ய பரிபாலனம் செய்து வரும் பொழுதே ஒரு அனுஷ்டான வேதாந்தியின் வாழ்க்கையை அவர் வாழ்ந்தார் ஜனகராஜனைவிட ஒரு சுறு சுறுப்பான வேறொரு மனிதனை நீங்கள் யூகித்துக்கூட பார்க்க முடியாது.

அவர் லட்சோப லட்சம் மக்களை ஆண்டு வந்த போதிலும் அவர் ஒரு முனிவராக, ஒரு ஆழ்ந்த சிந்தனையாளனாக, ஒரு தீர்க்கமான தத்துவ ஞானியாக, ஒரு அனுஷ்டான வேதாந்தியாகத் திகழ்ந்து வந்தார். அவருக்கு அவருடைய சொத்தின் பேரிலோ அல்லது உடலின் பேரிலோ அல்லது குடும்பத்தாரின் பேரிலோ பற்றுதல் என்பது கிடையாது. அவர் தன்னிடம் உள்ளதை மற்றவர்களோடு பங்கிட்டுக் கொண்டார். அவர் எல்லோருடனும் பழகினார். அவருக்கு சமநோக்கும், சீரான உள்ளமும் இருந்தது. அவர் ஆடம்பரத்திற்கு மத்தியில் மிகுந்த சுறுசுறுப்பான ஒரு வாழ்க்கையை நடத்தினார். வெளிச் சக்திகளினால் அவர் சிறிதும் பாதிக்கப்படவில்லை. அவர் எப்பொழுதும் அமைதியான உள்ளத்துடனேயே இருந்தார். அவர் மனதிற்கப்பாற்பட்ட விஷயங்களைப் பற்றி பல முனிவர்களோடும் வாக்கு வாதங்கள் செய்து வந்தார். ஆகவேதான் அவர் இன்னும் நமது இதயங்களிலே வாசம் செய்து வருகின்றார். ஏன் இக்கலியுகத்திலும் கூட மாபெரும் நிஷ்காம்ய கர்மயோகி, உண்மை நாடி, மஹாத்மா காந்தி எப்படி வாழ்ந்து வருகின்றார் என்பதைப் பாருங்கள்.

சூரியன், புஷ்பங்கள், கங்கை, சந்தனம், பழ மரங்கள், பசுக்கள் — இவை எல்லாம் உலகிற்குத்தான் வேதாந்தத்தைப் போதித்துக் கொண்டிருக்கின்றன. அவைகளை மனித வர்க்கத்திற்கு தன்னலமற்ற மனோநிலையில் தொண்டு செய்யவே வாழ்கின்றன. சூரியன் ஒரு குடியானவன் குடிசையின் மேலும், ஒரு மகாராஜாவின் அரண்மனையின் மேலும் ஒரே மாதிரியாகத்தான் காய்கிறான். மலர்கள் தங்கள் நறுமணத்தை எல்லோருக்கும் எதையும் எதிர்பாராவண்ணம் அள்ளி வீசிக்கொண்டேயிருக்கின்றன. குளிர்ந்த புத்துணர்ச்சியளிக்கும் கங்கா ஜலமானது எல்லோராலும் பருகப்படுகிறது. சந்தன மரம் அதனை கோடாரி கொண்டு வெட்டுவோனுக்கும் நறுமணத்தைக் கொடுக்கிறது. எல்லாப் பழ மரங்களும் இதே போல் தான் செய்கின்றன. அவைகள் அவற்றைப்

போஷிக்கின்ற தோட்டக்காரனையும் அவற்றை வெட்டுகிறவனையும் மகிழ்விக்கின்றன. பசுமாடுகள் சிசுக்களையும், குழந்தைகளையும், நோயாளிகளையும், பலஹீனர்களையும் தெம்பூட்டவே வாழ்கின்றன. இந்த உலகத்தில் ஒரு ஆறு மாத காலத்திற்கு பசுக்களே இல்லாமல் போய் விட்டால் அல்லது பசு வர்க்கமே அழிந்து பட்டு விட்டால் எப்படி இருக்கும் என்று ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள்.

நீங்கள் எவ்வளவு பலஹீனர்களாயும் எவ்வளவு பரிதாபகரமான நிலையிலும் இருப்பீர்கள்! உலகம் ரத்த சோகை நோயாளிகளால் நிரம்பி விடும். ஓ சுயநலக்கார அஞ்ஞான மனிதா, இந்த பிரத்யக்ஷிய வேதாந்திகளிடமிருந்து பாடங்களை கற்றுக்கொண்டு அறிவுடையவனாக ஆகு.

## 6. பக்தன் யார்

எவன் ஒருவனுக்கு இந்த உலக வஸ்துக்களிடம் பற்றுதல் இல்லையோ, எவன் ஒருவன் அகந்தை, காமம், வெகுளி ஆகியவைகளிலிருந்து விடுபட்டிருக்கின்றானோ, இறைவனுடைய நாமத்தை உச்சரித்துக் கொண்டிருக்கின்றானோ, ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் ஆத்தும பாவத்துடன் சேவை செய்கிறானோ, தினமும் கீர்த்தனை செய்கிறானோ, பக்தர்களுக்கு நாராயண பாவத்தோடு சேவை செய்கின்றானோ, எல்லோரையும் நேசிக்கின்றானோ அவன் ஹரியினுடைய பக்தனாவான்.

ஒரு உண்மையான பக்தன் முக்தியைக் கூட சட்டை செய்வதில்லை. அவனுடைய மனம் இறைவனுடைய மெய்யன்பினாலேயே நிரப்பப்பட்டுள்ளது. அவன் இரவு பகல் எந்நேரத்தையும் இறைவனுடைய சிந்தனையிலேயே கழிக்கின்றான். அவன் முக்தியைப் பற்றிய எண்ணத்திற்கே இடம் கொடுப்பதில்லை. அவன் முக்தியைக் கூட துறந்து விடுகின்றான்.

ஒரு ஹரி பக்தன் எப்பொழுதும் எளிமையும் பணிவும் உடையவனாக இருக்கின்றான். ''ஹரி'' நாமம் அவன் அதரங்களில் (உதடுகளில்) எப்பொழுதும் இருக்கும். அவன் தனிமையாக இருக்கும்பொழுது கண்ணீரை தாரை தாரையாகச் சொரிகின்றான். அவன் மிகுந்த பக்தியுடன் இருக்கிறான். அவன் எல்லோரிடமும் நேசமாக இருக்கிறான். அவனுக்கு சம நோக்கு இருக்கிறது. அவன் எப்பொழுதும் நன்மையே செய்கின்றான். அவன் மற்றவர்களுடைய மனதை ஒரு போதும் புண்படுத்துவதில்லை. அவனிடம் அப்பழுக்கற்ற நடத்தை காணப்படுகிறது. அவன் மற்றவர்களுடைய சொத்தை ஒரு போதும் அபகரிப்பதில்லை. அவன் எல்லா ஜீவன்களிடமும் ஹரியைக் காண்கிறான்.

எல்லாப் பக்கங்களிலும் கனத்த மழை பெய்திருந்த போதிலும் சக்கரவாகப் புள்ளானது வேறு எங்கேயோதான் தண்ணீரைத் தேடுகிறது. அதே போல பக்தர்களைச் சுற்றி நாலா பக்கங்களிலும் போகப் பொருள்கள் சென்று கொண்டிருந்தாலும் அவர்கள் தங்களுடைய ஆனந்தத்தை ஹரியிடம் மட்டுந்தான் தேடுகின்றனர்.

இருதயம், ஆத்மன் ஆகியவற்றின் மொழி எல்லா இடங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. உலகம் முழுதும் உள்ள பக்தர்கள் அனைவர்க்கும் ஒரே சித்தாந்தமும், அவர்களுடைய உணர்ச்சிகளையும், அனுபவங்களையும் வெளிப்படுத்த ஒரே மொழியும்தான் உண்டு.

மேலான பக்தியையுடையவர்களும் அப்பழுக்கற்றவர்களும் நற்குணம், தீயகுணம் ஆகியவற்றைக் கடந்து நிற்பவர்களும், பூரண அமைதியும் தன்னடக்கமும் உடையவர்களும், இந்திரியங்களின் வழியே செல்லாமல் வெற்றி கொண்டுள்ளவர்களும் நேரடியாக ஹரி அல்லது வாசுதேவனை அடைகின்றனர். ஆனால் பரிபூர்ண பக்தியைப் பெறாதவர்கள் ஆதித்திய மண்டலம், அனிருத்தம், பிரத்

யும்னம், சங்கர்ஷணம் ஆகியவற்றினூடே கடந்து செல்கின்றனர்.

பாகவதத்தின்படி பக்தர்கள் மூன்று வகைப்படுவர். எவனொருவன் தன்னுடைய இஷ்ட தெய்வத்தை ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வொரு பொருளையும் இஷ்ட தெய்வத்திடமும் கண்டு அதன் பயனாக எங்கும் நிறைவுணர்வை அடைகின்றானோ, அவன் உயர்ந்த பக்தன். எவன் கடவுளை நேசித்து அவனுடைய பக்தர்களிடம் நேசமாகவும், அறியாதவர்களிடமும் அன்பாகவும் தன்னுடைய சொந்த விரோதிகளிடம் அக்கறையற்றும் இருக்கிறான்னோ அவன் மத்திம பக்தன். பரம்பரை வழக்கம் காரணமாக, விக்ரகங்களில் மூர்த்தியைக் காணுவதும் ஆனால் அதே நேரத்தில் ஹரியை விக்ரஹகத்தில் வணங்கிக் கொண்டு அவனுடைய பக்தர்களிடையே மரியாதை காட்டாதவன் மட்டரக பக்தனாவான்.

உலகம் முழுதுமுள்ள பக்தர்கள் எல்லோருக்கும் ஒரு கண்காணாத நிரந்தர இணைப்பு இருக்கிறது. அது அவர்களை மனித வர்க்கத்தை இறை உணர்விற்கு எழுப்பிவிடும் மாபெரும் சேவையிலே ஐக்கியப்படுத்துகிறது. எல்லா மகிமைகளும் இறைவனுக்குரியதாகுக. இந்த பல்வேறு பிராந்தியங்களிலுமுள்ள பக்தர்களின் மொழி ஒன்றேயாகும். இதுதான் இருதய மொழியாகும். அவர்களிடம் எல்லா வேறுபாடுகளும் உருகி விடுகின்றன.

பக்தி, இறைவனோடு ஐக்கியம் ஆகியவற்றின் மூலம் பக்தன், பிறப்பு அல்லது மருந்துகள் அல்லது தபஸ் அல்லது மந்திரங்கள் மூலமாக மனிதர்களுக்குக் கிடைக்கும் எல்லா சக்திகளையும் பெற்று விடுகின்றான்.

ஒரு பக்தனுடைய மகிமை சொல்ல முடியாது. இறைவன் கூட அவனுடைய பக்தர்களுடைய அடிமையாகி விடுகிறான். ஹரிக்கு வெற்றி. அவன் நாமம் ஓங்குக. இறைவன் புகழையும் அவன் நாமத்தின் மகிமையும் பாடும் பக்தர்கள் வாழ்க.

---

## அத்தியாயம் ஆறு

# பக்தியை வளர்ப்பது எப்படி ?

### 1. பக்தியை வளர்ப்பது எப்படி ?

மகாராஜரிஷி கட்வாங்கன் என்பவர் தேவர்களுக்கு யுத்தத்தில் மிகுந்த உதவி புரிந்தார். தேவர்கள் ராஜ ரிஷியைப் பார்த்து ஒரு வரம் கேட்கச் சொன்னார்கள். கட்வாங்கன் அவ்வாறு அவர்களிடம் பெறுகின்ற வரத்தை அனுபவிக்க இந்த உலகில் அவருடைய வாழ்க்கையாகிய குத்தகையில் இன்னும் மிகுதியிருக்கும் காலம் எவ்வளவு என்பதை தேவர்களை அறிவிக்கும்படி வேண்டினார். அதற்கு தேவர்கள் ''இன்னும் ஒரு முகூர்த்த நேரமே (ஒரு முழு மணி நேரம்) இருக்கிறது'' என்றனர். கட்வாங்கன் ''நான் இந்த முகூர்த்தத்திற்குள்ளாக பிரம்மனுடைய மேலான பேரானந்தத்தை அடையக்கடவேனாக'' என்றார். தேவர்களும் ''அவ்வாறே ஆகட்டும்'' என்றனர். கட்வாங்கன் தன்னுடைய மனத்தை இறைவன் மீது தீவிர ஒருமைப் பாட்டுடனும் பக்தியுடனும் அந்த முகூர்த்தத்தில் பதிய வைத்து கடைசி விடுதலையை அடைந்தான். நண்பர்களே, நீங்களும் உங்களுடைய உள்ளத்தைச் சிறந்த ஒருமைப் பாட்டுடன் தீவிர பக்தியுடன் இறைவனிடம் பதிய வைப்பீர்களானால் ஒரு முகூர்த்த நேரத்தில் லக்ஷியத்தை அடைய முடியும். ஒருவன் எதை அடைகிறானோ மற்றவர்களும் அதை அடைய முடியும். இது இயற்கையினுடைய மாற்ற முடியாத விதியாகும். கச்சத்தை இறுக்கிக் கட்டிக் கொண்டு உங்களுடைய உள்ளத்தை இறைவனிடம் பதிய வைத்து எல்லையற்ற பரம் பொருளின் சாசுவதப் பேரானந்தத்தை இப்பொழுதே இந்தக் கணமே உணருங்கள். தீவிர விருப்பமும் உக்கிரமான உறுதிப்பாடும் உடைய மனிதனுக்கு முடியாத காரியம் ஒன்றுமில்லை.

நீ ஒரு உண்மையான கடவுள் வேட்கையுடையவனாக இருந்தால் நீ அவனை ஒரு கண நேரத்தில் சந்திப்பாய். அவனை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிரு. அவனுடைய நாமத்திற்கு அருகிலேயே இரு. அவன் புகழ் பாடு. அவனை உன்னுடைய இருதயங்களுக்கெல்லாம் இருதயமாக விளங்குகின்ற இடத்தில் தேடு. உன்னுடைய ஆத்மாவிற்கு ஆதாரமாக விளங்குகின்ற, உலகமனைத்திற்கும் ஏக சக்கராதிபதியாக இருக்கின்ற உன்னுடைய உள்ளக் குகையிலேயே வசிக்கின்ற அந்தரங்க அரசனாகிய இறைவனை நேசிக்கவும், அவனுக்குச் சேவை செய்யவும் உரிய வழியை பக்தர்களிடமிருந்து கற்றுக்கொள்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பின்புதான் பக்தியை வளர்க்க வேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். இது ஒரு மாபெரும் தவறு. நீ அவ்வளவு நாள் வரைக்கும் ஜீவித்திருப்பாய் என்கின்ற உறுதி ஏதாவது உண்டா?

சிசுபாலன், கம்சன், ராவணன் ஆகியோர் இறைவனுடைய விரோதிகளாக இருந்த போதிலும், சித்திகளைப் பெற்றனர். அப்படியென்றால் இறைவனுடைய அன்பிற்குப் பாத்திரமானவர்களைப்பற்றி என்ன சொல்வது? விரோதம் பயம் காரணமாக அவர்களுடைய உள்ளம் இறைவனால் நிரப்பப்பட்டிருந்தது. ஆகவே அவர்கள் விடுதலை பெற்றனர். அன்பு உணர்ச்சியோ, நேசம், பக்தி, பயம் அல்லது விரோத மனப்பான்மையோ ஏதாவது உணர்ச்சியைத் தாங்கி இறைவனை எப்பொழுதும் எண்ணிக்கொண்டிரு. நீ அவனால் நிரப்பப்படுகிறாய். மனமானது சத்துவம் அல்லது தூய்மையினால் தோய்த்து எடுக்கப்படுகிறது.

உனக்குக் கண்கள் இருக்கின்றன. இருந்தபோதிலும் நீ பார்ப்பதில்லை. நீ வானத்தைப் பார்க்கும்பொழுது அங்கு இறைவன் இருப்பதைக் காணத் தவறிவிடுகிறாய். உனக்கு காதுகள் இருக்கின்றன. இருந்தபோதிலும் உன்னால் அவனைக் கேட்க முடிவதில்லை. அவன் அன்பு கனிந்த வார்த்தைகளையும், நல்ல உற்சாகமூட்டும் சொற்களையும்

உன்னிடம் மெதுவாகக் கூறுகின்ருன். ஆனுல் உன்னு டைய காதுகளால் அவற்றைக் கேட்க முடியவில்லே. அவன் உன்னே ஓயாது உற்று நோக்கிக்கொண்டே இருக் கின்ருன். ஆனுல் உன்னுடைய கண்கள் அவனேக் காண முடியாத அளவிற்கு அவ்வளவு குருடாகி இருக்கிறது.

நீ ஞான மார்க்கத்திலே செல்லும் ஒரு மாணுக்கனுக இருந்தாலும், உன்னிடம் தீவிரமான தேஹ அத்யாஸம் (உடலோடு ஒற்றுமை காட்டிக்கொள்ளுதல்) இருக்கும் வரை பக்தியையும் சேர்த்துக் கொள்வது நலம்.

இறைவன் எப்பொழுதும் உன்னிடம் இருக்கின்ருன். அவன் உன்னேக் காப்பாற்றி விடுவிப்பான். நீ அவனிடம் அடைக்கலம் புகு. அவனுடைய ஆசிகள் உன்னுடைய வாழ்விலே வழிந்தோடி உன்னுடைய உள்ளத்தையும் உடலேயும் ஒருங்கே மாற்றியமைக்கும். ஆன்மீக விஷய யங்களேப்பற்றிய எண்ணம் சொல், செயல் ஆகியவற்றின் மீது கட்டுப்பாட்டைச் செலுத்த தினமும் ஒரு விசேஷ முயற்சி செய். உன்னுடைய அறையிலே அவனுடைய பிரசன்னத்தை உணர். தினந்தோறும் பிரார்த்தனே செய். தியானம் செய்.

மனிதன் உணவினுல் மட்டும் உயிர் வாழ்ந்துவிட முடியாது ; ஆனுல் அவன் இறைவனுடைய நாமத்தைக் கொண்டு ஜீவித்திருக்க மனித வர்க்கத்திற்கும், தேசத்திற் கும் ஆத்ம பாவத்துடன் தன்னலமற்ற சேவை செய்வதின் மூலமும் தூய அன்பைச் செலுத்துவதின்மூலமும் இறை உணர்வை அடைவதில்தான் உண்மையான சுயராஜ்யம் அடங்கியிருக்கிறது. தூய்மையான, சகலத்தையும் தழுவக் கூடிய அன்பை வளர்ப்பதின் மூலம் தான் உண்மையான ஆத்ம சுயராஜ்யத்தை அடைய முடியும். ஆகவே ஒவ் வொருவரும் சுயநலம், கர்வம், அகந்தை, பேராசை, காமம், வெறுப்பு ஆகியவைகளே ஒழித்து, இந்தத் தூய அன்பை வளர்த்து வரவேண்டும் என்பது அவசியமாகிறது.

ஒரு பக்தன் அல்லது பாகவதனிடம் சகிப்புத் தன்மையும், இரக்கமும் இருக்கின்றன. அவன் எல்லா ஜீவன்களிடமும் நேசமாக இருக்கின்ருன். அவன் அவனுடைய இறைவன் அல்லது பகவானை எல்லாப் பொருள்களிலும் எங்கும் காண்கின்ருன். அவன் அவனுடைய அன்பிற்குரியவனிடமிருந்து ஒரு கண நேரம் பிரிந்து இருக்கவேண்டி வந்தால் கூட அந்தப் பிரிவு காரணமாக விரஹ வேதனை ஏற்படும்பொழுது ஒரு கல்லைப் பார்க்கும்போதும், கொடிகளைக் காணும் போதும், மரங்கள் அல்லது தூண்களைப் பார்க்கும்போதும் அவைகளிடம் பேசுகின்ருன். அவனுக்கு விரோதிகளே கிடையாது. எல்லாப் பெண்ணுருவிலும் அவன் அவனுடைய தாயைக் காண்கின்ருன். அவனுக்கு ஒரு தங்கக் கட்டியும் ஒரு சிறு கல்லாகவே தோன்றும் அவன் பற்றுதல், பேராசை, வெகுளி, காமம், அகந்தை, தனது என்கின்ற தன்மை ஆகியவைகளிலிருந்து விடுபட்டிருக்கின்ருன். அவன் குற்றமற்றவனுகவும், எளிமை, பணிவு, அமைதி ஆகிய பண்புகள் குடிகொண்டவனுகவும் இருக்கின்ருன். அவனுக்கு இறைவனிடம் உறுதியான பிளவுபடாத பக்தி இருக்கிறது. அவன் இறைவனுக்காக எதையும் தியாகம் செய்யச் சித்தமாயிருக்கின்ருன். அவன் இறைவனுக்கும், பாகவதர்களுக்கும், அவதிப்படும் மனித வர்க்கத்திற்கும் சேவை செய்வதற்கென்றே வாழ்கின்ருன். இறைவனுடைய நாமம் அவனுடைய அதரங்களில் எப்பொழுதும் இருந்துகொண்டேயிருக்கும். அவன் எப்பொழுதும் அவன் மகிமைகளைப் பாடிய வண்ணமிருக்கின்ருன்.

இறைவன் உணர்வை அனுபவிக்க விரும்பினுல் ஒரு பக்தன் நம்பிக்கை, நேர்மை, பணிவு, ஆத்ம சரணுகதி ஆகிய பண்புகள் அவனிடம் அமைய வேண்டும்.

தைத்தரிய உபநிஷத்திலே குருவானவர் வேதங்களை எல்லாம் கற்றுக் கொடுத்த பிறகு மாணுக்கனுக்கு உபதேசிக்கின்ருர்: "உண்மையே பேசு. உன்னுடைய கடமை

யைச் செய். வேத அத்தியயனத்தை அலட்சியம் செய்து விடாதே. குருவிற்கு உரிய சம்மானத்தை வழங்கிய பிறகு இருவருக்கும் இடையேயுள்ள தொடர்ச்சியாகிய நாபிக் கொடியை அறுத்துவிடாதே. உண்மையினின்றும் பிறழாதே. கடமையினின்றும் தவருதே. உன்னுடைய நலத்தை அலட்சியம் செய்துவிடாதே. உன்னுடைய செழிப்பை அசட்டை செய்து விடாதே. வேதங்களின் உபதேசங்களையும் கல்வியையும் புறக்கணிக்காதே'' என்று.

நீ யாராவது ஒருவனை தூஷித்தாலும், யாராவது ஒருவனுடைய மனத்தைப் புண்படுத்திலும் உண்மையில் நீ இறைவனைத்தான் தூஷிக்கின்ருய், புண்படுத்துகின்ருய்.

ஒரு பக்தன் நன்மையே வடிவமாக ஆகவேண்டும். அவன் எப்பொழுதும் ஜீவராசிகளுக்கு நன்மை செய்ய தயாராக இருக்க வேண்டும்.

கீதையிலே பகவான் கிருஷ்ணன், ''சர்வபூத ஹிதே ரதஹ'' என்று (அத். XII–4) கூறுகின்ருர். எவன் ஒருவன் மற்றவர்களுடைய நலத்தைக் கண்டு குதூகலமடைகின்ருனே அவன் இறைவனுடைய தரிசனத்தைப் பெறுகின்ருன். அவன் நாளடைவில் அத்வைத உணர்வை விருத்தி செய்து வருகிருன். உன்னுடைய உள்ளமாகிய பூங்காவிலே வெறுப்பு, சந்தேகம், பழி வாங்கும் எண்ணம், பொருமை, கர்வம், சுயநலம், ஆகிய களைகளை நீக்கி அன்பை விருத்தி செய். அன்பினுடைய சக்தி வர்ணிக்க முடியாதது. அன்பின் மூலமாகத்தான் உள்ளங்களை இணைக்க முடியும். அன்பின் மூலமாகத்தான் சுயராஜ்ஜியத்தை அடைய முடியும் ஆகவே அன்பு நிறைந்தவர்களாக இருந்து எல்லோரிடமும் அன்பைப் பரப்பிக் கொண்டு இருங்கள். குழந்தாய், அன்பு, மதம் ஆகியவற்றின் உண்மையான தன்மைகளைப் புரிந்துகொண்டு அன்பும், ஆத்ம சரணுகதியும் நிறைந்த மத வாழ்க்கையை நடத்துக.

விஹித கர்மங்கள் என்பவை சாஸ்திரங்களில் கூறப் பட்டிருக்கும் அக்னி ஹோத்ரம், பஞ்சமஹா யக்ஞம் முதலிய வற்றைப் போன்ற சட்டபூர்வமான காரியங்களாகும். நிஷேதகர்மங்கள். "குடிக்காதே: திருடாதே" முதலி யவை போன்ற தடை செய்யப்பட்ட காரியங்களாகும்

நீ ஏதாவது ஒரு கெட்ட செய்கையையோ அல்லது பாவத்தையோ செய்து விட்டால் ஜபம் செய்யும் எண் ணிக்கை மாலைகளை (அதிகமானது ஐம்பது மாலைகள் ஆகும்) அதிகப்படுத்துக. ஒரு ஞாயிற்றுக்கிழமை பூரண விரதம் (நிராஹாரா – நிர்ஜலத்துடன் – அன்னம் தண்ணீர் இல்லாமல்) அனுஷ்டிப்பாயாக. இளகிய உள்ளத்துடன் அதை மறுபடி திரும்பவும் செய்வதில்லை யென்ற உறுதி யான தீர்மானத்துடன் பச்சாதாபப்படு. ஏதாவது ஒரு ஞாயிற்றுக்கிழமை உனது கையால் ஏழைக்கு அன்னமிடு. தர்மம் ஏராளமான பாவங்களையும் போக்குகிறது" யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவநானி மனீஷிநாம் – யக்ஞம் தானம் தவம் ஆகியவைகள் புத்திமான்களை தூய்மைப் படுத்தக்கூடியவைகள் (கீதை அத். XVIII-5)

நீ பக்தியை விருத்தி செய்து கொள்ள விரும்பினுல் நீ முட்களைக் களைந்தெறிய வேண்டும். காமம், வெகுளி, பொருமை, பேராசை, வெளி வேஷம், கர்வம், கபடு, தந்திரம் முதலியவைகளைப் போன்ற உட்புற முட்கள் சில இருக்கின்றன. கெட்ட சேர்க்கை, அருவருக்கத்தக்க கற்பனைக் கதைகள், கெட்ட காட்சிகள், கேட்கக்கூடாத பாட்டுக்கள், படக்காட்சி சாலைகள் முதலியவைகளைப் போன்ற வெளிப்புற முட்களும் சில இருக்கின்றன.

சதாசாரம் (நன்னடத்தை) இல்லாமல் பக்தியை விருத்தி செய்வது என்பது இயலாத காரியம் எவ்வாறு நோயானது மருந்தின் மூலமாகவும் அதே போல ஆகாரக் கட்டுப்பாடுகள் மூலமாகவும் குணப்படுத்தப்படுகின்றதோ அம்மாதிரியே இறை உணர்வானது பக்தி, சதாசாரம்

ஆகியவற்றின் மூலமே பெறவல்லது. பக்தி என்பது மருந்து சதாசாரம் என்பது ஆகார விதிகள் அல்லது பத்தியத்தைக் குறிக்கின்றது.

மோக்ஷ மார்க்கமானது தூய்மையிலே ஆரம்பித்து ஞானத்திலே போய் முடிகிறது. சமரச அன்புதான் மோக்ஷத்திற்கு வாயிலாக இருக்கிறது. நீ அன்பை படிப் படியாக வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. தன்னல மற்ற சேவை மனத்திலுள்ள மாசுகளை அகற்றி தூய்மை யான அன்பை விருத்தி செய்துகொள்ள உதவுகிறது.

ஒரு பக்தன் பக்தியை விருத்தி செய்து கொள்ள விரும் பினால் அவன் கீழ்க்கண்ட பதினொரு நற்குணங்களையும் பயின்று வரவேண்டும் என்று ஸ்ரீ ராமானுஜர் எடுத்துரைக் கின்றார். அவைகளாவன: விவேகம் அல்லது பகுத்தறிவு, விமோகம் அல்லது இறைவனைத் தவிர சகலத்தினின்றும் விடுபட்டு இறைவனை அடைய தீவிர இச்சை கொள்ளுதல், அப்யாஸம் அல்லது இடைவிடாத இறை சிந்தனை, கிரியா அல்லது மற்றவர்களுக்கு நன்மை செய்தல், கல்யாணம் அல்லது எல்லோருக்கும் மங்களம் உண்டாக எண்ணுதல், சத்தியம் அல்லது உண்மை, ஆர்ஜவம் அல்லது நேர்மை, தயை அல்லது கருணை, அஹிம்ஸை அல்லது ஜீவகாருண் யம்; தானம் அல்லது கொடை; அனவசாதம் அல்லது உற்சாகமும் நம்பிக்கையும்.

நன்னடத்தை மட்டும் விடுதலையை யளிக்கப் போது மானதல்ல. அதனோடு கூட சிரத்தை, விஸ்வாசம், பக்தி ஆகியவைகளும் சேர்க்கப்பட வேண்டும். நன்னடத்தை மூலம் நிலம் நன்றாகத் தயார் செய்யப்பட்டு விட்டால் அந்த நன்னடத்தை உள்ளவர்களுடைய மனத்தில் பக்தி யாகிய விதையை நன்றாக விதைக்கலாம்.

ஆரம்பத்தில் சாதகர்களுக்கு சத்சங்கம் தனிமை, சத்துவ உணவு, ஆகியவைகள் இன்றியமையாதவை

களாகும். இம்மூன்று உபகரணங்களுமில்லாமல் பழைய உலகாயத சமஸ்காரங்கள் மாறுவது என்பது அரிது.

விஷ்ணுதாஸ் என்பவர் முன்னேறிய ஒரு யோகி அவர் சித்ர கூடத்திலிருந்து 2 மைல் தொலைவிலுள்ள ஒரு காட்டில் வசித்து வருகிறார். அவர் சர்ப்பங்கள் சூழ்ந்துள்ள இடத்தில் படுத்துறங்குகிறார். அவரிடம் குழந்தை போன்ற எளிமை காணப்படுகிறது. அது ஒரு பக்தனுடைய குறிப்பிடத்தக்க ஒரு அம்சமாகும்.

ஒரு கொல்லன் ஒரு இரும்பின் கழியைக் காய்ச்சி, பட்டடையின் மீது வைத்து அடித்து வளைத்து அவனுடைய பல்வேறு காரியங்களுக்கு உதவக்கூடிய ஒரு முழுக் கருவி யாக ஆக்குவதற்கு அதைப் பலவிதமாக கையாளு கின்றான். இதே போல இறைவன் தன்னுடைய லீலைக்காக ஜீவாத்மாக்களின் உடல்களையும், உள்ளங்களையும் பக்குவ மான கருவிகளாக ஆக்குவான்பொருட்டு பலவிதமான சோதனைகளையும் அனுபவங்களையும் அவர்களுக்குக் கொடுக்கின்றான்.

"ஓ கிருஷ்ண பகவானே, ஓ ஜகத்குரு, அடிக்கடி எங்களுக்கு ஆபத்துக்கள் வந்து கொண்டே இருக்கட்டும். ஏனென்றால் அந்த சந்தர்ப்பங்களிலெல்லாம் உன்னுடைய தரிசனம் எங்களுக்குக்கிட்டும். அதன் மூலம் நாங்கள் அமரத்துவத்தையும் மேலான பேரானந்தத்தையும் அடைய முடியும்" என்று குந்திதேவி கூறுகின்றாள்.

இறைவனுடைய விருப்பத்திலே ஆழ்ந்த நம்பிக்கை வை. இன்பத்திலும் துன்பத்திலும், சுகத்திலும், துக்கத் திலும், செல்வாக்கிலும், வறுமையிலும், பிறப்பிலும், இறப் பிலும் நீ எதிர்நோக்கும் உன்னுடைய தினசரி வாழ்க்கை யிலே இறைவனுடைய கரத்தைப் பார். உள்ளே இருதயத் திற்குள்ளும், தலைக்கு மேலே இறைவனுடனும் வேலை செய். நீ வாழ்க்கையிலே வெற்றியையும் இறை உணர்வை யும் பெறுவாய்.

இயற்கை அன்னை எப்பொழுதும் முன்னேக்கியே நடக்கின்ருள். அவள் உன்னுடைய அன்னபானுதிகளை முன்கூட்டியே தயார் செய்து விடுகின்ருள். அவள் உன்னுடைய உடலை பாதுகாத்துக் கொள்கிருள். ஆகவே அன்னபானுதிகளைப்பற்றிக் கவலைப் படாதே. சாதாரணமாக இரு. அன்னையிடமும் அவளுடைய கருணையின் பேரிலும் நம்பிக்கை கொண்டிரு.

உற்சாகத்துடன் சந்தோஷமாயிரு. பயமற்றிரு. எளிமையாக இரு. தைரியமாக இரு. தூய்மையாக இரு. தயாளமாக இரு. இப்பொழுது உனக்கு மோக்ஷக் கதவு அகலத் திறந்து வைக்கப்பட்டிருக்கும்.

"ஜாதி வித்யா மஹத்வஞ்ச்ச ரூப யௌவனமேவச
ஏதேஹி பக்திமார்க்கேஷு ஜநேஷு பஞ்ச கண்டகா:"

ஜாதி, கல்வி, அந்தஸ்து, அழகு, யௌவனம் ஆகியவைகள் பக்தி மார்க்கத்திலேயுள்ள ஐந்து முட்கள் என்பதை அறிந்துகொள்.

நீ எட்டு மணி நேரத்தை தூக்கத்திலும், மிகுதியுள்ள நேரத்தை வீண்பேச்சு, பொய் பேசுதல், மற்றவர்களை ஏமாற்றுதல், சுயநலக்காரியங்கள் பணம் சம்பாதித்தல் ஆகியவற்றிலும் செலவழித்து விடுகிருய். இறைவனுடைய சேவையிலே, அவனுடைய நாமத்தைப் பாடுவதிலே, தெய்வீக சிந்தனையிலே ஒரு அரை மணி நேரமாவது செலவழிக்காவிட்டால் நீ எவ்வாறு ஆன்மீக நன்மைகளை எதிர்பார்க்க முடியும்? அமரத்துவத்தை எப்படி எதிர் பார்க்க முடியும்?

ஒரு குறிப்பிட்ட குற்றம் அல்லது தவற்றிற்காக ஒரு முறை இறைவனிடம் நீ மன்னிப்புக் கேட்டால் மறுபடி இறைவனுடைய நாமத்தை ஒருசில தடவை ஜபித்து விட்டால் பாவம் போய்விடுகிறது என்று எண்ணிக் கொண்டு அதே குற்றத்தைத் திரும்பத்திரும்ப ஒருபோதும் செய்யக்கூடாது. நீ செய்த குற்றங்களுக்காக ஆழ்ந்த

வருத்தம் நிறைந்த உள்ளத்துடன் மிகவும் கடுமையாக பச்சாத்தாபம் படவேண்டும். அந்த பாவத்தை மறுபடி செய்வதில்லை. என்று உறுதியான தீர்மானம் செய்து கொள்ளவேண்டும்.

உன்னுடைய இஷ்ட தெய்வத்தின் பேரில் மனப்பூர்வமான பக்தி உன்னிடம் இருந்தால், அவனுடைய பாத கமலங்கள் பக்கமாக மனம் பூரணமாகக் கவரப்பட்டால் நீ லக்ஷியத்தை சுலபமாக அடைந்து விடுவாய். எல்லா விதமான தடைகளும் நீக்கப்பட்டுவிடும். எல்லா சாதனைகளும் சுலபமாக்கப்பட்டுவிடும்.

இறைவனை ஒவ்வொரு பொருளிலும் காண்பாயாக. பூரணமான ஆத்ம சரணுகதியும் பற்றற்றதுமான ஒரு எடுத்துக்காட்டான வாழ்க்கையை நடத்து. உனக்கு இறைவனுடைய தரிசனம் கிட்டும். எல்லாவிதமான துன்பங்களும் தீர்ந்துவிடும். இதுதான் ராமாயணம், பாகவதம் ஆகியவற்றின் முக்கியமான உபதேசமாகும்; இந்த விஞடி முதற்கொண்டே இதைக் கடைபிடிக்கத் தொடங்கு.

உன்னுடைய அடிமனத்திலிருந்து மனப்பூர்வமாக சிவபிரானைப் பிரார்த்தனை செய். ஓம் நமச்சிவாய என்று மானசீகமாக காலையில் 4 மணியிலிருந்து 7 மணி வரைக்கும் மூன்று மணி நேரமும், இரவு 7 மணியிலிருந்து 10 மணி வரை மூன்று மணி நேரமும் அதே பாவனையுடனும், ஒரே முகமான பக்தியுடனும் ஜபி. மனம் அடங்காமல் அலைய ஆரம்பித்தால் சிறிது நேரம் மந்திரத்தை உரக்கச் சொல். பிறகு மானஸீக ஜபத்தை மேற்கொள். உனக்கு சிவபிரானுடைய தரிசனம் கிட்டும். இந்த உலகம், நண்பர்கள், உறவினர், சொத்து ஆகியவற்றையெல்லாம் மறந்துவிடு. ஆனுல் உனது இஷ்டமான சிவபெருமானை மட்டும் மறந்து விடாதே. எனதன்பார்ந்த பானர்ஜீ! சிவபிரான் உம்மை ஆசீர்வதிப்பாராக! ஜெயசிவ, ஜெயசிவ என்று சொல்லு. சிவமஹிம்ன ஸ்தோத்திரத்தை தினமும் ஜபித்துக் கொண்டிரு.

ஒரு நகரத்தின் சந்தடிகளுக்கிடையிலே யோகத்தை ஒரு சிறிது பயின்று வருபவன், ஆசை வலையில் சிக்க வைக்க இடமில்லாதிருக்கின்ற ஒரு தனிமையான இமய மலைக் குகையிலே ஆத்மனை தியானித்துக் கொண்டிருக்கும் சந்நியாசியைவிட தீரனாவான்.

இறைவனுடைய உதவியை வேண்டிக் கொண்டு சோம்பேறித்தனமாக உட்கார்ந்து கொண்டிராதே. எழுந் திருந்து வேலை செய்த வண்ணமாக இரு. ஏனெனில் எவனொருவன் தனக்குத்தானே உதவிக் கொண்டிருக்கின் றானோ அவனுக்குத்தான் இறைவன் உதவி புரிகின்றான். உன்னால் முடிந்த வரை நல்ல முறையில் செய். மிகுதியை இறைவனிடம் விட்டு விடு.

கோசல நாட்டிலே காதி (Gadhi) என்கின்ற ஒரு நல்ல பிராமணன் வசித்து வந்தான். அவன் காட்டிற்குச் சென்று ஒரு குளத்தில் கழுத்தளவு ஜலத்தில் நின்று கொண்டு 8 மாதங்கள் தவம் புரிந்தான். பிறகு ஓராண்டு காலம் ஒரு கை ஜலத்தை மட்டும் அவனுடைய தினசரி ஆகாரமாக அருந்திக் கொண்டு வாழ்ந்து வந்தான். பக வான் ஹரி அவனுக்கு முன்பு தோன்றி "இங்கிருந்து எழுந்து இந்தக் குன்றிலிருக்கும் குகையில் 10 ஆண்டுகள் தவம் செய்வாயாக. அப்பொழுது உன்னிடம் சாசுவத மானதும், உண்மையானதுமான பூர்ண ஞானம் உதய மாகும்" என்று கூறினார். அவனும் அவ்வாறே பத்து ஆண்டு காலம் அரும் பெரும் தவங்களைச் செய்து பூரண ஞானத்தை அடைந்தான்.

நீ பகவானுடைய நாமத்தை நினைத்துக் கொண்டும், எங்கும் அவனுடைய பிரசன்னத்தை உணர்ந்து கொண் டும், எல்லா முகங்களிலும் அவனைப் பார்த்துக் கொண்டும், தெய்வீகச் சுடரை பல்வேறு காரியங்களுக்கு இடையிலும் எரிந்து கொண்டே இருக்கச் செய்கிறாயா?

உலகாயத எண்ணங்களாலும், ஆசைகளாலும் தடுமாற்றமடையச் செய்யப்படும் உள்ளத்தில் இறைவனுடைய எண்ணங்கள் நுழைய முடியாது.

உன்னுடைய மனைவி, குழந்தைகள், செல்வம், நிலம் ஆகியவைகளிடம் செலுத்தும் அன்பையெல்லாம் ஒன்று திரட்டு. பிறகு இறைவனை நேசி. நீ இறைவனை ஒரு நிமிஷ நேரத்தில் உணர்வாய்.

இறைவன் இந்த உலகத்தின் இயந்திரத்திற்குப் பின்னால் நின்று கொண்டிருக்கும் சூத்திரதாரி. அவன் தான் உன்னுடைய மனதிற்குள் வசிப்பவன். அவன் எல்லா செயல்களுக்கும் தலைமை வகிக்கின்றான். (கர்மாத் யக்ஷன்) உன்னுடைய செய்கைகளின் பலன்களைப் பகிர்ந்து கொடுப்பவன் அவனே. அவனுடைய நாமத்தைப் பாடிக் கொண்டும், அவனுடைய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டும் உன்னுடைய செய்கைகளின் பலன்களை அவனிடத்தில் ஒப்படைத்துக் கொண்டும் இறைவனிடத்தில் வசி.

உன்னுடைய குருவினுடைய உபதேசங்களிலும், சாஸ்திரங்களின் உபதேசங்களிலும், வழுவாத நம்பிக்கையும், தகிக்கின்றதும், நிரந்தரமானதுமான வைராக்கியமும், விடுதலைக்கான தகிக்கும் வேட்கையும், பிடிவாதமான விருப்பமும், தீப்போன்ற தீர்மானமும், கழுதைக்கிருக்கும் பொறுமையும், இரும்பைப் போன்ற உறுதியும், அட்டை போன்ற விடாப் பிடியும், குழந்தை போன்ற எளிமையும், கடிகாரம் போன்ற ஒழுங்கும், உன்னிடம் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நீ வாழ்க்கையின் லக்ஷயமாகிய மோக்ஷத்தை அடைவதில் வெற்றி காண்பாய்.

இறைவனுடைய கருணையின்றி உன்னால் இந்த சம்சார சாகரத்தைக் கடக்க முடியாது. ஆகவே ஜபம்,

கீர்த்தனம், உபாசனே, ஆத்மசரணுகதி ஆகியவற்றின் மூலம் அவனுடைய கருணையைப் பெறு.

உன்னிடம் நம்ரதை (பணிவு) இல்லாமலும், உறுதி யில்லாமலும், அடக்கமில்லாமலும், ஆண்டவனிடத்து பரி பூரண சரணுகதி செய்யாமலும் நீ எப்படி அவனுடைய அருளேப் பெற முடியும் ?

இறைவனுடைய புகழை அசையாத மனத்துடன் பாடு. ஏகாக்ர மனத்துடன் (ஜபமாலே) மணியை உருட்டு. வழுவாத நம்பிக்கையுடன் அவனுடைய நாமத்தை ஜபி. ராமாயண, பாகவத காதைகளே பரவசமான கவனத் துடன் கூர்ந்து கவனி. நாசிக், காசி, ஹரித்துவாரம், பிரயாகை போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றுவா. வேட்டையாடுவதைப்போல் சாதுக்களேத் தேடி அலே. நம்பிக்கையுடன் மனப்பூர்வமாகத் தேடு. சிறிதளவு காட்சிகளே வேடிக்கை பார்ப்பதோடு மட்டும் திருப்தியடைந்துவிடாதே. அவர்களிடமிருந்து சில ஆன்மீக உபதேசங்களேப் பெற்று அவற்றை தினசரி நடை முறைக்குக் கொண்டுவா. நன்னடத்தையை விருத்தி செய்துகொள். பிறகு நீ சம்சார சாகரத்தை சுலபமாகக் கடந்து விடலாம்.

ஆரம்பத்தில் பிரேமையாகிய மருந்துக் கலவையை காலே 4 மணிக்கும், இரவு 8 மணிக்கும் ஆக இரண்டு முறை உட்கொள். ஒரு தேக்கரண்டி* சிரத்தையை 3 தேக்கரண்டி பிரேமையுடனும், அரை தேக்கரண்டி பாவனேயுடனும், சேர்த்து கலக்கு. இக்கலவையோடு 2 தேக்கரண்டி ஹரி கீர்த்தனத்தையும், ஒரு அவுன்ஸ் ஜபத்தையும் சேர்த்துக்கொள். படிப்படியாக கலவையில் அளவை அதிகரித்துவா. இது அமரத்துவத்தை அடை

---

* தேக்கரண்டி, அவுன்ஸ் என்பவற்றை பங்கு, அல்லது பாகம் எனக் கொள்க.

வதற்கும், பிறப்பு இறப்பாகிய நோயை ஒழிப்பதற்கும், தவருத சர்வரோக நிவாரணியாகும்.

இரவிலும், காலையிலும் நாமஸ்மரணையையும், ஒரு சிறிது கீர்த்தனத்தையும் பயின்றுவா. உன்னுடைய ஆன்மீகப் பயிற்சிக்கு இது போதுமானது. விடியற்காலை 4 மணிக்கு எழுந்திரு. ஏற்கனவே உன்னிடம் இந்தப் பழக்கம் இல்லாவிட்டால் இந்தப் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள். தினசரி கீதையில் ஒரு சில ஸ்லோகங்களைப் படி.

பிரயாணத்திலிருந்தால் கூட நீ ஜபமும் கீதா பாராயணமும் செய்ய வேண்டும். நீ பிரயாணத்தின்போது சாப்பிடாமலும், குளிக்காமலுமா இருக்கிருய்? உனக்கு தினசரி உணவைக் கொடுத்து ஒவ்வொரு வழியிலும் உன்னைப் பாதுகாத்து வரும் அந்தர்யாமிக்கு நன்றி கெட்டவனுக ஆகிவிடாதே.

சிறிது நேரம் நாமஜபம் செய். கொஞ்ச நேரம் உருவத்தை தியானம் செய். பிறகு சிறிது நேரம் இறைவனுடைய குணுதிசயங்களைத் தியானி. ஒவ்வொரு குணுதிசயத்தைப் பற்றியும் உன்னுல் எவ்வளவு முடியுமோ அவ்வளவு உன்னுடைய கருத்தை விரிவாக்கிக்கொண்டு செல்லலாம்.

சங்கீர்த்தனம் உனது தினசரி உணவாகட்டும். ராம நாமம் உன்னுடைய ஆறுதலாகவும், அடைக்கலமாகவும் ஜீவாதாரமாகவும் இருக்கட்டும். இந்த சம்சார சாகரத்தை கடக்க உனக்குப் பத்திரமான படகாக இருக்கட்டும்.

உன்னுடைய விடுமுறை நாட்களின் போது நீ சிறிது காலம் நல்ல ஆன்மீக அலைகளுடன் கூடிய மேலான சூழ்நிலையில் உன்னுடைய ஆன்மீக குருவின் கீழோ அல்லது வேறு பக்குவமடைந்த ஆத்மாவோடு கூடவோ தங்கியிருப்பாயேயானுல் உனக்கு துரிதமான ஆன்மீக முன்னேற்றம்

ஏற்படும். நீ ஆழ்ந்த தியானத்திலும் சமாதியிலும் சீக்கிர மாக நுழைவாய். தியானம் என்பது உனக்கு ஒரு சுலப மான காரியமாகிவிடும். ஆன்மீக வழியில் நீ ஒரு உறுதி யான நிலையை அடைந்து விடுவாய். பிறகு நீ உன் னுடைய தியானத்தை தனிப்பட உன்னுடைய வீட்டி லேயே செய்யலாம்.

முராசுரன் தேவர்களைக் கொடுமைப்படுத்தினன். தேவர்கள் ஹரியிடம் போய் சரணடைந்தனர். பகவான் ஹரி அந்த அசுரனைக் கொல்வதற்காக யோக மாயாவை அனுப்பினர். யோகமாயா பகவானுடைய கட்டளையை சிரமேற்கொண்டு அந்த அசுரனைக் கொன்று விட்டது. பிறகு பகவான் ஹரி யோக மாயாவைப் பார்த்து "ஓ யோகமாயா யார் ஏகாதசி விரதம் அனுஷ்டிக்கிறர்களோ அவர்கள் பாவத்திலிருந்து விடுபடுபவர். நீ இனிமேல் ஏகாதசி என்ற பெயரில் அழைக்கப்படுவாய்" என்று கூறினர்.

பிரம்மாவினுடைய நெற்றியிலிருந்து வீழ்ந்த வியர்வை யானது ஒரு பிசாசு வடிவத்தைக் கொண்டு பகவானைப் பார்த்து, "ஓ தேவே, நான் வசிப்பதற்கு எனக்கு ஒரு இடம் கொடுக்க வேண்டும்" என்று கேட்டது. அதற்கு பிரம்மா, "ஓ பிசாசே, நீ ஏகாதசி நாளில் மனிதர்களால் உண்ணப்படும் சோற்றுப் பருக்கையிலே போய் இருந்து அவர்களுடைய வயிறுகளிலே புழுக்களாக ஆகக் கடவாய்" என்று கூறினர்.

பதினேறு புலன்களையும் அதாவது பத்து இந்திரியங் களையும், மனத்தையும் புறப் பொருள்களிலிருந்து பின்னுக் கிழுத்து மனத்தை பகவான் ஹரியினுடைய பாதகமலங் களிலே பதிய வை. இதுதான் உண்மையான ஏகாதசி நாளாகும். நீ ஏகாதசி யன்று விரதமிருந்தால் உன் னுடைய மனத்தை சுலபமாக இறைவனிடம் பதிய வைக்கலாம்.

புலன்களின் வாயில்களை மூடு. எண்ணங்கள், மனோ விகாரங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றை அமைதிப் படுத்து. விடியற் காலையில் ஆடாமல் அசையாமல் உட்கார். காட்சிகளையும், வர்ண ஒளிகளையும் புறக் கணித்து விடு. ஏற்றுக் கொள்ளத்தக்க நிலையை உடைய வனாக இரு. இறைவனோடு தனியாகச் செல். அவனோடு ஐக்கியமாகு. மோனத்திலே நீடித்திருக்கும் அமைதியை அனுபவி.

ராமாயணம் முழுவதையும் தூய்மையுடனும், ஏகாக் ரத்துடனும் 108 முறை வாசி. நீ தினசரி இதற்காக 3 மணி நேரம் செலவிட்டால் இதை மூன்று ஆண்டுகளில் செய்து முடிக்கலாம். ஒரு மாதத்தில் புத்தகத்தை மூன்று முறை வாசிக்கலாம். உனக்கு சித்திகள் ஏற்படும். ராம பிரானுடைய தரிசனம் கிட்டும்.

சில நாட்களில் கடுமையான தவமும் தியானமும் செய். உன்னுடைய தியான அறைக்குள் விடியற்காலை 4 மணிக்கு நுழை. அந்நாளை ஒரு நிர்ஜல நாளாக ஆக்கிக் கொள். எந்தவிதமான உணவோ பானமோ எடுத்துக் கொள்ளக்கூடாது. உன்னுடைய இஷ்ட மந்திரம் அல்லது ஏதாவது மந்திரத்தை ஜபித்துக் கொண்டேயிரு. மறு நாள் காலை 8 மணிக்கு கதவைத் திறக்கவும். நீ இதை ஒரு ஞாயிற்றுக்கிழமையில் ஏற்பாடு செய்து கொள்ளலாம். அது சௌகரியமாக இருக்கும். உன்னுடைய மனோ நிலையையும் உணர்ச்சிகளையும் ஆராய்ந்து பார். உனக்கு அசாதாரண ஆன்மீக அனுபவங்கள் ஏற்படும். நான் உனக்கு உறுதி கூறுகின்றேன். ஆன்மீகப் பயிற்சியிலே ஆவலுடையவனாக இரு. மனப்பூர்வமாக இரு. (Be sincere)

இதோ இங்கு 10 நாளைக்கான ஒரு சாதனை. நீ இதை கிருஸ்துமஸ் விடுமுறையிலோ அல்லது பூஜா விடுமுறை யிலோ அல்லது கோடை விடுமுறையிலோ செய்யலாம். நல்ல காற்றோட்டமுள்ள ஒரு அறையில் உன்னை மூடிக்

கொள். யாரிடமும் பேசாதே. யாரையும் பார்க்காதே. எதையும் கேட்காதே. விடியற்காலை 4 மணிக்கு எழுந்திரு. மஹா மந்திர ஜபத்தையோ அல்லது காயத்திரியையோ, ஓம் அல்லது உன்னுடைய குரு மந்திரத்தையோ ஆரம் பித்து சூரிய அஸ்தமனத்தின் போது முடி. பிறகு கொஞ்சம் பால், பழங்கள் அல்லது கீர் (Kheer) எடுத்துக் கொள். ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ஓய்வெடுத் துக் கொள். ஆனால் ஜபத்தை தொடர்ந்து செய். பிறகு மறுபடியும் ஜபத்தை ஆரம்பி. இரவு 11 மணிக்கு படுக் கைக்குச் செல். ஜபத்தோடு நீ தியானத்தையும் சேர்த்துக் கொள்ளலாம். குளியல், சாப்பாடு முதலிய எல்லாவற்றிற் கும் அறைக்குள்ளேயே ஏற்பாடு செய்து கொள். முடிந் தால் இரண்டு அறைகளை ஒன்று குளித்துக் கொள்வதற்கும் மற்றொன்று தியானத்திற்கும் ஏற்பாடு செய்து கொள். இந்த ஜபத்தை வருடத்தில் 4 முறை செய். இந்தப் பயிற்சியை 30 அல்லது 40 நாட்கள் வரை செய்யலாம். உனக்கு அதிசயிக்கத்தக்க பலன்களும், பல்வேறு வித மான அனுபவங்களும் ஏற்படும். நீ சமாதி நிலையில் புகுவாய். நான் உனக்கு உறுதியளிக்கின்றேன்.

இதோ இங்கு முன்னேறிய மாணவர்களுக்கு ஒரு சாதனை. ஆன்மீகப் பாதையில் துரிதமான கணிசமான முன்னேற்றமடைய மிகவும் உபயோககரமானது. விடியற் காலை 4 மணிக்கு எழுந்திரு. ஸ்நானம் செய்து கொள். அல்லது கை, கால், முகம் மட்டும் கழுவிக் கொள். நீ ஜயம் பெற்றிருக்கும் ஏதாவது ஒரு ஆசனத்தில் அமர்ந்து உன் னுடைய ஜபத்தை ஆரம்பி. 14 மணி நேரத்திற்கு எந்த விதமான அன்ன பானாதிகளையும் எடுத்துக் கொள்ளாதே. ஆசனத்தை விட்டு எழுந்திருக்காதே. சுலபமாகச் சமாளித்துக் கொள்ள முடியுமானால் ஆசனத்தை மாற்றாதே. சூரியாஸ்தமனத்தின் போது ஜபத்தை முடித்துக் கொள். அஸ்தமனத்திற்குப் பின் பால் பழங்களை எடுத்துக் கொள். இல்லறத்தார்கள் இதை விடுமுறை நாட்களில் பயிலலாம். இதை பட்சத்திற்கொரு முறையோ (15 நாட்கள்) மாத

மொரு முறையோ அல்லது வாரம் ஒரு முறையோ பயின்று வரலாம்.

ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் சேவை செய். மகாத்மாக்களுக்கு தொண்டு செய். பக்தியை வளர்த்து வா. சத்சங்கத்திலிரு. கையில் பழங்களுடன் சாது சந்நியாசிகளைத் தேடித் திரி. ஜபம் செய். 'ராம, ராம, ராம என்று அவனுடைய நாமத்தை ஜபி. ஓம் என்று பாடு. எப்பொழுதும், எங்கு பார்த்தாலும் அவனுடைய பிரசன்னத்தை உணர். சத்தியம், ஞானம், பேரானந்தம் ஆகியவற்றில் வசித்திரு. மோன நிலையில் புகு. ஞானம் தானுகவே வந்தடையும்.

ஓ உலகப் பிரியர்களே, கடவுளின் தரிசனத்தைப் பெறுவது கடினமல்ல. அவனை மகிழ்விப்பதும் மிகவும் சிரமமல்ல. அவன் எங்கும் இருக்கின்ருன். எல்லோருள்ளும் இருக்கின்ருன். அவன் உங்களுடைய இருதயங்களிலே அமர்ந்திருக்கின்ருன். அவனை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருங்கள். (சாகார, சகுணம்).

பிரஹ்லாதன், நாரதர், பராசரர், புண்டரீகர், ருக்மாங்கதன், அர்ஜுனன், வசிஷ்டர் போன்ற மகிமை வாய்ந்த பக்தர்களையும் அவர்களுடைய வாழ்க்கைகளையும் நினைத்துக் கொண்டிரு. நீ ஊக்கம் பெறுவாய். உன்னுடைய மனம் உயர்த்தப்படும். உன்னுடைய இருதயம் பக்தியால் நிரப்பப்படும்.

பகவான் கிருஷ்ணனுடைய பக்தர்கள் தினமும் ''ஓம் நமோ பகவதே வாசுதேவாய'' மந்திரத்தை உரக்கவும், மௌனமாகவும் (இதில் உதடுகள் மட்டும் அசையும்) மானஸிகமாகவும் ஜபம் செய்ய வேண்டும். அவர்கள் அவர்களுடைய இருதயத்திலே கிருஷ்ண பரமாத்மா கையிலே குழலேந்திய வண்ணம் இருக்கும் உருவத்தை வைத்துக்கொள்ள வேண்டும். இது எண்ணத்திற்குப் பின்னணியாக அமைய வேண்டும். அவர்கள் நடந்துகொண்

டிருக்கும்போதும், வேலை செய்து கொண்டிருக்கும்போதும் "ஸ்ரீ கிருஷ்ண கோவிந்த ஹரே முராரே, ஹே நாத நாராயண வாசுதேவா" என்று பாடவேண்டும். மனம் சோர்வடையும்போது அவர்கள் இந்த த்வனியைப் பாட வேண்டும். அவர்கள் பாகவதத்தைப் படிக்க வேண்டும். அப்பொழுது அவர்களுக்கு துரிதமாக தரிசனமும் அனுபூதியும் கிட்டும். சிவ பக்தர்கள் "ஓம் நமசிவாய" என்று ஜபிக்க வேண்டும். அவர்கள் சிவ புராணம் படிக்க வேண்டும். அவர்கள் "மஹாதேவ சம்போ காசி விஸ்வநாத.கங்கே" அல்லது "ஓம் சிவ சங்கரா, ஹரஹர சங்கரா, ஜெய ஜெய சங்கரா, நமாமி சங்கரா," அல்லது "சிவாய நம ஓம், சிவாய நம: சிவாய நம ஓம் நமசிவாய" என்று பாட வேண்டும்.

ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் சேவை செய். மகாத்மாக்களுக்குத் தொண்டு செய். பக்தியை வளர்த்து வா. சத்சங்கத்திலிரு. சாது சந்நியாசிகளைத் தேடித் திரி. ஜபம் செய். அவனுடைய நாமாவை ஜபி "ஓம்" என்று பாடு. அவனுடைய பிரசன்னத்தை எப்பொழுதும் உணர். சத்தியம், ஞானம், பேரானந்தம் ஆகிய ஒளியில் களிப்புற்றிரு. மோனத்தில் புகு. ஞானம் தானாகவே வந்தடையும். ஒரு ஏழை ஹரி பக்தன் இந்த அற்ப உலகாயத உடைமைகளை உதறித் தள்ளுவதின் மூலம் ஹரியினுடைய எல்லா செல்வங்களையும் (தெய்வீக ஐஸ்வரியம்) பெறுகின்றான்.

பிரஹ்லாதன், துருவன் ஆகியவர்களைப் போல சிரத்தையோடு பிரார்த்தனை செய். ராதையைப் போல அவன் பெயர் பாடு. மீராவைப் போல் தனிமையில் கதறியழு. கௌராங்க மஹாப் பிரபுவைப் போல் கீர்த்தனை செய். வங்காளத்து ராம் பிரசாத்தைப் போல் பஜனை பாடு. சைதன்ய மகாப்பிரபுவைப் போல ஆனந்தக் கூத்தாடி பாவ சமாதியைப் பெறு. வால்மீகி, துக்காராம், ராமதாஸர் போன்று அவனுடைய நாமத்தை ஜபி.

உனக்கு விடுமுறை கிடைக்கும்போதெல்லாம் நீ உடனே பிரயாகை, ரிஷிகேசம், காசி, கன்கல், ஹரித்துவாரம், நாசிக், பத்ராசலம், அயோத்தி, பிருந்தாவனம், பண்டரிபுரம் அல்லது நவத்வீபத்திற்கு ஓடு. அங்கு ஏகாக்கிரத்துடன் அதிகமாக ஜபம் செய். சாதுக்களையும் மகாத்மாக்களையும் பின் தொடர்ந்து உன்னுடைய மரியாதையைக் கையில் பழங்களுடனும், பாவம், மனப்பூர்வத்துடனும் அவர்களுக்கு காணிக்கையாக்கு. அவர்களுடைய உபதேசத்தைப் பெற்று அவற்றைக் கடுமையாகக் கடைபிடி. அவர்களோடு சில நாட்கள் தங்கியிரு.

பாகவதர்களுடைய சேவை, இறைவனுடைய நாமாவளி, சத்சங்கம், இறைவனுடைய நாம பஜனை, பாகவதம் அல்லது ராமாயண பாராயணம், பிருந்தாவனம், பண்டரீபுரம், சித்ரகூடம், அயோத்தி ஆகிய இடங்களில் வாசம் – இந்த ஐந்தும் பக்தியை வளர்த்துக்கொள்ளும் ஐந்து வழிகளாகும்.

எங்கு சத்சங்கம் நடக்கவில்லையோ, எங்கு சாதுக்கள் வாசம் செய்யவில்லையோ, எங்கு சங்கீர்த்தனம் நடத்தப்படுவதில்லையோ, எங்கு இறை வழிபாடு செய்யப்படுவதில்லையோ, அப்பேர்பட்ட இடமானது கண்கவரும் இயற்கைக் காட்சி மிகுந்திருப்பினும் வாசம் செய்வதற்கு தகுதியற்றதாகும்.

ஒரு பக்தனுடைய உள்ளத்திலே உண்மையான கடவுள் ஏக்கம் அல்லது தாகம் ஏற்பட்டுவிட்டதென்றால் அதற்கு முதல் அடையாளம் அவனைப் பசியும், தாகமும் துன்புறுத்தமாட்டா. அவன் அவனுடைய அன்ன பானுதிகளை மறந்து விடுவான். தாயானவள் தனது மகளுடைய திருமணத்திற்கான காரியங்களில் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் பொழுது அவள் தன்னுடைய அன்ன பானுதிகளை மறந்து விடுகின்றுள். இருந்தாலும் அவள் உற்சாகத்துடனும், தெம்பாகவும் இருக்கின்றுள். ஒருவன் ஒரு நாடகத்

திற்கோ அல்லது சங்கீதக் கச்சேரிக்கோ சென்றுவிட்டால் அவன் பசி அல்லது தாகத்தினுல் துன்புறுத்தப்படுவதில்லை. ஏனெனில் அவனுடைய மனம் சங்கீதம் அல்லது அழகான காட்சிகளை ரசித்துக் கொண்டிருக்கிறது. ஒருவன் தன்னுடைய மகனை இழந்து விட்டால் அவனைப் பசியும் தாகமும் தாக்குவதில்லை. உனக்கு சாப்பாடு கிடைப்பதிலே சிறிது காலதாமதம் ஆனுலோ அல்லது வகையான மதுரமான சாப்பாடு கிடைக்கவில்லை என்ருலோ, பதார்த்தங்களிலே போதுமான உப்பு இல்லை என்ருலோ உன்னுடைய மனம் அதிகமாகப் பாதிக்கப்படுமானுல் உனக்கு இறைவனிடம் பக்தி இல்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள். இதுதான் சரியான சோதனையாகும்.

ஜலத்திலிருந்து வெளியே எடுக்கப்பட்ட மீன் மறுபடியும் நீருக்குள் போகவும், கங்கையிலே மூழ்க வைக்கும் போது பையன் மீண்டும் நீரைவிட்டு வெளியே வருவதற்கும், தீப்பிடித்துக் கொண்ட வீட்டுக்காரனுக்கு தீயணைக்கும் படையினரைக் கூட்டி வருவதற்கும் என்ன உணர்ச்சி இருக்குமோ, அதே உணர்ச்சியும், அக்கரையும் அல்லது பயபக்தியும் இறைவனை உணர்வதற்கு ஒரு சாதகனிடம் இருக்குமானுல், அவனுக்கு இறை உணர்வு இந்த விஞடியிலே கிட்டும். இதில் சந்தேகம் என்பதே கிடையாது.

நீ இறைவனுக்கு உன்னுடைய காணிக்கையை பில்னி சபரி சமர்பித்த அதே மனே பாவனையில் சமர்பிக்கவில்லை. நீ இறைவனை, திரௌபதி துவாரகை நாதனை அழைக்கும் போது என்ன பாவத்தில் அழைத்தாளோ, அல்லது கஜேந்திரன் பகவான் ஹரியை எந்த பாவனையில் அழைத்தானே அதே பாவனையில் அழைக்கவில்லை. நீ உன்னுடைய அன்பிற்குரியவனை இன்னும் சந்திக்காமல் இருப்பதற்கு இதுதான் காரணம். இந்த பாவத்தை விருத்தி செய். உனக்கு உடனடியாக இறைவனுடைய தரிசனம் கிட்டும்.

ஆரம்பத்தில் நீ இறைவனேடு உரையாடுவாய். நீ அவனை ஸ்தூல உருவத்தில் காண முடியும். உன்னுடைய

உணர்வு தெய்வீகமாக ஆகும் பொழுது உரையாடல் நின்று விடும். நீ மௌன பாஷையை அல்லது இருதயத்தின் பாஷையை அனுபவிப்பாய். வைகரியிலிருந்து (வாய்ப் பேச்சு) நீ மத்யமா, பஸ்யந்தி, பரா (ஒலியின் சூக்கும வடிவங்கள்) ஆகியவற்றிற்குச் சென்று அதன் பயனுக நாதமற்ற ஓங்காரத்தில் அல்லது நாதமற்ற பிரம் மத்தில் நிலேத்திருப்பாய்.

ந தனம், ந ஞானம், ந சுந்தரீம்
கவிதாம் வ ஜகதீச காமயே
மம ஜன்மனி ஜன்மனீஸ்வரே
பவது தத்பக்திர் அஹைதுகீ த்வயி.

ஏ பகவானே, ‘‘நான் செல்வத்திற்கோ, ஞானத்திற்கோ, அழகிய மங்கைக்கோ, அல்லது கவித்துவத்திற்கோ ஆசைப்படவில்லே. சர்வேஸ்வரா, என்னுடைய ஒவ்வொரு பிறவியிலும் என்னிடம் உனக்கான அஹைதுகீ பக்தி (சுயேச்சையான பக்தி) வளர்வதாக’’. இதை அடிக்கடி திருப்பிச் சொல்லவும்.

இறைவன் உன்னுடைய வெளிப் பகட்டை விரும்பவில்லே. அவன் உன்னுடைய இருதயத்தைத் தான் விரும்புகின்முன். ‘‘நீயே செய்தபடி செய், நான் உன்னுடையவன். எல்லாம் உன்னுடையவையே’’ என்று மறுபடியும் ஒரு முறை ஆந்தரிகத்திலிருந்து (அடி மனத்திலிருந்து) சொல்லு. உண்மையாக இரு. தூய அன்பாகிய பிரேமை காரணமாக அவனுக்காக விம்மி அழு. பக்தி மேலீட்டினுல் தனிமையில் கதறி அழு. கண்ணீர் மிகுதியினுல் துணி நனேயட்டும்.

அந்த அன்பு சுயநல மனப்பாங்குடையதாயிருந்தால் பட்ச பாதமும், அநீதியும் இருக்கும். சுயநல அன்பு மாறிக் கொண்டே இருக்கிறது. அது அழிந்து விடுகிறது அல்லது மங்கி விடுகிறது. அது நிரந்தரமானதல்ல.

மனைவி, மக்கள் மற்றும் உள்ள இதர பொருள்களிட முள்ள பொய்யான அன்பை நீ அழித்து விட்டால் நீ கடவுளைத்தான் நேசிக்க முடியும்.

ஐசுவரியம் அல்லது உன்னுடைய மனைவி, மக்கள் ஆகியவற்றிற்காகத் தொண்டு செய்யக் காட்டுகின்ற உற்சாகத்திலே ஒரு சிறு பகுதி உற்சாகத்துடன் நீ இறைவ னுக்கு சேவை செய்வாயேயாகில் நீ நிச்சயமாக மிகக் குறுகிய காலத்தில் இறையுணர்வு பெறுவாய். ஆண்டவ னிடத்தன்பு தகிக்கும் விரஹத்தோடு ஒரு க்ஷணகாலம் செலுத்தினலும், அதுவே எட்டமுடியாதபடி மிக தூரத் திலுள்ள பகவானை முன்னல் கொண்டு வந்து நேருக்கு நேர் நிறுத்தப் போதுமானது.

நீ உன்னுடைய அன்பை இறைவன் மீது ஏராளமாகச் சொரிந்தால் உனது சுகம், செல்வம், அழகு, அதிகாரம் ஆகியவற்றின்பாலுள்ள விருப்பம் படிப்படியாக மறைந்து விடும். நீ ஆண்டவனிடத்துக் காட்டுகின்ற அன்பு ஒன்று தான் ஏற்றுக் கொள்ளக்கூடியது. ஆண்டவனிடத்துக் கொள்ளும் தூய அன்பு சுய நலத்தையும், ஒருவனுக்குத் தன்னுடைய சொந்த உடலின் மீதுள்ள பற்றுதலையும் அழித்து விடுகிறது. அது ஆத்ம தியாக உணர்ச்சியை ஊட்டுகிறது.

ஒரு சாதகன் எனக்கு எழுதுகிருன்; யாரோ என் னுடைய கதவை விடியற்காலை 3 மணிக்கு வந்து தட்டி ஞர். நான் எழுந்து கதவைத் திறந்து விட்டேன் நான் பகவான் கண்ணனை தலையில் கிரீடத்துடன் கண்டேன். அவன் உடனே மறைந்து விட்டான். நான் சந்து வழியாக அவனைத் தேடி கொண்டு சென்றேன். நான் அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. பிறகு நான் மறுபடியும் என் வீட்டிற்கு வந்து அவனை மறுபடி காணுவதற்காக கதவிற்கு முன்பு விடியும் வரை உட்கார்ந்திருந்தேன். நித்திரா (சொப்பன நடத்தைக்காரர்கள் (Somnambulists) விஷயம் அசாதாரணமானவைகள் அல்ல. அவர்கள் நின்று கொண்

டும் நடந்து கொண்டும் இருக்கும் போது கூட கனவு காண்பார்கள். மேற்கூறிய சம்பவம் ஒரு அப்பட்டமான சொப்பனக்காரரின் கதை தான். நீ உன்னுடைய ஆன்மீக அனுபவத்தினுடைய — அது கனவாக இருக்கட்டும், நன வாக இருக்கட்டும் — உண்மையான தன்மையை அறிந்து கொள்வதில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். கண்ணபிரானுடைய தரிசனம் கிடைப்பது அவ்வளவு எளிதானதல்ல. சாதகர்கள் ஆரம்பத்தில் அடிக்கடி தவறு கள் செய்கிறார்கள்.

நீ யோகத்தினுடைய மிக உயர்ந்த லட்சியத்தை அடைய வேண்டுமென்கின்ற தீர்மானத்தில் உறுதியாக இருந்தால், ஆன்மீக வாழ்வின் லட்சியத்தை அடைந்தே தீருவது என்ற அசைக்க முடியாத உறுதிப்பாடு உன்னிடம் இருந்தால், உனக்கு ஒரு தற்காலிக வீழ்ச்சி ஏற்பட்டிருந் தாலும் கூட நீ எழுந்திருந்து மறுபடியும் முன்னேக்கிச் சென்றுகொண்டிருப்பாய். தெய்வீகத்தை உன்னிடம் உணர். தெய்வீகச் செல்வாக்கிற்கு உன்னைப் பூரணமாக திறந்து விட்டுவிடு. ஒவ்வொரு படியிலும் தெய்வீகக் கருணையினிடம் பூர்ண நம்பிக்கை வை. உன்னுடைய எல்லாச் செய்கைகளிலும் தெய்வீக வழியை உணர். தெய் வீக உண்மைக்காக சிரத்தையோடு ஆசைப்படு. இறை யுணர்வை அடையவும், தீவிர வைராக்கியத்தை அடைய வும், கொதிக்கும் ஆசையை விருத்தி செய்துகொள். எல்லா விதமான உலகாயதப் பேரவாவையும், லௌகீக ஆசை களையும் விட்டுவிடு. இது சரிவரச் செய்யப்பட்டுவிட்டால் தெய்வீக ஒளி இறங்கி வரும். உன்னிடம் யோகத்தில் துரித முன்னேற்றம் ஏற்படும். தெய்வீக பிரசன்னத்தை உன்னுடைய இருதயத்திலும், எல்லா முகங்களிலும், எல்லாப் பொருள்களிலும், எல்லா உணர்ச்சிகளிலும், எண் ணங்களிலும், எல்லா அசைவுகளிலும் உணர். உன் னுடைய சாதனையை விடாப்பிடியாக ஊக்கத்துடன் செய்துகொண்டே போ. தெய்வீகக் கருணை அருள் பாலிப் பதிலே சற்று தாமதமேற்பட்டால் பொறுமை இழந்து

விடாதே. ஆத்மனில் திருப்தியடைந்திரு. யோகத்தினுடைய கடைசி லட்சியமாகிய அமரத்துவத்தையும், சாசுவதப் பேரானந்தத்தையும் அடைவதில் நீ வெற்றி பெறக் கடமைப்பட்டிருக்கிருய்.

## 2. கடவுளிடம் நம்பிக்கை

விவேகம் வலிமையற்றது. நம்பிக்கை சர்வ வல்லமை பொருந்தியது. வலிமையற்ற விவேகம் வலிமை பொருந்திய விவேகத்திஞல் தோற்கடிக்கப்படுகிறது. நம்பிக்கையுடன் கூடிய ஒரு பக்தன் சுதாமரைப் போல இறைவனுடைய அந்தரங்க அறை வரைக்கும் நுழையலாம்.

நீ க்ஷேத்திர கணிதத்தில் (Geometry) பல விஷயங்களை இருப்பதாக வைத்துக் கொள்வதில்லையா? (Take it for granted). ஆசிரியர், ‘‘ஒரு கோட்டிற்கு நீளமுண்டு, ஆஞல் அகலம் கிடையாது. ஒரு புள்ளிக்கு இடமுண்டு (Position or space) ஆஞல் பருமன் கிடையாது’’ என்று கூறுகின்ருர். இது உண்மையிலேயே சரிதாஞ? நீ இந்த விஷயத்தை எந்த வகையிலாவது தர்க்கம் செய்கின்ருயா? நீ பேசாமல் இவற்றை இருப்பதாக வைத்துக்கொள்கின்ருய். இது குருட்டு நம்பிக்கையல்லவா? மேலும், இந்த மனிதன்தான் உன்னுடைய தந்தை என்று நீ எவ்வாறு அறிவாய்? தாய்க்குத்தான் உன்னுடைய உண்மையான தந்தை யாரென்பது தெரியும். அவள், ‘‘இவர் உன்னுடைய தந்தை’’ என்று சுட்டிக் காட்டுகிருள். நீ அதை ஒத்துக்கொள்கிருய். இது குருட்டு நம்பிக்கை இல்லையா?

மேகங்கள் காரணமாக உன்ஞல் சூரியனைப் பார்க்க முடியாவிட்டாலும், சூரியன் இருக்கவே செய்கின்ருன். மூளையிலே மறைந்து இருக்கும் மனத்தையும், கம்பியிலே உள்ள மின்சாரத்தையும், கருப்பையிலே இருக்கும் குழந்தையையும், பாலிலே இருக்கும் வெண்ணெயையும், மரத்திலே இருக்கும் நெருப்பையும் உன்ஞல் பார்க்க முடியாவிட்டாலும், முறையே மனமும், மின்சாரமும், குழந்தை

யும், வெண்ணெயும், நெருப்பும் இருக்கத்தான் செய்கின்றன. இதே போல, மனத்திலே உள்ள அழுக்குகள் காரணமாக இந்த ரூபங்களிலே மறைந்திருக்கும் கடவுளை உன்னால் பார்க்க முடியாவிட்டாலுங்கூட கடவுள் இருக்கத் தான் செய்கிறார்.

பகலிலே நம்மால் நட்சத்திரங்களைப் பார்க்க முடியா விட்டாலும் கூட, நட்சத்திரங்கள் இருக்கின்றன என்பதை நாம் அறிவோம். இதேபோல நாம் இந்த ஊனக் கண் களால் இறைவனைப் பார்க்க முடியாவிட்டாலும் இந்த நாம ரூபங்களுக்குப் பின்னால் இறைவன் மறைந்து இருக்கின்றான் என்று யூகித்தறியலாம்.

சில சமயம் நீ ஒரு அசாதாரண சங்கடத்திலோ அல்லது நெருக்கடியான பண முடையிலோ சிக்கிக் கொள் கிறாய். உனக்கு உதவி எப்படியோ திகைக்க வைக்கின்ற முறையில் கிடைக்கின்றது. தக்க சமயத்தில் உனக்குப் பணம் கிடைக்கின்றது. நீங்கள் ஒவ்வொருவரும் இதை அனுபவித்திருக்கக்கூடும். அந்தக் கணத்தில் நீ "இறை வனுடைய செயல்களே விநோதமானவை. எனக்கு இப்பொழுது இறைவனிடம் முழு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. எனக்கு இதுவரை கடவுளிடம் நம்பிக்கையே இல்லாமலிருந்தது" என்று கூறி ஆச்சரியப்படுகின்றாய்.

பிரம்மன் அல்லது ஆத்மன் அல்லது அந்தர்யாமியான இறைவனைக் கண்முன் கொண்டு வந்து காட்ட முடியாது; ஏனென்றால் அவன் புலன்களுக்கும், மனத்திற்கும் எட்டா மல் இருக்கின்றான். ஆனால் அவன் இருப்பதை சில அனுபவ உண்மைகள் அல்லது தினசரி வாழ்க்கையிலே ஏற்படுகின்ற சாதாரண அனுபவங்களைக் கொண்டு யூகித் தறியலாம். ஒரு மாது மூன்றாவது மாடியிலிருந்து வீழ்ந் தாள். கீழே கூரான முனைகளையுடைய கற்கள் பரவப் பட்டிருந்தன. அவளுக்கு பலத்த காயங்கள் ஏற்பட்டிருக்க வேண்டும்; ஆனால் அவள் தெய்வாதீனமாகக் காப்பாற்றப்

பட்டாள். "கண்ணுக்குப் புலப்படாத ஏதோ கைகளினுடைய நல்ல அரவணைப்பை நான் உணர்ந்தேன். ஏதோ ஒரு தெய்வீக சக்தி என்னைக் காப்பாற்றியது" என்று அந்த அம்மையாரே கூறினார்கள். இது போன்ற சம்பவங்கள் அசாதாரணமானவைகள் அல்ல.

ஒரு வக்கீலுக்கு இறைவனிடம் நம்பிக்கை இல்லாமலிருந்தது. அவருக்கு இரட்டை நியுமோனியா (double pneumonia) வந்து விட்டது. அவருடைய கடைசி மூச்சு நின்றது. அவருடைய மனைவி, மகன், உறவினர்கள் எல்லோரும் அழ ஆரம்பித்தனர். ஆனால் அவருக்கு ஒரு விநோதமான அனுபவம் ஏற்பட்டது. யம தூதர்கள் அவரைப் பிடித்து யமனுடைய தர்பாருக்குக் கொண்டு வந்தனர். யமதர்ம ராஜா தூதர்களைப் பார்த்து "நான் விரும்பியது இந்த மனிதனையல்ல. நீங்கள் யாரோ ஒருவனைத் தவருகக் கொண்டு வந்து விட்டீர்கள். இவனை அனுப்பி விடுங்கள்" என்று கூறினான். வக்கீல் ஒரு மணி நேரம் கழித்து சுவாசிக்க ஆரம்பித்தார். அவர் இந்த உடலை விட்டுச் சென்றதையும் யம தர்பாருக்குச் சென்றதையும், பிறகு மறுபடியும் அவருடைய ஸ்தூல சரீரத்திற்குள் புகுந்ததையும் உண்மையிலேயே அனுபவித்தார். இந்த ஆச்சரியகரமான அனுபவம் அவருடைய சுபாவம் முழுவதையும் மாற்றி விட்டது. அவர் கடவுளிடம் தீவிர பக்தியை வளர்த்துக் கொண்டு ஒரு பக்திமானுக ஆனார். ஐக்கிய மாகாணத்திலே அவர் இப்பொழுதும் இருந்து வருகிருர்.

மற்ெருரு வக்கீலுக்கும் இதே அனுபவம் ஏற்பட்டது. ஆனல் இவர் விஷயத்தில் சிறிது மாறுதல் உண்டு. இவரும் ஒரு நாஸ்திகர்தான். இவர் யம தர்பாருக்குக் கொண்டு வரப்பட்டார். இந்த வக்கீல் யமனைப் பார்த்து "சரீர அளவிலே நான் இன்னும் என்னுடைய வேலையை முடிக்கவில்லை. நான் இன்னும் சில பயனுள்ள காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. தயவு செய்து என்னுடைய

உயிரை விட்டுவிட வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். அவருடைய வரம் கொடுக்கப் பட்டது. இந்த விநோதமான அனுபவத்தால் அவர் ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார். அவருடைய சுபாவமும் முற்றிலும் மாற்றப்பட்டது. அவர் உடனே வக்கீல் தொழிலை விட்டு விட்டார். அவருடைய வாழ்க்கையிலே மிகுதியுள்ள பகுதியைத் தன்னலமற்ற சேவையிலும், தியானத்திலும் கழித்து வருகின்றார். அவர் இன்னும் தென்னிந்தியாவில் வசித்து வருகிறார்.

நாமதேவருடைய தந்தையாகிய தாமாசேட் தினந்தோறும் பண்டரீபுரத்திலுள்ள விட்டோபா ஆலயத்திற்குச் சென்று இறைவனைப் பழங்கள் அல்லது பொங்கல் முதலியவற்றைக் கொண்டு வழிபட்டு வருவது வழக்கம். ஒருநாள் அவர் ஒரு அவசர காரியமாகப் பக்கத்து கிராமத்திற்குச் சென்றார். நாமதேவருடைய தாயார் கோனுபாய் அம்மையார் நாமதேவரிடம் பூஜைப் பொருள்களைக் கொடுத்து விட்டோபருக்கு அர்ப்பணித்துவிட்டு வரும்படி கூறினாள். நாமதேவர் பூஜைசாமான்களை எடுத்துக் கொண்டு விட்டல் அல்லது கிருஷ்ண பகவானுடைய விக்ரஹத்திற்கு முன்பு வைத்து இறைவனைப் பார்த்து உண்ணும்படி வேண்டினார். விக்ரஹம் மௌனமாக இருப்பதைக் கண்டதும் அவர் துக்கம் தாங்காது விம்மி விம்மி அழ ஆரம்பித்தார். பிறகு பகவான் விட்டல் மானிட ரூபத்தில் வந்து அவனுடைய குழந்தை பக்தனை மகிழ்விக்கும் பொருட்டு அப்பண்டங்களை உண்மையிலேயே உண்டார். நம்பிக்கையும் பக்தியும் அற்புதங்களைச் செய்யும். இறைவன் பக்தர்களின் அடிமையாக ஆகிவிடுகின்றான்.

உலகாயத காரியங்களைச் செய்யும் பொழுது இறைவனுடைய தவிர்க்க முடியாத கரங்களின் உதவியை உணர். இறைவன் எப்பொழுதும் உன்னிடம் இருக்கின்றான். அவன் நம்முடைய எல்லா காரியங்களையும், எண்ணங்களையும் கவனித்துக் கொண்டிருக்கின்றான். குழந்தைகள் மேல்

மாடியிலிருந்து விழுகின்றன. அவர்கள் அதிசயிக்கத் தக்க வகையில் காப்பாற்றப் படுகின்றனர். மோட்டார் கார் விபத்துக்கள் ; மற்றும் பல்வேறு விதமான இதர ஆபத்துக் களிலிருந்து மக்கள் அற்புதமான வகையில் மறைந்திருக் கும் சக்தியினுடைய (கடவுள்) தவிர்க்க முடியாத கரங்க ளிடமிருந்து தக்க சமயத்தில் கிடைக்கும் உதவியின் மூல மாகக் காப்பாற்றப்படுகின்றனர். உங்களில் ஒவ்வொருவ ருக்கும் இது மாதிரியான அனுபவம் ஏற்பட்டிருக்கக் கூடும். நீங்கள் பெரும் துன்பத்தில் சிக்கிக்கொண்டிருக்கும் பொழுது இறைவன் எங்கிருந்தோ எதிர்பாராத இடத்தி லிருந்து புரியாத வகையில் உங்களுக்குப் பணத்தை அனுப்பி வைக்கின்றான். நீங்கள் அவனுடைய பிரசன் னத்தையும், அவனுடைய மாயக் கரங்களையும் உணருகின் றீர்கள். ஆனால் உங்கள் பை நிரம்பியவுடனேயே நீங்கள் அவனை மறந்து விடுகின்றீர்கள்.

தர்க்கம் செய்யாதே. நீ ஒரு பயனையும் பெற முடி யாது. உன்னுடைய ஆன்மீக குரு அல்லது மகாத்மாவுக்கு முன்னிலையில் பேசாது அமர்ந்து ஒரு மணி நேரம் தியானம் செய். ஆத்மா ஆத்மாவோடு பேசிக்கொள்ளட்டும். உன் னுடைய சந்தேகங்கள் எல்லாம் தானாகவே தீர்ந்து விடும். உனக்கு நல்ல அனுபவங்கள் ஏற்படும். நீ விசித்திரமான அமைதியை அனுபவிப்பாய். உன்னுடைய உள்ளத்தில் ஒரு புனிதமான ஆனந்தச் சிலிர்ப்பு ஏற்படும். இதுதான் உன்னுடைய ஆன்மீக வளர்ச்சிக்கான வழியாகும்.

## 3. பிரார்த்தனை

பிரார்த்தனை என்பது இறைவனோடு ஐக்கியமாவதற்கு மனிதனால் செய்யப்படும் முயற்சியாகும். இது ஒரு பலம் பொருந்திய ஆன்மீக சக்தியாகும். இது ஆகர்ஷணம் அல்லது இழுப்பு சக்தி எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையானது.

பிரார்த்தனைக்கு உயர்ந்த அறிவோ அல்லது வாக்கு வன்மையோ வேண்டுவதில்லை. பிரார்த்தனை செய்யும் போது கடவுள் உன்னுடைய இருதயத்தைத்தான் விரும்பு கின்ருர். எழுத்தறிவற்றவனுக இருப்பினும், ஒரு அடக்க மான, தூய்மையான ஆத்மாவிடமிருந்து வருகின்ற ஒரு சில வார்த்தைகள் ஒரு பிரசங்கியினுடைய அடுக்கு மொழி களைக் காட்டிலும் இறைவனுக்கு மிகவும் பிடித்திருக்கும்.

பிரார்த்தனை செய்யும் பொழுது நீ இறைவனேடு ஒன்ருகி விடுகிருய். நீ உன்னை அந்தக் குறையாத தெய்வீக சக்திக் களஞ்சியத்தோடு (ஹிரண்ய கர்ப்பன்) இணைத்துக் கொள்வதன் மூலம் நீ அவனிடமிருந்து சக்தி, பலம், ஒளி, தெம்பு ஆகியவற்றைப் பெற்றுக் கொள்கிருய்.

தெய்வீக ஒளி இறங்கி வருவதற்காக இறைவனிடம் மனமாறப் பிரார்த்தனை செய். அவனுடைய கருணைக் காகக் கெஞ்சிக் கேள். அவனிடமிருந்து பிரிந்திருக்கும் போது விரஹம் காரணமாக கதறி அழு. அவனேடு ஐக்கிய மாவதற்கு ஆசைப்படு. தெய்வீக அன்பாகிய அக்னியிலே மனத்தை உருக்கு. ஆழ்ந்த நிலையான அமைதியிலே உன்னை அமுக்கி எடுத்துக்கொள். பக்தியாகிய நெருப்பிலே உடலைச் சாம்பலாக்கு. இப்பொழுது பிரேமையாகிய தேனைக் குடி. தெய்வீக அன்பாகிய மதுவிலே உன்னை போதையேற்றிக் கொள். அமரத்துவத்தையும் சாஸ்வத மான பேரானந்தத்தையும் அடை.

உண்மையானதும் மனப்பூர்வமானதுமான பிரார்த் தனையின் மூலமாக உன்னுடைய இருதயத்தை இறைவ ஞேடு லயமாக்கிக் கொள். உன்னுடைய இருதயத்தை அவனிடம் திறந்து வைத்து விடு. எந்தவிதமான இரகசியங்களையும் வைத்துக் கொள்ளாதே. அவனிடம் ஒரு குழந்தையைப் போல் பேசு. பணிவும், எளிமையும் உடையவனுக இரு. உன்னுடைய பாவங்களை மன்னிக்கும் படி உருகிய உள்ளத்தோடு அவனிடம் மன்ருடிக் கேட்டுக்

கொள். அவனுடைய கருணையைக் கொடுக்கும்படி கெஞ்சிக் கேள். மானிட உதவியை நம்பி இருக்காதே. இறைவனையே நம்பி இரு. நீ சகலத்தையும் பெறுவாய். நீ அவனுடைய தரிசனம் அல்லது காட்சியைப் பெறுவாய்.

நீ ஒழுங்காக பிரார்த்தனை செய்து வந்தால் உன்னுடைய வாழ்க்கை படிப்படியாக மாற்றியமைத்து உருவாக்கப்படும். பிரார்த்தனை வழக்கமாகி விடவேண்டும். உன்னிடம் பிரார்த்தனை வழக்கமான ஒரு அலுவலாக ஆகிவிட்டால் உன்னுல் பிரார்த்தனையின்றி வாழ முடியாதது போன்று நீ உணர்வாய்.

முறையாகப் பிரார்த்தனை செய்து வருபவன் ஏற்கனவேயே சாஸ்வதமான அமைதியும் வற்ருத பேரின்பமும் நிறைந்த சாம்ராஜ்யத்தை நோக்கி அவனுடைய பயணத்தை ஆரம்பித்து விட்டிருக்கிருன்.

நீ பிரார்த்தனை செய்யும் பொழுது மானசீகமாக இறைவனுடைய உருவக காட்சியைப் பார். அவனுடைய நாமத்தையும், மந்திரத்தையும் ஜபி ; ஸ்தோத்திரங்களைப் பாடு. ஸ்தோத்திர ஜபம் உன்னுடைய உள்ளத்தை உயர்த்தி உன்னை ஊக்குவிக்கும். இது உன்னுடைய உள்ளத்தை இறைவஞேடு ஒன்ருக்கி விடும். இது உன்னுடைய இருதயத்தை சந்தோஷம், அமைதி, பேரானந்தம் ஆகியவைகளால் நிரப்பும். ஸ்தோத்திரங்களைத் தினந்தோறும் பாடி இறைவனுடைய கருணையைப் பெறு. அவனிடம் வசித்திரு.

பிரகலாதனுடைய தலையிலே கொதிக்கும் எண்ணெயைக் கொட்டிய பொழுது அதைக் குளுமையாக்கியது அவனுடைய பிரார்த்தனைதான். ஆணிகளாலான படுக்கையை ரோஜா மலர்ப்பஞ்சணையாக்கியதும், நாகப்பாம்பை பூமாலையாக்கியதும் மீராவினுடைய பிரார்த்தனைதான்.

திரௌபதி மனப்பூர்வமாக பிரார்த்தித்தாள். அவளுடைய துயரத்தைத் துடைக்க கண்ண பெருமான்

துவாரகையிலிருந்து ஓடோடியும் வந்தான். கஜேந்திரன் உக்கிரமாகப் பிரார்த்தித்தான். பகவான் ஹரி அவனைக் காப்பாற்ற சக்கரத்தோடு விரைந்து வந்தார்.

சில சுயகாரிய சித்திகளுக்காகவோ அல்லது உலகாயத வெகுமதிகளுக்காகவோ பிரார்த்திக்க வேண்
டாம். அவனுடைய கருணைக்காக பிரார்த்தனை செய்.
ஒளி, தூய்மை, வழி ஆகியவற்றிற்காகப் பிரார்த்தி.

அனன்ய பக்தி, ஆத்ம சரணாகதி ஆகியவை மூலமாக
இறைவனுடைய கருணையைப் பெறலாம். இறைவன்
எவ்வளவு அன்பும் கருணையும் நிறைந்தவன்! கிருஷ்ண
பகவான் அர்ஜுனனுடைய ரதத்தை ஓட்டினார். அவர்
அவனுக்கு கீதையை உபதேசித்தார். அவர் திரௌபதியை
யும், மீராவையும் காத்தருளினார். அவர் குருட்டு சூர்தாஸ
ருக்கு வழி காட்டினார். அவர் நவாபுக்குப் பணம் கொடுத்து
தாமாஜியைக் காப்பாற்றினார். அவர் நர்ஸி மேத்தா
அளித்த உண்டியலைக் கௌரவித்தார். உன்னுடைய
உள்ளத்தையும் இருதயத்தையும் அவனுடைய பாதகமலங்
களில் வை. அவன் பெருமையைப் பாடு, அவனுடைய
நாமாவை ஜபி, அவன் உனக்காக எதையும் செய்வான்.
கண்ணபிரான் அவனுடைய பக்தர்களின் அடிமை.

பிரார்த்தனை உள்ளத்தை உயர்த்துகிறது. இது
உள்ளத்தைத் தூய்மையால் நிரப்புகிறது. இது இறைவ
னுடைய புகழோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. இது
மனத்தை இறைவனோடு ஒன்றுபடுத்தி வைக்கிறது. அறி
வானது நுழைந்து பார்க்க அஞ்சுகின்ற ஒரு சாம்ராஜ்யத்
தினுள்ளே பிரார்த்தனை அடைய முடியும். பிரார்த்தனை
யால் மலைகளையே அசைக்க முடியும். இது அற்புதங்களைச்
செய்ய முடியும். இது பக்தனை மரண பயத்திலிருந்து விடு
விக்கிறது. இது அவனை இறைவனுக்கு அருகாமையில்
கொண்டு வந்து தெய்வீக உணர்வையும், அவனுடைய

முக்கியமான அழியாத, பேரானந்தத்தன்மையை உணரும் படிச் செய்கின்றது.

பிரார்த்தனை உடலிலும், உள்ளத்திலும் அற்புதமான செல்வாக்கை உண்டு பண்ணுகிறது. இது உள்ளத்தைத் தூய்மையாக்கி, அறிவிற்குப் புத்துணர்ச்சியூட்டி, அதை கூர்மையாக்கி, உடலிலும் உள்ளத்திலும் பயன்தரத்தக்க, நல்ல ஆன்மீக மின்னேட்டத்தை உற்பத்தி செய்கிறது. புரிந்து கொள்ளும் சக்தியை இது விருத்தி செய்கிறது. உண்மையான, மனப்பூர்வமான பிரார்த்தனையின் மூலமாக தீராத நோய்களெல்லாம் தீர்த்து வைக்கப்படுகின்றன.

பிரார்த்தனை ஆன்மீக மின்னேட்டத்தையும் மன அமைதியையும் உற்பத்தி செய்கிறது. பிரார்த்தனையின் சக்தி வர்ணிக்க வொண்ணுதது. அதன் மகிமை சொல்ல முடியாதது. உண்மையான பக்தர்கள்தான் அதன் பயனையும், பெருமையையும் உணர முடியும். இது மரியாதை, நம்பிக்கை, நிஷ்காம்யபாவம் (பலனை எதிர்பாராமல் செய்தல்), பக்தியினுல் ஊறித் திளைத்த மனம் ஆகியவற்ருேடு செய்யப்பட வேண்டும். ஓ அஞ்ஞான மனிதா! பிரார்த்தனையின் சக்தியைப் பற்றித் தர்க்கம் செய்யாதே. நீ மோசம் போவாய் ஆன்மீக விஷயங்களில் தர்க்கம் என்பதே கிடையாது. அறிவு என்பது முடிவுள்ள பிழை செய்யக்கூடிய கருவியாகும். இதை நம்பாதே. பிரார்த்தனை என்கின்ற தெய்வீக ஒளியின் மூலம் இப்பொழுது உன்னுடைய அஞ்ஞான இருளைப் போக்கிக் கொள்.

## 4. நமஸ்காரம்

நமஸ்காரம் என்ருல் குப்புற விழுந்து வணங்குதல் என்று பொருள். கண்ணபிரான் உத்தவனிடம், ''என்னை ஒவ்வொரு பொருளிலும் பார்'' என்று கூறினுர். உனக்கு எதிரில் யார் வந்தாலும், மனிதனுகட்டும், கழுதையாகட்டும், அல்லது நாயாகட்டும், சாஷ்டாங்கமாக வீழ்ந்து

வணங்கு. உனக்கு ஆத்மானுபூதி சீக்கிரமாகவும், நிச்சயமாகவும், சுலபமாகவும் கிடைக்கும். நீ ஒரு கழுதைக்கு முன்பாகவும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். ஏனென்றால் கழுதையினுடைய இருதயத்திலும் இறைவன் வீற்றிருக்கின்றார். பொது மக்களுடைய தூஷணைக்காக நீ அஞ்சினால் கழுதைக்கு முன்பாக மானசீகமாக சாஷ்டாங்க நமஸ்காரம் செய்.

பகவான் கிருஷ்ணன் உத்தவனிடம், " கேலியாகச் சிரிக்கும் மக்களைக் கவனியாமலும், உடலை மறந்தும், அவமானத்திற்கு உணர்ச்சியற்றும், ஒருவன் நாய், சண்டாளன், பசு, கழுதை வரைக்கும் கூட எல்லா ஜீவன்களையும் நிலத்தில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்க வேண்டும் " என்று கூறுகிறார். மற்றவர்களை வீழ்ந்து வணங்குவதானது ஒருவனை பணிவுடையவனாக ஆக்குகிறது. அவன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யும்பொழுது நாராயண பாவத்தையும் ஏற்படுத்திக்கொண்டால் இது அவனுக்கு பார்ப்பதெல்லாம் கடவுள், கடவுளைத் தவிர வேறொன்றும் கிடையாது, அந்த தோற்றமானது பிரம்மனுடைய விராட் அம்சத்தைத் தவிர வேறொன்றுமில்லை என்பதை உணர்த்துவதற்கு உதவி புரிகின்றது. மற்றவர்களை நாராயண பாவத்தோடு வீழ்ந்து வணங்குவதானது, பக்தியை வளர்த்துக்கொள்ளப் பேருதவியாக இருக்கும். ஒரு பசு, அல்லது ஒரு கழுதை, அல்லது ஒரு நாய்க்கு மானசீக நமஸ்காரம் செய்து நீ பகவான் ஹரிக்கு நமஸ்காரம் செய்கின்றாய் என்பதை உணர். எல்லா ஜீவ ஜந்துக்களும், எல்லாப் பொருள்களும் ஹரியினுடைய உருவங்களே. இந்த விஷயத்தை ஒருபோதும் மறந்துவிடாதே.

சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதினால் ஆறு வித பலன்கள் உண்டு. அதை தேகாப்பியாசம் செய்வதைப் போல் செய்யாதே. அதை மெதுவாக பாவத்தோடு (உணர்ச்சியோடு) செய். நீ வாஸ்தவத்திலேயே பகவான் நாராயணன் அல்லது சிவபெருமானுக்கு முன்னிலையில்

வீழ்ந்து வணங்குவதாக உணர். அது ஒரு பரிபூர்ண சாஷ்டாங்க நமஸ்காரமாக இருக்க வேண்டும். உடலானது அதனுடைய ஆறு அங்கங்களான முழங்கால்கள், நெற்றி, தோள்கள், பாதங்கள், மார்பு, கண்கள் முதலியவைகள் நிலத்தில் படவேண்டும். இது அகந்தையை நீக்கி, பணிவை ஊட்டி, சம திருஷ்டியை உற்பத்தி செய்கின்றது. இது உள்ளத்தை பக்தியால் நிரப்புகின்றது. இது எல்லா இருதயங்களையும் வசியப் படுத்துகிறது. இதன் பயனாக இது இறைவுணர்விற்கு அழைத்துச் செல்கின்றது. நீ யாரை வீழ்ந்து வணங்குகிறாயோ அவன் முகமதியனாகட்டும், கிருஸ்தவனாகட்டும், சண்டாளனாகட்டும் அல்லது நாவிதனாகட்டும், அவனுடைய பாதத்தைத் தொட்டு வணங்க வேண்டும். இது பொறாமை, க்ருணா (தீண்டப் படாதோரிடம் அருவருப்பு) வெறுப்பு, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்கின்ற மனோபாவம், ஆகியவைகளை நீக்கி விடுகின்றது. எல்லோரையும் வீழ்ந்து வணங்கும் அப் பேர்ப்பட்ட மனிதன் வாழ்க. அவன் விரைவில் நாராயண னாக ஆகிவிடுகின்றான்.

நீ யாரையாவது வீழ்ந்து வணங்கி விட்டு அதே நேரத்தில் அவருடைய குறைபாடுகளைப் பற்றி எண்ணி னாலோ அல்லது பேசினாலோ அது வெறும் வெளி வேஷ மாக ஆகும். இது பிரயோஜனமில்லை. இது பெரிய மனிதருக்குக் காட்டும் மரியாதையாக ஆகாது.

நமஸ்காரத்தை தேகப் பயிற்சி போல் செய்யாதே. அதை மெதுவாக பாவத்துடன் (உணர்ச்சியுடன்) செய். நீ உண்மையிலேயே பகவான் நாராயணன் அல்லது சிவ பெருமானுக்கு முன்னதாகவே வீழ்ந்து வணங்குவதாக உணர். நீ ஒரு பரிபூர்ணமான சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும் பாவத்துடன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்பவன் வாழ்க, வெல்க. அவனே நாராயணனாகி விடுகின்றான்.

## 5. சங்கீர்த்தனத்தின் முக்கியத்துவம்

பிரம்மா, குதிரைகள், பசுக்கள், நாய்கள், யானைகள் முதலியவற்றைப் போன்ற பல்வேறு வகையான ஜீவராசிகளை சிருஷ்டி செய்தார். ஆனால் அவர் பூர்ணமாக திருப்தியடையவில்லை. பிறகு அவர் மனிதனை சிருஷ்டித்தார். இது அவருக்குப் பரிபூரண திருப்தியையளித்தது. ஏனென்றால் மனிதன் ஒருவனால்தான் சப்த ஸ்வரங்களையும் (ஸ, ரி, க, ம, ப, த, நி) உண்டு பண்ண முடிகிறது. அவனால் கீர்த்தனை செய்ய முடிவதோடு சங்கீர்த்தனத்தின் மூலம் இறைவனையும் உணர முடிகின்றது. மிருகங்கள் ஒரே ஒரு விதமான சப்தம் அல்லது ஸ்வரத்தையே உண்டுபண்ண முடிகிறது.

மனம் ஐந்து விஷயங்களையும் அனுபவிக்கின்றது. நம்மை பரமாத்மனிடமிருந்து பிரித்து வைக்கும் தடை மனம் தான். மனமாகிய உருவை அமைக்கப் போகும் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்கின்ற இந்த ஐந்து பூதங்களும், ஆத்மனாகிய இரத்தினத்தைக் கொள்ளை கொண்ட ஐந்து கொள்ளையர்களாம். இதற்குத் தலைவனாக இருப்பது ஆகாசம்தான். உன்னால் ஆகாசத்தை அடக்க முடிந்தால், உன்னால் தலைவனை அடிபணியச் செய்ய முடிந்தால் மற்ற நான்கு பூதங்களும் உன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் வந்து விடும். உன்னால் பஞ்ச பூதங்களைக் கட்டுப்படுத்த முடிந்தால் மனத்தை உன்னால் வெகு சுலபமாக அடக்கிவிட முடியும். ஆகாசத்தினுடைய தொழில் சப்தம். ஹரியினுடைய நாமத்தை உன்னால் இனிமையான குரலில் ராக தாளத்துடன் பாட முடிந்தால் உன்னால் ஆகாச தத்துவத்தைக் கட்டுப்படுத்த முடியும். அதன் மூலம் இதர பூதங்களையும், மனத்தையும் கட்டுப்படுத்தி விடலாம். ஆகவே தான் பகவான், நாரதரிடம் "நான் விண்ணுலகத்திலோ அல்லது யோகிகளுடைய உள்ளத்திலோ வசிக்க வில்லை; ஆனால் எங்கு என்னுடைய பக்தர்கள் என்னுடைய நாமத்தைப் பாடுகிறார்களோ அங்கு இருக்கின்றேன்" என்று கூறுகின்றார்.

எப்படி தயிர், பப்படம், ஊறுகாய்கள், இஞ்சி, கொத்தமல்லி சட்னிகள், துளசி முதலியவைகள் மிக நல்ல பசியைத் தூண்டும் பொருட்களாக உதவுவதோடு கிச்சிடியோடு சேர்க்கும் போது ஆனந்தமான கலவையாக ஆகின்றதோ அதுபோல ஜபம், சத் சங்கம், ராமாயண, பாகவத பாராயணம் ஆகியவைகள் சங்கீர்த்தனத்தோடு சேர்ந்து உன்னுடைய பக்தியை மேலும் மேலும் வளர்ப்பதற்கு ஒரு ஆனந்தமான கூட்டாக ஆகின்றது.

நாஸ்திக நிந்தனையாளர்களுடையதும், அவநம்பிக்கைக் காரர்களுடையதும், எல்லா வகையான பாவிகளுடையதுமான பாவத்தினுல் இறுகிய கல் நெஞ்சங்களை உருக்குவதற்கு சங்கீர்த்தன பக்தியைத் தவிர சக்தி வாய்ந்த தொரு மிருதுவாக்கும் வஸ்து கிடையாது.

எப்படி நெருப்பானது உலோகங்களை உருக்குவதற்குச் சிறந்த சாதனமாக இருக்கின்றதோ அதுபோல பல்வேறு விதமான பாவங்களையும் கரைத்து விடுவதற்கு மிகச் சிறந்த சாதனம் அவனுடைய நாமாவைப் பாடுதல்தான் (விஷ்ணு புராணம் - அத். VI 7–9).

மீரட்டிலே ஒரு ஜமீன்தாரின் மகன் கடுமையான நோய்வாய்ப் பட்டிருந்தான். டாக்டர்கள் சிறிதும் நம்பிக்கை இல்லையென்று கைவிட்டு விட்டனர். பக்தர்கள் அந்த வேலையை மேற் கொண்டனர். அவர்கள் இடைவிடாது இரவும் பகலும் ஏழு நாட்கள் நோயாளியின் படுக்கையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு அகண்ட கீர்த்தனை செய்தனர். ஏழாவது நாள் நோயாளி எழுந்திருந்து இறைவனுடைய நாமத்தைச் சொல்ல ஆரம்பித்து விட்டான். அவன் பூரண குணமடைந்து விட்டான். சங்கீர்த்தனத்தினுடைய அற்புத சக்தி அப்பேர்ப்பட்டது.

சங்கீர்த்தனம் உள்ளம், ஆத்மா இரண்டிற்கும் உணவாகும். சங்கீர்த்தனம் ஒரு தெய்வீக மருந்தாகும் (Tonic). தளர்ந்து விட்ட நரம்புகளுக்கு சங்கீர்த்தனம் ஒரு சக்தி

வாய்ந்த நிவாரணியாகும். சங்கீர்த்தனம் ஒரு தேவாமிர்த மாகும். இந்த தேவாமிர்தத்தை தினந்தோறும் பிரம்ம முகூர்த்தத்திலும் இரவிலும் சங்கீர்த்தனம் செய்வதின் மூலம் குடியுங்கள்.

துகாராம் ஒரு விவசாயி. அவரால் அவனுடைய நாமத்தைக் கூட பாட முடியவில்லை. அவர் எப்பொழுதும் கையில் தாளத்துடன் "விட்டல, விட்டல" என்று கண்ணபெருமானுடைய நாம சங்கீர்த்தனம் செய்து வந்தார். அவருக்கு கண்ண பிரானுடைய தரிசனம் பிரத்தியக்ஷமாகக் கிடைத்தது. சங்கீர்த்தனத்தின் மூலம் அவருடைய திவ்ய திருஷ்டி (ஞான சாக்ஷு) திறக்கப் பட்டது. அவருடைய உணர்ச்சியூட்டும் பாட்டுக்கள் (அபங்கா) பம்பாய் சர்வகலாசாலையில் M. A. மாணவர் களுக்குப் பாட புத்தகமாக இருக்கின்றன. எழுத்து வாசனையற்ற படிப்பில்லாத துகாராம் அத்தகைய ஞானத்தை எங்கிருந்து பெற்றார்? அவர் ஞானமாகிய ஊற்றை சங்கீர்த்தனத்தின் மூலம் அடைந்தார். ஆழ்ந்த சங்கீர்த்தனத்தின் மூலம் ஏற்படுத்தப்பட்ட பாவ சமாதி யின் மூலமாக தெய்வீக மூலாதாரத்தைத் துருவிச் சென் றார். இதிலிருந்து, கடவுள் இருக்கிறார், இறைவனுடைய ஸ்வரூபம் ஞானமயமாக இருக்கிறது. சங்கீர்த்தனத்திற்கு அபார சக்தி உண்டு என்பது நிரூபணமாக வில்லையா? ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கும் அவருடைய கை யெழுத்துக் கூடப் போடத் தெரியாது. ஆனால் அவரால் பெரிய படித்த மேதாவிகளினுடைய சந்தேகங்களை நிவர்த் திக்க முடிந்தது. இந்த அசாதாரண ஞானத்தை (super intentional) அவர் எங்கிருந்து பெற்றார்? அவரும் தெய்வீக ஊற்றைக் கண்டு கொண்டார்.

த்ருணாதபி சுனேசேன தரோரிவ சஹிஷ்ணுனா
அமானின மனதேன கீர்த்தனீய சதா ஹரி.

எவனொருவன் புல்லை விடப் பணிவாகவும், ஒரு மரத்தைப் போன்ற சகிப்புத் தன்மையுடனும், மதிப்பை

விரும்பாமலும், ஆனால் மற்றவர்களை மதித்தும் இருக்கின்றானே அவன் எல்லா நேரத்திலும் ஹரியினுடைய நாமாவைப் பாடத் தகுதியுடையவனாவான்.

நாம கீர்த்தனத்தோடு சங்கீதக் கருவிகளைப் பயன் படுத்தலாம். தூய்மையற்ற, உணர்ச்சிவசப் படக்கூடிய சீர்படுத்தப் படாதவர்கள் விஷயத்திலே அவர்கள் லீலை செய்யும் பொழுது சங்கீதக் கருவிகள் அவர்களுடைய உணர்ச்சியைத் தூண்டிவிடுமாதலால் அவைகள் அபாயகர மானவை.

மஹாமந்திரம் ஒரே தடவையில் இடைவிடாது உச்சரிப்பதற்கு மிகவும் நீளமாக இருக்கிறது. ஆகவே அதை இரண்டு பகுதிகளாகப் பிரிக்க வேண்டும். கோஷ்டித் தலைவர் ''ஹரே ராம, ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே'' என்று சொல்ல, மற்றவர்கள் அவரைத் தொடர்ந்து அதையே பாட வேண்டும். பிறகு தலைவர் மற்றொரு வரியை அதாவது ''ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே'' உச்சரிக்க, மற்றவர்கள் இந்த இரண்டாவது வரியைத் தொடர்ந்து சொல்லலாம்.

மருந்து தயாரிப்பாளர்கள் தங்களுடைய விசேஷமான மருந்துகளைப் பற்றி பல்வேறு சஞ்சிகைகளில் படாடோபமாக விளம்பரப் படுத்துவதோடு, மக்களிடம் ஒரு உற்சாகத்தை உண்டுபண்ணுவதற்காக இலவசமாக மாதிரி மருந்துகளையும் கொடுக்கின்றனர். இதைப்போல பகவானை உணர்ந்த பாகவதர்கள் நாம மகிமையைப் பற்றி உபதேசிக்கவும், மக்களிடையே பக்தியையும், ஊக்கத்தையும் உண்டுபண்ணவும், கதா காலக்ஷேபம், கீர்த்தனம் ஆகியவற்றையும் செய்ய வேண்டும். அனுபூதியடைந்த பக்தர்களுடைய ஊக்கமும், கருணையும் காரணமாக ஒருவனுடைய ஆத்மன் தெய்வீகத்தை லேசாக உணர்ந்தால் தான் அவனுடைய இருதயமானது எல்லாவற்றையும் கபளீகரம் செய்யக் கூடிய பக்தியாகிய உற்சாகத்தினால்

எரிய ஆரம்பிக்கின்றது. பிறகு அவன் மற்ற எல்லாவற்றை யும் மறந்து அவற்றைத் துறந்து தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் இறைவனுடைய சேவைக்காகவும், பக்தர் களின் தொண்டிற்காகவும் அர்ப்பணித்து விடுகின்ருன்.

சங்கீர்த்தனத்திற்காக நீ உன்னுடைய வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணிக்க வேண்டும். ஏராளமான குழந்தைகளைப் பிறப்பிக்காதே. வாழ்க்கையிலே வெற்றி பெறுவதற்கு அதுதான் திறவுகோல் (வழி). மாயையி னுடைய சக்தி விசித்திரமானது. மோஹத்தினுடைய சக்தி வேடிக்கையானது. ஆனால் சங்கீர்த்தனக்காரர்களை மாயையும் மோஹமும் நெருங்கவே முடியாது.

## 6. தர்மம்

பணத்தைச் சேர்த்து வைப்பது ஒரு பாவம். எல்லா செல்வமும் இறைவனைச் சார்ந்தது. எவன் தன்னுடைய சொத்திற்குத் தன்னை தர்மகர்த்தாவாக மட்டும் பாவித்து, தன்னுடைய பணத்தை தர்மத்திற்காகச் செலவிடுகின் ருனே அவன், உண்மையான சொத்து இறைவனுக்குச் சொந்தமானது என்று எண்ணி சந்தோஷமாக வாழ்கின் ருன். அவன் மோக்ஷத்தை அடைகின்ருன்.

தாகமுள்ளவர்கள் குடிப்பதனுல் கங்கையினுடைய நீர் குறைந்துபோகப் போவதில்லை. அதேபோல் நீ தர்மம் செய்வதனுல் உன்னுடைய் சொத்து குறைந்துவிடாது.

பகவான் இயேசுநாதர், ‘‘சரியான மனேபாவத் துடன் தர்மம் செய்யும்போது பல பாவங்களைப் போக்கு கிறது’’ என்று கூறினுர். பகவான் கிருஷ்ணன், ‘‘தர்மம் உள்ளத்தைத் தூய்மையாக்குகிறது (கீதை அத். XVIII - 5) என்று கூறுகிருர்.

செல்வத்தினுல் ஏமாற்றப்படுகின்ற ஒரு செல்வந்தன் இறைவனுடைய சாம்ராஜ்யத்தினுள் நுழைய முடியாது.

ஆகவேதான் பகவான் இயேசுநாதர் அந்த இளவரசனிடம் ''நீ என்னோடு வரவேண்டுமானால் உன்னிடம் இருப்பவை களையெல்லாம் விற்று ஏழைகளுக்குக் கொடுத்து விட்டு வா'' என்று கூறினர். பணத்தைச் சேர்த்து வைப்பது ஒரு பெரிய பாவமாகும். இவ்வுலகிலுள்ள செல்வமனைத்தும் இறைவனுக்குச் சொந்தம். நீ உன்னுடைய சொத்திற்குத் தர்மகர்த்தாவாக மட்டும் இருந்து உன்னிடம் இருப்பதை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டும். அப்பொழுது தான் நீ இறைவனுடைய கருணையையும் சாஸ்வத அமைதி யையும் பெறுவாய்.

கருமித்தனம் ஒரு பெரும் சாபக்கேடு. இது ஒருமைப் பாட்டிற்கு விரோதியும், சுயநலத்திற்கு நண்பனுமாகும். இங்கு ஒரு வேடிக்கையைப் பாருங்கள். மதராஸிகள் வாழை இலைகளில் சாப்பிடுகிறார்கள். சில பெண்மணிகள் மிகவும் கஞ்சத்தனமாக இருப்பர். அவர்கள் இலைக் கட்டை அவிழ்த்து அன்றைய உபயோகத்திற்காக அழுகிய இலை களை எடுத்துக் கொண்டு நல்ல இலைகளை அடுத்த நாளைக் காக வைத்து விடுவர். அடுத்த நாள் கட்டை அவிழ்க்கும் பொழுது அந்த நல்ல இலைகளும் அழுகிப் போய்விடும். இதுமாதிரியே அவர்கள் தினந்தோறும் அழுகிய இலை யையே உபயோகப்படுத்தி வருவர். எந்த நாளிலும் புது இலைகளை அவர்களால் அனுபவிக்கவே முடியாது. அவர்க ளுடைய கஞ்சத்தனம் அப்பேர்ப்பட்டது. இதே போல் தான் டார்ச் விளக்கை உபயோகப்படுத்தும் சில கருமிகள் விஷயமும், விளக்கிலுள்ள ஸெல் (Cell) பூராவும் தீரும் வரைக்கும் தம்மிடம் இருப்பில் வைத்திருக்கும் ஸெல்லை பயன்படுத்தவே மாட்டார்கள். அந்த உபயோகத்திலுள்ள ஸெல்லை உபயோகப்படுத்துவதற்குள் அதிலுள்ள மின்சாரம் முழுவதும் போய்விடும். அவர்களுக்கு எப்பொழுதும் மங்கிய ஒளிதான் கிடைத்துக் கொண்டிருக்கும். கருமி களுக்கு இங்கும், எங்கும் சுகம் என்பதே கிடையாது. அவர்கள் அவர்களுடைய பணத்திற்கு காவலாளிகள். அவ்வுளவுதான். பல கருமிகள் புதுத் துணிகள் உடுத்து

வதில்லை. அவர்கள் கிழிந்த ஆடைகளையே உடுத்திக் கொண்டிருப்பர். அவர்கள் பெட்டியைத் திறக்கும் பொழுது புதுத் துணிகள் முழுவதையும் ராமபாணப் பூச்சி (moths) அரித்து விட்டிருக்கும்.

திருவாளர் ராமகிருஷ்ணன் ஒரு போர்வையை ஒரு ஏழைக்குத் தானமாகக் கொடுத்தார். கொடுத்து விட்ட பிறகு "நான் அவனுக்கு ஒரு போர்வையைக் கொடுத் திருக்கக்கூடாது" என்று எண்ணினார். அவருடைய இருதயம் கிளர்ச்சியுற்று வேதனைப்படும் நிலையில் இருந் தது. நீங்கள் இந்த மாதிரியான தர்மத்தைச் செய்தால் எந்த விதமான பயனையும் அடைய முடியாது. உங்களுக்கு மனத் தூய்மை ஏற்படாது. பல உலகாயத எண்ணம் கொண்டவர்கள் இது மாதிரியான தர்ம காரியங்களைத்தான் செய்கின்றார்கள். இந்த உலகம் அப்பேர்ப்பட்ட வள்ளல் களால் நிரப்பப்பட்டிருக்கிறது!!

எல்லோரும் தங்களுக்கு என்றால் மிகவும் தாராளமாக இருக்கின்றார்கள். பலர் முதல்தரமான பால் அல்லது டீயை முதலில் எடுத்துக் கொண்டு இரண்டாந்தரமான பாலை நண்பர்களுக்கும், மூன்றாந்தரமான பாலை புதிதாக வந் திருப்பவர்களுக்கும் கொடுக்கின்றார்கள். அவர்கள் முதல் தரமான பழங்களைச் சாப்பிட்டுவிட்டு, அழுகிப் போனவை களைப் புதிதாக வந்திருப்பவர்களுக்கும், அண்டை வீட்டுக் காரர்களுக்கும், வேலையாட்களுக்கும் கொடுப்பார்கள். எப்பேர்ப்பட்ட குறுகிய மனம் படைத்தவர்கள் அவர்கள்! அவர்களுக்கு இருதயம் எவ்வளவு சிறியதாகவும், சுருங்கிய தாகவும் இருக்கிறது! அவர்களுடைய நிலை அனுதாபப் படக்கூடியது மட்டுமல்ல, மிகவும் வருந்தத் தக்கதாகவும் இருக்கிறது. ஓ இறைவா, அவர்களுக்குப் பரந்த இருத யத்தையும், சரியான மனோ பக்குவத்தையும் கொடு அவர்கள் வாஸ்தவத்தில் என்ன செய்துகொண்டிருக்கி றார்கள் என்பதை அவர்கள் அறியார்கள்.

எப்பொழுதும் மிகச் சிறந்த பொருள்களை, மிகச் சிறந்த உணவை, மிகச் சிறந்த பழங்கள், நல்ல பால், மிகச் சிறந்த ஆடைகள் ஆகியவற்றை நண்பர்களுக்கும் அண்டை வீட்டாருக்கும், புதிதாக வருபவர்களுக்கும், விருந்தினர்களுக்கும், வேலையாட்களுக்கும் கொடுங்கள். உங்களுக்கு அளவு கடந்த மகிழ்ச்சியும், பலமும், சந்தோஷமும் ஏற்படும். இதைப் பழக்கத்தில் கொண்டு வந்து பயனை நீங்களே உணர்ந்து பாருங்கள்.

எந்த விதமான ரகசியங்களையும் வைத்துக் கொள்ளாதே. உன்னுடைய வீட்டின் வராந்தாவிலே உட்கார்ந்து கொண்டிருப்பவர்களோடு பகிர்ந்து கொள்ளாமல் கதவைத் தாழிட்டுக் கொண்டு ரகசியமாகச் செய்யும் எக்காரியமும் பாவமாகும். நீ சாப்பிடப் போவதில் ஒரு சிறு பாகத்தை மற்றவர்களுக்கு முதலிலே கொடுத்து விட்டுப் பிறகு நீ சாப்பிடு. இது தெய்வீக குணமாகும். சரீரம், மனம் அல்லது ஆன்மீக சம்பந்தமாக உன்னிடம் எது இருப்பினும் அதை மற்றவர்களோடு பகிர்ந்து கொள். இது உண்மையான யக்ஞமாகும். நீ விரிவாய். நீ வாழ்க்கையின் ஒருமைப்பாட்டையும், ஐக்கியத்தையும் அனுபவிப்பாய். இது அத்வைத உணர்விற்கு அழைத்துச் செல்லும்.

நீ உன்னை திரைகள் அல்லது வரையறைகளிலிருந்து வேருக்கிக் கொள். அப்பொழுது நீ நிலைபேற்ருேடு ஒன்ருக இருப்பதை உணர்வாய். சாதனை தேவை. அவற்றை உற்சாகத்துடனும் மனப்பூர்வமாகவும் செய்.

காலம் மிகவும் மதிப்புடையது. ஒவ்வொரு விநாடியையும் இறைவனைச் சிந்திப்பதிலும், அவனுக்குச் சேவை செய்வதிலும் லாபகரமாகச் செலவிடு. உன்னுடைய சட்டைப் பையிலே எப்பொழுதும் கொஞ்சம் சில்லரைக் காசுகளை வைத்துக் கொண்டு அவற்றை தினந்தோறும் ஏழைக்ளுக்குத் தானமாகக் கொடு. இதை உடனடியாகச் செய்.

“பண்டித ராமாகாந்த சர்மா ஒரு மாபெரும் நற்பணியைச் செய்திருக்கிறார்” என்று மக்கள் கூறலாம். ஆனால் இதற்கு மாறாக இது இறைவனுக்கு விரும்பத்தகாததாக இருக்கலாம்.

யுத்தகளத்திலே சண்டையிட்டு விடுவது சுலபம். ஆனால் கர்வம், தற்புகழ்ச்சி ஆகியவை இல்லாமலும், தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமலும், மற்றவர்களிடம் சொல்லாமலும் அமைதியாக ஒரு தானம் கொடுப்பது கடினம்.

ஏழைகளுக்கு தர்மம் செய். ஆனால் நீ கொடுத்தவைகளைப் பற்றிப் பேசாதே. இது தற்புகழ்ச்சியில் கொண்டு விடும். “வலது கை செய்வதை இடது கை அறியக் கூடாது”.

சிலர் தர்மம் செய்து தங்களுடைய பெயர் பத்திரிகைகளிலே புகைப் படத்துடன் வரவேண்டுமென்று ஆவலோடு எதிர்பார்க்கின்றனர். இது தாமஸ ரூபமான தர்மமாகும். இது தர்மமே அல்ல. அது போன்றவர்களின் நிலை பரிதவிக்கத்தக்கதேயாகும்.

“வலது கை என்ன செய்கிறது என்பது இடது கைக்குத் தெரியக்கூடாது” என்று பகவான் இயேசுநாதர் கூறுகின்றார். நீ உன்னுடைய தர்மத்தைப் பற்றியும், தர்ம குணத்தைப் பற்றியும் விளம்பரப்படுத்துதல் கூடாது. மக்கள் உன்னுடைய தர்ம சிந்தையைப் பற்றிப் புகழ்ந்து பேசும் பொழுது உன்னுடைய மனத்திலே எந்தவிதமான உயர்வு மனப்பான்மையும் தோன்றக் கூடாது.

ஓய்வு பெற்ற ஒரு இல்லறத்தான் செய்திருக்கும் வேடிக்கையைப் பாருங்கள். அவன் நாற்பதாண்டு காலத்தை நல்ல, திடகாத்திரமான, ஆரோக்கியமான உடலையும், உள்ளத்தையும், அவனுடைய குடும்பத்தாரின் சேவைக்காகவும், அலுவலகத்திலே மேலதிகாரிகளின்

தொண்டிற்காகவும் அர்ப்பணித்து விட்டான். நல்ல மூப்பெய்திய காலத்திலே, மரணம் நெருங்கிக் கொண்டு வரும் நேரத்திலே அவன் இறைவனுடைய சேவைக்காக நைந்த உடலையும், நைந்த உள்ளத்தையும் கொடுத்தான். உண்மையிலேயே மிக உயர்ந்த தாராள சிந்தையுடையவன் போலும்! இதோ இங்கு மிகவும் தாராள சிந்தையும், உதார குணமும் நிறைந்த ஒரு பெருந்தகை, ஒரு நவயுகக் கர்ணன்!!

"யதி" என்பவர் கட்டுப்படுத்திய துறவி. அவர் அவருடைய உணர்ச்சிகள், மனம், இந்திரியங்கள் ஆகியவற்றை அடக்கியவர். ஒரு சந்நியாசி பொதுவாக யதி என்று அழைக்கப்படுகிறார். யதிகளுக்கு தேவன் "யதீந்திரன்" என்று அழைக்கப்படுகிறான்.

விருந்தோம்பல் என்பது அதிதி யக்ஞமாகும். ஒரு விருந்தினர் எனப்படுபவர் அதிதி நாராயணன். இதை மனுஷ்ய யக்ஞம் என்றும் அழைக்கிறார்கள். ஐந்து யக்ஞங்களைச் செய்வதினால் சித்த சுத்தி ஏற்படுகிறது.

சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் ஐந்து யக்ஞங்களாவன :—

1. தேவயக்ஞம் :— இதில் வேத மந்திர பாராயணத்தோடு தேவதைகளுக்கு நிவேதனம் செய்தல் அடங்கியிருக்கிறது.

2. ரிஷி யக்ஞம் :— இதில் ரிஷிகளுக்கு காணிக்கை செலுத்துவதோடு வேத பாராயணமும், வேதோபதேசம் செய்வதும் அடங்கியிருக்கிறது.

3. பித்ருயக்ஞம்:— பிரிந்து சென்ற ஆத்மாக்களுக்காக தர்ப்பணம், சிரார்த்தம், பிண்டங்கள் ஆகியவற்றைச் செய்வது இதிலே அடங்கியிருக்கிறது.

4. பூத யக்ஞம் :— பசுக்கள், காகங்கள், பிராணிகள் ஆகியவைகளுக்கு உணவளித்தல். இது தெய்வீக அன்பையும், அத்வைத உணர்வையும் விருத்தி செய்கின்றது.

5. அதிதி யக்ஞம்:— விருந்தினரை உபசரித்து தக்க மரியாதைகள் செய்து அவர்களுக்கு உணவளித்தல்.

ஹிந்து சாஸ்திரங்களின் நியதிப்படி ஒவ்வொரு இல்லறவாசியும் இந்த ஐந்து யக்ஞங்களையும் செய்ய வேண்டும். இவற்றைச் செய்யத் தவறினால் அவன் பிரத்யவாய தோஷத்திற்கு (செய்யத் தவறிய பாவம்) ஆளாகின்றான். அடுப்பு, தண்ணீர்ப் பாத்திரம், அரிவாள்மணை மாவரைக்கும் கல், துடைப்பம் ஆகிய ஐந்து பொருள்கள் மூலமாக தினந்தோறும் ஜீவஹிம்சை நடந்து வருகிறது.

இந்த யக்ஞங்கள் இல்லறத்தாருடைய உள்ளத்தைத் தூய்மையாக்குவதற்காக ஏற்படுத்தப்பட்டவை. செய்த பாவங்கள் இந்த ஐம்பெரும் மஹாயக்ஞங்களினால் நிவர்த்தி செய்யப்பட வேண்டியிருக்கின்றன. இவற்றை ஒவ்வொரு துவிஜனும் (இருபிறப்பாளனும்) செய்ய வேண்டும். இவைகள் முக்கியமாக தேவதைகள், ரிஷிகள், பித்ருக்கள் மனித வர்க்கம், பூதங்கள் அல்லது தாழ்ந்த மிருகங்கள் ஆகியவைகளைத் திருப்திப்படுத்துவதற்காக ஏற்படுத்தப் பட்டவைகளாகும். இந்த ஐந்து வேள்விகளையும் செய்வதானது பிரபஞ்சம் முழுவதையும் அகப்படுத்தி விடுகின்ற காரணத்தால் இவை ''கொல்லாமை'' அல்லது அஹிம்சா உணர்வை விருத்தி செய்யாமலிருக்க முடியாது.

தினந்தோறும் பூதயக்ஞம் செய். பசுக்கள், காகங்கள் ஆகியவற்றிற்கு உணவளி. பூத தயையுடையவனாக இருந்து உன்னுடைய இருதயத்தை விரிவுபடுத்து. நீ எல்லா ஜீவன்களிடமும் ஒருமைப்பாட்டை உணர்வாய். ஞானத்தின் சாரமாகிய (essence) சமநோக்கை நீ அபிவிருத்தி செய்வாய்.

உன்னுடைய ரோமங்கள் நரைத்து விட்டால் யமதர்ம ராஜாவிடமிருந்து உனக்கு வரும் முதல் ஓலை அதுவாகும். நீ அவனைச் சந்திப்பதற்கு உன்னைத் தயார் செய்துகொள்ள வேண்டும். முகத்திலே ஏற்படுகின்ற சுருக்கங்கள், உடல் கூன் விழுதல் ஆகியவைகள் அந்த ஓலையை ஞாபகப் படுத்துகின்றன. பற்கள் விழும்பொழுது அவனை வரவேற்கத் தயாராக வேண்டும். அவனை வரவேற்பதற்கு உங்களுக்கு மூன்று விக்கல்கள் ஏற்படும். படுக்கையில் படுத்திருக்கும் போது கடைசி மூச்சு அல்லது மூன்று விக்கல்கள் ஏற்படும். கடைசி விக்கல் வரும்பொழுது உன்னுடைய சொத்து முழுவதும் உன்னுடைய பிள்ளைகள், பங்காளிகள் ஆகியவர்களால் எடுத்துக் கொள்ளப்பட்டு விடும். ஒருவர் சேவிங்ஸ் பேங்க் பாஸ் புத்தகத்தைத் தேடுவார்; மற்றொருவர் பணப் பெட்டியைக் கைப்பற்றிக் கொள்வார். இன்னொருவர் உங்களுடைய பிராவிடெண்ட் பண்டு பேப்பர்களையும், இன்ஷ்யூரன்ஸ் உரிமைத்தாள்களையும் பற்றிக் கொள்வார். வேறொருவர் உங்கள் உடலிலுள்ள நகைகளை எடுத்துக் கொள்வார். இந்த பூவுலக மட்டத்தில் இது போன்றதுதான் வாழ்க்கை. நண்பர்களே, பக்தி, தியானம், தூய்மை, சேவை, ஜபம், பிரார்த்தனை, விசாரணை ஆகியவை மூலம் மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுங்கள். எல்லாவிதமான துன்பங்களும் தொல்லைகளும் முடிந்து விடும்.

கல்யாண வைபவங்களில் நீங்கள் உங்கள் உறவினர், நண்பர்கள் ஆகியோருக்கு மட்டும் உணவளிப்பதன் மூலம் ஏராளமான பணம் செலவு செய்கின்றீர்கள். நீங்கள் ஏழைகளுக்கும் உணவளிக்க வேண்டும். அத்துடன் சாதுக்கள், சந்நியாசிகள், பிராம்மணர்கள் ஆகியோர்களுக்கும் அன்னமளிக்க வேண்டும். நீங்கள் ஒரு ஜீவன் முக்தன் அல்லது ஒரு நல்ல சந்நியாசிக்கு உணவளித்தால் அது நீங்கள் உலகமனைத்திற்கும் உணவளித்ததாகும். சமூக, மத ஸ்தாபனங்களுக் கென்று கொஞ்சம் பணத்தை நீங்கள் ஒதுக்கி வைத்துவிட வேண்டும். நீங்கள்

மத சம்பந்தமான, தத்துவார்த்த சிறு புத்தகங்களேயும், துண்டுப் பிரசுரங்களேயும் கீதையையும் வினியோகம் செய்தல் வேண்டும். காலேயிலும், இரவிலும் ஹரி சங்கீர்த்தனம் நடத்த வேண்டும். அப்பொழுதுதான் உங்களுக்கு பெரும் பயனும், மகிமையும் இங்கும், இனிமேலும் கிடைக்கும் எப்பொழுதும் சமூக வைபவங்களுக்கு ஒரு ஆன்மீக மெருகு கொடுத்து எல்லா நடவடிக்கைகளிலும், கொண்டாட்டங்களிலும் இறைவனேச் சம்பத்தப் படுத்திக்கொள்ள வேண்டும். இறைவனே நினேவுபடுத்திக் கொள்ளவும், இறையுணர்வை அடையவும் இது ஒரு சுலபமான வழியாகும். வயிற்றை மட்டும் நிரப்பிக்கொண்டிருப்பதானது, சுகவாதமாகும் (epicurianism). இது ஒருவன் இறைவனே மறப்பதற்கு ஏதுவாகிறது.

நீ தினந்தோறும் தர்ம கைங்கரியங்களேச் செய்யத் துடிதுடித்துக் கொண்டிருக்க வேண்டும். நீ எந்த சந்தர்ப்பத்தையும் நழுவ விடக் கூடாது. நீ சந்தர்ப்பங்களே உண்டுபண்ணிக் கொள்ள வேண்டும். தன்னிச்சையாக உண்டாகின்ற ரகத்தைச் சார்ந்த சாத்வீக தர்மத்தை விடச் சிறந்ததொரு யோகமோ அல்லது யக்ஞமோ கிடையாது. கர்ணன், ராஜபோஜன் ஆகியோர்கள் எண்ணற்ற தர்மங்களேச் செய்திருக்கின்றனர். ஆகவே அவர்கள் இன்னும் நம்முடைய இருதயங்களிலே வசித்து வருகின்றனர்.

ஆரம்பத்தில் நீங்கள் எப்பொழுது தர்மம் செய்கிறீர்கள் என்பதைப் பகுத்துணர முடியும். பிறகு ஐக்கியத்தில் நீங்கள் நிலேபெற்றுவிட்ட பிறகு நீங்கள் ஆராய்ந்து பார்க்காது தர்மம் செய்ய வேண்டும். உங்களுக்கு ஆராய்ச்சியற்ற இரக்கமும் ஏற்பட வேண்டும். இந்த விஷயத்தை ஒரு சிலரே புரிந்துகொள்ள முடியும்.

தர்மம் இயற்கையானதாக, தடையற்றதாக இருக்க வேண்டும். கொடுத்தல் என்பது ஒரு பலத்த வழக்கமாக ஆகிவிட வேண்டும். கொடுப்பதிலே நீங்கள் எல்லேயற்ற

ஆனந்தத்தைப் பெற வேண்டும். ''நான் ஒரு அரிய தர்ம கைங்கரியத்தைச் செய்திருக்கின்றேன். நான் சொர்க்கத்தில் ஆனந்தத்தை அனுபவிப்பேன். நான் அடுத்த பிறவியிலே பணக்காரனுகப் பிறப்பேன். இந்த தர்ம கைங்கரியம் என்னுடைய பாவத்தைப் போக்கடித்துவிடும். என்னுடைய நகரத்திலோ அல்லது என்னுடைய ஜில்லாவிலோ என்னைப்போல தர்மவான் யாரும் கிடையாது. நான் தர்மவான் என்பதை மக்கள் அறிவார்கள்'' என்றெல்லாம் நீ நினைக்கக் கூடாது. பெருமையடித்துக் கொள்ளுதல் கேவலமானது, பரிதாபகரமானது.

## 7. சத்சங்கம்

தியானத்தின் மூலம் ஆத்மா அல்லது இறைவனேடு தொடர்பு கொண்டிருப்பதுதான் உண்மையான சத்சங்கமாகும். முனிவர்கள், மகாத்மாக்கள் ஆகியவர்களோடு தொடர்பு கொண்டிருப்பதும் சத்சங்கமேயாகும். ஞானோதயம் பெற்ற ரிஷிகளாலும், முனிவர்களாலும் எழுதப்பட்ட மத சம்பந்தமான நூல்களை வாசிப்பது மறைமுகமான (negative) சத் சங்கமாகும். அச்சமின்மையும், அமரத்துவமுமாகிய அக்கரைக்கு அழைத்துச் செல்ல சத்சங்கம் ஒரு பத்திரமான படகாகும்.

புனிதமான மகாத்மாக்களுடைய நேர்முகமான சத்சங்கம் கிடைக்காத வேளையில் கீதையை வாசிப்பது மறைமுக சத்சங்கமாகும்.

அப்தௌ விதௌ வதுமுகே பணினும் நிவாஸே
ஸ்வர்கே சுதா வஸதி சேதி புதா வதந்தி
க்ஷர க்ஷய: பதிம்ரிதிர் விஷம் இந்திரநாஸ:
கந்தே சுதா வஸதி ஸ பகவத் ஜனனும்

சமுத்திரம், சந்திரன், ஸ்வர்கலோகம், இளமங்கையின் அதரங்கள் ஆகிய இடங்களிலே அமிர்தம் இருக்கின்றது என்று மக்கள் கூறுகின்றனர். சந்திரன் ஒரு

பட்சத்திற்குள் தேய்ந்து விடுவதால் அதிலே உண்மையான அமிர்தம் இருக்க முடியாது. தேவலோகத்திலேயும் உண்மையான அமிர்தம் கிடையாது. ஏனெனில் அவர்களுடைய நற்கருமங்களின் பலன் தீர்ந்துவிட்டதும் அவர்கள் இந்த உலகத்தில் மறுபடி பிறவி எடுக்க வேண்டியிருக்கிறது. மங்கையர்களின் அதரங்களிலேயும் உண்மையான அமிர்தம் இருக்க முடியாது; ஏனெனில் அவர்களுடைய அதரங்களிலே இருந்து அமிர்தத்தைப் பருகிய கணவன்மார்கள் இறந்து விடுகின்றனர். உண்மையான அமிர்தம் அனுபூதி அடைந்த ரிஷிகள், முனிவர்கள் ஆகியோருடைய கழுத்திலும், நாவிலும்தான் இருக்கிறது. அவர்களுடைய இனிய மொழிகளும், உபதேசங்களும் மக்களுக்கு மரணமிலாப் பெருவாழ்வையும், நிலையான அமைதியையும் அளிக்கின்றன.

சாதுக்களை எவ்வாறு அறிந்து கொள்வது? பகவான் கண்ணன் அவர்களைப் பற்றி ஒரு வர்ணனையைக் கொடுத்திருக்கிறார். இதை நீங்கள் பாகவதத்திலே காணலாம். சாதுக்கள் எதைப் பற்றியும் அக்கரை கொள்வதில்லை (அனபேக்ஷா). அவர்களுடைய உள்ளங்கள் என்னிடத்தில் பதிந்திருக்கின்றன (மச்சிந்தம்). அவர்கள் மிகவும் பணிவுடையவர்கள். அவர்களிடம் சமநோக்கு உண்டு (சமதர்சினம்). அவர்களுக்கு யார் மீதும், எப்பொருள் மீதும் பற்றுதல் என்பது கிடையாது. அவர்கள் என்னது (மமதை) என்பது இல்லாது இருக்கின்றனர். அவர்களிடம் அகந்தை கிடையாது (நிரஹங்காரம்). அவர்கள் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் இடையே எந்தவித பாகுபாடும் கொள்வதில்லை. அவர்கள் மற்றவர்களிடமிருந்து எதையும் ஏற்றுக் கொள்வதில்லை (அபரிக்ரஹம்). அவர்களால் உஷ்ணம், குளிர்ச்சி, வலி ஆகியவற்றைப் பொறுத்துக் கொள்ள முடியும். அவர்கள் எல்லா ஜீவராசிகளிடத்திலும் அன்பாய் இருக்கிறார்கள். அவர்களுக்கு விரோதியே கிடையாது. அவர்கள் அமைதியாக இருக்கின்றனர். அவர்களிடம் எடுத்துக்காட்டான நடத்தை உண்டு.

ஒவ்வொரு காட்டிலும் சந்தன மரத்தைக் காண்பது அரிது. முத்துக்கள் எல்லாக் கடல்களிலும் கிடைக்காது. ரத்தினக் கற்கள் எல்லா மலைகளிலும் காணப் படாது. உண்மையான சாதுக்கள் அல்லது சந்நியாசிகள் எங்கும் காணப்பட மாட்டார்கள். அவர்களை நீங்கள் தனித்த இடங்களிலே தேட வேண்டும்.

மோக்ஷ சாம்ராஜ்யத்திலே சத்சங்கம் ஒரு முக்கிய மான காவலாளியாகும். நீ அவனோடு நட்பு கொண்டு விட்டால் நீ விசாரம், சாந்தி, சந்தோஷம் ஆகியவற்றின் நட்பைப் பெறுவாய். சாதுக்களுடைய சேர்க்கையாகிய குளிர்ந்த, புனிதமான கங்கையிலே நீ ஒரு ஸ்நானம் செய்தால் நீ தீர்த்த யாத்திரையோ, யாக யக்ஞமோ செய்ய வேண்டியதில்லை.

சத்சங்கம் அல்லது சாதுக்கள், மகாத்மாக்கள் சேர்க்கையானது உலகாயத அழுக்குகளை அழித்து மோக்ஷ வீட்டின் கதவை நன்ருகத் திறந்து வைக்கின்றது. சத் சங்கம் மோக்ஷ சாம்ராஜ்யத்திற்குரிய ஒரு காவலாளி யாகும். சத்சங்கத்தோடு நீ நட்பு கொண்டுவிட்டால் சாஸ்வதப் பேரானந்த சாம்ராஜ்யத்தினுள் நீ நுழைந்து விடலாம்.

சாது சந்நியாசிகளுடைய ஒரு நொடிப் பொழுது நட்பு கணக்கிட முடியாத மதிப்புடையதாகும். அது வேண்டப்படும் எல்லா நன்மைகளையும் அளிக்கும். அது உலகாயத சம்ஸ்காரங்களையும், கெட்ட எண்ணங்களையும் போக்கி, உலகாயத மனிதனுக்கு ஒரு புதிய ஆன்மீகத் திருப்பத்தை மனத்திற்குக் கொடுக்கிறது.

சத்சங்கம் அல்லது சாதுக்களின் தொடர்பு அகத்தி னுடைய இருளைப் போக்குகின்றது. இது சம்சார சாகரத் தைக் கடப்பதற்கு ஒரு பத்திரமான படகாகும். சத்சங்கம் உள்ளத்தை உயர்த்தி, சாத்வீகத்தால் (தூய்மை) அதை நிரப்புகின்றது. இது கெட்ட எண்ணங்களையும், நினைவு

களையும் ஒழித்து உள்ளத்திலே தயையை நிலை நிறுத்துகிறது. இது ஒருவனை நல்வழிக்கு அழைத்துச் சென்று அவனுடைய உள்ளத்திலே ஞான சூரியனைப் பிரகாசிக்கும் படிச் செய்கின்றது.

பரத முனிவர் ரஹூகண ராஜாவிடம், "ஓ ரஹூகணா, நீ மகாத்மாக்களுடைய பாததூளியை எடுத்து உன்மீது தூவிக் கொண்டு அவர்களுடைய உறவைக் கொண்டு அவர்களிடம் அடைக்கலம் புகுந்தாலொழிய, நீ வேத யக்ஞங்களையும், தபஸ், தான தர்மங்கள், வேதாகம பாராயணம் ஆகியவைகளைச் செய்தாலும், வருணன், அக்னி, சூரியன் ஆகிய தேவதைகளை வழிபட்டாலுங்கூட உன்னால் பகவானை அடைய முடியாது" (பாகவதம் V 20-12) என்று கூறினார்.

இறைவனிடம் பக்தி தானாக வந்துவிடாது. ஒரு குருடன் இன்னொருவனை அழைத்துச் செல்ல முடியாது. மகாத்மாக்களுடைய தொடர்புதான் ஒரு மனிதனுடைய உள்ளத்திலே பக்தியை உண்டுபண்ண முடியும். மகாத்மாக்கள் வாழ்க! அவர்களுடைய ஆசிகள் உங்கள் அனைவருக்கும் ஏற்படுவதாக!

## 8. சரணாகதி

ஆத்ம பரித்தியாகமும், துறவும், உன்னை பண்பாட்டுடன் கூடிய உயர்ந்த ஆன்மீக நாட்டத்திற்கு அழைத்துச் செல்வதோடு உன்னை ஆன்மீக வெற்றி, புகழ் ஆகியவற்றின் உச்சிக்குக் கொண்டு செல்லும்.

ப்ரபத்தி சித்தாந்தம் அல்லது இறைவனிடம் பரிபூரண ஆத்மபரித் தியாகத்தையும் சரணாகதி என்று கூறுகின்றார்கள். பக்தர்களுடைய ஒரே அடைக்கலமும், ரக்ஷகனும் இறைவன்தான். ப்ரபத்தியில் ஆறு அம்சங்கள் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. (1) ஒருவனை இறைவனுக்குத் தகுதியான காணிக்கையாகச் செய்யும் நற்குணங்

களைப் பெறுதல் (2) இறைவனுக்குப் பிடித்தமில்லாத குணத்தைத் தவிர்த்தல் (3) இறைவன் தன்னைக் காப்பாற்றுவான் என்கின்ற நம்பிக்கை (4) பாதுகாப்பிற்காகவும், கருணைக்காகவும் இறைவனிடம் வேண்டுதல். (5) தன்னைப்பற்றித் தானே சிறுமையாக எண்ணிக் கொள்ளும் ஒரு உணர்ச்சி. (6) பூரண சரணாகதி. முதல் ஐந்து அம்சங்களும் பரிபூர்ண ஆத்ம சரணாகதியை அடைவதற்கான வழிகளாம்.

சரியான பாவத்துடன் சரியான மனப்பாங்குடன் சாதனை செய்யப்படும் பொழுது அது அகந்தைக்கு சூக்ஷ்மமாக இடங் கொடுக்காது. இது அகங்காரத்தை ஒழிப்பதற்காகவே செய்யப்படுகிறது. பக்தி மார்க்கத்திலே கூட சாதகன் தானே ஆத்ம சரணாகதியைச் செய்ய வேண்டியிருக்கிறது. உனக்காக இதை கடவுள் செய்ய மாட்டார். புல்லாங்குழல்தாரி, "உன்னுடைய சகலத்துடனும் என்னிடம் அடைக்கலத்திற்குவா, நீ என்னிடம் சரணாகதியடைந்து விடு. அப்பொழுதுதான் நீ என்னுடைய கருணையைப் பெறுவாய். அப்பொழுதுதான் நான் உன்னை விடுவிப்பேன்" என்று கூறுகின்றார்.

ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனும் தன்னை இறைவனிடம் அர்ப்பணித்துக் கொள்வதின் மூலம் தன்னுடைய சொந்த விடுதலைக்கு வழி வகுத்துக் கொள்ளலாம். சரணாகதி மனப்பூர்வமானதாகவும், பூரணமானதாகவும், கபடமற்றதாகவும் இருத்தல் வேண்டும். பக்திமார்க்கத்திலே வெற்றியின் ரகசியம் இதுதான். பக்தியிலே சாதகன் நிலைபெற்றிருக்கும் வரை ஒரு பக்குவமடைந்த முனிவரிடம் நேரடித் தொடர்பு கொண்டிருப்பது அவசியம். அப்பொழுது தான் உலகாயத குணம் மாற்றப்படுவதுடன் பழைய கெட்ட சம்ஸ்காரங்கள் பூர்ணமாக திருத்தியமைக்கப் படும்.

10,000 பேர் கொண்ட ஒரு கூட்டமானது ரோமாபுரி வேசியான மேரி மாக்டலீனைக் கல்லால் அடிக்க ஓடி

வந்தது. பகவான் இயேசுநாதர் அந்தக் கூட்டத்தைப் பார்த்து "உங்களில் எவன் ஒரு பாவமும் செய்யாதிருக்கின்றனோ அவன் அவள் மீது ஒரு கல்லை எறியட்டும்" என்று கூறினார். பகவான் இயேசுவின் பேச்சைக் கேட்டதும் கூட்டம் அமைதி பெற்று விட்டது. அடுத்த வினாடியிலேயே கிருஸ்துபிரானின் கருணையின் மூலமாக மேரி மாக்டலீன் ஒரு சாது (saint) வானாள். இறைவனுடைய கருணை எப்பொழுது, யார் மீது, எப்படி வந்திறங்கும் என்பதைக் கூறுவது மிக மிகக் கடினம். கீதையிலே பகவான் கண்ணன் "ஓ பார்த்தா, என்னிடம் யார் தஞ்சம் புகுகின்றனரோ, அவர்கள் பாவியின் கர்ப்பத்திலே தோன்றியிருப்பினும், பெண்களாக இருப்பினும், வைஸ்யர்களாக இருந்தாலும், சூத்திரர்களாக இருந்தாலுங்கூட, அவர்களும் மிக உயர்ந்த மார்க்கத்திலே செல்லலாம்" என்று பகர்கின்றார். அன்பார்ந்த நண்பர்களே, பிறகு இன்னும் ஏக்கத்திற்கு என்ன காரணம் இருக்கிறது?

நிராசை வேண்டாம். எழுந்து செய்த வண்ணமிரு. போராடு. சாதனையை விடாது செய். உழைத்த வண்ணமாக இரு. தைரியமாக முன்னேக்கி நட. மனப்பூர்வமான சாதனை செய். கருணையே வடிவான கடவுள் உன்னுடைய முயற்சிகளுக்கு நிச்சயம் வெற்றி மகுடம் சூட்டுவார். நம்முள் துன்மார்க்கத்தின் உச்ச நிலையில் இருப்பவர்களும் கூட விடுதலையடையலாம். பகவான் கண்ணன் நமக்கு உறுதி மொழி அளித்திருக்கிறார்.

உனக்கு எது நன்மையளிக்கக் கூடியது என்பதை உன்னைவிட மிக நன்றாக இறைவன் அறிவார். இறைவனுடைய விருப்பத்திற்குப் பூரணமாக அர்ப்பணித்து விடுவதானது, அவனுடைய ஆலயத்திற்குச் சென்று, மணியடித்து, எல்லா விதமான சடங்கு முறைகளையும் செய்வதையும் விட உயர்ந்த வழிபாட்டு முறையாகும்.

அவன் உன்னுடைய இருதயத்திலே அவனுடைய இனிய அன்புடனும், கருணையுடனும் உன்னை அணைத்துக்

கொள்ள கரங்களை விரித்த வண்ணம் நின்றுகொண்டிருக்கின்றான். உன்னுடைய முகத்தைத் தூக்கிப் பார். குழந்தையைப் போன்ற எளிமையுடனும், கபடமற்ற தன்மையுடனும், வெள்ளை உள்ளத்துடனும் (ஆர்ஜவம்) அவனை அணுகு. உன்னுடைய உள்ளத்தைத் திறந்து அவனிடம் பேச வை. நிபந்தனையற்ற பரிபூரண ஆத்ம சமர்ப்பணம் அல்லது சரணாகதியடை.

நீ மனப் பூர்வமான, நிபந்தனையற்ற, கபடமற்ற, பரிபூர்ண சரணாகதி யடைந்தால் உன்னுடைய பொறுப்புக்களனைத்தும் தீர்ந்து விடுகின்றன. எல்லா விதத்திலும் இறைவன் உன்னைப் பாதுகாத்துக் கொள்வார். சாதனையிலே நீ எவ்வித முயற்சியும் செய்யத் தேவையில்லை. இறைவன் உனக்காக எல்லாவற்றையும் செய்வார்.

உன்னுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு செயலிலும் இறைவனுடைய கருணையிடம் நிபந்தனையற்ற சரணாகதி அடைந்துவிடுவது ஒன்றுதான் ஒரு நம்பிக்கையாக இருக்கிறது. ஆனால் அது செயல்படும் பொழுது, அனுபவத்திற்கு வரும் பொழுது உன்னுடைய அகந்தை தலைதூக்கி விடுகிறது. தன்னுரிமை நாட்டும் குணம் (self assertion) உள்ளே புகுந்துவிடுகின்றது. இதை வெல்ல முயற்சி செய்.

முணுமுணுக்காத, பரிபூரண ஆத்ம சரணாகதியடைய இங்கே சில மந்திரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை தினந்தோறும் பல தடவை பாவத்துடன் திருப்பித் திருப்பி உச்சரிக்கவும்; இறைவா, நான் உன்னுடையவன். எல்லாம் உன்னுடையவை. நீயே போதும். நீ எல்லாமாக இருக்கின்றாய். நீ எல்லாவற்றையும் செய்கின்றாய்". இந்த அப்பியாசமானது, அகந்தையையும், 'என்னுடையது' என்கின்ற தன்மையையும், காரணத்துவ எண்ணத்தையும் (idea of agency) நீக்கிவிடும்.

பக்தன் இறைவனைப் பார்த்து, "இறைவா, நான் உன்னுடையவன். நீயே சகலமும். நீ எல்லாம் செய்ய

வல்லவன். நீ நேர்மையானவன். நான் உன்னுடைய கைகளிலே ஒரு கருவியாக இருக்கின்றேன். நான் ஒன்றுமில்லை. என்னால் ஒன்றும் செய்ய இயலாது. என்னிடம் ஒன்றும் இல்லை '' என்று கூறி தன்னுடைய அகந்தையை அழித்து இறைவனிடம் ஆத்ம சரணாகதி அடைகின்றான்.

அகந்தையானது, கர்மங்கள் (நான் நல்ல செயல்களைச் செய்திருக்கிறேன்) வர்ணாஸ்ரமம் (நான் பிராம்மணன்; நான் மற்றவரைக் காட்டிலும் உயர்ந்தவன். நான் சந்நியாசி. நான் ஒரு தூய்மையானவன்). தேக பலம், செல்வம், புத்தி கூர்மை, அழகு, நற்குணங்கள் முதலியவற்றைப் பெற்றிருத்தல் ஆகியவைகள் மூலமாக விருத்தியாகின்றது. ஆன்மீக சாதனையின் மூலமாக இந்த அகந்தை அழிக்கப்பட்டால் இறைவனிடம் உண்மையான ஆத்ம சரணாகதியடைய முடியும்.

---

## அத்தியாயம் ஏழு

## ஜப யோகம்

### 1. ஜபம், சுலபமான சாதனை

நாமமும் நாமியும் பிரிக்க முடியாதவைகள். அவனுடைய நாமத்தை ஞாபகத்தில் வை. அவனுடைய நாமத்தை உச்சரி. அவனுடைய நாமத்தைப் பாடு. அவனுடைய நாம மகிமை விளங்குவதாக. அவனுடைய நாமத்திற்கு வெற்றி. அது நம்மை எப்பொழுதும் ஆசீர்வதித்து, நமக்கு மரணமிலாப் பெருவாழ்வையும், மேலான அமைதியையும், சாஸ்வதப் பேரானந்தத்தையும் அளித்து ஆசீர்வதிக்கின்றது.

இறைவனுடைய நாமாவை இடைவிடாது உச்சரித்தலானது (ஜப ஸ்மரணை) இந்த அழியக்கூடிய சம்சார சாகரத்தை அல்லது உலகாயத வாழ்வைக் கடப்பதற்கு ஒரு சுலபமான வழியாகும். இது இல்லறத்தார்களுக்கு மிகவும் பொருத்தமானது.

தியானம் என்பது ஜபத்திலிருந்து வேறுபட்டது. ஜபம் என்பது எந்த ஒரு மந்திரத்தையும் திரும்பத் திரும்ப உச்சரித்தல். உள்ளமானது உன்னுடைய இஷ்ட தேவதையினுடைய உருவத்திலேயும், சர்வவல்லமை, சர்வ வியாபகத்தன்மை போன்ற தெய்வீக குணாதிசயங்களின் மீதும் பதிய வைக்கப்படும் பொழுது அது தியானம் என்றழைக்கப்படுகிறது.

மந்திர யோகத்திலே நீ வெற்றி பெற விரும்பினுல் நீ பக்தியை விருத்தி செய்ய வேண்டும். பக்தி யோகமும் மந்திர யோகமும் ஒன்றோடொன்று கலக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் பிரிக்கப்பட முடியாதவைகளாகும்.

இறைவனுடைய நாமத்தை ஜபிக்காத மனித னுடைய வாழ்க்கை வீண். அவனுடைய நாமமின்றி வாழ்வதைக் காட்டிலும் சாவதே மேல்.

எந்த மந்திரத்தையும் ஜபம் செய்பவன் சன்மார்க்க வாழ்க்கை நடத்த வேண்டும். அப்பொழுது அவன் அந்த மந்திரத்தின் அதிக பட்ச நன்மைகளை உணர்வான்.

ஜபமும், தியானமும், ஆசனம், பிராணுயாமம் ஆகிய வற்றைக் காட்டிலும் முக்கியமானவைகளாம்.

ஆகமங்களின் உபதேசங்களை நீ சந்தேகிக்கக் கூடாது. ஸ்திரமில்லாத நம்பிக்கை வீழ்ச்சிக்குக் கொண்டு செல்லும். ஜபத்திலே நம்பிக்கை யில்லாத பலஹீனமான உள்ளம் படைத்தவன் ஆன்மீக வழியிலே முன்னேற் றத்தை எதிர்பார்க்க முடியாது. "நான் யார்?" என் கின்ற விசாரணையை "நான் செய்து வருகிறேன்" என்று அவன் சொல்வானேயானுல், அது எல்லாம் வெறும் கற்பனையே தவிர வேறில்லை. "நான் யார்?" என்னும் விசாரணைக்கு ஒரு சிலரே தகுதியுடையவர்கள்.

நீ சிரேஷ்டமாக விரும்பும் ஒரு தேவதையின் எந்த மந்திரத்தை வேண்டுமானுலும் ஜபித்து அது உள்ளத் திலும், உடலிலும் ஏற்படுத்தும் சக்தியையும் அதனுடைய வெளிப்பாடுகளையும் (revelations) உணர்ந்து பார். புத்த கங்களை மட்டும் படித்துக்கொண்டிருப்பதை விட இது சிறந்தது. புத்தகங்கள் உனக்கு உதவி புரிவதோடு நல்ல விளக்கங்களையும் கொடுக்கின்றன என்பதில் சந்தேக மில்லை. ஆனுல் தேவைப்படுவதெல்லாம் என்னவென்ருல் உண்மையான சாதனைதான். சாதனையின்போது பிரம்மச் சரியம், சத்தியம், அஹிம்சை, நன்னடத்தை, சத்துவ ஆகாரத்தை எடுத்துக்கொள்ளுதல் ஆகியவற்றை அனுஷ் டித்தல் அவசியமாகும்.

ஒரு மந்திரத்தை ஜபிக்கும் பொழுது தாளக்கட்டு (rhythm) உண்டு. தாளக்கட்டு என்பது சந்தம் (metre).

தாளக்கட்டு என்பது பாய்ந்து வரும் அசைவு (flowing motion). தாளக்கட்டு என்பது உச்சரிப்பு, விகிதம் ஆகிய வற்றின் இயைவு. தாளக்கட்டு என்பது ஸ்வரசின்னம் அல்லது ஒலிக் குறிப்பை உச்சரித்தல். இத்தாளக் கட்டா னது சாதகனிடம் ஒரு இசைவை ஏற்படுத்துகின்றது. மந்திர ஜபத்தினுடைய மயக்குகின்ற தாளக்கட்டானது உள்ளத்திலே அமைதியை ஏற்படுத்துகின்றது.

நீ பலஹீனமாக இருப்பதாக உணர்ந்தால், ஆசனம் பயிலுவதைக் கொஞ்ச காலம் நிறுத்திவைக்கலாம். ஆனால் ஜபம் எப்பொழுதும் தொடர்ந்து செய்யப்படல் வேண்டும். இது ஒரு சுத்தமாக்கும் பொருளாகவும், மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியதுமாக இருப்பதோடு கூட உடல், உள்ளம் இரண்டிற்குமே சக்தியளிக்கும் மருந்தாகும் (tonic). கர்மங் களை நீக்கியாக வேண்டியிருக்கிறது. ஒரு ஆர்வமுள்ள சாதகனுக்கு எல்லா விதமான நோய்களும் வருகின்றன. ஏனென்றால் அவன் இறைவனோடு ஐக்கியமாவதற்கு அவசரப்பட்டுக் கொண்டிருக்கின்றான். பல கெட்ட கர்மங் கள் தீர்க்கப்பட அல்லது அனுபவிக்கப்பட வேண்டியிருக் கின்றன. சாதகர்கள் முற்றிலும் பயமற்றிருத்தல் வேண் டும். நோய் என்பது இறைவனிடமிருந்து வருகின்ற தூதுவன் ஆகும். இந்த உடலாகிய இல்லத்திற்கு வருகின்ற விருந்தாளிதான் நோய். நோய்கள் சாதகனுடைய நேர்மையை சோதிக்க வருகின்ற சோதனைகளாகும். சத்தி யத்தை நாடிச் செல்வோர்கள் எக்காலத்திலும், வாழ்க்கை யின் எல்லா நிலைமைகளிலும் அசைக்க முடியாத, பின் வாங்காத, பிறழாத நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். அவர்கள் அதைரியப்படவே கூடாது. முறையாக ராமா யணம் வாசித்தல், தியானத்தோடு ஜபம் செய்தல், மாலை யிலே உலாவுதல் ஆகியவற்றை ஒழுங்காகப் பயின்று வர வேண்டும்.

குஷ்ட ரோகத்தை நிவர்த்திப்பதற்காக ஒரு வியாபாரி யிடம் ராம நாமத்தை இரண்டு முறை உச்சரிக்கச்

சொல்லிய காரணத்திற்காக கமால் அவருடைய தந்தை யாகிய கபீரிடமிருந்து கடுமையான திட்டுதலைப் பெற்றார். கமால் வியாபாரியிடம் ராம நாமத்தை இரண்டு முறை உச்சரிக்கச் சொன்னார். இருந்த போதிலும் அவருக்கு அந்நோய் குணமடையவில்லை. இந்தச் சம்பவத்தை கமால் தந்தையிடம் தெரிவித்தார். கபீர் மிகவும் மனம் கலங்கி கமாலைப் பார்த்து ''நீ அந்த வியாபாரியிடம் ராம நாமத்தை இரண்டு முறை உச்சரிக்கச் சொல்லியதன் மூலம் என்னுடைய குடும்பத்திற்கே ஒரு களங்கத்தை ஏற்படுத்திவிட்டாய். ராம நாமத்தை ஒரு முறை உச்சரித் தாலே போதும். இப்பொழுது அந்த வியாபாரியை கங்கை யிலே நின்று கொண்டு ராம நாமத்தை ஒரே தடவை அவருடைய அடி மனத்திலிருந்து உச்சரிக்கச் சொல் என்று கூறினார். கமால் தந்தையின் உபதேசங்களைப் பின் பற்றினார். வியாபாரி ராம நாமத்தை ஒரே ஒரு தடவை பாவத்துடன் இருதயத்தின் அடியிலிருந்து உச்சரித்தார். குஷ்ட நோயிலிருந்து அவர் பூரண குணமடைந்தார். கபீர் கமாலை துளசிதாஸரிடம் அனுப்பினார். துளசிதாஸர் ஒரு துளசி தளத்தில் ராம நாமத்தை எழுதி அந்தச் சாற்றை 500 குஷ்டரோகிகளின் மீது தெளித்தார். எல்லோரும் பூர்ண குணமடைந்தனர். கமால் திகைப்படைந்தார். பிறகு கபீர் கமாலிடம் ஆற்றிலே மிதந்து செல்லும் ஒரு பிணத்தைக் கொண்டு வரச் செய்தார். சூர்தாஸர் அப் பிணத்தினுடைய ஒரு காதில் ராம நாமத்தை ஒரே ஒரு முறை உச்சரித்தார். அது உயிர் பெற்று எழுந்தது. கமாலி னுடைய உள்ளம் உவகையாலும், ஆச்சரியத்தாலும் நிரம்பியது. இறைவனுடைய நாம மகிமை அப்பேர்ப் பட்டதாகும். எனதன்பார்ந்த நண்பர்களே, எனது படித்த கல்லூரி இளைஞர்களே, எனதன்பிற்குரிய சட்ட மேதை களே, பேராசிரியர்களே, டாக்டர்களே, நீதிபதிகளே! இறைவனுடைய நாமாவை பாவத்துடனும் பிரேமையுட னும் இருதயத்தின் அடியிலிருந்து உச்சரித்து இந்த விநாடி யிலேயே மேலான பேரானந்தத்தையும், அமரத்துவத்தை யும் உணருங்கள்.

## 2. ஜபத்திற்கான மந்திரங்கள்

இந்தக் கலியுகத்திலே ஒரு மனிதனுக்கு இறைவனுடைய நாமம் தான் இந்த சம்சார சாகரத்தைக் கடக்க உதவும் ஒரு ஆதாரமாகும். நாமத்திலே ஒரு வர்ணிக்க முடியாத சக்தி (அசிந்திய சக்தி) இருக்கின்றது. இந்த சக்தியானது மனிதனை இறைவனிடம் அழைத்துச் செல்கின்றது.

கர்மங்கள், தவங்கள் ஆகிய ரூபங்களிலே செய்யப் படும் பல்வேறு விதமான தவங்களிலே, கண்ணபிரானை இடையருது எண்ணிக் கொண்டிருப்பது தான் உத்தம மானது. (விஷ்ணு புராணம் - II அத். – VI. ஸ்லோகம் 134-135)

பகவான் கண்ணனுடைய உருவத்தைத் தியானிப் பவர்கள் "ஓம் நமோ பகவதே வாசுதேவாய" என்கின்ற மந்திரத்தை மானசீகமாக ஜபிக்கலாம். வாசுதேவன் என்பது பகவான் கிருஷ்ணனுக்குரிய மற்ரொரு பெயராகும். இதற்கு "எங்கும் நிறைந்த அறிவு" என்பது பொருள்.

பகவான் நாராயணனை வணங்கி "ஜெய நாராயணா" என்ற வார்த்தைகளைக் கூறவும். மானசீகமாக "ஓம் நமோ நாராயணாய" என்று ஜபிக்கவும். இப்புனித மந்திரத்தை எட்டு லக்ஷம் முறை ஜபிக்கவும். இது ஒரு புரஸ்சரணமாகும். பிறகு ஹவன் செய்யவும். பிராம்மணர் களுக்கும், ஏழைகளுக்கும் அன்னமளிக்கவும். உங்க ளுக்கு அற்புதமான ஆன்மீக அனுபவங்கள் உண்டா கும்.

ஓம் என்ற பிரணவம், "அஹம் ப்ரஹ்மா அஸ்மி!" போன்ற மஹாவாக்யங்கள் ஆகியவைகளை ஜபித்தலானது வேதாந்த ஸம்ஸ்காரங்களை உறுதிப்படுத்தி சித்தத்தைத் தூய்மையாக்கி, நாளடைவில் ஆத்ம ஞானத்தைப் பெற வழி கோலுகின்றது.

ஒவ்வொரு மந்திரமும் ஓம் என்ற பிரணவத்தை முதலில் கொண்டிருக்க வேண்டும். ஓங்காரம் மந்திரத்திற்கு முழுச் சக்தியைக் கொடுக்கின்றது. எல்லா மந்திரங்களுக்கும் சமமான சக்தி உண்டு. ஒரு மந்திரம் மற்றொரு மந்திரத்தைவிட உயர்ந்தது என்று கூறுவது முற்றிலும் தவறு. எந்த ஒரு மந்திரத்தை ஜபித்தும் நீ இறை உணர்வைப் பெறலாம். வால்மீகி மரா - மரா என்று சொல்லிக் கூட இறையுணர்வைப் பெற்றார். சிலர் ஓம் அல்லது ஸோஹம், ஓம் நமசிவாய அல்லது ஓம் நமோ நாராயணாயவை விடச் சிறந்தது என்று கருதுகின்றனர். இதுவும் தவறு. ஓம் அல்லது ஸோஹத்தை ஜபித்து அடையும் நிலையை ஸ்ரீராம் அல்லது ராதேஷ்யாம் என்று ஜபித்தும் அடைய முடியும்.

ராம் அல்லது ஓம் இந்த ராக்ஷஸ மனதை அழிப்பதற்கு உதவும் திண்மையான வாளாகும். இந்தப் பரந்த சம்சார சாகரத்தைக் கடக்க இது ஒரு உண்மையான படகாகும். இந்த உலகத்தை வெல்ல இது ஒரு பலம் பொருந்திய ஆயுதமாகும். இது அஞ்ஞானத்தையும், இந்த உடலையும், சம்ஸ்காரங்கள், வாஸனைகள் ஆகியவற்றையும் எரித்துச் சாம்பலாக்கக்கூடிய ஞானாக்னியாகும். இது ஆத்மாவைத் தட்டியெழுப்புவதற்கு உதவும் மந்திரமாகும். தளர்ச்சியுற்ற நரம்புகளுக்குப் புத்துயிரளிக்கும் மந்திர ஜால நிவாரணியாகும். சாசுவதப் பேரானந்தமும், மேலான அமைதியும் நிறைந்த எல்லையற்ற சாம்ராஜ்யத்தைத் திறப்பதற்கு உதவும் திறவு கோலாகும் ("open sesame") இந்த விசித்திரமான வாளைக் கையிலேந்தி இந்த உலகத்தோடு கொண்டுள்ள எல்லா தொடர்புகளையும் தகர்த்து, கர்மம், மனம் ஆகியவற்றின் தளைகளை அறுத்து, அறியாமையை ஒழித்து, மனச்சார்புகளை நசுக்கி, எல்லையற்ற ஆனந்தமும், நிரந்தர சூரிய ஒளியும் நிறைந்த பரந்த சாம்ராஜ்யத்தினுள் தைரியமாக நுழைவாயாக.

## 3. அஜபா ஜபம்

அஜபா ஜபம் செய். பிராணன் நாதத்திலே (இருதயத்தின் அனுஹத சப்தத்தில்) லயமாகிவிடும். எல்லா விருத்திகளும் அழிந்துபடும்.

நீங்கள் மிக அதிக வேலையுடையவர்களாகவும், எப்பொழுதும் பிரயாணத்திலேயே காலம் கழிப்பவராகவும் இருந்தால் தியானத்திற்கென்று உங்களுக்கு விசேஷமான இடமோ, குறிப்பிட்ட நேரமோ தேவை இல்லை. சுவாசத்தோடு ஸோஹம் ஜபத்தையோ அல்லது ஸோஹம் தியானத்தையோ செய்து வரவும். இது மிகவும் சுலபம். அல்லது சுவாசத்தோடு ரா-ம மந்திரத்தைச் சேர்த்துக் கொள்ளவும். அப்பொழுது சுவாசத்தின் ஒவ்வொரு கணமும் பிரார்த்தனையாகவும், தியானமாகவும் ஆகிவிடும். "ஸோஹம்" என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும். எங்கும் அவனுடைய பிரசன்னத்தை உணரவும். இது போதுமானது.

## 4. லிகித ஜபம்

லிகித ஜபம் அல்லது மந்திரமெழுதுதலானது எனது உள்ளத்தை இறைவனை நோக்கிச் செலுத்தும் ஒரு கூர்மையான தாற்றுக் கோலாகும். உள்ளத்தை இறைவனிடம் பதிய வை. மந்திரத்தை எழுதும் பொழுது அவனுடைய குணாதிசயங்களை எண்ணிக் கொண்டிரு. சூழ்நிலையை மறந்து விடு. எல்லாவற்றையும் மறந்து விடு. உன்னுடைய இஷ்ட தேவதையோடு தனித்திரு. தினந்தோறும் ஒரு நோட்டுப் புத்தகத்தில் மையினுல் குறைந்தது அரை மணி நேரமாவது மந்திரத்தை மௌனமாக இருந்து கொண்டு எழுது. மந்திரத்தை நீ எந்த மொழியிலும் எழுதலாம். உன்னுடைய குருமந்திரம் அல்லது உன்னுடைய இஷ்ட தேவதையின் மந்திரம் ஆகியவற்றில் ஏதாவது ஒரு மந்திரத்தைப் பற்றிக் கொள்ளவும்.

ஞாயிற்றுக்கிழமைகளிலே மாலை வேளையில் உன்னுடைய குடும்பத்தார் எல்லோரும் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு ஒரு நோட்டுப் புத்தகத்தில் ஹரி ஓம், அல்லது சீதாராம் அல்லது ஸ்ரீ ராம், ஜெயராம் அல்லது ஓம் நம சிவாய, அல்லது ஓம் நமோ நாராயணாய என்று ஏதாவது ஒரு மந்திரத்தை ஒரு மணி நேரம், மௌனம் அனுஷ்டித்தவாறு எழுதலாம். நீங்கள் அற்புதமான அமைதியையும், பலத்தையும் உணர்வீர்கள். இதை ஒரு நாளைக்குக் கூட பயின்று பார். இது உன்னுடைய குடும்பத்தாருடைய நன்மைக்காகவாகும். நீ ஒரு பொது இடத்திலோ அல்லது ஒரு கோவிலிலோ உன்னுடைய நண்பர்கள் சிலருடன் உட்கார்ந்து கொண்டு இந்த உருப்படியான சக்தி பொருந்திய ஆத்மீக சாதனையைச் செய்யலாம். மந்திரத்தை எழுதும்பொழுது அந்தரங்க பாவத்தை நிலையாக வைத்திரு. இங்கும் அங்கும் வேடிக்கை பார்க்காதே. ஜபத்தைவிட உனக்கு இதிலே அதிகமான மன ஒருமைப்பாடு ஏற்படும். இச்சாதனையை நான் பீஹாரிலும், ஐக்கிய மாகாணத்திலும், பஞ்சாபிலும் மற்றும் அநேக இடங்களிலும் புகுத்தியிருக்கின்றேன். ஆயிரக் கணக்கான பேர்கள் சொல்ல முடியாத நன்மைகளைப் பெற்றிருக்கின்றனர். ஒரு காலத்தில் நாஸ்திகர்களாக இருந்த படித்த ஆசாமிகள் கூட இப் பழக்கத்தைக் கொண்டுள்ளனர். நீ இந்தப் பயிற்சியை தினந்தோறும் செய்து வருவாயேயாகில், உண்மையில் அதிசயிக்கத் தக்க நன்மைகளை உணர்வாய்.

## 5. ஜபத்தினால் உண்டாகும் பலன்கள்

ஜபம் என்பது உள்ளத்திற்கு ஒரு அற்புதமான தெய்வீக சோப்பாகும். ஜபமானது ஒரு அருமையானதும், புத்துணர்ச்சியூட்டக் கூடியதும், மலர்ச்சியைத் தரக்கூடியதுமான ஒரு ஆன்மீக ஸ்நானத்தைக் கொடுக்கின்றது. இது சூக்கும சரீரம் அல்லது லிங்க சரீரத்தை அதிசயிக்கத் தக்க முறையில் கழுவுகிறது. அதனுடைய பல்வேறு வகையான அழுக்குகளை இது சுத்தம் செய்கின்றது. ஜபம்

உள்ளத்தைத் தூய்மையாக்குகிறது. ஜபம் மனதை ஸ்திரப் படுத்துகின்றது. இது ஷட் ரிபுக்களேயும் (Shad Ripus) அழிக்கின்றது. இது பிறப்பு, இறப்புக்களே ஒழிக்கின்றது. ஜபம் பாவங்களேப் பொசுக்கிச் சாம்பலாக்குகின்றது. ஜபம் ஸம்ஸ்காரங்களே எரித்து விடுகிறது. ஜபம் பற்றுதலே ஒழித்து வைராக்கியத்தை ஊட்டுகிறது. ஜபம் எல்லா விதமான ஆசைகளேயும் களேந்து ஒருவனே பயமற்றவ ஞக்குகின்றது. ஜபம் மயக்கத்தை (delusion) நீக்கி மேலான அமைதியை அளிக்கின்றது. ஜபம் பிரேமையை வளர்த்து பக்தனே இறைவனேடு ஐக்கியப் படுத்துகின்றது. ஜபம் ஆரோக்கியத்தையும், செல்வத்தையும், பலத்தை யும், நீண்ட ஜபம் இறையுணர்வையும் கொடுக்கின்றது. ஜபம் குண்டலினியை எழுப்பி நிரந்தரப் பேரானந்தத்தை அளிக்கின்றது.

சந்தோஷம், சாந்தி, சமமான மனேநிலே, அந்த ரங்க ஆன்மீக சக்தி, பயமற்ற தன்மை, மனத்திலே எரிச்சல் (irritability) ஏற்படாதிருத்தல் ஆகியவைகள் ஆன்மீக முன்னேற்றத்திற்கான சில அறிகுறிகள். இவை கள் எந்த ஒரு மந்திரத்தையும் ஜபம் செய்வதினுல் ஏற்படு கின்ற பலனுகும்.

அல்லோபதி, ஹோமியோபதி, க்ரோமோபதி, நேச் சுரோபதி, ஆயுர்வேதம் மற்றும் இதர ''பதி''கள் எல்லாம் ஒரு நோயைக் குணப்படுத்த முடியாதபோது இந்த தெய் வீக நாமாபதி ஒன்றுதான் உன்னேக் காப்பாற்றும். இறை வனுடைய நாமம் ஒரு உன்னதமான மருந்தும், ஒரு பெரு நங்கூரமாகவும், தவருத சர்வரோக நிவாரணியும், எல்லா நோய்களேயும் தீர்க்கும் மருந்தாகவும் இருக்கின்றது. வியா கூலத்திலும், ஏக்கத்திலும், சோர்விலும், துயரத்திலும், தினசரி ஏற்படுகின்ற வாழ்க்கைப் போராட்டத்திலும் இது ஒரு அருமையான உற்சாகமூட்டும் பானமாக உதவு கின்றது.

ஆன்மீகம் என்கின்ற மரத்திற்கு வித்தாக விளங்குவது இறைவனுடைய நாமமாகும். இது உள்ளத்தின் அழுக்குகளைப் போக்கும் ஒரு நாசினி. இது மேலான அமைதியையும், நிரந்தரப் பேரானந்தத்தையும், முடிவில்லா ஞானத்தையும் அளிக்கின்றது. ஜபிப்பவருடைய உள்ளங்களிலே தெய்வீக அன்பைப் புகட்டுகின்றது. இதுதான் எல்லா ஆனந்தங்களுக்கும் (தலையூற்றுகும்) உற்பத்தி ஸ்தானமாகும் (fountain-head). மரணமிலாப் பெரு வாழ்வை அளிக்கும் அந்த நாமமானது உன்னுடைய பயங்கள் எல்லாவற்றையும் போக்கி எல்லோருக்கும் ஆறுதலையும், மேலான ஆனந்தத்தையும் அருளுமாக!

பொருள்களிலே இனிமையானவற்றிலும் இனிமையானதாக இருப்பது ஸ்ரீராமனுடைய நாமம். இது ஒரு அமைதித் துறையாகும் (heaven). தூய ஆத்மாக்களின் ஜீவனாக விளங்குவது இதுவாகும். இது தூய்மையாக்கும் பொருள்கள் அனைத்தையும் தூய்மையாக்கும் வஸ்துவாகும். இது உலகாயத ஆசைகளாகிய தகிக்கும் அக்னியை அடக்குகின்றது. நம்முடைய உள்ளங்களிலே உறங்கிக் கிடக்கும் தெய்வீக ஞானத்தை இது தட்டி எழுப்புகின்றது. இது சாதகனை தெய்வீகப் பேரானந்தமாகிய சாகரத்திலே நன்னீராட்டுகிறது. ஸ்ரீராமபிரானும் அவருடைய நாமாவும் வெற்றியுடன் திகழ்வதாக!

மனிதர்களுடைய மிக மிகக் கொடிய பாவங்களும், அவர்கள் ஒரு கணப்பொழுது இறைவனை நினைத்தாலும் உடனே மறைந்து விடும். (விஷ்ணு புராணம் VI-8-10).

நாமத்திலே ஒரு விநோதமான சக்தி இருக்கின்றது. கடவுளினுடைய நாமத்திலே அறிவுக்கெட்டாத சக்தி இருக்கின்றது. எல்லாவிதமான தெய்வீக சக்திகளும் இறைவனுடைய நாமாவிலே மறைந்து இருக்கின்றன. இது ச்யவனப்பிராஷ், மகரத்வஜம், பாதாம் பருப்பு,

வஸந்தகுசுமாகரம் அல்லது ஸ்வர்ண பஸ்மம் ஆகியவற்றின் சத்தாகும். இது ஒரு விநோதமான வர்ணிக்க வொண்ணுத "1910194" தெய்வீக ஊசியாகும் (injection).

இறைவனை மறந்து விட்ட ஒருவன் அல்லது ஒருத்திக்கு இங்கும் இனிமேலும் உண்மையான சந்தோஷம் கிடையாது. சுயநல வாழ்வு வாழ்பவனுக்கும், கர்வம், அகந்தை ஆகியவை காரணமாகத் தன்னை மற்றவர்களிடமிருந்து பிரித்துக் கொண்டு வாழ்பவனுக்கும் உண்மையான அமைதி கிடையாது. இடைவிடாத இறை சிந்தனையானது எல்லாவிதமான துன்பங்களையும், துயரங்களையும் துடைத்து பக்தனுக்கு அமரத்துவத்தையும், பேரானந்தத்தையும், அமைதியையும் அளிக்கின்றது. ஆத்ம பரித்தியாகம் சுய நலத்தையும், அகந்தையையும் அழிக்கும். தெய்வீக ஐக்கியத்திற்கு ஆத்ம பரித்தியாகம் ஒன்றுதான் மிகச் சுருக்கமான வழியாகும்.

தெய்வீக நாமமானது பிறப்பு இறப்பாகிய நோயை ஒழித்து உனக்கு மோக்ஷத்தையும், விடுதலை அல்லது அமரத்துவத்தையும் அளிக்கும்.

சம்சாரமாகிய பாம்பினுல் கடியுண்டவர்களுக்கு இறைவனுடைய நாமம் சக்தி பொருந்திய, தவருத, ஒரு விஷமுறிவாகும். இது அமரத்துவத்தையும், சாசுவதமான அமைதியையும் அளிக்கவல்ல அமிர்தமாகும். இறைவனுடைய நாமாவை உச்சரிப்பவர்களைக் கண்டு யமன் பயந்து நடுங்குகின்ருன். அவனுல் அவர்களை அணுக முடியாது. மிருகண்டுவினுடைய புத்திரன் மார்க்கண்டேயன், சிவபெருமானுடைய நாமத்தை உச்சரித்ததின் மூலம் அமரவாழ்வைப் பெற்ருன். அவன் பரம்பொருளையும் பயமற்ற நிலையையும் உணர்ந்தான்.

பூஜை, வழிபாடு ஆகியவற்றின் போது ஒரு பக்தன் இறைவனுடைய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு

அவனுடைய 'இருதயம், தலை, குடுமி, புஜங்கள் கைகள் ஆகிய இடங்களைத் தொடுகின்றான். மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்திலும் சைதன்யம் இருக்கின்றது. மந்திர உச்சாடணத்தின் மூலமாகவும், மந்திரத்தின் அம்சங்களை உச்சரித்துக்கொண்டு தன்னுடைய உடலின் அங்கங்களைத் தொடுவதின் மூலமும் சாதகன் படிப்படியாக தெய்வீகமாக்கப்படுகின்றான். ஆன்மீக எழுச்சி ஏற்படுகின்றது. ஆன்மீக மின்னோட்டங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. தாமஸ குணமும், ரஜோ குணமும் அழிக்கப்படுகின்றன. அவன் தூய்மையான சத்துவத்தினால் நிரப்பப்படுகின்றான். அவன் வழிபடும் பொருளோடு அபேதமாகி விடுகின்றான். அவன் இறைவனுடைய அதே உலகம் அல்லது சாமீப்யத்தை, அல்லது சாரூப்யத்தை, அல்லது சாயுஜ்யத்தை அடைந்து விடுகின்றான்.

## 6. பாவத்துடன் கூடிய இடைவிடாத ஜபம் தேவை.

ஆன்மீக லக்ஷியத்தை உனக்கு முன்பாக எப்பொழுதும் வைத்துக்கொண்டு இடையூறுகளை ஒவ்வொன்றாக சமாளித்து அதிலிருந்து மீண்டு வரக் கஷ்டப்பட்டுப் போராடு. அப்பொழுதுதான் உனக்கு ஆத்ம பலம் ஏற்படும். இறைவனுடைய இடைவிடாத சிந்தனையும், அவனுடைய பிரசன்ன உணர்ச்சியும் லக்ஷியத்தை அடைய உனக்கு உதவும். 3 அல்லது 4 மாதப் பயிற்சியின் மூலம் மானசீகமான நாமஸ்மரணை அல்லது ஜபப் பயிற்சி ஏற்பட்டுவிட்டால் ஆபீஸ் வேலையிலிருந்து விடுபட்டதும் உள்ளம் தானாகவே ஸ்மரணையைச் செய்ய ஆரம்பிக்கும். இது தானாகவே எண்ணத்தின் பின்னணிக்கு நகர்ந்து சென்றுவிடும். இது உன்னுடைய ஆன்மீக சொத்தாகும்.

மரணத்தின் தருவாயில் நீ இறைவனைச் சிந்திப்பாயேயாகில் நீ நிச்சயமாக அவனை உணரலாம். பகவான் கிருஷ்ணன் உறுதிமொழி கொடுத்திருக்கிறார். "எவனொருவன் சரீரத்தை உதறித் தள்ளிவிட்டு, இறக்கும் தருவாயில் என்னை மட்டும் எண்ணிக்கொண்டு போகின்

ருஞே, அவன் என்னுள் நுழைகின்ருன். இதைப்பற்றி சந்தேகம் இல்லை'' (கீதை அத். VIII-5). ஆனுல் நீ வாழ்க்கை முழுவதும் அவ்வாருன ஞாபகத்தைப் பயின்றிருந்தால்தான் உன்ஞல் இறக்கும் தருவாயில் அவனை நினைக்க முடியும்.

இறைவனுடைய நாமத்தை ஜபிக்கின்ற ஒரு திடமான வழக்கத்தை ஏற்படுத்திக் கொள். அப்பொழுதுதான் இறக்கும் தருவாயிலும் அவனை ஞாபகப் படுத்துவது உனக்கு சுலபமாக இருக்கும்.

நீ ஒரு மந்திரத்தை 13 கோடி முறை ஜபித்தால் ஸ்தூல ரூபத்தில் உன்னுடைய இஷ்ட தேவதையின் தரிசனம் உனக்குக் கிட்டும். நீ மனப்பூர்வமாகவும், உண்மையாகவும் இருந்தால் நீ இதை 4 ஆண்டுகளுக்குள் செய்யலாம்.

14 மணி நேரத்தில் ஹரி ஓம் ஜபத்தை உன்ஞல் 2000 மாலைகள் ஜபிக்க முடியும். 7 மணி நேரத்தில் ஸ்ரீராம மந்திரத்தை ஒரு லட்சம் முறை ஜபிக்கலாம். ½ மணி நேரத்தில் ஸ்ரீ ராம ஜபத்தை 10,000 தடவை ஜபிக்கலாம்.

தியானத்திற்கு சித்ரகூடம் ஒரு அற்புதமான க்ஷேத்திரமாகும். அங்கு தூய்மையான மின்னுகின்ற ஜலத்தோடு கூடிய மந்தாகினி நதி இருக்கின்றது. ஸ்ரீராம பக்தர்கள் மனப்பூர்வமாக இடைவிடாது ராம நாமத்தை, பால், பழம் மட்டும் சாப்பிட்டுக் கொண்டு, ஜபம் செய்வார்களேயானுல் ஆறு மாத காலத்தில் ராமபிரானுடைய தரிசனத்தைப் பெற முடியும் என்று ஸ்ரீ துளசிதாஸர் அவருடைய சோப்பையிலே (Chopai) கூறுகின்ருர்.

தினந்தோறும் ஜபம் அல்லது மந்திர பாராயணம் செய்பவர்களில் சிலருக்கு உச்சாடனம் செய்வது இயந்திரம் போல தாஞக நடக்கும். அவர்கள் உச்சாடனத்தின் போது எந்த விதமான பேரானந்தத்தையும் உணர

மாட்டார்கள். அவர்கள் பாவத்தை உண்டு பண்ணி மந்திரத்தினுடைய அர்த்தத்தையும் இறைவனுடைய குணாதிசயங்களையும் நினைக்க வேண்டும். அவர்கள் இருதயத்திலும், உடலின் ஒவ்வொரு அணுவிலும் மந்திரத்தினுடைய சைதன்யத்தையும், சக்தியையும், அவனுடைய பிரசன்னத்தையும் உணர முயற்சிக்க வேண்டும். அப்பொழுது அவர்கள் இருதயத்திலே வர்ணனைக்கப்பாற்பட்ட ஒரு விநோதமான புனிதமான சிலிர்ப்பையும், பேரானந்தத்தையும், மேலான அமைதியையும் உணர்வார்கள்.

ஜபிக்கின்ற எண்ணிக்கை முக்கியமாகக் கருதப்படுவதில்லை. ஜபம் செய்யும் பொழுது தூய்மை, மன ஒருமைப்பாடு, உணர்வு ஆகியவைகள் இருத்தல் வேண்டும். இது மிக முக்கியமானது.

மாத்திரை, பரை, பஸ்யந்தி ஆகியவைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஓம் என்ற பிரணவ மந்திரத்தை ஒழுங்காக, அர்த்த பாவங்களுடன் ஜபித்து வா. ஆன்மீக நன்மைகளை நீ உணர்வாய். கரையிலேயுள்ள கூழாங் கற்களை எண்ணிக் கொண்டு ஏன் உன்னுடைய நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கின்றாய்? உடனே கங்கையில் ஒரு முழுக்குப் போட்டு ஸ்நானத்தை அனுபவி. ஞானியாக ஆகு.

---

# அத்தியாயம் எட்டு

# கர்ம யோகம்

## 1. கர்ம யோகத்தின் அவசியம்

நதிகள் எப்பொழுதும் புதிய நல்ல குடி நீரை எல்லா ஜீவராசிகளுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கின்றன. மரங்கள், பழங்களையும் நிழலையும் கொடுக்கின்றன. சூரியன் ஒளியையும் உஷ்ணத்தையும் சக்தியையும் கொடுக்கிறான். பூமி எல்லாவிதமான காய்கறிகளையும், தானியங்களையும், அளிக்கின்றது. மலர்கள் அழகைக் கொடுக்கின்றன. பசுக்கள் சத்துள்ள பாலை அளிக்கின்றன. மனிதனைத் தவிர எல்லா பொருள்களும் ஏராளமான ஆத்மத் தியாகத்தைச் செய்கின்றன. மனிதன் மட்டும் தான் வரம்பு கடந்த சுயநலமியாக இருக்கின்றான்.

தேசீய மறுமலர்ச்சிக்கு ஆன்மீகக்கலை ஒரு இன்றியமையாததும் (sine qua non) மிகவும் தேவைப்படுவதுமாகிய ஒரு பொருளாக இருக்கின்றது. வாழ்க்கையின் லட்சியம் ஆத்மானுபூதியை அடைவதாகும். ஆன்மீகக் கலை ஒன்றுதான் ஆத்ம பலத்தை விருத்தி செய்து மக்களை தன்னலமற்றவர்களாகவும், பயமற்றவர்களாகவும், வீரமும் பலமும் உடையவர்களாகவும் செய்து இந்த உடலின் மீதுள்ள மோஹத்தை நீக்கும். தன்னலமற்றவர்களால் தான் தேசத்திற்கு உண்மையாக சேவை செய்ய முடியும், ஐக்கிய பாவத்துடன் தொண்டு செய்ய முடியும், எல்லோரிடமும் உண்மையான தெய்வீக அன்பை (விஸ்வ ப்ரேம்) உடையவர்களாக இருக்க முடியும்.

ஒவ்வொருவனும் தனக்கும், தன்னுடைய மனைவிக்கும், குழந்தைகளுக்கும் தாராள சிந்தையுடையவனாக இருக்கின்றான். அவன் மற்றவர்களை அசட்டை செய்கின்றான். தான் மற்றவர்களிலிருந்து வேறுபட்டவன் என்று

மாட்டார்கள். அவர்கள் பாவத்தை உண்டு பண்ணி மந்திரத்தினுடைய அர்த்தத்தையும் இறைவனுடைய குணாதிசயங்களையும் நினைக்க வேண்டும். அவர்கள் இருதயத்திலும், உடலின் ஒவ்வொரு அணுவிலும் மந்திரத்தினுடைய சைதன்யத்தையும், சக்தியையும், அவனுடைய பிரசன்னத்தையும் உணர முயற்சிக்க வேண்டும். அப்பொழுது அவர்கள் இருதயத்திலே வர்ணனைக்கப்பாற்பட்ட ஒரு விநோதமான புனிதமான சிலிர்ப்பையும், பேரானந்தத்தையும், மேலான அமைதியையும் உணர்வார்கள்.

ஜபிக்கின்ற எண்ணிக்கை முக்கியமாகக் கருதப்படுவதில்லை. ஜபம் செய்யும் பொழுது தூய்மை, மன ஒருமைப்பாடு, உணர்வு ஆகியவைகள் இருத்தல் வேண்டும். இது மிக முக்கியமானது.

மாத்திரை, பரை, பஸ்யந்தி ஆகியவைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஓம் என்ற பிரணவ மந்திரத்தை ஒழுங்காக, அர்த்த பாவங்களுடன் ஜபித்து வா. ஆன்மீக நன்மைகளை நீ உணர்வாய். கரையிலேயுள்ள கூழாங் கற்களை எண்ணிக் கொண்டு ஏன் உன்னுடைய நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கின்றாய்? உடனே கங்கையில் ஒரு முழுக்குப் போட்டு ஸ்நாநத்தை அனுபவி. ஞானியாக ஆகு.

---

# அத்தியாயம் எட்டு

# கர்ம யோகம்

## 1. கர்ம யோகத்தின் அவசியம்

நதிகள் எப்பொழுதும் புதிய நல்ல குடி நீரை எல்லா ஜீவராசிகளுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கின்றன. மரங்கள், பழங்களையும் நிழலையும் கொடுக்கின்றன. சூரியன் ஒளியையும் உஷ்ணத்தையும் சக்தியையும் கொடுக்கிறான். பூமி எல்லாவிதமான காய்கறிகளையும், தானியங்களையும், அளிக்கின்றது. மலர்கள் அழகைக் கொடுக்கின்றன. பசுக்கள் சத்துள்ள பாலை அளிக்கின்றன. மனிதனைத் தவிர எல்லா பொருள்களும் ஏராளமான ஆத்மத் தியாகத்தைச் செய்கின்றன. மனிதன் மட்டும் தான் வரம்பு கடந்த சுயநலமியாக இருக்கின்றான்.

தேசீய மறுமலர்ச்சிக்கு ஆன்மீகக்கலை ஒரு இன்றி யமையாததும் (sine qua non) மிகவும் தேவைப்படுவது மாகிய ஒரு பொருளாக இருக்கின்றது. வாழ்க்கையின் லட்சியம் ஆத்மானுபூதியை அடைவதாகும். ஆன்மீகக் கலை ஒன்றுதான் ஆத்ம பலத்தை விருத்தி செய்து மக்களை தன்னலமற்றவர்களாகவும், பயமற்றவர்களாகவும், வீரமும் பலமும் உடையவர்களாகவும் செய்து இந்த உடலின் மீதுள்ள மோஹத்தை நீக்கும். தன்னலமற்றவர்களால் தான் தேசத்திற்கு உண்மையாக சேவை செய்ய முடியும், ஐக்கிய பாவத்துடன் தொண்டு செய்ய முடியும், எல்லோ ரிடமும் உண்மையான தெய்வீக அன்பை (விஸ்வ ப்ரேம்) உடையவர்களாக இருக்க முடியும்.

ஒவ்வொருவனும் தனக்கும், தன்னுடைய மனைவிக் கும், குழந்தைகளுக்கும் தாராள சிந்தையுடையவனாக இருக்கின்றான். அவன் மற்றவர்களை அசட்டை செய்கின் றான். தான் மற்றவர்களிலிருந்து வேறுபட்டவன் என்று

அவன் வீணுன கற்பனை செய்து கொள்ளுகின்ருன். இது அறியாமை. இது மாயை. இதுதான் பிறப்பு இறப்புக்கும் மனித சமுதாயத்தின் தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் காரணம். பிரிவு தான் இறப்பு. ஐக்கியம்தான் சாசுவத மான வாழ்வு.

மனிதர்களுடைய இருதயங்களை தூய்மையான அன்பின் மூலம் வெல். சத்தியத்தைக் கடைப் பிடித்து யோக மார்க்கத்திலே வெற்றி முரசு கொட்டிக் கொண்டு முன்னேக்கிச் செல். அகந்தையை ஒழித்து பேரமைதி நிறைந்த எல்லையற்ற சாம்ராஜ்யத்திற்குள் நுழை. அறியா மையை அழித்து ஆத்ம ஞானத்தை அடை. வாசனைகளை நசுக்கி எல்லையற்ற சாசுவதப் பேரானந்த சாம்ராஜ்யத் தினுள் நுழை.

எல்லாவிதமான தீய குணங்களுக்கும் மூல காரணம் சுயநலம். ஒரு சுயநலமி பேராசையுடையவனுகவும் நேர்மையற்றவனுகவும் இருக்கின்ருன். அவன் கடவுளிட மிருந்து வெகுதூரத்தில் இருக்கின்ருன். அவன் தன் னுடைய குறிக்கோளை அடைய எந்தக் காரியத்தையும் செய்வான். அவன் தன்னுடைய சுயநல நோக்கத்தைத் திருப்திப் படுத்திக் கொள்வதற்காக மற்றவர்களைப் புண் படுத்துகின்ருன், மற்றவர்களுடைய சொத்தைக் கொள்ளை யடிக்கின்ருன், இன்னும் பல பாவ காரியங்களைச் செய் கின்ருன். அவனிடம் சங்கோசமோ (scruples) அல்லது நல்ல நடத்தையோ இருக்காது. மன அமைதி என்பது அவனுக்குப் புரியாத வஸ்து. அவன் எப்பொழுதும் செல்வம், அதிகாரம், பெயர், புகழ் ஆகியவற்றைச் சேகரிப்பதற்கு எப்பொழுதும் யோசித்துக் கொண்டும் திட்டம் தீட்டிக் கொண்டும் இருக்கின்ருன். அவன் எப்பொழுதும் தன்னை மற்றவர்களிடமிருந்து பிரித்து வைத்துக் கொள்கின்ருன். அவன் தன்னுடைய மனைவி, குழந்தைகள், சொத்து ஆகியவற்றிடம் மிகவும் பற்றுடைய வனுக இருக்கின்ருன். பற்றுதலும், தனிமை உணர்ச்சியும்

அவனிடம் உச்ச வரம்பில் காணப் படுகின்றன. சுயநல மானது யோகத்திற்கு ஒரு பெரும் தடையாகும். சுய நலத்தை, தன்னலமற்ற சேவை, தர்மம், சத்சங்கம் ஆகியவற்றின் மூலம் அழித்து விடு.

சுயநலத்தின் மூலமாக நீ குறுகிய மனப்பான்மை யுடையவனுகிவிடுகின்ருய். உன்னுடைய இருதயம் சிறிய தாகி சுருங்கிவிட்டிருக்கிறது. தன்னலமின்றி மற்றவர் களுக்கு சேவை செய்வதின் மூலமும், உதவுவதின் மூலமும் உன்னுடைய இருதயம் விரிவடைகின்றது. நீ இறைவன் அல்லது பிரம்மனுடன் ஒன்ருகின்ருய். ஆகையால் சேவை செய்வதிலே ஆனந்தம் கொள்.

பல பேர்கள் தங்களுடைய வாழ்நாளை பல வருஷங் கள் கங்கைக் கரையிலே கழிக்கின்றனர். அவர்கள் ஜபம், கீர்த்தனை, வேத பாராயணம் ஆகியவற்றைச் செய்கின் றனர். அவர்கள், “ அஹம் பிரம்மாஸ்மி ” என்கின்ற சூத்திரத்தை அடிக்கடி உச்சாடனம் செய்கின்றனர். இருந்த போதிலும் அவர்களுக்கு எந்த விதமான உணர்வும் ஏற்படுவதில்லை. அவர்கள் சில வருஷங்களுக்கு முன்பு என்ன நிலையில் இருந்தார்களோ அதே நிலையில் இருந்து வருகின்றனர். ஏனென்ருல் அவர்களிடம் மனுேவிசாலம் ஏற்படவில்லை. அவர்களிடம் தாராள சிந்தை (உதார விருத்தி) இல்லை. சத்தியத்தை நாடிச் செல்லுபவனுக்கு இருக்க வேண்டிய அடிப்படைப் பண்பு, சித்த விசாலம், சளைக்காத, தன்னலமற்ற தர்ம கைங்கரியங்கள், மானிட வர்க்கத்திற்குச் சேவை செய்தல், அன்பான காரியங்கள், இயற்கையான தடையற்ற தாராள சிந்தை ஆகியவைகள் தான் பரந்த மனப்பான்மையை சீக்கிரம் உண்டுபண்ணும். எல்லா ஜீவன்களுடைய உள்ளத்திலும் ஒரு ஆத்மன் வசிக்கின்ருன். உன்னிடம் எல்லோரையும் நேசிக்கின்ற மனப்பான்மையும், உன்னிடம் உள்ளதை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ளும் தன்மையும் இல்லாமலிருக்குமேயாகில் நீ எவ்வாறு இறைவனை உணர முடியும்?

மனிதன் இந்த உலகிற்கு மட்டும் பிரஜையல்ல. ஆனால் இன்னும் பல உலகங்களுக்கும் அவன் பிரஜையாக இருக்கின்றான். அவன் அபாயங்களையும், தூண்டுதல்களையும் இந்த உலகத்தில் மட்டுமல்ல, இதர உலகங்களிலும் எதிர்நோக்க வேண்டியிருக்கின்றது. கந்தர்வ மண்டலம் ஆசைகள் நிறைந்த இடமாகும். ஆகவேதான் யோக சாஸ்திரங்களிலே, சாதகன் மூலாதார சக்கரத்திலே இயக்கமின்றி உறங்கிக்கொண்டிருக்கும் ஜீவ சக்தியாகிய குண்டலினியை எழுப்புவதற்கு முன்பாக அவன் தன்னை முதலில் தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டும். தன்னுடைய இந்திரியங்களைக் கட்டுப்படுத்த வேண்டும். தன்னுடைய ஆசைகளை ஒழித்துக்கட்ட வேண்டும். இயமத்திலே நிலை பெற்றிருக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆசனங்கள், பந்தங்கள், முத்திரைகள், பிராணயாமம் ஆகியவை மூலமாக அவன் தூய்மை பெறுவதற்கு முன்னதாக குண்டலினி எழுப்பப்பட்டுவிட்டால் இதர மண்டலங்களின் ஆசைகள் அல்லது தூண்டுதல்களை அவன் எதிர்நோக்கி அவைகளை எதிர்த்து நிற்கச் சக்தியற்று ஒரு பெரும் வீழ்ச்சிக்கு ஆளாவான். பிறகு யோக ஏணியிலே அவன் முதலிலே ஏறியிருந்த அந்த உயரத்திற்கு ஏறுவது என்பது மிக மிகக் கடினம். ஆகவே, சாதகன் முதலிலே தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள முயற்சிக்க வேண்டும். ஜபம், கீர்த்தனை, இடைவிடாத தன்னலமற்ற சேவை ஆகியவற்றின் மூலமாக பரிபூரணமான தூய்மை பெற்றுவிட்டால் குண்டலினி சக்தி தானாகவே எழுந்து கைலாய பர்வதத்தில் திரிசூலம் தாங்கிக் கொண்டிருப்பவனும், ஞானக் களஞ்சியமாகவும், பேரானந்தம், அமைதி ஆகியவற்றின் பொக்கிஷமாகத் திகழ்பவனுமாகிய அவளுடைய பிராண பதியாகிய சிவபெருமானைச் சந்திக்கத் தலையின் உச்சியிலுள்ள சகஸ்ராரத்தை நோக்கி நகர்ந்து செல்லுவாள்.

வாழ்க்கையின் இறுதி லட்சியத்தை அடைகின்ற மார்க்கத்திலே முதல் படியாகத் திகழ்வது நிஷ்காம்ய

கர்மம் அல்லது வாழ்க்கையின் கடமைகளைத் தன்னலமற்ற முறையில் செய்வதாகும் (ஸ்வதர்மம்). நிஷ்காம்ய கர்மப் பயிற்சியானது உள்ளத்தைத் தூய்மையாக்கி, தான் வேறு என்கின்ற தனிமை உணர்ச்சியை அழிக்கின்றது. பிறகு உள்ளத்தை ஸ்திரப்படுத்தவும், இறைவனுடைய கருணையைப் பெறவும், நீ உபாசனையைக் கையாள வேண்டும். கடைசியாக வேதாந்தமானது அஞ்ஞானமாகிய திரையை அழித்து கைவல்ய மோக்ஷம் அல்லது பிறப்பிறப்புச் சுழலிலிருந்து முடிவான விடுதலையை அடைய உனக்கு உதவி புரியும்.

தன்னலமற்ற நிஷ்காம்ய கர்மத்தைச் செய்ய ஆவலுடன் கூடிய உற்சாகத்தை விருத்தி செய். விசாலமான, தாராளமான, பரந்த உள்ளத்துடன் கூடிய சகிப்புத் தன்மையுடையவனாக இரு. எல்லோரிடமும் அன்பாக இரு. எல்லோரையும் நேசி. எல்லோருக்கும் சேவை செய். எல்லாவற்றிலும் இறைவனுக்குத் தொண்டு செய்.

கொடுப்பதற்குக் கற்றுக்கொள். கொடுப்பதிலே அளவற்ற ஆனந்தம் இருக்கின்றது. மிகச் சிலரே இதைப் புரிந்து கொள்ள முடியும். இறைவனுடைய விருப்பத்திற்கு விட்டுவிடக் கற்றுக் கொள். ஆத்ம சரணாகதியிலே வர்ணிக்க வொண்ணாத அமைதி இருக்கின்றது. ஒரு சிலர் தான் இதை உணர முடியும். பாகுபடுத்தி அறிந்து கொள்ளக் கற்றுக்கொள். உண்மையையும், உண்மையல்லாததையும் பகுத்துணர்வதிலே சொல்ல முடியாத பேரானந்தம் இருக்கிறது. மிகச் சிலர்தான் இதை ஏற்றுக் கொள்ள முடியும். பக்ஷபாதமின்றி இருக்கக் கற்றுக்கொள். வைராக்கியத்தை வளர்த்திக் கொள்வதிலே சாசுவதமான திருப்தி இருக்கின்றது. ஒரு சிலர்தான் இதை அறிய முடியும்.

சிலரால் வேலை செய்ய முடியும். ஆனால் அவர்களால் தியானம் செய்ய முடியாது. சிலரால் தியானம் செய்ய

முடியும். ஆனால் அவர்களால் வேலை செய்ய முடியாது. இது ஒருதலைப் பட்சமான அபிவிருத்தியாகும். தியானமும் தன்னலமற்ற சேவையும் சேர்ந்த ஒரு நல்ல கூட்டு அமைந்திருத்தல் வேண்டும். இதுதான் சம்பூர்ண யோகம் (Yoga of Synthesis). இது சக்தி யோகமாகும். அப்பொழுதுதான் நீ உலகத்தோடு பழகும்போதும், அல்லது நீ தனிமையில் இருக்கும் போதும் விக்ஷேபம் அல்லது மனம் ஸ்திரமின்றி அலைவதைப் பற்றிப் புகார் செய்ய மாட்டாய். அப்பொழுதுதான் உன்னால் சமமான மனோ நிலையை வைத்திருக்க முடியும். அப்பொழுதுதான் உன்னிடம் பரிபூரண அபிவிருத்தி ஏற்படும்.

இறையன்பை வளர்த்து வா. (விஸ்வப்ரேம்) விஸ்வ ஆத்மாவுடன் உன்னை ஒன்றுபடுத்திக் கொள். சுயநலத்தையும், குறுகிய மனப்பான்மையையும் அழித்து விடு. விரிவடை, விரிவடை, எழுந்திரு. மேலே கிளம்பு. உன்னுடைய மந்த புத்தியையும், அலக்ஷிய மனப்பான்மையையும் உதறித் தள்ளு. ஒருமைப்பாடும், ஐக்கிய பாவமும் கூடிய வாழ்க்கையை நடத்து. மறைந்து கிடக்கும் சக்திகளை வெளிப்படுத்து. உறுதிப்படுத்து. துணிந்து சொல். ஆத்மாவை உணர். மகிமையுடன் கூடியதொரு எதிர்காலம் உனக்காகக் காத்திருக்கின்றது.

நீ உன்னுடைய மனைவி மக்களுடன் பற்றுக் கொண்டிருந்தால் விஸ்வ பிரேமையை உன்னால் வளர்க்க முடியாது. உன்னால் மனித வர்க்கம் எல்லாவற்றையும் உற்றார் உறவினராகப் பார்க்க முடியாது. உன்னால் சர்வதேச சகோதரத்துவத்தை வளர்க்க முடியாது. உன்னுடைய குழந்தைகளிடம் நீ காட்டும் அதே அன்பை மற்ற குழந்தைகளிடம் காட்ட முடியாது. எல்லா குழந்தைகளையும் உன்னுடைய சொந்த குழந்தைகளாக உன்னால் பாவிக்க முடியாது. உன்னிடம் குறுகிய உள்ளம்தான் இருக்கும். உன்னுடைய அன்பு ஒரு சிலரோடு மட்டும் நின்றுவிடும். சுயநலத்தின் மூலமாக நீ உன்னுடைய சிறிய குடும்பத்தின்

அங்கத்தினர்களைச் சுற்றி மட்டிலும் ஒரு மதில் சுவரை உண்டுபண்ணியிருக்கின்றாய். நீ எப்பொழுது பார்த்தாலும் "என்னுடைய குடும்பத்தினர்கள் நன்றாக வாழட்டும். நாம் மட்டும் சந்தோஷமாக இருப்போம். நான் ஏன் மற்றவர்களுடைய நலனைப் பற்றிக் கவலை கொள்ள வேண்டும்?" என்று எண்ணிக் கொண்டிருக்கின்றாய்.

ஆனால் அதே சமயத்தில் சமரச அன்பை வளர்த்துக் கொண்டிருப்போனுக்கு எல்லோரிடத்திலும் சம நோக்கு இருக்கிறது. அவன் எல்லோரையும் நேசித்து அணைத்துக் கொள்கின்றான். எல்லா குழந்தைகளும் அவனுடையன. எல்லா மனிதர்களும் அவனுடைய சகோதரர்கள். எல்லா பெண்களும் அவனுடைய சகோதரிகள். உலகமனைத்தும் அவனுடைய குடும்பம். உலகமனைத்தும் அவனுடைய வீடு. அவன் எல்லோரிடத்தும் இரக்கம் காட்டுகின்றான். அவன் எல்லோருக்கும் தொண்டு செய்கின்றான். அவன் தன்னிடம் இருப்பதை எல்லோரிடமும் பகிர்ந்து கொள்கின்றான். அவன் எல்லோருடைய நலனிலும் அக்கறை காட்டுகின்றான். அவன் மற்றவர்களுடைய நன்மைக்காக தன்னுடைய நன்மைகளைத் தியாகம் செய்கின்றான். அவன் மற்றவர்களுக்காகவே வாழ்ந்து மடிகின்றான். என்னே பெருந்தன்மையான மனிதன்! எப்பேர்ப்பட்ட விரிந்த உள்ளம் படைத்தவன்! அவன் பூமியிலே கண் கண்ட தெய்வமாக விளங்குகின்றான்.

இருதயமில்லாத வேதாந்தம் முற்றிலும் வரண்டதாகும். ஞானமில்லாத பக்தி குருட்டுத்தனமானதும் ஸ்திர மற்றதுமாகும். கர்மம் கடைசி மெருகைக் கொடுக்கின்றது. நீ உன்னுடைய அந்தரங்க உணர்ச்சிகளுக்கு கர்மத்தின் மூலம் உரு கொடுக்கின்றாய். சுயநலமற்ற சேவை மூலமாக உன்னால் தூய்மையான அத்வைத உணர்வை விருத்தி செய்ய முடியும். ஆத்மனை எல்லா ஜீவன்களிடமும் காணுகின்ற ஒரு விடுதலை பெற்ற ஆன்மா உலகிற்குத் தொண்டு செய்யாமல் எவ்வாறு இருக்க முடியும்?

அல்லல்படுவோரைப் பார்த்து மனப்பூர்வமாக, ஆழ்ந்து, பயனுள்ள முறையில் அனுதாபப் படுவோர் மிகவும் அரிது. வாயளவிலே அனுதாபம் தெரிவிப்போர் அல்லது மேம்போக்கான அனுதாபத்துடன் கூடியவர்கள் இந்த உலகில் நிறைந்திருக்கின்றனர். நல்ல முறையில் உறுதியான அனுதாபமுடைய மனிதன் தன்னிடமிருப் பதை உடனே துயருற்றோரோடு பகிர்ந்து கொள்கின்றான். அவனுடைய இருதயம் மிகவும் மென்மையானது. தீராத துன்பத்திலிருக்கும் ஒரு மனிதனைக் கண்ட மாத்திரத் திலேயே அவனுடைய உள்ளம் உருகி விடுகின்றது. துன்புறுகின்றவனுடைய வேதனையை இவன் உண்மை யாகவே தானே அனுபவிக்கின்றான். உதட்டளவிலே அனுதாபம் காட்டுகின்றவன் ஒரு நிச்சயமான வேஷதாரி யாவான். உறுதியற்ற மேம்போக்கான அனுதாபம் காட்டு கின்ற மனிதன் ஒரு மனிதனைப் பரிதாபகரமான நிலையில் பார்க்கும் பொழுது ஒரு சிறிது வருந்துகின்றான். ஆனால் அவன் தன்னுடைய பையிலிருந்து ஏதாவது கொடுப் பதற்கு விரும்புவதில்லை. அவன் கையை (முஷ்டியை) மூடி வைத்துக் கொள்கின்றான். உதட்டளவிலே அனு தாபம் காட்டுகின்றவனை விட இந்த மனிதன் சிறந்தவன். ஏனென்றால் நாளடைவில் இவனைத் திருத்தி அபிவிருத்தி செய்து விடலாம். ஸ்திரமற்ற அனுதாபம் அந்த மனிதன் அதிகமான அனுபவங்களிலே பரிபக்குவமாகும் பொழுது உறுதியான அல்லது உண்மையான அனுதாப ரகமாக மாறக்கூடும்.

மனித சமுதாயத்திற்குத் தன்னலமற்ற சேவை செய்வதானது சாதகனை தெய்வீக உணர்வு அல்லது இறை ஒருமைப்பாட்டை அடைவதற்குத் தயார் செய்கின்றது.

வேத ஞானம் அல்லது ஆத்ம ஞானத்திலே ஒருவன் கைதேர்ந்திருந்தாலும் அவனிடம் உள்ளத் தூய்மை இல்லா விடில் அவனால், எல்லா ஜீவராசிகளின் இருதயங்களிலே வாசம் செய்கின்றவனும், இந்த உலகத்திற்கு ஆதாரமாக

இருப்பவனும், எங்கும் நீக்கமற நிறைந்தும், சுயம் பிரகாச மாயும் இருக்கின்றவனுமாகிய அந்த மகா புருஷனை அறிந்து கொள்ள முடியாது.

சேவையினுடைய நோக்கம் என்ன? நீ ஏன் பெருமளவில் ஏழை எளியவர்களுக்கும் அல்லல்படும் மனித சமுதாயத்திற்கும் சேவை செய்கின்றாய்? சமூகத்திற்கும், தேசத்திற்கும் நீ ஏன் தொண்டு செய்கின்றாய்? சேவை செய்வதின் மூலம் நீ உன்னுடைய உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளுகின்றாய். அகந்தை, வெறுப்பு, பொறாமை, உயர்ந்தவன் என்கின்ற எண்ணம் ஆகியவைகள் மறைகின்றன. பணிவு, தூய அன்பு, இரக்கம், சகிப்புத்தன்மை, தயை ஆகிய நற்பண்புகள் விருத்தி செய்யப்படுகின்றன. தான் வேறு என்கின்ற மனப்பான்மை இல்லாதொழிக்கப்படுகின்றது. சுயநலம் அழிக்கப்படுகிறது. வாழ்க்கையின் பரந்த நோக்கத்தை நீ அடைகின்றாய். வாழ்க்கையின் ஒருமைப்பாடு அல்லது ஐக்கியத்தை நீ உணர ஆரம்பிக்கின்றாய். நீ பரந்த உள்ளத்தையும் விரிந்த மனப்பான்மையையும் விருத்தி செய்கின்றாய். நாளடைவில் நீ ஆத்ம ஞானத்தைப் பெறுகின்றாய். நீ "ஏகத்தில் அநேகத்தையும், அநேகத்தில் ஏகத்தையும்" உணருகின்றாய். நீ எல்லையற்ற ஆனந்தத்தை உணருகின்றாய். சமூகம் என்பது தனிப்பட்டவர்கள் அல்லது மூல அளவின் கூட்டே தவிர வேறில்லை. உலகம் என்பது இறைவனுடைய தோற்றமேயன்றி வேறில்லை. மனித வர்க்கத்திற்குச் செய்யும் தொண்டானது இறைவனுக்குச் செய்யும் தொண்டேயாகும். சேவையே வழிபாடு. ஒருவன் இந்த பாவத்துடன் வேலை செய்ய வேண்டும். அப்பொழுது அவனுக்கு சீக்கிரமான உணர்வும் உள்ளத் தூய்மையும் உண்டாகும்.

அகத்திலே வசித்திரு. ஆத்மனுடன் இரண்டறக் கலந்துவிடு. ஆத்மனை அறிந்துகொள். அதுவாக ஆகு. விடுதலை பெறு. ஆனந்தமாக உலாவு. அன்பு, ஆத்ம

ஞானம், ஆழ்ந்த உடன்பாடு ஆகியவற்றின் மூலம் தேசங்களை ஐக்கியப்படுத்தலாம். ஆன்மீகக் கலை அல்லது வேதாந்தப் பயிற்சியின் மூலம் சமுதாயங்களை ஒன்றுபடுத்தலாம். புராதன உபநிடதங்களின் ஞானத்தை உணர்வதின்மூலம் இனம் அல்லது வம்சங்களை ஒன்று சேர்க்கலாம். பரந்த மனப்பான்மை, அகண்ட சகிப்புத் தன்மையின் மூலமாக மத சம்பிரதாயங்களையும் (sects), மதக் கிளைகள் அல்லது பூஜா முறைகளையும் ஐக்கியப்படுத்தலாம். பிரேமை, சாந்தம், ஞானம் ஆகியவற்றின் மூலம் ஒரு குடும்பத்தின் அங்கத்தினர்களை ஒன்றுபடுத்தலாம்.

## 2. கர்ம யோகத்தின் ரகங்கள்

சமூக, தர்ம ஸ்தாபனங்களின் மூலமாக ஆத்ம பாவத்துடன் மனித வர்க்கத்திற்குத் தன்னலமற்ற சேவை செய்தல், ஏழைகளுக்கு உணவளித்தல், ஆடையில்லாதவர்களுக்கு ஆடையளித்தல், ஏழைகளைக் கண்டு இரக்கம் காட்டுதல், நோயுற்றோரைக் கவனித்தல், மனமொடிந்திருப்பவர்களுக்கு ஆறுதல் கூறுதல், வீழ்ச்சியுற்றோருக்கு உதவுதல், பலனை எதிர்பாராமல் அறியாமையிலிருப்பவர்களுக்கு ஞானத்தைப் பகிர்ந்து கொடுத்து உதவுதல், கர்த்ருத்துவ (Agency) நிலை சிறிதுமின்றி ஏழை மாணவர்களுக்கு இலவசமாகப் பாடம் சொல்லிக் கொடுத்தல், மாபெரும் திட்டத்திலே நீ அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றுகின்றாய் என்கின்ற எண்ணம், அவனுடைய கரங்களிலே நீ ஒரு கருவி என்கின்ற மனோபாவம் (நிமித்த பாவம்) ஆகியவைகள் எல்லாம், உன்னதமான உண்மையை கிரஹித்துக் கொள்வதற்கு ஆரம்பத் தேவையாக விளங்குகின்ற உள்ளத் தூய்மையை அடைவதற்கான மிக எளிய மார்க்கமாகிய நிஷ்காம்ய கர்ம யோக ரகத்தின் கீழ் வருகின்றன.

சரியான மனோ நிலையில் ஒரு டாக்டர் ஏழை மக்களுக்குத் தொண்டு செய்வாரேயாகில் அவர் அவருடைய

உள்ளத்தை வெகு சீக்கிரம் தூய்மைப் படுத்திக் கொள்ள லாம். உள்ளத்தைத் தூய்மையாக்கிக் கொள்ளவும், தூய்மையின் மூலமாக ஆத்மானுபூதியை அடையவும், அவருக்கு இங்கே ஒரு மாபெரும் களம் இருக்கின்றது. ஒரு கர்ம யோகியினுடைய உண்மையான பாவத்தை, அதாவது அவர் நாராயணன் அல்லது தன்னுடைய சொந்த ஆத்மனுக்கே சேவை செய்கின்ருர் என்கின்ற பாவத்தை உடையவராக இருந்தால் ஒரு டாக்டர் இறைவனை சுலப மாக உணர முடியும்.

ஏழைகள், நோயாளிகள், ஆதரவற்றவர்கள், திக்கற் றவர்கள் ஆகியோருக்குக் கொடு. அனுதைக் குழந்தை கள், பலஹீனர்கள், குருடர்கள், ஆதரவற்ற விதவைகள் ஆகியோருக்குக் கொடு. சாதுக்கள், சந்நியாசிகள், மத, சமூக ஸ்தாபனங்கள் ஆகியவற்றிற்குக் கொடு. சேவை செய்யவும், தர்மம் செய்யவும் உனக்கு ஒரு சந்தர்ப்பத்தை யளிக்கும் மனிதனுக்கு நீ நன்றி செலுத்து. சரியான மனோபாவத்துடன் கொடுத்து தர்ம கைங்கர்யங்கள் மூலமாக இறைவனை உணர். சரியான மனப்பான்மை யுடன் தர்மம் செய்பவர்களுடைய மகிமை விளங்குவதாக.

உடன்பாடுள்ள உள்ளத்தை விருத்தி செய்து வா. உன்னுடைய இளைய சகோதரர்களுக்கு ஆன்மீகப் பாதை யிலே உதவு. அவர்களை மேலே தூக்கி விடு. அவர் களுடைய வழியை விளக்கிக் காட்டு. பூர்ணத்துவத்தை அவர்களிடமிருந்து எதிர்பார்க்காதே. அவர்களிடம் அன்பாயிரு. நீ எவ்வாறு உன்னுல் முடிந்தவரை செய்து வருகின்ருயோ அதுபோல் அவர்களும் அவர்களால் இயன் றதைச் செய்து வருகின்றனர். அவர்களுக்கு உதவுவதன் மூலம் நீ வளர்ச்சியடைவாய்.

உள்ளத் தூய்மையைப் பெறவும், தெய்வீக ஒளியின் இறக்கத்தைப் பெறவும், தன்னலமற்ற சேவா இயக்கத் தைத் தீவிரமாக ஆரம்பம் செய். ஒழுங்கான கிரமப்படி

வேலை செய். சேவையிலே உக்கிரமாக இரு. அத்துடன் சேவையின் மீது கருத்துக் கொண்டும் இரு. சிறிதே ஓய்வு எடுத்துக் கொண்டு சிறிது நேரம் மட்டும் தூங்கு. உழைப் பின்றேல் ஊதியமில்லை. பலன் அமரத்துவம். நீ சக்தி பொருந்திய யோகியாக ஆகக்கடவாய். இறைவனுக்கும், அவனுடைய நாமாவிற்கும், தன்னலமற்ற தொண்டர்கள் எல்லோருக்கும், கீதையின் உபதேசப்படி சேவை செய்யும் அபூர்வமான ஆன்மீக மலர்களாகத் திகழும் உண்மையான கர்ம யோகிகளுக்கும் எல்லாவிதமான மகிமைகளும் விளங்குவதாக.

ஆன்மீக களத்திலே எண்ணிக்கை முக்கியமல்ல. அத்வைத வேதாந்தத்தை நிறுவியவர் ஒரு சங்கரர் தான். உலகத்திலே சைத்தானுக்குத்தான் மிக அதிக அளவில் சீடர்கள் இருக்கின்றனர். ஆகவே சைத்தானுடைய கொள்கை அல்லது சித்தாந்தம்தான் மிகச் சிறந்தது என்று முடிவு கட்டிவிடலாமா? ஒரு சில உண்மையான அங்கத்தினர்கள் அல்லது தொண்டர்கள் ஒரு ஆஸ்தியாகும். இந்த ஒரு சில அங்கத்தினர்களை வைத்துக் கொண்டு நீ அற்புதங்களை நிகழ்த்திக் காட்டலாம். "அங்கத்தினர்கள் மிகவும் சொற்பமாக இருக்கின்ற காரணத்தினலே சமூக முன்னேற்றத்திற்காக குறிப்பிடத்தக்க சேவை செய்ய இயலவில்லை" என்கின்ற புகாரை இனிமேல் கூருதே.

ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் ஏதாவது ஒரு வகையில் அமைதியாக சேவை செய்வதே உன்னுடைய ஆன்மீக வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், துரித பரிணமத்திற்கும் ஒரு நல்ல சாதனையாகும். உனக்கு ஒத்தாசை செய்ய இரண்டு அல்லது மூன்று பேரைப் பிடித்துக் கொள். ஒன்றுபட்ட உள்ளத்துடன் இரண்டு அல்லது மூன்று பேர்களால் கூட பெருமளவில் பயனுள்ள காரியங்களைச் சாதிக்க முடியும்.

எந்த விதமான பிளவு அல்லது அபிப்பிராய பேதத் தையும் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும். சிநேகப்

பான்மை, அன்பு, அபிப்பிராய பேதத்தை நீக்கிவிடுதல் ஆகியவை மூலம் தொடர்ந்த அமைதியை உறுதிப்படுத்த வேண்டும். அப்பொழுது ஐக்கியப்பட்ட ஒரு முழுமை காணப்படும். அப்பொழுது நல்ல கனிசமான வேலையைச் செய்ய முடியும். அன்பு, இடைவிடாத சேவை ஆகியவற்றின் மூலமாக நீ எல்லோருடைய உள்ளங்களுக்குள்ளும் ஊடுருவிச் செல்லக் கற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் மிக உயர்ந்த யோகமாகும்.

ஒரு ஆங்கிலேய ஜில்லா கலெக்டர் வழியிலே ஒரு நோயாளியை இறக்கும் தருவாயிலே கண்ணுற்ருர். அவர் மிகவும் இரக்க உள்ளம் படைத்தவர். அவர் அந்நோயாளியைத் தன்னுடைய தோளில் சுமந்து கொண்டு பக்கத்திலுள்ள ஒரு ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சேர்த்தார்.

இந்த ஒருமைப்பாட்டுணர்ச்சியைக் கவனி. அவர் உபநிஷத்துக்களை அறிந்திருக்கின்ருரோ இல்லையோ, அவர் ஒரு நடைமுறை வேதாந்தியாவார். சந்நியாசிகள் உள்பட பலர் ''மஹாத்மா காந்திஜி ஒரு சாதாரண கர்மயோகி மட்டும்தான்; அவர் ஒரு வேதாந்தி அல்ல'' என்று கூறுகின்றனர். ஆனல் உண்மையில் பார்க்கப் போனல் மஹாத்மா காந்திஜியை விட அனுஷ்டான வேதாந்தி வேருருவரும் கிடையாது. அவர் தன்னுடைய வாழ்நாளின் ஒவ்வொரு விநாடியிலும் ஒரு அனுஷ்டான வேதாந்தியின் வாழ்க்கையை வாழ்கிருர். அவர் உலக க்ஷேமத்திற்காகவே வாழ்கின்ருர். அவர் இந்த உலகத்தின் ஜீவநாடியாக விளங்குகின்ருர். அவர் எல்லோருடனும் ஒன்ருக இருக்கின்ருர். அவர் தூய்மையான அன்பின் மூலம் எல்லோரையும் அணைத்துக் கொள்கின்ருர். ஆத்ம தியாகம், சேவை, அஹிம்சை, சத்தியம், தூய்மை, பணிவு, ஐக்கியம் ஆகியவைகள் அவருடைய சித்தாந்தத்தை உருவாக்குகின்றன. இருந்த போதிலும் அவர் ஒரு வேதாந்தியினுடைய விளம்பரத்தை அணிந்து கொள்ளவில்லை. அவர் ஒருபொழுதும் ''நான் பிரம்மன் – அஹம்

ப்ரஹ்மா அஸ்மி'' என்கின்ற உண்மையை வேதாந்திகள் என்று கூறிக்கொள்ளும் அவர்களை மகிழ்விப்பதற்காக உறுதிப்படுத்திக் கூறவில்லை. அது ஒன்றுதான் அவரிடம் காணப்படும் குறைபாடாகும்.

அகில உலகமும் உன்னை எதிர்க்கத் தயாராக இருக்கின்றது. உலகத்தை ஒரு பக்கத்திலே நிறுத்திக் கொண்டு நீ தனியாக மற்றொரு புறத்திலே இருந்து கொண்டு உலகத்தை எதிர்த்துப் போராடவேண்டியிருக்கிறது. அகில உலகமும் உன்னை எதிர்த்தாலும் கூட நீ உன்னுடைய நிலையிலிருந்து ஒரு அங்குலம்கூட நகரக்கூடாது. உன்னுடைய லக்ஷியங்களையும் கொள்கைகளையும் விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருக்க வேண்டும்.

தமோ குணம் படைத்தவர்கள் அவர்கள் விருப்பப்படியெல்லாம் எதை வேண்டுமானாலும் செய்யட்டும். அவர்கள் பொய் வதந்திகளைக் கிளப்பி விடட்டும். அவர்கள் புறங் கூறட்டும்; தூற்றட்டும். உறுதி தளராது நில். எல்லா விதமான கொடுமைகள், அபாயங்கள், எதிர்ப்புக்கள் ஆகியவற்றைக் கண்டும் அஞ்சாதே. இறைவன் எப்பொழுதும் உன்னோடு இருக்கின்றான். சத்தியமே வெல்லும். பொய்மை வெல்ல முடியாது. சத்தியத்துடனும், மனப்பூர்வத்துடனும் இரு. இரட்டித்த வேகத்துடனும் சக்தியுடனும் தன்னலமற்ற முறையில் வேலை செய்.

## 3. கர்ம யோகப் பயிற்சி

வேலையே வழிபாடாகும். வேலை நாராயணனுக்குச் செய்யும் பூஜையாகும். வேலை தியானமாகும். இதை மறந்து விடாதே. நீ வேலை தியானம் ஆகிய இரண்டையும் சேர்த்துச் செய்வதின் மூலமாக நீ ஆன்மீகத்தில் பரிபக்குவம் அடைய வேண்டியிருக்கின்றது. சரியான மனோ பாவத்துடன் செய்யும் பொழுது தோட்டி வேலையும் யோகமாக ஆகும். அகில உலகமும் உன்னுடைய இல்லம்,

ஒரு பெரும் குடும்பம் (வாசுதேவ குடும்பகம்) என்பதை உணர். ஒரு அறையிலே மூலையிலே உட்கார்ந்து கொண்டு நீ கண்ணை மூட வேண்டிய அவசியமில்லை.

பலன்களை எதிர்பாராமல் சாக்ஷி பாவத்துடனும், அகர்த்ரு பாவத்துடனும் செய்யப்படும் வேலையானது கர்மமே அல்ல. இது ஞானமாகிய தீயிலே எரிக்கப்படு கிறது. இது ஒரு பொழுதும் ஒருவனை சம்சாரத்தில் கட்டுப் படுத்த முடியாது. ஸ்ரீ சங்கரர் சகாம்ய கர்மங்களைச் செய்யக் கூடாது என்று தான் வற்புறுத்திக் கூறினார். தற்காலத்திய வைதீக மாயாவாதிகள் பலர் ஸ்ரீ சங்கரரைத் தவருகப் புரிந்து கொண்டிருக்கின்றனர்.

தன்னலமற்ற சேவை (மனித வர்க்கத்திற்கான தொண்டு) விதையாகும். நாராயண பாவத்துடன் (எல்லா ஜீவராசிகளும் இறைவனுடைய தோற்றம் என்ற உணர்ச்சி. நான் எல்லா ஜீவன்களிலும் இறைவனுக்குத் தொண்டு புரிகின்றேன்) சேவை செய்தல் வேராகும். உத்ஸாகமே மழை நீராகும். உள்ளத்தின் மலர்ச்சிதான் மலராகும். உள்ளத் தூய்மையே பழமாகும். இதுதான் கர்ம யோகப் பாதையாகும்.

"கையால் கட்டப்பட்ட கோவில்களிலே கடவுள் வசிக்கவில்லை. ஆனால் அவர் யாருடைய உள்ளங்களிலே அன்புணர்ச்சி இருக்கின்றதோ, அது எல்லோருடைய நன்மைக்காகவும் செய்யப்படும் சேவையின் மூலம் வெளிப் படுத்தப்படுகின்றதோ அப்பேர்ப்பட்ட ஆண்கள், பெண் களிடம் இருக்கின்றார்" என்று பாலும் (Paul) ஜானும் (John) கூறியிருக்கின்றனர். இறைவனுடைய மகோன்னதமான ஆலயம் மனிதனுடைய இருதயம் தான். தனவந்தர்கள் பெயரும் புகழும் பெறுவதற்காக ஆலயங்கள் கட்டி தங்கள் பெயர் பொறிக்கப்பட்ட கல்லை வாயிலுக்கு முன்பாகப் பதித்து வைக்கின்றனர். இது ஒரு பெரிய மடமை யல்லவா?

ஈஸ்வரன் ஒவ்வொரு பொருளினுடைய பிரபுவாகவும், சிருஷ்டிகர்த்தாவாகவும், நியமனம் செய்பவரும், காப்பவரும் ஆக இருக்கிறார். அவர் உயர்ந்தவன், தாழ்ந்தவன் எல்லோரிடத்தும் வாசம் செய்கின்றார்.

தன்னலமின்றி, சளையாது, ஆத்ம பாவத்துடன் மற்றவர்களுக்குச் சேவை செய்தல், மற்றவர்களை எனக்குச் சேவை செய்ய அனுமதியாதிருத்தல், மற்றவர்களிடமிருந்து எந்த விதமான சேவையையும் எதிர்பாராமல் இருத்தல் ஆகியவைகள்தான் என்னுடைய யோகம், மதம், தர்மம் ஆகும்.

உன்னுடைய சிறிய தன்னுரிமை மனப்பான்மையை (self-arrogating personality) மறந்து விடு. உன்னுடைய சொந்த நலன்களையும், விருப்பங்களையும், ஆசைகளையும் மறந்து எல்லா ஜீவன்களையும் அணைத்துக்கொள். மற்றவர்களுக்காக வேலை செய். எல்லாவிதமான சிறுமையையும் விட்டு விடு. பரந்த உள்ளமும், பெருந்தன்மையும், தாராள சிந்தையும் உடையவனாக ஆகு. அப்பொழுது தான் நீ மெதுவாக பலம் பொருந்திய எல்லையற்ற "நானாக" விளங்குகின்ற உன்னுடைய ஆத்மீகத் தன்மையை மேலும் மேலும் உணர்வாய்.

எவனொருவன் தன்னுடைய சொந்த சுக சௌகரியங்களைப் புறக்கணித்து மற்றவர்களுக்கு உதவவும், சேவை செய்யவும் முயற்சிக்கின்றானோ அவன் உண்மையிலேயே ஆன்மீகப் பாதையில் ஒரு முன்னேற்றமடைந்த மாணாக்கனாவான்.

எவனொருவன் தன்னலமற்றும், இந்த உடல் மீது மோஹமில்லாமலும் (தேஹ - அத்யாஸம்) இருக்கின்றானோ அவன் மனித வர்க்கத்திற்கு உண்மையான சேவை செய்ய முடியும். அப்பேர்ப்பட்ட மனிதனிடம் உண்மையான சக்தி இருக்கும். அப்பேர்ப்பட்ட மனிதன் பயமற்றிருப்பான்.

உன்னால் தூய தங்கத்தைக் கொண்டு எந்த ஆபரணமும் செய்ய முடியாது. மூன்று சத விகித அளவு வேறு ஏதாவது உலோகத்தைத் தங்கத்துடன் கலந்தால் தான் உன்னால் ஆபரணங்கள் செய்ய முடியும். இதே போல ஈஸ்வரன் மூன்று சதவிகித ரஜஸுடன் தோற்றமளித்து இந்தப் பிரபஞ்சத்திலே வேலை செய்கின்றான். ஆகவே அவன் பாதிக்கப்படுவதில்லை. 97 சதவிகித ரஜஸுடனும் 3 சதவிகித சத்துவத்துடனும் கூடிய மக்கள் இந்த உலகத்திலே வேலை செய்துவந்தால் அவர்கள் களங்கப்படுத்தப் படுவார்கள். உலக க்ஷேமத்திற்காகத் தொண்டு செய்ய விரும்புகிறவர்களிடம் ஏராளமான சத்துவம் அல்லது தூய்மை இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் உலக மக்களின் தொடர்பு காரணமாக அவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள். அப்பொழுது தான் அவர்களால் மக்களை உயர்த்த முடியும்.

வெறுப்புணர்ச்சியையும் போட்டியையும் விட்டு விடு. அதிகாரம், அந்தஸ்து, செல்வம், ஆகியவற்றிற்கான பேராசையை விட்டுவிடு. பணிவு என்கின்ற மகுடத்தை அணிந்து கொள். தூய்மையுடைய்வனாகவும், ஒளி பொருந்தியவனாகவும் ஆகு. இறைவனிடத்தில் உன்னுடைய நம்பிக்கையைக் கூட்டு. உன்னுடைய ஜபத்திலும், தியானத்திலும் உறுதியாக இரு. அன்பையும் ஒளியையும் அடை.

எப்பொழுதும் சுறுசுறுப்பான பழக்கத்தைக் கைக்கொள். மற்றவர்களின் நன்மைக்காக உன்னால் முடிந்தவற்றையெல்லாம் தியாகம் செய். சுயநலத்தை முற்றிலும் நீக்கிவிடு.

நீ ஒரு மனிதனுக்குத் தொண்டு செய்யும் பொழுதோ அல்லது ஒரு தானம் கொடுக்கும் பொழுதோ எதையும் எதிர்பார்க்காதே. அவனுக்குச் சேவை செய்ய நல்லதொரு சந்தர்ப்பத்தைக் கொடுத்தமைக்காக அவனுக்கு நன்றி செலுத்து.

உலகிற்குத் தொண்டு செய்யும் மனிதன் உண்மையி லேயே தனக்குத் தொண்டு செய்து கொள்கின்றான். மற்ற வர்களுக்கு உதவி செய்கின்ற மனிதன் தனக்குத் தானே உதவி செய்துகொள்கின்றான். ஆகவே நீ மற்றொரு மனித னுக்குத் தொண்டு செய்யும் பொழுது, நீ உன்னுடைய தேசத்திற்குச் சேவை செய்யும் பொழுது, இறைவன் உன்னை நீயே சேவையின் மூலம் விருத்தி செய்து கொள்ள வும், திருத்திக் கொள்ளவும், உருவாக்கிக் கொள்ளவும் அரியதொரு வாய்ப்பை அளித்திருக்கின்றான் என்று எப் பொழுதும் நினைக்கவும் உணரவும் செய். சேவை செய்ய உனக்கு ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்த அந்த மனிதனுக்கு நன்றியுடையவனாக இரு.

மற்றவர்களுக்கு உதவி செய்வதிலும், சேவை செய் வதிலும் எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் நழுவ விட்டு விடாதே. உற்சாகத்துடன் மனப்பூர்வமாக சேவை செய். ஞாயிற்றுக்கிழமை முகம் அல்லது விளக்கெண்ணெய் குடித்த முகத்தை ஒரு பொழுதும் காட்டாதே ஒவ்வொரு வேலையையும் மன ஒருமைப்பாட்டுடனும், பக்தி சிரத்தை யுடனும் பரிபூரணமான ஒழுங்குடன் செய். ஒவ்வொரு நிமிஷத்தையும் எவ்வளவு நல்ல முறையில் பயன்படுத்த முடியுமோ அவ்வளவு நல்ல முறையில் மற்றவர்களுக்குத் தொண்டு செய்வதில் பயன்படுத்து.

மற்றவர்களுக்குச் சேவை செய். மற்றவர்களுக்கு உதவி செய். உன்னுடைய இருதயத்தை தூய்மையான பயன் கருதா அன்பினால் நிரப்பு. எப்பொழுதும் பயனுள்ள நல்லவற்றையே செய்.

"நான் புறத் தோற்றமாக விளங்குகின்ற கடவுளுக் குத் தொண்டு செய்கின்றேன்" என்கின்ற பாவத்தோடு தினந்தோறும் முறையாக செய்யப்படுகின்ற சமூக சேவை யானது அக்னி ஹோத்திரம் முதலியவற்றைச் செய்கின்ற பயனையும், உள்ளத் தூய்மையையும், துரிதமாக சித்த சுத்தியையும் கொடுக்க வல்லது.

வேலையிலே மூழ்கியிரு. உன்னுடைய இருதயம், மனம், ஆத்மா ஆகியவற்றைப் பூரணமாகக் கொடுத்து விடு. பலன்களைப் பற்றிக் கவலைப்படாதே. வெற்றி அல்லது தோல்வியைப் பற்றி எண்ணுதே கடந்து சென்றதைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்காதே. பூர்ணமான நம்பிக்கை கொண்டிரு. தன்னம்பிக்கையைப் பயின்றுவா. எப்பொழுதும் உற்சாகத்துடனிரு. அமைதியான சமநிலை யோடு கூடிய மனத்துடனிரு. வேலைக்காக வேலை செய். தைரியமாகவும் வீரத்துடனும் இரு. நீ எந்த வேலையிலும் வெற்றி பெறக் கடமைப்பட்டிருக்கின்றுய். இதுதான் வெற்றியின் ரகசியம்.

சேவை செய்யும் பொழுது, நீ இறைவனுக்காக வேலை செய்கின்றுய் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள் ஒவ்வொரு காரியத்தையும் ஈஸ்வரார்ப்பணமாகச் செய். நீ சீக்கிரம் ஆன்மீகத்தில் வளருவாய். நீ சீக்கிரத் தில் தெய்வீகமாக மாற்றப்படுவாய். எப்பொழுதும் உன் னுடைய நோக்கங்களை ஜாக்கிரதையாக பரிசோதித்துப் பார்.

ஒரு நோயாளிக்கு வலியுள்ள பாகங்களில் நீ ஏதாவது மருந்து தடவும் பொழுது நீ விராட் புருஷனுடைய உடலைத் தீண்டிக் கொண்டிருப்பதாக உணர். சீக்கிரம் நீ பரி பக்குவம் அடைவாய். உன்னுடைய உள்ளம் விரிவடை யும். வெறுப்புணர்ச்சி விரைவில் மறைந்து விடும். பிரேமை அதிகரிக்கும். சுத்த பாவம் குறையும் பொழுது அதை மறுபடியும் சீக்கிரமாகக் கொண்டு வந்து விடு. சில மாதங் கள் உறுதியாகப் பயின்றுவிட்ட பிறகு நீ எப்பொழுதும் சுத்த பாவத்தில் நிலைத்திருப்பாய். கஷ்டப்பட்டுப் போராடு.

நீ ஒரு மனிதனுடைய காலைப் பிடித்து விட்டால் அவன் உன்னைக் கண்டு மகிழ்ச்சியடைவான். உடலி னுடைய ஒரு அங்கத்தைத் தொடுவதின் மூலம் முழு மனித னும் ஆனந்தமடைகின்றுன். கால் மனிதனுடைய ஒரு அங்கம். அதேபோல சேவையின் மூலம் ஒரு மனிதனை

மகிழ்வித்தாயேயானல் விராட் முழுவதும் மகிழ்ச்சியடைகின்றது. ஏனென்ருல் மனிதன் விராட்டின் ஒரு அங்கமாவான்.

எவ்வளவு கர்மம் செய்த போதிலும் ஆத்மானுபூதியை அடைய முடியாது. ஆத்மனை விவேகம், விசாரம், நிதித்யாசனம், ஆத்ம விசாரணை, தியானம் ஆகியவை மூலம் அடைய முடியும்.

எப்பாடுபட்டாகிலும் தினசரி ஆன்மீக சாதனையை விடாமல் செய்ய வேண்டும். வேலையின் போது பாவம் தொடர்ந்து இருக்க வேண்டும். பிரசன்னத்தை எங்கும் உணர்தல், செய்கின்ற ஒவ்வொரு வேலையையும் ஈஸ்வரார்ப்பணமாக இறைவனுக்கு அர்ப்பணித்தல் ஆகியவற்றைப் பயில வேண்டும். உன்னுடைய இரண்டு கைகளும் இறைவனுடைய (ராமன் அல்லது கிருஷ்ணன்) கைகளாகும். அவன் உன் மூலமாக வேலை செய்கின்ருன்; பார்க்கின்ருன்; கேட்கின்ருன்; உணருகின்ருன்; சாப்பிடுகின்ருன். இதை உணர். இதை எப்பொழுதும் உணர்.

உன்னுடைய திருஷ்டியை ஒரு பொருளில் பதிய வைத்திரு. உன்னுடைய நோக்கத்தை ஈடேற்றுவதிலே ஸ்திரமாகவும், உறுதியாகவும் இரு. உன்னுடைய மனதை பல வழிகளில் செல்ல விடாதே. அசைவற்ற மனத்தை விருத்தி செய். உன்னுடைய வேலையை அமைதியான மனேபாவத்துடனும், ஈஸ்வரார்ப்பண புத்தியுடனும் செய். ஒவ்வொரு செய்கையும் யோகக் கிரியையாக மாற்றப்பட்டு விடும். நீ ஒவ்வொரு காரியத்திலும் வெற்றி பெறுவாய்.

நீ உன்னுடைய வருவாயிலே ஒரு குறிப்பிட்ட பகுதியை தர்மத்திற்கென்று ஒதுக்கி வைத்துவிட வேண்டும். எப்போதாவது செய்யப்படுகின்ற சேவை யோகமாகக் கருதப்பட மாட்டாது. நீ முறையான சேவையிலே குதித்து உன்னை மறந்துவிட வேண்டும். இது உண்மையான யோகமாகும்.

அன்பே சிவம். சிவமே அன்பு. இறைவனுடைய உச்சியையடைய அன்பு ஒரு வழியாகும். ஆகவே அன்பானது வழிமட்டுமல்ல, ஆனல் அது லக்ஷியம் அல்லது முடிவுமாகும். இது ஒப்புயர்வற்றது. இது வேறுபாட்டை அறியாது. இது பாகுபாட்டைத் தேடுவதில்லை. இது ஒரு மாபெரும் சமமாக்கும் கல்லாகும் (leveller). இது மேலானது. இது பக்தர்களுடைய தூய்மையான உள்ளங்களிலே அலைமோதிக் கொண்டிருக்கின்றது. இது வெறுப்பையும், துரபிமானத்தையும் நீக்குகின்றது. இப்பூவுலகிலே இது ஒரு மகத்தான சக்தியாகும். இது உன்னை நற்கருமங்களைச் செய்யவும், தெய்வீக உணர்வுடன் மனித வர்க்கத்திற்குத் தொண்டு செய்யவும் ஊக்குகின்றது. இது எல்லோரிடத்திலும் கடவுளைக் காணும்படியும், எல்லோரையும் மதித்து நடக்கும்படியும் உனக்குத் தாற்றூசி போட்டுக்கொண்டிருக்கிறது. இது உனக்கு அமைதியையும், பேரானந்தத்தையும், சந்தோஷத்தையும், அமரத்துவத்தையும் அளிக்கின்றது.

எல்லோருடனும் மனமொருமித்துப் பழகு. எல்லோரையும் அணைத்துக் கொள். எல்லோரையும் நேசி. எல்லோருக்கும் சேவை செய். அனுசரித்துப் போகும் தன்மையையும், தன்னலமற்ற சேவா மனப்பான்மையையும் வளர்த்து சளைக்காத சேவையின்மூலமாக எல்லோருடைய உள்ளங்களுக்குள்ளும் ஊடுருவிச் செல். இதுதான் ஒருமைப்பாட்டை உணர்கின்ற பிரத்யக்ஷமான அத்வைத உணர்வாகும்.

மனித வர்க்கத்திற்குத் தொண்டு செய்வது என்பது வெறும் இயந்திரம் போன்றதாக இருக்கக் கூடாது. இதை ஆத்ம பாவத்துடன் செய்தல் வேண்டும். சேவை என்பது உள்ளத் தூய்மைக்காகவும், அதன் பயனாக ஒளியைப் பெறவும் செய்யப்படுகின்ற யோகமாகும். எல்லா தொண்டர்களும் இந்த பாவத்துடன் உள்ளத்தைத் துருவி சம்மட்டியடி அடிக்க வேண்டும்.

நீ மேலும் மேலும் மற்றவர்களுக்காக இரக்கம் காட்டி ஞல் அது உள்ள விரிவையும், ஆன்மீக வளர்ச்சியையும் குறிக்கும் அறிகுறியாகும். உன்னுடைய தினசரி காரியக் கிரமத்தில் விடாப்பிடியாக இரு.

நீ ஒரு நண்பனுக்கு உதவ வேண்டுமென்று நினைத்தால் ''உங்களுக்கு டீ வேண்டுமா அல்லது பால் வேண்டுமா?'' என்று வெறுமனே கேட்காதே. இது உதட்டளவிலே செய்யப்படும் தொண்டுதான். ஒரு கோப்பை பாலையோ அல்லது டீயையோ அவருக்கு முன்பாக பணிவுடன், சந்தோஷமாக வைத்துவிட வேண்டும். இது உண்மையான சேவையாகும். உன்னுடைய மரியாதை எப்பொழுதும் சீரானதாகவும், ஏராளமாகவும், ஜோடனை இல்லாததாகவும் இருத்தல் வேண்டும். மரியாதைக் குறைவாக உள்ள சில தந்திரசாலிகள் ஒரு நண்பனைச் சந்திக்கும் பொழுது ''நீ சாப்பிடமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். இப்பொழுது ஒரு கோப்பை பால் அல்லது டீ சாப்பிடுகின்ருயா?'' என்று சொல்லுவார்கள். நண்பன் ''இல்லை, இல்லை நான் இப்பொழுதுதான் டீ சாப்பிட்டுவிட்டு வருகிறேன்'' என்று கூறுவான். அவர்கள் ''சரி, இந்த கிராம்பு அல்லது பாக்கையாவது எடுத்துக் கொள்'' என்று சொல்லுவார்கள். ஆரம்பத்திலிருந்தே அவர்கள் அவனுக்கு சாப்பாடோ அல்லது பாலோ கொடுக்க விரும்பவில்லை. அவர்களுடைய சேவா உணர்ச்சி உதட்டளவிலே மட்டும் தான். இந்த உலகத்தில் அப்பேர்ப்பட்டவர்கள் நிறைந்து காணப்படுகின்றனர். அவர்கள் உண்மையிலேயே இந்த பூமிக்கு பாரமாக இருக்கின்றனர்.

ஒரு பக்குவப்படாத, பயிற்சியளிக்கப்படாத சாதகன், ''என்னுடைய குரு என்னை ஒரு வேலைக்காரன் அல்லது சேவகனைப் போல நடத்திக் கொண்டிருக்கிருர். அவர் என்னைச் சிறு சிறு வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்ருர்'' என்று வருத்தமடைகின்ருன். எவன் ஒருவன் கர்ம யோகத்தின் சரியான மகத்துவத்தை அறிந்

திருக்கின்றனோ அவன் ஒவ்வொரு காரியத்தையும் யோகக்கிரியையாக அல்லது இறை வழிபாடாகக் கருது வான். அவனுடைய பார்வையிலே கேவலமான வேலை என்பது கிடையாது. ஒவ்வொரு வேலையும் நாராயண னுக்குச் செய்யும் பூஜையாகும். கர்ம யோக வழியிலே எல்லாக் காரியங்களும் புனிதமானவைகளே. உலகாயத மனிதனால் கேவலமான வேலை என்று கருதப்படும் வேலை யைச் செய்வதில் அளவற்ற ஆனந்தம் அடைபவனும் அதுமாதிரியான வேலைகளை விருப்பத்துடன் செய்கின்ற வனுமாகிய சாதகன் ஒரு சக்தி பொருந்திய யோகியாக ஆவான். அவன் கர்வம், அகந்தை ஆகியவற்றிலிருந்து முற்றிலும் விடுபடுவான். அவனுக்கு வீழ்ச்சியென்பதே இருக்காது. கர்வமாகிய அழிபுண் அவனைத் தீண்ட முடியாது.

மேலை நாடுகளிலே செருப்புத் தைப்பவர்களும், விவசாயிகளும் சமூகத்திலே மிக உன்னதமான நிலைக்கு உயர்ந்திருக்கின்றனர். அவர்கட்கு ஒவ்வொரு தொழிலும் மதிப்பு மிக்க தொழில்தான். லண்டன் மாநகரத்து வீதி களிலே ஒரு பென்னிக்கு பூட்ஸுக்குப் பாலிஷ் போடுகின்ற ஒரு பையன் மாலையிலே விற்பனைக்குச் செய்தித் தாள்களை யும், சஞ்சிகைகளையும் எடுத்துச் செல்கின்றான்; இரவிலே ஓய்வு நேரத்தில் ஒரு பத்திரிகையாளரிடம் பயிற்சியாள னாக வேலை செய்கின்றான். அவன் புத்தகங்களைப் படிக் கின்றான், கஷ்டப்பட்டு உழைக்கின்றான், ஒரு நிமிஷத் தைக் கூட வீணாக்குவதில்லை. ஒரு சில ஆண்டுகளில் சர்வ தேசப் புகழும், பெரும் மதிப்பும் மிக்க ஒரு பத்திராதிபனாக ஆகிவிடுகின்றான். பஞ்சாபிலே சில பட்டதாரிகள் சிகை அலங்கரிக்கும் வேலையை மேற்கொண்டிருக்கின்றனர். அவர்கள் தொழிலின் மேன்மையை உணர்ந்திருக்கின் றனர்.

ஒரு உண்மையான யோகி ஒரு தாழ்ந்த தொழிலுக் கும், மதிப்புள்ள தொழிலுக்குமிடையே வேற்றுமை

பாராட்ட மாட்டார். அறியாத மனிதன்தான் அவ்வாறு பாகுபாடு செய்கின்றுன். சில சாதகர்கள் அவர்களுடைய ஆன்மீகத் துறையில் இறங்கிய ஆரம்பத்தில் பணிவாக இருக்கின்றனர். அவர்களுக்குக் கொஞ்சம் பெயரும், புகழும், சில பின்பற்றுவோரும், மெச்சுவோர்களும், பக்தர் களும், சீடர்களும் கிடைத்துவிட்டால் அவர்கள் கர்வத் திற்கு இரையாகி விடுகின்றனர். அவர்களால் எந்த சேவை யும் செய்ய முடிவதில்லை. அவர்களால் தங்களுடைய தலையின்மீதோ அல்லது கைகளிலோ எதையும் எடுத்துச் செல்ல முடிவதில்லை. ரயில்வே பிளாட்பாரத்திலே ஏராள மான மெச்சுவோர்களும், சீடர்களும், பக்தர்களும் நிறைந் திருக்கும் கூட்டத்திற்கு மத்தியிலே, பணிவை வெளிப் படுத்திக் காட்டாமல் இம்மியளவும் உணர்ச்சியின்றி பெட்டி யைத் தலைமீது சுமந்து கொண்டு செல்லும் அந்த யோகியை அவசியம் புகழ வேண்டும். ஜடபரத முனிவர் ஒரு ராஜாவினுடைய பல்லக்கைத் தன்னுடைய தோளின் மீது முணுமுணுக்காமல் சுமந்து சென்றுர். கிருஷ்ண பர மாத்மா அவருடைய நாவித பக்தன் விடுமுறையில் சென் றிருக்கும்போது, ஒரு ராஜாவினுடைய காலைப் பிடித்து விட்டார். ஸ்ரீராமர் அவருடைய பக்தர்களிலே ஒருவ னுடைய ஸ்நானத்திற்காக ஒரு குடம் தண்ணீரைச் சுமந்து சென்றுர். ஸ்ரீ கிருஷ்ணர் விதுா என்கின்ற பணியாளனுக உருவெடுத்து அவருடைய பக்தன் தாமாஜிக்காக நவாபுக் குப் பணத்தைக் கட்டினுர். நீ ஆன்மீக மார்க்கத்திலே வளர்ச்சியடைய வேண்டுமானுல் நீ தினந்தோறும் எல்லா விதமான சேவைகளையும் உனது வாழ்நாள் முழுவதும் செய்து வரவேண்டும். அப்பொழுதுதான் நீ பத்திரமாக இருப்பாய். நீ ஒரு பிரசித்தி பெற்ற யோகியாக ஆகிவிட் டதும் சேவை செய்வதை நிறுத்தி விடாதே. சேவா உணர்ச்சி உன்னுடைய உடலின் ஒவ்வொரு நரம்பிலும், கண்ணறையிலும், தசையிலும், எலும்பிலும் நுழைய வேண்டும். அதை உன்னிடம் தீர்க்கமாகப் பதியும்படிச் செய்ய வேண்டும். அப்பொழுது தான் நீ ஒரு உண்மை

யான, பூர்ணமாக வளச்சியடைந்த, அனுஷ்டான வேதாந்தியாவாய். , பகவான் புத்தரை விடச் சிறந்த வேதாந்தி அல்லது கர்ம யோகி எவரேனும் உண்டா? அவர் இன்னும் நம்முடைய உள்ளங்களிலே குடிகொண் டிருக்கின்ருர். ஏனென்ருல் சேவா உணர்ச்சியானது அவ ரிடம் ஆழமாகப் பதிந்திருந்தது. அவர் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் பல்வேறு விதமான வழிகளில் மற்றவர்களுக்குச் சேவை செய்வதிலேயே கழித்தார். ஒப்பற்ற பெருந்தன்மையான ஆத்மா. நீ உன்னை சரியான மனோபாவத்துடனும் விடா முயற்சியுடனும் தன்னலம் கருதா சேவையிலே ஈடுபடுத்துவாயேயாகில் நீயும் ஒரு புத்தராகலாம்.

மகாத்மா காந்திஜீயினுடைய சுய சரிதையைப் படித்துப் பார். அவர் ஒருபொழுதும் தாழ்ந்த வேலைக்கும் உயர்ந்த வேலைக்குமிடையே எந்த விதமான வேறுபாடும் காட்டவில்லை. தெருக் கூட்டுதலும், கக்கூஸ் கழுவுதலும் அவருக்கு மிக உயர்ந்த யோகமாகும். இதுதான் அவ ருக்கு மிக உன்னதமான பூஜையாகும். அவர் தானே கக்கூஸ்களைக் கழுவும் வேலையைச் செய்தார். அவர் பல் வேறு விதமான சேவைகள் மூலமாக இந்த மயக்கந் தரும் சிறிய ‘‘ நானை ’’ இல்லாமல் செய்தார். உயர்ந்த படிப்பு படித்த பல பேர்கள் அவருக்குக் கீழ் யோகத்தைப் பயிலு வதற்காக அவருடைய ஆஸ்ரமத்திலே சேர்ந்தனர். அவர் கள் காந்திஜி அவர்கள் யோகத்தை ஒரு விநோதமான முறையிலே ஒரு தனிப்பட்ட அறையிலே கற்றுக்கொடுப்பார் என்றும், அவர் பிராணுயாமம், தியானம், ஆழ்ந்த சிந்தனை, குண்டலினி சக்தியை எழுப்புதல் முதலியவை களைப் பற்றி உபதேசங்கள் கொடுப்பார் என்றும் எண்ணி னர். முதன் முதலில் அவர்களைக் கக்கூஸ் சுத்தம் செய்யச் சொன்னதும் அவர்கள் ஏமாற்றமடைந்தனர். அவர்கள் உடனே ஆஸ்ரமத்தை விட்டு வெளியேறினர். காந்திஜி தன்னுடைய செருப்புகளைத் தானே பழுது பார்த்துக் கொள்வார். அவர் தானே மாவு அரைக்கும் வேலையைச்

செய்வார். தவிர ஆஸ்ரமத்தில் வேறு யாராவது அவர்களுக்கு ஒப்படைக்கப்பட்ட அன்றைய மாவரைக்கும் வேலையைச் செய்ய இயலாமல் போனால் அவர்களுடைய வேலையையும் இவரே எடுத்துச் செய்வது வழக்கம் ஒரு புதிய படித்த ஆஸ்ரம வாசி மாவரைப்பதற்குக் கூச்சப் பட்டால் அவனுக்கு முன்பாகவே காந்திஜி அவனுடைய வேலையைச் செய்து காட்டுவார். பிறகு அடுத்த நாளிலிருந்து அவனே அந்த வேலையை விருப்பத்துடன் செய்வான்.

இறைவனுக்கு சேவை செய்யும் எல்லா மனிதர்களும் சமம். அவர்கள் ஜாதி, மத, நிற, பேதமின்றி ஒன்றாகச் சாப்பிடவும், குடிக்கவும் வேண்டும். நீ உண்மையிலேயே ஆன்மீக வளர்ச்சியையும் தெய்வத்தினிடத்தில் பக்தியை வளர்த்துக் கொள்ளவும் விரும்பினால் உயர்வு தாழ்வு மனப் பான்மையை விட்டொழித்துவிட வேண்டும். வேற்றுமைகளைச் சுட்டெரித்து எங்கும் கடவுளைக் காண். எல்லோருடனும் ஒன்று சேர். எல்லோருடனும் கலந்து பழகு. சகிப்புத்தன்மை, அனுசரணை, தூய அன்பு, மன்னிக்கும் குணம், சமநோக்கு ஆகியவற்றை விருத்தி செய்து கொள்.

எந்த நிலைமையிலும் உன்னுடைய லட்சியம், கொள்கைகள் ஆகியவற்றைப் பற்றிக்கொண்டிரு. உலகம் முழுவதும் சேர்ந்து உன்னை எதிர்த்தாலும் நீ அசையாது நில். ஒரு நல்ல காரியத்திற்காக உன்னுடைய வாழ்க்கையையும் அர்ப்பணிக்கத் தயாராக இரு.

நீ வேலை செய்ய விரும்பினால் சுயேச்சையாக வேலை செய். ஆரம்ப சாதகர்களுக்கு அவர்கள் தியானத்திலிருந்து இறங்கி வந்ததும் உணர்வு பெறுவதற்காக இலேசான வேலை அவசியம். ஆனால் அந்த வேலை பொருத்தமானதாக இருக்க வேண்டும். இது ஆன்மீக சாதனைக்கு (contemplation) உதவியாக இருத்தல் வேண்டும்—சம்பந்தப் பட்ட வேலையாக இருத்தல் வேண்டும். (cognate work).

உன்னிடத்தில் தன்னலமற்ற சேவை செய்ய வேண்டு மென்கின்ற விருப்பம் இருந்தால் நிஷ்காம்ய கர்மத்தின் மூலம் சித்த சுத்தியை அடைய வேண்டுமென்ற ஆவல் இருந்தால் இயற்கை அன்னை உன்னை அவளுடைய தெய்வீக கைங்கரியத்திற்காகப் பயன்படுத்திக் கொள் வாள். அவள் உன்னைத் தகுதியான ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொள்வாள். நீ சீக்கிரத்தில் பரிபக்குவ மடைவாய்.

எல்லாவற்றையும் இறைவனிடத்தில் ஒப்படைத்து விடு. உன்னுடைய அகந்தையை அவனுடைய பாத கமலங்களில் சமர்ப்பித்து விட்டு சுகமாக இரு. அவன் உன்னுடைய எல்லா பொறுப்புக்களையும் ஏற்றுக் கொள் வான். அவன் விரும்பியபடி எந்த வழியில் வேண்டுமானா லும் உன்னை உருவாக்கட்டும். அவன் விருப்பப்படியே செய்யட்டும். அவன் எல்லாவிதமான குறைபாடுகளையும், பலஹீனங்களையும் நீக்கி விடுவான். இந்த சரீரமாகிய புல்லாங்குழலில் அவன் அழகாக வாசிப்பான். அவ னுடைய அற்புதமான குழலோசையை, ஆத்மனின் விசித்திரமான சங்கீதத்தைக் கேட்டு ஆனந்தமடை.

உண்மையான தன்னலமற்ற சேவை செய்வது என்பது மிக மிகக் கடினம். பலபேர்கள் தன்னலமற்ற சேவை என்கின்ற போர்வையை போர்த்திக் கொண்டு பொது மேடை ஏறுகின்றனர். ஆனால் அவர்கள் தங்களுக் குத் தாங்களே சேவை செய்து கொள்கின்றனர். சில சந்நியாசிகள் கூட இதையே செய்கின்றனர். இது மிகவும் வருத்தப்படக் கூடியதாக இல்லையா ?

கர்த்ருத்துவ மயக்கத்தையும் (delusion of agency) பொருள்களின் மீது உரிமை கொள்ளுதலையும், அந்த மனிதன், இந்த மனிதன், நான், நீ, அவன் முதலிய பாகுபாடுகளையும் விட்டு விடு. நீ சீக்கிரத்தில் ஞானமடை வாய். அவிவேகத்தின் காரணமாக ஆசைகள் எழுகின் றன. விவேகம் உதயமாகும் பொழுது ஆசைகள் மங்கி

விடும். சத்தையும், அசத்தையும் பாகுபடுத்தி அறிந்து கொள்ளக் கற்றுக்கொள். சாஸ்வதப் பேரானந்தமாகிய மோக்ஷ சாம்ராஜ்யத்திலே நீ சீக்கிரமாகப் பிரயாணம் செய்யக்கடவாய்.

கர்மங்களைப் பற்றற்ற நிலையிலும், அவற்றைத் தன்னுடைய சொந்த தூய்மைக்காகச் செய்கின்ருேம் என்கின்ற உணர்ச்சியில்லாமலும் செய்தல் வேண்டும். இறைவனுக்காக மட்டும் வேலைகளைச் செய். ''இறைவன் மகிழ்ச்சியடையட்டும்'' என்பதைப் போன்ற பற்றையும் விட்டு வேலை செய்தல் வேண்டும். வேலை எவ்வளவுதான் உற்சாக மூட்டக் கூடியதாக இருந்தாலும், நீ அந்த வேலையை எவ்வளவுதான் விரும்பினுலும் அந்த வேலையை எந்த வினுடியிலும் விட்டுவிடத் தயாராக இருக்க வேண்டும். எந்த நேரத்தில் ஆத்மனுடைய அந்தரங்க சப்தமானது அந்த வேலையை விட்டு விடும்படி உத்திரவிடுகின்றதோ நீ உடனே அதை விட்டு விடவேண்டும். எந்த வேலையிலும் பற்றுதல் வைத்திருப்பது உன்னை பந்தப்படுத்தும். கர்ம யோகத்தின் இந்த நுண்ணிய இரகசியங்களைப் புரிந்து கொண்டு கர்ம யோகப் பாதையிலே தைரியமாக முன்னேக்கிச் சென்றுகொண்டிரு.

உன்னுடைய சொந்த ஆத்மனையே நம்பியிரு. அப்பாவியாக (credulous) இருக்காதே. எந்த விதமான மதக் கோட்பாட்டையும் நம்பாதே. ஆத்மனின் அந்தரங்கக் குரல் அல்லது தூய உணர்வின் தூண்டுதலைக் கேள். ஒரு அடிமையாக இருக்காதே. உன்னுடைய சுதந்திரத்தை விற்று விடாதே நீ அழியாத ஆத்மா. தாழ்ந்த மனப்பான்மையை அழித்து விடு. சக்தி, தைரியம், பலம் ஆகியவற்றை உள்ளுக்குள்ளிருந்தே பெற்றுக் கொள். சுதந்திர புருஷனுக இரு. எந்த விதமான குருட்டு நம்பிக்கையும் வைத்துக் கொள்ளாதே. ஜாக்கிரதையாக பகுத்து அறி. பிறகு எதையும் ஒத்துக் கொள். அலை மோதுகின்ற உணர்ச்சி வசப்பட்டுவிடாதே. அவைகளை அடக்கு.

விரிவடை. உனக்குள்ளே ஒரு பெரிய சக்தியும், ஞானமும் நிறைந்த களஞ்சியம் இருக்கின்றது. அதைப் பற்றவைக்க வேண்டியதுதான் தேவையாக இருக்கிறது. பிறகு ஆத்ம னுடைய எல்லா ரகசியங்களும் உனக்கு வெளிப்படுத்தப் பட்டு விடும். அறியாமையாகிய இருளானது ஆத்ம ஞான மாகிய ஒளியின் மூலம் போக்கடிக்கப்படும். ஞான சாம் ராஜ்யத்தைத் திறப்பதற்கு ஆத்மனை இடைவிடாது தியானிப்பதுதான் பெரிய திறவு கோலாகும். நான் இங்கு கர்ம யோகம், வேதாந்தம் ஆகியவற்றின் சாரத்தை ஒரு சில வரிகளில் கொடுத்திருக்கின்றேன். அமிர்த்தத்தை சுவைத்துப் பார்த்து அமரத்துவத்தையும், சாசுவதப் பேரானந்தத்தையும், நிலையான இன்பத்தையும் அடை வீராக. இதுதான் வாழ்க்கையின் லட்சியம். இது தான் நாம் இருப்பதின் முடிவும், நோக்கமும். இந்த உன்னத மான லட்சியத்தை அடைய கர்ம யோகமும், உபாசனை யும் உன்னைத் தயார் செய்யும்.

---

## அத்தியாயம் ஒன்பது

## மாயை

### 1. மாயை என்றால் என்ன?

மாயை என்பது மயக்கத்தை உண்டுபண்ணக்கூடிய, அறிவு ஆராய்ச்சிக்கப்பாற்பட்ட, ஈஸ்வரனுடைய சக்தியாகும். எவ்வாறு நெருப்பிலிருந்து உஷ்ணத்தைப் பிரிக்க முடியாதோ அதே போல மாயையை ஈஸ்வரனிடமிருந்து பிரிக்க முடியாது. மாயை ஈஸ்வரனுடைய உபாதி. ஈஸ்வரன் மாயையைத் தன்னுடைய கட்டுப்பாட்டிற்குக் கீழ் வைத்திருக்கின்றான். மாயை சத்துமல்ல; அசத்துமல்ல. ஆகவே மாயை அனிர்வசனீயமாகும். இப்பிரபஞ்சம் முழுவதும் மாயையினுடைய ஒரு காட்சியாகும். எல்லா உலக அனுபவமும் மாயையினுடைய பலனாகும். தன்னுடைய ஆத்மனை உணர்ந்த முனிவர் மாயையைக் கடந்துவிட்டவராவார்.

மாயை பிரம்மனுடைய அபின்ன சக்தியாகும். அபின்னமென்றால் பிரிக்க முடியாதது என்று பொருள். மாயையை பிரம்மனிலிருந்து பிரிக்க முடியாது. எப்படி உஷ்ணத்தை நெருப்பிலிருந்து பிரிக்க முடியாதோ அதே போல மாயையை பிரம்மனிலிருந்து பிரிக்க முடியாது. நீ ஒரு பானையைப் பார்த்து அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும் என்கின்ற முடிவுக்கு வருகின்றாய். அதே போல இந்த உலகத்தைப் பார்த்து, இந்த உலகத்திற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும் என்கின்ற முடிவுக்கு நீ வர வேண்டி இருக்கிறது. அந்தக் காரணம் தான் பிரம்மனுடைய மாயா சக்தியாக விளங்கும் மாயையாகும்.

எது வர்ணனைக்கப்பாற்பட்டிருக்கின்றதோ, எது தன்னுடைய குணத்தினாலேயே விளக்கப்பட முடியாமல் இருக்கின்றதோ அது மாயை. மாயை அனிர்வசனீயமாகும்.

அதாவது வர்ணிக்க வொண்ணுதது. இது அறிவுக் கெட்டாத பிரம்மனுடைய ஒரு மாயா சக்தியாகும். அதன் மூலமாக இந்த உலகம் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது.

மாயை தந்திரசாலியும், ஏமாற்றும் குணம் படைத்தவளுமாவாள். அவள் ஈஸ்வரனுடைய மாயா சக்தி. முடிவற்ற பிரம்மனிடத்தில் முடிவுள்ள ரூபங்களை சிருஷ்டி செய்வது முடிவையுண்டுபண்ணக் கூடிய கொள்கைதான். அவளிடம் 2 சக்திகள் இருக்கின்றன. ஒன்று ஆவரண சக்தி, மற்றது விக்ஷேப சக்தி. அவள் ஆவரண சக்தியின் (மறைக்கும் சக்தி) மூலமாக உண்மையை மறைக்கின்ருள். அவள் விக்ஷேப சக்தியின் மூலமாக (வெளிப்படுத்தும் சக்தி) இப்பிரபஞ்சத்தை வெளிப்படுத்திக் காட்டி பொய்யான நாம ரூபங்களை சிருஷ்டி செய்கின்ருள்.

ஆவரண சக்தி ஆத்மனை மறைத்து ஜீவனுக்குத் திரை போடுகின்றது. இச்சக்தியின் மூலமாக இந்த ஐந்து உறைகளிலிருந்து அவன் தன்னைத் தனியாகப் பிரித்துக் கொள்ள முடிவதில்லை. இந்த ஆவரணசக்தியானது, அசத் ஆவரண, அபான ஆவரண என்று பிரிக்கப்படுகிறது. முற்கூறியது பிரம்மன் இல்லை என்கின்ற கொள்கைக்குக் காரணமாக விளங்குவது. "பிரம்மன் இருந்தால் அது பிரகாசிக்காதா?" என்று மக்கள் கூறுகின்றனர். இந்த கருத்தானது அபான ஆவரணத்திஞல் உற்பத்தி செய்யப் படுகின்றது. அசத் ஆவரணமானது ஸ்ரவணம் அல்லது சுருதிகளைக் கேட்பதின் மூலம் பெறப்படும் மறைமுகமான பிரம்ம ஞானம், பரோக்ஷ ஞானம் ஆகியவைகளால் நீக்கப் பட்டு விடுகின்றது. அபான ஆவரணமானது தியானத்தின் மூலம் பிரம்மனைப் பற்றிய நேரடியான ஞானத்திஞல் (அபரோக ஞானம்) அழிக்கப்படுகிறது.

அவ்யக்தம், மாயை, மூலப் பிரக்ருதி, பிரதானம் (முக்கியம் அல்லது முதல்), குணசாம்யம், ஆகியவை எல்லாம் ஒரே பொருளையுடைய சொற்கள். எவ்வாறு

மரமானது சூக்ஷ்ம வடிவில் விதையில் இருக்கிறதோ அதே போல இந்த உலகம் பிரளயத்தின் போது அவ்யக்தத்தில் ஒரு விதை வடிவிலே இருக்கின்றது. அவ்யக்தம், பிரதானம் ஆகிய சொற்கள் சாங்கிய தத்துவத்தைச் சார்ந்தவை. மூலப் பிரக்ருதியானது, வெள்ளை, சிகப்பு, கருப்பு வர்ணமுடைய ஒரு முப்பிரிக் கயிற்றைப் போல சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களும் சேர்ந்த ஒரு கூட்டாகும். குணசாம்ய அவஸ்தையிலே இந்த முக்குணங்களும், சம நிலையில் இருக்கின்றன. இதுதான் பிரளய அல்லது சுழுத்தி நிலை. மனிதர்கள் எவ்வாறு தினந்தோறும் ஆழ்ந்த நித்திரை நிலைக்குச் செல்லுகின்றார்களோ அதே போல இந்த உலகமும் பிரளயத்தின்போது அதனுடைய சுழுத்தி நிலைக்குச் செல்லுகின்றது. பிரளயத்தில் எண்ணற்ற ஜீவன்கள் எவ்வாறு தங்கப் பொடியானது மெழுகு உருண்டையோடு ஒட்டிக் கொள்கின்றதோ அது போல தங்களுடைய சம்ஸ்காரங்களுடன் மூலப்ரக்ருதியோடு ஐக்கியமாகி விடுகின்றன. ஜீவன்களுடைய கர்மங்கள் பிரளயத்தின் முடிவின்போது பழுத்துப் பக்குவமடைகின்றன. அவர்களுடைய கர்மங்களுக்குரிய பலன்களை ஈஸ்வரன் அளிக்க வேண்டி இருக்கிறது. ஆகவே அவன் மறுபடியும் வெறும் விருப்பத்தின் பேரில் இந்தப் பிரபஞ்சத்தை வெளிப்படுத்துகின்றான்.

மாயையினிடத்தில் அதிகப்படியான சுத்த சத்துவம் இருக்கின்றது. மாயையிலே பரப்பிரம்மனுடைய பிரதிபலிப்புத்தான் ஈஸ்வரன். மாயை ஈஸ்வரனுடைய உபாதி. இது ஈஸ்வரனுடைய காரண சரீரமாகும். ஈஸ்வரன் மாயையைத் தன்னுடைய கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருக்கின்றான். ஈஸ்வரன் அவ்யாக்ருதம், அந்தர்யாமி என்ற நாமங்களாலும் அழைக்கப் படுகின்றான். ஈஸ்வரன் தான் இந்தப் பிரபஞ்சத்திற்குக் கருவிக் காரணமாக (நிமித்த காரணம்) இருக்கின்றான். அவன் தமஸோடு தன்னைக் கலந்து கொண்டு, எவ்வாறு சிலந்திப் பூச்சியானது தன்னிடமிருந்தே கூட்டை உற்பத்தி செய்துகொள்கின்றதோ

அதைப் போல, பொருட் காரணமாகவும் ( material cause ) ஆகின்றான். அவித்தை என்பது தூய்மையற்ற சத்துவமாகும். சத்துவத்துடன் அதிகமான ரஜஸ் சேர்க்கப்படுகின்றது. இதுதான் ஜீவனுடைய காரண சரீரமாகும். இதுதான் ஆனந்தமய கோசமாகும். ஜீவனும் ஈஸ்வரனும் இந்த காரண சரீரத்தின் மூலமாக சுழுத்தி நிலை அல்லது ஆழ்ந்த உறக்க நிலையை அனுபவிக்கின்றனர். இதுதான் காரண பரிணாமம்.

மிகச் சமீப காலத்தில் ஜுனகத் சமஸ்தானத்திலே ஒரு அதியற்புதமான சம்பவம் நிகழ்ந்தது. ஒரு பெண்ணுக்கு அவளுடைய பன்னிரண்டாவது வயதிலே திருமணம் செய்விக்கப்பட்டது. அவளுடைய திருமணத்திற்கு ஆறு வருடங்களுக்குப் பிறகு அவள் திடீரென்று ஒரு ஆணாக உருமாற்றமடைந்தாள். அவளுக்கு ஒரு ஆணுக்குரிய எல்லா அங்க லக்ஷணங்களும் இருந்தன. அவள் தன்னுடைய கணவன் வீட்டை விட்டு விட்டு அவளுடைய (அவனுடைய என்று சொல்வது பொருந்தும்) தந்தையின் வீட்டிற்கு வந்து விட்டாள். அவளுடைய தந்தை ஒரு தனவந்தர். அவர் சமீபத்தில் காலமானார். இப்பொழுது சட்ட நிபுணர்களிடம் அந்த சொத்து அவளுக்குச் (அவனுக்குச்) சேருவதா இல்லையா என்பதைப் பற்றி ஆலோசிக்கப் படுகின்றது. மாயை எதை வேண்டுமானாலும் செய்ய முடியும். மாயையானவன் அலிகளையும், ஆண்களிடத்தில் இனிமையான பெண் குரலையும், பெண்களிடத்தில் ஆண்களுக்குரிய கனத்த சாரீரத்தையும், பெண்களுக்கு தாடி மீசையையும், ஆண்களிடத்தில் வழுவழுப்பான பெண் முகத்தையும், வயிற்றிலே முகத்தையுடைய ஜீவராசிகளையும், தலைகளிலே குளம்புகளையும், அரை மனித உடம்பும், அரைச் சிங்க உடல்களையும், பாதி குதிரை யுடல்களையும் உடைய ஜீவன்களையும் சிருஷ்டிக்க முடியும். இதிலிருந்து இந்த உலகம் முற்றிலும் மாயமானது, பொய்யானது, ஆத்மன் மட்டுமே உண்மையானது, சாசுவதமானது என்று முடிவு

கட்டலாம். இயற்கையை நுணுகி ஆராய்வதானது வைராக்யத்தையும், விவேகத்தையும், இயற்கைக்கு அதிகாரியாக விளங்கும் ஆத்மனை உணர்வதற்கு ஊக்கத்தையும் உண்டு பண்ணும்.

சூரியனே குளிர்ந்து விட்டாலும், சந்திரன் வெம்மை பெற்றாலும், அக்னி கீழ் நோக்கி எரிந்தாலும், பனிக்கட்டி கொதிப்படைந்தாலும், கழிவுப் பொருள்கள் ஓட்டோ-டி-ரோஸ் என்ற பரிமளத்திரவிய வாசனையைக் கிளப்பினாலும், ஒரு ஞானி ஒரு பொழுதும் ஆச்சரியப்படமாட்டான். இவையெல்லாம் மாயையினுடைய மாயாஜால வேலைகள் என்பதை அவன் அறிவான்.

மாறுதலுக்குட்பட்டதும், பிரபஞ்சமாக மாறுதல் பெற்றிருப்பதுமாகிய மாயையைப் போலல்லாது பிரம்மன் ஒரு பொழுதும் மாற்றமடைவதில்லை. அவன் மாற்றப்பட முடியாதவன், மகாசக்தி வாய்ந்தவன், உறுதியானவன், பிறக்காதவன்.

சாம்பல் மூடிக் கொண்டிருப்பதால் உன்னால் நெருப்பைப் பார்க்க முடியவில்லை என்ற காரணத்தால் நெருப்பே இல்லையென்று நீ சொல்லிவிட முடியாது. அதே போல உடல், மனம், பிராணா, இந்திரியங்கள் ஆகியவைகளால் மறைக்கப்பட்டிருக்கிறது என்ற காரணத்தினால் ஆத்மாவே கிடையாது என்று நீ சொல்லிவிட முடியாது.

## 2. அவித்தை

பக்தியுடன் தான் தொடர்பு கொண்டிருப்பது அதனுடைய அளவுபட்ட கட்டுப்பாட்டிலடங்கியிருப்பது ஆகியவைதான் அவித்தை அல்லது அறியாமை அல்லது தவறான ஞானம் என்பதாகும். இந்தத் தவறான ஞானத்தை பிரம்ம ஞானத்தின் மூலம்தான் போக்க முடியும். ஒருவன் எவ்வளவு காலம் பிரம்ம ஞானத்தை அடையாமல் இருக்கின்றானோ அதுவரை இந்த ஆத்மாவானது புத்தி, உடல்,

இந்திரியங்கள் ஆகியவற்ருேடு கொண்டுள்ள தொடர்புக்கு ஒரு முடிவு ஏற்படாது.

அவித்தை இரண்டு வகைப்படும். ஒன்று மூல அவித்தை (மூதலாவதான அறியாமை). இது ஜீவனுடைய (தனித்த ஆத்மா) காரண சரீரம் அல்லது வித்துடலாக அமைகின்றது. மற்ருென்று ஸ்தூல அவித்தை. இது பொருள்களை வெளிப்புறத்திலே மூடிக் கொண்டிருக்கின்றது.

அவித்தைதான் சம்சாரத்திற்கு மூல காரணம். அறியாமையை ஒழிப்பதானது துன்பத்தை நீக்கி ஒரு மனிதனைப் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலை பெறச் செய்ய உதவுகின்றது. வேதாந்த தத்துவமானது, அவித்தையினுடைய ஆதி குணத்தைப் பற்றியும், அது ஏன் வந்தது, எப்படி வந்தது என்பன போன்ற விளக்கங்களைப் பற்றியும் விசாரணை செய்யவில்லை. அது நமக்கு அது (அவித்தை) இருக்கிறது, அதை பிரம்ம ஞானத்தின் மூலம் அழித்துவிட முடியும் என்பதை மட்டும் உபதேசிக்கின்றது.

நெருப்பானது எவ்வாறு சாம்பலினுல் மூடப்பட்டிருக்கின்றதோ அதே போல இந்தத் தூய, அழியாத, சுயம் பிரகாசமான ஆத்மாவானது அவித்தையினுலும் அதன் பலன்களாகிய மனம், அகந்தை, சுயநலம், வெறுப்பு, உடல், பிராணன், இந்திரியங்கள் ஆகியவைகளாலும் மூடப்பட்டிருக்கின்றது. சாம்பல் நீக்கப்பட்டால் நெருப்பு பிரகாசமாக எரிகின்றது. அதேபோல் ஆத்ம ஞானத்தின் மூலம் அவித்தை நீக்கப்பட்டால் சுயம் பிரகாசமான ஆத்மா தாஞகவே பிரகாசிக்கின்றது.

மயக்கத்திலிருந்து (மாயை) பாகுபாடு, வேற்றுமை, த்வைதம், பன்மை, ரகம் ஆகியவைகள் கிளம்புகின்றன. மயக்கம் அறியாமையின் அடியாகப் பிறக்கிறது. எல்லா

விதமான துயரங்கள், இடுக்கண்கள், தொல்லைகள், தொந்தரவுகள் ஆகியவற்றிற்கு வேராக விளங்குவது அறியாமையே. அறியாமை, மயக்கத்தையும், பாகுபாட்டையும் உற்பத்தி செய்கின்றது. ஆகவே அறியாமையை ஆத்ம ஞானம் என்கின்ற வாளினால் அழித்து விடுதலை பெறு.

பாகுபாட்டுணர்வு ஒரு பெரும் இரும்புச் சங்கிலியாகும். இந்த பாகு பாட்டுணர்ச்சியை பிரம்ம பாவனையின் மூலமாக அல்லது அத்வைத ஒற்றுமை அல்லது உணர்வையும், தன்னலமற்ற சேவையையும் விருத்தி செய்வதின் மூலமாகவும் கொன்று விடு. இந்தப் பாகுபாட்டுணர்ச்சியானது அறியாமை அல்லது மாயையினால் உற்பத்தி செய்யப்படும் ஒரு மயக்கமாகும்.

நீ உறையை நீக்கினால் வாளைக் காண முடியும்; நீ சாம்பலை நீக்கினால் நெருப்பைப் பார்க்க முடியும்; மேகங்கள் விலகினால் உன்னால் சூரியனைப் பார்க்க முடிகிறது; நீ படுக்கை விரிப்பை நீக்கினால் மெத்தையைக் காண முடியும். அதேபோல் ஆத்மாவை மறைத்துக் கொண்டிருக்கும் அறியாமையை நீக்கினால் நீ சுயம் பிரகாசமான ஆத்மனை நேரடியாகப் பார்க்கலாம்.

தூசி படிந்திருப்பதின் காரணமாக எவ்வாறு ஒரு கண்ணாடியானது மங்கலாக்கப்படுகின்றதோ அதே போல் ஞானமானது அவித்தையினால் மூடப்பட்டிருக்கிறது. ஆகவே மக்கள் எல்லோரும் மயக்க முற்றிருக்கின்றனர். அவர்கள் இந்த உண்மையல்லாததைப் பற்றிக் கொண்டு இந்த உடலைத் தூய ஆத்மா என்று தவறாக எண்ணிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் இந்த மயக்கம் தருகின்ற நாம ரூபங்களையுடைய உலகம் முற்றிலும் உண்மையானது என்று நினைக்கின்றனர்.

## 3. அகங்காரம்

### (எல்லா துன்பங்களுக்கும் காரணம்)

சிருஷ்டி இரண்டு வகைப்படும். ஒன்று ஜீவ சிருஷ்டி; மற்றொன்று ஈஸ்வர சிருஷ்டி. ஈஸ்வர சிருஷ்டியிலே துன்பம் என்பது கிடையாது. தண்ணீர் தாகத்தைத் தணிக்கின்றது. நெருப்பு உஷ்ணத்தைக் கொடுக்கிறது. புதிய தென்றல் காற்று புத்துணர்ச்சி யூட்டுகிறது. மரங்கள் நிழலைக் கொடுக்கின்றன. பசுக்கள் நல்ல பாலைக் கொடுக்கின்றன. "மமதை — என்னுடையது", என்னுடைய மனைவி, எனது மகன், முதலியவை எல்லாம் ஜீவ சிருஷ்டியாகும். இது துன்பத்தைக் கொடுக்கின்றது. "குதிரை இறந்துவிட்டது" என்று நீங்கள் கேள்விப்படும் பொழுது நீங்கள் பாதிக்கப்படுவதில்லை. "என்னுடைய குதிரை இறந்துவிட்டது" என்று கேள்விப்படும் பொழுது நீங்கள் வருத்தப்பட ஆரம்பிக்கின்றீர்கள். மனித வர்க்கத்தின் துன்பங்களுக்கு மூல காரணமாக இருப்பது "மமதை". இந்த மமதையை ஒழித்து ஆத்மீகப் பேரானந்தத்திலே நிலைத்திரு.

தீவிரமான தேகாபிமானமுடைய மனிதன் ஆத்ம ஞானத்தை அடைவதோ அல்லது வாழ்வின் ஒருமைப்பாடு அல்லது உணர்வின் ஒருமைப்பாட்டை (oneness of consciousness) உணர்வதே இயலாததாகும்.

நீ உன்னுடைய உடலைப் பற்றியும், அதனுடைய அகந்தைகளைப் பற்றியும் எவ்வளவு தூரம் ஓயாது சிந்தித்துக்கொண்டிருக்கிறாய் என்பதைப் பார். "நான், நான், நான், நான் ஒரு டாக்டர்; நான் ஒரு ஆங்கிலேயன்; நான் அமெரிக்க நாட்டான்; நான் ஒரு பிராம்மணன்; நான் எல்லாவற்றையும் அறிவேன்; நான் புத்திசாலி; நான் மிகவும் புத்தி கூர்மையுள்ளவன்; நான் மிகவும் பலசாலி; நான்தான் கர்த்தா, நான்தான் செய்பவன்;

நான் ஏராளமான தான தருமங்கள் செய்திருக்கின்றேன்; நான் என்னுடைய தந்தையின் பெயரில் ஒரு ஆஸ்பத்திரி கட்டியிருக்கிறேன்''. இந்த ''நானு''க்கு ஒரு முடிவே இல்லை. எப்பொழுது இந்த அழியக்கூடிய, தூய்மையற்ற உடலை அதுவாக எண்ணிக்கொண்டிருப்பது ஒழிந்த உடனே, நீ இந்த உடல் அல்ல, இந்த உடல் ''நான்'' அல்ல. நீ அழியாத, எங்கும் நிறைந்த ஆத்மா என்று உணர்ந்த உடனே எல்லா விதமான துக்கங்களும் நீங்கி, எல்லாக் கஷ்டங்களும் மறைந்து நீ இந்த பயங்கரமான சம்சாரத்திலிருந்து விடுவிக்கப்படுகின்றாய். நீ பேரானந்தமும், அமிர்தமும், தீராத ஆன்மீக செல்வமும் நிறைந்த பெரு வீட்டை (அமர லோகத்தை) அடைந்து, சாவா மருந்தைக் குடிப்பாய்.

ஐம்பது குண்டுகள் ஒரு பெரு நகரத்தை அழிக்க முடியும். ஆனால் ஐயாயிரம் குண்டுகளாலும் இந்த அகந்தையை அழிக்க இயலாது. அவ்வளவு கெட்டியானது அகந்தை. இந்த அறியாத ஜீவன் இந்த அகந்தையை அளவுக்கு மீறி தன்னைப்பற்றி சிந்திப்பதின் மூலமாகவும், அளவுக்கு மீறிய கர்வம் காரணமாகவும் இறுக வைத்திருக்கின்றான். கருங்கல் அல்லது வைரம் கூட ஒரு காலமில்லாவிட்டால் மற்றொரு காலத்தில் உருகும். ஆனால் சாரம் ஒன்றும் இல்லாததாக இருந்தாலும் இந்த அகந்தையை இல்லாததாக்குவது மிகவும் கடினம். ஒரு பக்தன் ஆத்ம சரணாகதி மூலமாகத் தன்னுடைய அகந்தையை அழிக்கின்றான். ஒரு முனிவன் தன்னை மறுப்பதின் மூலமாகவும், ஆத்மீக விசாரணை அல்லது ''நான் யார்'' என்ற விசாரணையைச் செய்வதின் மூலமும் இதை அழிக்கின்றான்.

சிவாஜி ஒரு கோட்டையைக் கட்டுவதற்காக ஆயிரக் கணக்கான கூலிகளை அமர்த்தினான். இவர்கள் எல்லோருக்கும் தான் உணவளித்துக் கொண்டிருப்பதாக அபிமானத்துடன் இருந்தான். சிவாஜியினுடைய குருவான ஸ்வாமி ராமதாஸ் அவர்கள் இதை அறிந்தார். அவர்

சிவாஜியைக் கூப்பிட்டு அரண்மனைக்கு முன்னாலிருந்த ஒரு பெரிய பாறாங் கல்லை உடைக்கச் சொன்னார். சிவாஜி ஒரு வேலைக்காரனை இவ்வேலையைச் செய்யச் சொல்லி உத்தர விட்டான். அந்தப் பாறையை உடைத்ததும் அதனுள் ளிருந்து ஒரு தேரை வெளியே குதித்தது. ராமதாஸர் "ஓ சிவாஜி, இந்தப் பாறைக்குள்ளிருந்த தேரைக்கு யார் உணவுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்?" என்று வினவி னார். சிவாஜி நாணமடைந்து ராமதாஸ்ஜிக்கு முன்பாக சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி, "ஓ குரு மஹராஜ், தாங்கள் அந்தர்யாமி. நான் இந்தக் கூலியாட்கள் எல்லாம் என்னால் உணவளிக்கப்படுகின்றனர் என்று நினைத்த பொழுது தாங்கள் என்னுடைய அபிமானத்தைப் புரிந்து கொண்டு விட்டீர்கள். இப்பொழுது என்னிடம் விவேகம் உதயமாகியிருக்கிறது. தேவா! என்னைக் காப்பாற்றுங்கள், நான் தங்களுடைய சீடன்" என்று கூறினான்.

குரங்குகளுக்கு அவைகளினுடைய குட்டிகளிடம் அதிகமான மோஹம் உண்டு. அவைகள் இறந்த குரங்கு குட்டிகளின் எலும்புக் கூட்டை ஒரு மாதம் வரைக்கும் கூட சுமந்து கொண்டே இருக்கும். மோஹம் என்பது ஸ்தூல சரீரத்தின் மேல் வைத்திருக்கும் பற்றுதலாகும். இந்த சம்ஸ்காரங்கள் விலங்கு சாம்ராஜ்யத் திலிருந்து மனித சாம்ராஜ்யத்திற்குக் கொண்டுவரப்பட் டிருக்கின்றன. ஆகவேதான் ஒரு ஆண் அல்லது பெண் மகனிடத்தில் அதிக மோஹத்தைக் கொண்டிருக் கின்றான்(ள்).

நீ தனியாகப் பிறந்தாய். நீ தனியாக இறக்கப் போகிறாய். உனக்கு ஏற்படும் சிக்கல்களை நீ தனியாகவே கடக்கின்றாய். உனக்கு என்னென்ன துன்பங்கள் ஏற்படு கின்றனவோ அவற்றை நீ தனியாகவே சமாளிக்கின்றாய். அப்படியிருக்க நீ ஏன் மோஹத்தின் பொய்பொருள்

களாகிய உன்னுடைய பெண்டுபிள்ளைகளிடம் மோஹத்தை கொள்கின்றாய்? எழுந்திரு. ஜாக்கிரதையாக இரு.

நீ இயற்கையை வென்று அதன் மூலம் ஆத்மனை உணர்வதற்காகப் பிறந்திருக்கின்றாய்.

இந்த அகங்காரத்தின் வழிகளையும், பழக்கங்களையும் அறிந்து கொள்ள முயற்சி செய். இது தன்னுடைய முன்னேற்றத்திற்காகவும், அதிகாரம், போகப் பொருள் களை வைத்திருத்தல், போகம் ஆகியவைகளுக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறது. இந்த அகங்காரத்தையும் சுயநலத் தையும் கொன்று விடு. பற்றற்றுஇரு. உன்னுடைய நம்பிக் கையை எதிரான குணங்களாகிய தியாக உணர்ச்சியிலும், தன்னலமற்ற தன்மையிலும் இணைத்து வைத்திரு. தியாகத்தையும், சேவையையும் வாழ்க்கையின் வழி காட்டும் கொள்கைகளாக ஏற்றுக்கொள். உடனே உனக்கு ஒரு வளமான, விரிந்த ஆன்மீக வாழ்வு கிடைக்கும்.

உன்னை உடல், மனைவி, மகன், பொருள்கள் ஆகிய வற்றுடன் காட்டிக் கொள்ளாதே, உடைமைக் கருத்துக் கள் அனைத்தையும் விட்டு விடு. எதையும் ஒரு பொழுதும் "இது என்னுடையது" என்று அழைக்காதே. ஒரே கொள்கையாகிய "பிரம்மன் மட்டும் பிரகாசிக்கிறான், இருக்கிறான். நான் பிரம்மனாக இருக்கின்றேன்" என் கின்ற கருத்தில் நிலைபெற்றிரு. ஒரு ஜீவன் முக்தனாக ஆகு. இறுதி இலக்ஷியமாகிய அத்வைத, பிரம்ம பேரானந் தத்தை அனுபவி.

விளக்குடன் கூடிய ஒரு பானையானது ஒரு இருட் டறைக்குள் வைக்கப்பட்டுப் பிறகு அது உடைக்கப் பட்டால் அறையிலுள்ள இருள் நீக்கப்பட்டு அறையினுள் எங்கும் ஒளியை நீ காண்கின்றாய். அதே போல ஆத்மனை இடைவிடாது தியானிப்பதின் மூலம் இவ்வுடலானது உடைக்கப்பட்டால் அதாவது நீ அவித்தையையும் அதன் பலனாகிய தேஹ அத்தியாஸத்தையும் ஒழித்து இந்த உடல்

உணவிற்கு மேலாக நீ எழுவாயேயாகில் நீ எங்கும் ஆத்மனுடைய மேலான ஒளியைக் காண்பாய். வழக்கப்பட்ட பழைய விரோதியாகிய ''அஹங்காரத்தை'' வெட்டி வீழ்த்த ஆத்மீக விசாரத்தை விட கூரியதொரு ஆயுதம் வேறொன்று கிடையாது.

மனிதன் மாமிசத்தில் வசிக்கின்றான். அவன் மாமிசத்தை உண்ணுகின்றான். அவன் மாமிசத்தைக் கட்டியணைக்கின்றான். மாமிசம் அகங்காரமாகும். மாமிசம் உலகமாகும். மாயை மாமிசத்தின் மூலம் விளையாடுகின்றாள். காளிமாதா மாமிசத்தைக் காணிக்கையாகக் கேட்கவில்லை. அவள் அகங்காரமாகிய காணிக்கையைத் தான் கேட்கின்றாள். அவள் தன்னுடைய பக்தர்கள் அகங்காரத்தை ஒழிக்க வேண்டும் என்று விரும்புகின்றாள். மூட ஜனங்கள் காளி மாதாவிற்குக் காணிக்கை என்ற பெயரால் தங்களுடைய நாவைத் திருப்திப்படுத்திக் கொள்வதற்காக ஆடுகளைப் பலியிடுகின்றனர். என்னே பயங்கரமான, மன்னிக்க முடியாத குற்றம்! எப்பேர்ப்பட்ட கொடிய பாவம்!

பாம்பாட்டி நாகத்தினுடைய இரண்டு விஷப் பற்களையும் பிடுங்கிவிட்டு அதனுடன் எந்தவித பயமுமின்றி விளையாடுகின்றான். நாகம் இப்பொழுதும் அதனுடைய படத்தை உயர்த்துகிறது, சீறுகின்றது; ஆனால் பாம்பாட்டிக்கு அது அவனை ஒன்றும் செய்துவிட முடியாது என்பது தெரியும். அதேபோல நீங்கள் இரண்டு விஷப் பற்களாகிய அகந்தையையும், மமதையையும் பிடுங்கி விட்டால் நீங்கள் இந்த உலகத்திலே பயமற்று நடமாடலாம். நீ ஒரு ஜீவன் முக்தனாக ஆகி உள்ளேயுள்ள ஆத்மனில் ஆனந்தமடைந்திருக்கலாம்.

தொந்தரவுகள் காரணமாக தற்கொலை புரிந்து கொள்பவன் ''புனிதமற்ற தற்கொலை'' செய்து கொள்கின்றான். ஆணவம், சுயநலம், வாஸனைகள், இந்திரியங்கள் முதலிய

வற்றைக் கொல்பவன் ''புனிதமான தற்கொலை'' செய்கின்றான்.

சாதாரண மாட்டுச் சாணத்தின் சாம்பலை நெற்றியிலே அணிவதிலே என்ன பயன்? அகங்காரத்தைச் சுட்டுச் சாம்பலாக்கி அந்தச் சாம்பலை எடுத்து நெற்றியிலும் உடலிலும் அணிந்து கொள்.

தேவகி அவளுடைய பாலகிருஷ்ணனை ஒரு துண்டுக் கயிற்றினால் பிணிக்க அவளால் முடிந்த வரைக்கும் பிரயத்தனப்பட்டுப் பார்த்தாள். அவனைக் கட்டுவதற்காக ஒரு கயிற்றைக் கொண்டு வந்தாள். அது இரண்டங்குலம் குறைவாக இருக்கிறது. மறுபடியும் ஒரு பெரிய கயிற்றைக் கொண்டு வந்தாள். இதுவும் இரண்டு அங்குலம் குறைவாகவே இருந்தது. அவள் பல கயிறுகளைக் கொண்டு வந்தாள். ஆனால் ஒவ்வொரு தடவையும் இரண்டு அங்குலம் குறைவாகவே இருந்தது. இது எதைக் குறிக்கிறது? ஏதாவது தத்துவ முக்கியத்துவம் இருக்கிறதா? ஆம், இங்கு தத்துவம் இருக்கிறது. தேவகி சிறிது அகந்தையுடனிருந்தாள். தனது என்கின்ற தீவிரமான கொள்கையும் உடையவளாக இருந்தாள். அவள் அவளுடைய குழந்தையினிடத்தில் மிகவும் பற்றுக் கொண்டிருந்தாள். கிருஷ்ண பகவான் அவளுடைய உள்ளத்திலிருந்து ''நான்'', ''எனது'' என்கின்ற தன்மைகளை நீக்க விரும்பினார். அவர் அவருடைய தாய்க்கு மறைமுகமாக, ''எனதன் பார்ந்த தாயே, நான், எனது என்கின்ற தன்மையை விட்டுவிடு. அப்பொழுது தான் தூய்மையான பிரேமை என்கின்ற கயிற்றினால் என்னைக் கட்ட முடியும்'' என்று கற்பித்தான்.

நீ ராணி ஈயைக் கொன்றால், அதனிடமிருந்து ஐந்து கல் தொலைவில் பூவில் மது சேகரித்துக் கொண்டிருக்கும் இதர ஈக்களும் உடனே இறந்து விடும். இதேபோல் தான் கரையான்கள் விஷயமும். ஆப்பிரிக்காவின் ஆதிவாசி

களிலே ஒரு மனிதன் ஏதாவது தாங்க முடியாத வலியினால் அவஸ்தைப்பட்டால் நூறு மைல்களுக்கு அப்பால் இருக்கின்ற கோஷ்டியினர் முழுவதும் அந்த வலியைப் பெறுகின்றனர். மேற்கூறிய விஷயங்கள் மேலை நாட்டு மனோ தத்துவ சாஸ்திரிகள் தீர்மானமாகக் கண்டுபிடித்துப் பதிவு செய்யப்பட்டவைகளாகும். ஆதிவாசிகளிடையே தீவிர மான இயற்கை உணர்வு இருக்கிறது. ஆகவேதான் ஒருவன் பாதிக்கப் பட்டால் கோஷ்டி முழுவதும் பாதிக்கப் படுகின்றது. இதிலிருந்து ஒரு சர்வ வியாபக உணர்வு உண்டு என்பதும், நீ உன்னுடைய அகந்தை அல்லது " நான் " என்பதையே வலியுறுத்துகின்ற கொள்கையை உருக்கி விடுவதின் மூலம் நீ இறையுணர்வோடு ஐக்கிய மாகி அதன்மூலம் மிக உயர்ந்த தெய்வீக ஞானத்தைப் பெற முடியும் என்பது நிரூபணமாகின்றது.

---

## அத்தியாயம் பத்து

# பிரம்ம வித்தை

### 1. மூன்று சரீரங்கள் (காரண, சூக்ஷ்ம, ஸ்தூலம்)

ஆரம்பமில்லாத அறியாமை (அனாதி அவித்தை) காரண சரீரம் என்றழைக்கப்படுகின்றது.

லிங்க சரீரத்தின் பிரத்யக்ஷ உடலுக்கு 17 தத்துவங்கள் உள்ளன. அவைகளாவன :— 5 ஞானேந்திரியங்கள் (காது, சருமம், கண், நாக்கு, மூக்கு), 5 கர்ம இந்திரியங்கள் (வாக்கு, கைகள், கால்கள், ஜனனேந்திரியங்கள், குதம்), 5 பிராணக்கள், மனம், புத்தி — இந்த லிங்க சரீரமானது ஸ்தூல சரீரத்திலிருந்து பிரிக்கப்படும் பொழுது நாம் அதை மரணம் என்று அழைக்கின்றோம். இது கலப்பற்ற பூதங்களால் (அபஞ்சீகிருதம்) ஆனது. இதுதான் அனுபவித்தலுக்குரிய கருவியாகும்.

மனமானது இந்த லிங்க சரீரத்தில் எல்லா காரியங்களையும் வெகு வேகமாகச் செய்வதோடு ஸ்திரமற்று ஏற்றத் தாழ்வுகளையும் அடைகின்றது. ஆனால் ஸ்தூல சரீரம் ஒன்றுமறியாமல் உணர்ச்சியற்று இருக்கின்றது.

தன்மாத்திரைகளின் ரஜோகுணப் பகுதியிலிருந்து கர்ம இந்திரியங்கள் உண்டாக்கப் படுகின்றன. ஆகாசத்தின் ரஜோகுணப் பகுதியிலிருந்து பேச்சு, இந்திரியம் உண்டாக்கப்படுகின்றது ; வாயுவிலிருந்து கைகள் ; நெருப்பிலிருந்து கால்கள் ; தண்ணீரிலிருந்து ஜனனேந்திரியங்கள் ; பூமியிலிருந்து குதம் ஆகியவைகள் உண்டாக்கப்படுகின்றன. இந்த ஐந்து தன்மாத்திரைகளின் ரஜோ குணப் பகுதியின் கூட்டுத் தொகையிலிருந்து ஐந்து பிராணக்கள் அல்லது ஜீவாதார வாயுக்களாகிய பிராண, அபான, வியான, உதான, சமான ஆகியவைகள் உண்டாக்கப்

படுகின்றன. சூக்ஷ்ம சரீரம் அல்லது லிங்க சரீரமானது 17 தத்துவங்களிலிருந்து உண்டாக்கப்படுகிறது. கனவு நிலேயில் லிங்க சரீரம்தான் வேலே செய்கின்றது. பிராண மய கோசமும், விஞ்ஞான மய கோசமும் இந்த சூக்ஷ்ம சரீரத்திற்குச் சொந்தமானவை.

கேட்டலுக்கு தேவதை திக்கு; உணர்தல் அல்லது ஸ்பரிசத்திற்கு வாயு; பார்வைக்கு சூரியன்; ருசிக்கு வருணன்; முகர்தலுக்கு அஸ்வினி குமாரர்கள்; பேச்சிற்கு அக்னி; பாணி அல்லது கைகளுக்கு இந்திரன்; பாதம் அல்லது கால்களுக்கு உபேந்திரன் அல்லது விஷ்ணு; பாயு அல்லது குதத்திற்கு யமன்; உபஸ்தம் அல்லது உற்பத்தி ஸ்தானத்திற்கு பிரஜாபதி.

ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்களாகவும் இருக்கின்றன. கேட்டல், ஸ்பரிசித்தல், பார்த்தல், சுவைத்தல், மோத்தல் ஆகியவைகள் கர்மங்களாகும். (செய்கைகள்). பார்வை கற்புடன் கூடியதாக இல்லாத போது, கெட்ட திருஷ்டியாக இருக்கும் பொழுது, நீ ஒரு பெண்ணேப் பார்க்கும் பொழுது கண் ஒரு கெட்ட காரியத்தைச் செய்கின்றது.

ஞான இந்திரியங்களாகிய காதுகள், சருமம், கண்கள், நாக்கு, மூக்கு ஆகியவைகளின் மூலம் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ருசி, காந்தம் ஆகியவைகள் அனுபவிக்கப் படுகின்றன. இந்திரியங்கள் சப்தம் முதலியவற்றைப் போன்ற அவைகளின் பொருள்களோடு கொள்ளுகின்ற தொடர்புதான் உஷ்ணத்தையும், குளிர்ச்சியையும், இன்பத்தையும், துன்பத்தையும் உண்டு பண்ணுகின்றது. உடலே உன்னுடைய கட்டுப்பாட்டிற்கு உட்படுத்தி வைத்திரு. சமநிலேயைக் காத்து வைத்திரு. உன்னுடைய உடம்பிற்கு ஒரு அடிமையாக ஆகி விடாதே. உடலே உன்னுடைய கருவியாக ஆக்கிக்கொள்.

ஆத்மா அல்லது பிரம்மன் இந்த மூன்று சரீரங்களை யும் கடந்து நிற்கின்றான்.

மாயையானவள் மனிதனுக்கு மூன்று உறைகள் அல்லது அங்கிகளைத் தயாரித்துக் கொடுத்திருக்கின்றாள். அவைகளாவன :— காரண சரீரம், சூக்ஷ்ம சரீரம், ஸ்தூல சரீரம். காரண சரீரம் ஒரு மனிதன் முதலில் உள்ளே அணிந்து கொள்ளும் பனியனைப் போன்றதாகும், சூக்ஷ்ம சரீரம் சட்டையைப் போன்றது ; ஸ்தூல சரீரம் மொத்த மான மேலங்கியைப் போன்றது (overcoat). ஒரு மனிதன் மாயையினால் தயாரிக்கப்பட்ட இந்த அங்கிகளை அணிந்த வுடன் அவன் தன்னுடைய முக்கியமான தெய்வீக குணத்தை மறந்து விடுகின்றான்.

சுத்த சத்துவம் அல்லது மாயை ஈஸ்வரனுக்குக் காரண சரீரமாக அமைகின்றாள். மலின சத்துவம் (அசுத்த சத்துவம்) அல்லது ரஜஸ் (அவித்தை) ஜீவனுக்குக் காரண சரீரமாக அமைகின்றது. ஈஸ்வரன் மாயையைக் கட்டுப்படுத்துகின்றார். ஜீவன் அவித்தையினால் ஆட்டி வைக்கப்படுகின்றான்.

கர்மத்தின் தூண்டுதலின் பலன்தான் காரண சரீரம். இது கர்மத்தின் குழந்தையாகும். இது அதனோடு ஜீவிக் கின்றது, வளர்ச்சி பெறுகின்றது. கர்மத்தினுடைய செல்வாக்கு அழிக்கப்படக்கூடியதாக இருப்பின் இது மறைந்து விடுகிறது.

காரண சரீரம் என்பது முழு மரத்தையும் தன்னுள்ளே கொண்டிருக்கும் விதையைப் போன்றது. இது வித்துடல் (seed-body) என்றும் அழைக்கப்படுகிறது. ஸ்தூல சரீரம், மனம், பிராணா, இந்திரியங்கள் ஆகியவை எல்லாம் இந்த வித்துடலிலிருந்து வெளிவந்தவைகளே.

மனிதனுடைய அறிவிற்குள் ஆழமாகச் செல்லுகின்ற அனைத்தும், உயர்ந்த உணர்ச்சிகள், உயர்ந்த மனவெழுச்

சிகள் ஆகியவையெல்லாம் மனிதனுடைய காரண சரீரத்தில் அழிக்க முடியாதபடி பதியவைக்கப்படுகின்றன.

யோகியினுடைய லிங்க சரீரமானது பூமியாகிய உறை வழியே கடந்து செல்லும்பொழுது பூமியாகவும், நீர் வழியே நீராகவும், தீ வழியே தீயாகவும் ஆகின்றது. தீயுடலோடு அவர் வாயுறைக்குச் சென்று வாயுறையிலிருந்து ஆகாச உறைக்குச் செல்லுகின்றார். அவர் தன் மாத்திரைகளின் வழியாகவும் ஊடுருவிச் சென்று அவற்றை உணருகின்றார். அவர் பிராண வழியாகவே கடந்து சென்று எல்லா செயல்களாகவும் ஆகின்றார். இவ்வாறு ஸ்தூல, சூக்ஷ்ம உறைகளைக் கடந்த பிறகு யோகி மாற்றக் கூடிய அல்லது அகங்கார தத்துவமாகிய ஆறாவது உறைக்குச் செல்லுகின்றார். அது (அகங்கார தத்துவம்) தன்மாத்திரைகளையும், இந்திரியங்களையும் உறிஞ்சக்கூடியதாக இருக்கின்றது. பிறகு அவர் மஹத்தத்துவத்திற்கும் (அறிவு) அதன் பிறகு பிரதானத்திற்கும் (மூல பிரக்ருதி) செல்லுகின்றார். அங்கு எல்லா குணங்களும் தங்களுடைய ஓய்வு ஸ்தலத்தைக் காணுகின்றன. பிறகு தானே எல்லா பிரதானமாகவும் ஆகி, எல்லா உபாதிகளும் தீர்ந்த நிலையில் அவற்றுடன் அமைதியும், பேரானந்தமுமே வடிவான, மனத்திற்கு அப்பாற்பட்ட தூய ஆத்மனை அடைகின்றார்.

நெய், வெண்ணெய், மீன் எண்ணெய் ( Cod-liver oil ) ஆகியவைகள் எவ்வாறு இந்த ஸ்தூல சரீரத்தைப் பருக்க வைக்கின்றனவோ அதே போல மனோ விகாரங்களும், மிருக உணர்ச்சிகளும் சூக்ஷ்ம சரீரத்தைப் பருக்க வைக்கின்றன. மனோ விகாரங்களையும், உணர்ச்சிகளையும் அழித்துவிடுவதால் சூக்ஷ்ம சரீரத்தை அழிப்பதற்கு அது ஏதுவாகின்றது.

இந்த சூக்ஷ்ம சரீரத்திற்கும், ஆண் பெண் என்ற கற்பனை ரூபமான பால் வேறுபாடு உண்டு. சொர்க்கத்திலே மைதுனம் (புணர்ச்சி) உண்டு ; ஆனால் கருத்தரித்

தல் கிடையாது. இந்த லிங்க சரீரத்திற்கு சொர்க்கத்திலே அனுபவிப்பதற்கு ஒரு தேஜோ மயமான சரீரம் அணிவிக்கப்படுகின்றது.

இந்த லிங்க சரீரம் ஸ்தூல சரீரத்தின் பிரதியைப் போன்று மங்கலான ஆவி போன்ற ரூபத்தில் தோன்றும். சூக்ஷ்ம வாதிகள் (Occultists) இந்த லிங்க சரீரம் அல்லது சூக்ஷ்ம தேகத்தை ஸ்தூல சரீரத்திலிருந்து வேருகப் பிரித்து இந்த சூக்ஷ்ம தேகத்தோடு பல்வேறு இடங்களில் நடமாடுகின்றனர். கைதேர்ந்த யோகிகள் ஸ்தூல சரீரத்தைச் சுருக்கி, தொலைவான இடங்களுக்குக் காற்று மார்க்கமாகச் செல்லுகின்றனர். இம்முறைக்கு ஏராளமான சக்தி விரயமாக்கப்படவேண்டியிருக்கிறது.

நெருப்பு சூக்ஷ்ம தேகத்தை எரிக்க முடியாது. சூக்ஷ்ம சரீரம் பாறைகளையும் வெகு எளிதில் ஊடுருவிச் செல்ல முடியும். இது காற்றிலே பறக்க முடியும். இதனுல் தீப்பிழம்பிற்குள்ளும், ஆழ்கடலுக்குள்ளும் ஆழமாகப் பாய்ந்து செல்ல முடியும். இது மின்னல் வேகத்தில் நடமாட முடியும். ஒரு வினுடி நேரத்தில் இது கொழும்பிலிருந்து லண்டனுக்குப் பிரயாணம் செய்ய முடியும். ஒரு மலையின் உச்சியிலிருந்து விழுந்தாலும் கூட இதற்குக் காயமேற்படாது.

இந்த ஸ்தூல சரீரம் வருகிறது, இருக்கிறது, பிறகு போய் விடுகின்றது. இது ஐந்து பூதங்களின் கூட்டு. இது உணர்ச்சியற்றது. இதற்கு ஒரு ஆரம்பமும் முடிவும் உண்டு. இந்தத் தூய ஆத்மா வருவதுமில்லை, போவதுமில்லை. பிறகு ஏன் அதற்காக வருந்துகிறீர்கள்? என் குழந்தாய், நீ தூய அறிவு மயமாகவே இருக்கின்ருய்.

இந்த உடல் ஒரு வண்டி அல்லது மோட்டார் காரைப் போன்றது. இது அறிவற்றிருக்கின்றது. ஆத்மன் தான் இந்த உடலின் உண்மையான சாரதியாவான். அறிவு

மயமான ஆத்மா இந்த உடலுக்குள் வாசம் செய்கின்ருன். ஆகவே இந்த உடலானது இந்த ஆத்மாவினுல் அறிவுடையதாக ஆக்கப்பட்டிருக்கின்றது.

ஸ்தூல சரீரம் உணர்ச்சியற்றது. ஆனுல் அத்துடன் தாற்காலிகமாக ஆத்மன் தொடர்பு கொண்டிருக்கின்ற காரணத்தால் அது உணர்ச்சியுள்ளது போல் தோன்று கின்றது. இவ்வுடலை விட்டு ஆத்மன் பிரிந்து விடும் பொழுது ஸ்தூல சரீரம் ஒரு மரக்கட்டையைப் போல் ஆகி விடுகின்றது. இது சிதைந்து அழுகி விடுகின்றது. ஆத்மன் உடல் முழுவதும் பரவியிருந்தாலுங் கூட அது அதை விட்டுத் தனியாக இருக்கக் கூடிய ஒரு தெளிவான வஸ்து வாகும். இதுதான் ஜீவனுள்ள உண்மையாகும். இது தூய உணர்வாகும்.

ஆத்மன் ஐந்து உறைகளுக்குள்ளே மூடி வைக்கப் பட்டிருக்கிறது. ஒருவன் படிப்படியாக அவனுடைய தெய்வீக குணத்தை விருத்தி செய்து கொண்டு வரும் பொழுது இந்த உறைகள் நாளடைவில் கழன்று விடுகின் றன. அவனுடைய உணர்வு கீழ் மட்டத்திலிருந்து மேல் நிலைக்கு உயருகின்றது. அவன் மேலும் மேலும் ஆத்ம னுடைய சுதந்திரத்தையும் பேரானந்தத்தையும் உணரு கின்ருன். அவனுடைய சங்கல்பம் தூய்மையானதாகவும், பலம் பொருந்தியதாகவும், தடுக்க முடியாததாகவும் ஆகின்றது. அவனுல் இந்திரியங்களையும் மனத்தையும் அவனுடைய உறுதியான மனோ பலத்தின் மூலம் கட்டுப் படுத்த முடிகின்றது. மனோபலம் என்பது ஆத்ம சக்தி யைத் தவிற வேறென்றுமில்லை.

இந்த ஐந்து உறைகளைப் பற்றிய தெளிந்த ஞானம் உனக்கு ஏற்பட்டு விட்டால் நீ மயக்கமுறமாட்டாய். ஆகவே இந்த ஐந்து உறைகளின் தன்மைகளைப் பற்றியும் அதன் வேலைகளைப் பற்றியும் முதலில் அறிந்து கொள்ள முயற்சி செய். இந்த ஐந்து உறைகளிலிருந்து எது தெளி

வாக இருக்கின்றதோ அதுதான் உன்னுடைய சொந்த ஆத்மாவாக இருக்கின்ற சத்-சித்-ஆனந்த ஆத்மனுகும். இந்த ஆத்மன் எல்லா ஜீவன்களுக்கு உள்ளேயும் இருக்கின்றது. இது எங்கும், எப்பொழுதும் இருக்கிறது. உறைகள் அல்லது மாய உபாதிகளை இல்லாததாக்கி இந்த உறைகளின் ஆதாரத்தைக் கொண்டு உன்னை, ஒரு சஜாதீயமாக இருப்பதும், அழியாததுமான ஆத்மனோடு அபேதமாக்கிக் கொள்.

எண்ணற்ற பிறவிகளின் சேமித்து வைக்கப்பட்ட வாசனைகளின் மூலமாக, அந்த எல்லையிலாப் பேரானந்த விளக்கமும் அனுபூதியுமாகிய அந்த நிலையானது ஆத்மனை மூடிக் கொண்டிருக்கும் வாகனங்கள், உடுப்புக்கள் ஆகியவற்ருல் ஏற்படுத்தப்பட்ட மயக்கத்திருல் உண்டான உன்னுடைய பிடியிலிருந்து விடுவிக்கின்றது. (The state of illumination and realisation of that Infinite Bliss eludes your grasp by delusion set up by the vehicles and vestures in which the soul is incased and their activities with which it identifies itself through accumulated Vasanas of countless births.) ஆனுல் இடை விடாத தியானமும், விசாரணையும், எல்லா விதமான இடையூறுகளையும் நீக்கி லக்ஷியத்தை அடைய உனக்கு உதவி புரியும்.

பிரம்மன்தான் எல்லா ஜீவன்களுக்குள்ளும் இருக்கின்ற ஆத்மா. அந்த பிரம்மன் காரண, காரியமில்லாது உள்ளும், புறமும், எதுவும் இல்லாது, குறை, அசுத்தம் இல்லாது, நீள அகலமில்லாது, நிறம், வடிவம் அல்லது உருவமுமில்லாது இருக்கின்ருன். அந்த பிரம்மன் அங்க அவயவங்கள் இன்றி, நாமமின்றி, ஜாதியின்றி, கைகளின்றி, கால்களின்றி இருக்கின்ருன். அந்த பிரம்மன் ஞானம், அமைதி, பேரானந்த சொருபமாக இருக்கின்ருன்.

இந்த ஆத்மா அல்லது பிரம்மன், தூய்மையாக, அமைதியாக, சுயம்பிரகாசத்துடன் கண்ணுக்குப் புலப்

படாது, அழிக்க முடியாததாய், சாசுவதமானதாக, சுயேச்சையாக இருக்கின்றான். அவன் உடலற்று, மூச்சற்று, முடிவற்று இருக்கின்றான். அவன் தன்னுடைய சொந்தப் பெருமையிலேயே நிற்கின்றான். அவன் ஆதாரமில்லாமல் இருக்கின்றான். அவன் தன்னுடைய மகிமையிலேயே பிரகாசிக்கின்றான்.

## 2. மூன்று நிலைகள்

விஸ்வன், ஜாகரத் அவஸ்தை அல்லது விழிப்பு நிலையின் அபிமானி. தைஜஸன், கனவு நிலை அல்லது ஸ்வப்ன அவஸ்தையின் அபிமானி. பிராக்ஞன், ஆழ்ந்த உறக்க நிலை அல்லது த்ருட சுழுத்தியின் அபிமானி. இது பிண்டாண்டத்தில் (microcosm) உள்ளது.

ஜால வித்தைக்காரன் ஒருவன், ஒரு கயிற்றின் நுனியை ஆகாயத்திலே வீசி எறிந்துவிட்டு, அந்தக் கயிற்றின் மூலமாக மேலே ஏறி, சிறிது நேரத்தில் மறைந்து விடுகின்றான்; அவனுடைய உடல் பூமியின் மேல் துண்டு துண்டாக விழுகின்றது. அந்த துண்டுகள் மறுபடியும் ஒன்று சேர்ந்த அதே ஜால வித்தைக்காரன் ஆகின்றன. இந்த மாயத்தினுடைய ரகசியத்தையும், பொருளையும் பற்றிப் புரிந்து கொள்ளப் பார்வையாளர்கள் அக்கறை கொள்ளவில்லை. அவர்கள் அந்த வேளையில் மட்டும் திகைத்து நிற்கின்றனர். அவர்கள் ஆச்சரியத்தில் மூழ்கி இருக்கின்றனர். அதே போல இந்த விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய நிலைகளும் கயிற்றை வீசியெறிவதை ஒத்திருக்கின்றன. விஸ்வன், தைஜஸன், பிராக்ஞன் ஆகியவைகள் கயிற்றின் மூலமாக மேலே ஏறிச் சென்ற ஜால வித்தைக்காரனைப் போன்று இருக்கின்றன. இந்த மாயக் காட்சி முழுவதையும் நடத்தி வைக்கின்றவன் கயிறு, அதிலே ஏறுகின்ற மனிதன் ஆகியவைகளிலிருந்து வேறுபட்டுத் தனியாக முற்றிலும் விலகியிருக்கின்றான். எவ்வாறு ஜால வித்தைக்காரன் மாயா சக்தியின் காரண

மாக நிலத்தின் மீதே அந்நேரம் முழுவதும் நின்றுகொண்டிருந்த போதிலும் வேடிக்கை பார்ப்பவர்கள் கண்களுக்குப் புலப்படாது இருந்தானே அதே போல பரிபூரணனை பிரம்மன் எப்பொழுதும் ஒரு மௌன சாக்ஷியாக நின்று கொண்டிருக்கின்றான். அவித்தையினால் உண்டாக்கப்பட்டிருக்கும் திரையின் காரணமாக உலகாயத மக்களால் அவனைக் காண முடியவில்லை. தியானத்தின் மூலமாக திரை நீக்கப்பட்டதும் பிரம்மன் தன்னுடைய சுயமகிமையிலும், பிரகாசத்திலும் பிரகாசிக்கின்றான். தியானம் செய்பவன் ''அதை''அறிந்ததும் ''அது''வாகவே ஆகி விடுகின்றான்

ஜாக்ரத் என்பது விழிப்பு நிலை. அதிலே மனிதன் சப்தம் முதலிய ஐந்து ஸ்தூலப் பொருள்களையும், காது, சர்மம், கண், நாக்கு, மூக்கு ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களின் வாயிலாகவும் அனுபவிக்கின்றான். அவன் உலகைப் பற்றிய உணர்வுடன் இருக்கின்றான். அவன் உணர்வை வெளிப்படுத்தி வைத்திருக்கின்றான். (பஹிஹ் பிரக்ஞை) ஜீவனுக்கு இந்நிலையில் விஸ்வன் என்று பெயர்.

ஒரு அரசன் தன்னுடைய ரதத்திலேறிக் கொண்டு நகர் வலம் வருகின்றான். இது ஜீவன் இந்த உலகில் விழிப்பு நிலையில் அலைந்து திரிவதை ஒக்கிறது. அவன் திரும்ப வந்து தன்னுடைய அரண்மனைக்குள் நுழைகின்றான். இது கனவு நிலைக்கு ஒப்பானது. அவன் இரவிலே தன்னுடைய பள்ளியறைக்குள் நுழைகின்றான். இது ஆழ்ந்த உறக்க நிலைக்குச் சமம்.

ஏரியினுடைய நீர்ப்பரப்பு உணர்வு மனத்திற்கு (conscious mind) உவமையாகக் கூறப்படுகின்றது. ஏரியினுடைய அடி மட்டத்தை அடி மனத்திற்கு (sub-conscious mind) உவமையாகக் கூறப்படுகின்றது. அதனுடைய அடி மட்டத்திலிருந்து நீர் மட்டத்திற்கு வருகின்ற பொருள்கள்; அடி மனத்திலிருந்து உணர்வு மனத்தின் மேல் தளத்திற்கு வருகின்ற பிரதிமைகளுக்கு உவமையாகக் கூறப்படுகின்

றன. மனத்திற்குத் தொந்தரவு கொடுக்கின்ற விக்ஷேப சக்தி, ஏரியினுடைய சலனமற்ற தண்ணீரை அசைக்கின்ற காற்றிற்கு ஒப்பாகக் கூறப்படுகின்றது. விழிப்பு நிலேயின் போது விக்ஷேப சக்தி, ஜீவனின் சங்கற்பங்கள், இந்திரியங்கள் ஆகியவைகள் மனத்தை தொந்தரவு படுத்துகின்றன. கனவு நிலேயில், விக்ஷேப சக்தி மட்டும் தான் மனத்திற்குத் தொந்தரவு கொடுக்கின்றது. ஆழ்ந்த உறக்க நிலேயில் மனமானது பூர்ண ஓய்வில் இருக்கின்றது.

சில வேளேகளில் விழிப்பு நிலேயில் கூட மனமானது சிறிது நேரம் அமைதி நிலேக்குள் சென்று சங்கல்பங்களிலிருந்தும் விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டு மின்னோட்டங்களிலிருந்தும் விடுபட்டிருக்கின்றது. இந்த நிலேயில் பிரக்ஞை உள்முகமாக (அந்தஹ் பிரக்ஞை) இருக்கின்றது. இது மனோ விருத்திகளுடன் சேர்ந்திருப்பதில்லே.

விழிப்பு நிலேயில் ஏற்பட்ட அனுபவங்கள் கனவு நிலேயில் வாசனேகள், சம்ஸ்காரங்கள் ஆகியவைகளின் மூலமாக, மாறுதல்களுடனும், சில விஷயங்கள் சேர்ந்தும், விநோதமான கலவைகளோடும் மறுபடியும் பிறப்பிக்கப் படுகின்றன. எல்லாவிதமான கனவுக் காட்சிகளேயும் உற்பத்தி செய்வது மனம்தான். மனம்தான் கர்த்தாவாக இருக்கின்றது. மனமேதான் செயப்படு பொருளாகவும் இருக்கின்றது. மனமே, பெண், குதிரை, வண்டி, சாரதி, பாதை, நதி, நகரம் முதலியவைகளாக உருவெடுக்கின்றது.

ஆத்மாவானது உறக்க நிலேயில் ஆவரணத்தாலும், விழிப்பு நிலேயில் விக்ஷேபத்தாலும் மூடப்பட்டு விடுகின்றது. எது ஆவரணத்திற்கும், விக்ஷேபத்திற்கும் அப்பாற்பட்டிருக்கின்றதோ அதுதான் ஆத்மா.

"நித்ராலூர் ஜாகரத்யந்தே யோ பாவா உபஜாயதே
தம் பாவம் பாவயன் நித்யம் முச்யதே நேதரோ
யதி"

என்று யோக சாஸ்திரம் பகர்கின்றது.

விஞ்ஞானி அவனுடைய முடிவுகளை விழிப்பு நிலை ஆராய்ச்சிகளிலிருந்தும், அனுபவங்களிலிருந்தும் மட்டும் தான் பெறுகின்றான். ஆகவே அவைகள் சரியானவைகள் அல்ல. உண்மையான அனுபவம் விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளின் அனுபவங்களும் சேர்ந்ததேயாகும். வேதாந்தி மூன்று நிலைகளையும் ஆராய்கின்றான். அவன் ஆழ்ந்த உறக்க நிலையில் மேல் கொண்டும் உண்மையான ஞானத்தைப் பெறுகின்றான். அவன் நான்காவது நிலை அல்லது துரீய நிலை இருப்பதற்கான ஒரு துப்பை இந்த ஆழ்ந்த உறக்க நிலையை ஆராய்வதிலிருந்து பெறுகின்றான்.

ஸ்வப்னம் என்பது உறக்க நிலை. இதில் மனிதன் ஐந்து இந்திரியப் பொருள்களையும் அனுபவிக்கின்றான். எல்லா இந்திரியங்களும் ஓய்வு பெற்றிருக்கின்றன. மனம் மட்டும் வேலை செய்கின்றது. மனமே கர்த்தாவாகவும், பொருளாகவும் இருக்கின்றது. இது எல்லா கனவுக் காட்சிகளையும் உற்பத்தி செய்கின்றது. ஜீவனுக்கு இந்நிலையில் தைஜஸன் என்று பெயர். இப்பொழுது அந்தஹ் பிரக்ஞை இருக்கிறது (உள்ளுணர்வு). "அவன் நித்திரையில் ஆழ்ந்து விடும் பொழுது அந்நிலையில் ரதங்கள் இல்லை, குதிரைகளும், பாதைகளும் இருப்பதில்லை. ஆனால் அவனே ரதங்களையும், குதிரைகளையும், பாதைகளையும் சிருஷ்டித்துக் கொள்கின்றான்" என்று உபநிஷத் பகர்கின்றது. (பிருஹ. உப. IV 3-9-10).

கனவு உலகம் நனவுலகிலிருந்து வேறுபட்டது. கல்கத்தாவில் படுக்கையில் உறங்கிக் கொண்டிருக்கும் மனிதன், படுக்கைக்குச் செல்லும் பொழுது நல்ல ஆரோக்கியத்துடன் சென்ற அவன், கனவுலகில் ஒரு நோயாளியாக டில்லியிலே அலைந்து கொண்டிருக்கின்றான். இதே போல் இதற்கு நேர்மாறாகவும் இருப்பதுண்டு. ஆழ்ந்த உறக்கமானது இந்த கனவு, விழிப்பு ஆகிய இரண்டு உலகங்களிலிருந்தும் வேறுபட்டது. கனவு காண்பவனுக்கு

கனவுலகமும், கனவுப் பொருட்களும் நனவுலகப் பொருள்களையும், அனுபவங்களையும் போன்று அவ்வளவு உண்மையானதாகவே இருக்கின்றன. கனவு காணும் ஒரு மனிதன் கனவுலகத்தின் பொய்த்தன்மையை உணருவதில்லை.

கனவிற்கு அப்பால் நனவுலகம் ஒன்று இருப்பதைப் பற்றி அவனுக்குத் தெரியாது. உணர்வு மாறுகின்றது. இந்த உணர்வு மாற்றமானது விழிப்பு அல்லது கனவு அனுபவங்களைக் கொண்டு வருகின்றது. பொருள்கள் தாங்களாகவே மாறிக் கொள்ளுவதில்லை. மனத்தில்தான் மாற்றம் ஏற்படுகின்றது. மனம்தான் நனவு, கனவு ஆகிய இரண்டு பாகங்களையும் ஏற்று நடிக்கின்றது.

கனவு காண்பவன் கனவு கண்டு கொண்டிருக்கும் வரையிலும் அவைகள் எவ்வளவுதான் தொடர்பில்லாமலிருப்பினும் அக்கனவுகள் உண்மையென்றே உணருகின்ருன். அவன் சில சமயங்களில் தன்னுடைய தலை துண்டிக்கப்பட்டு தான் ஆகாயத்தில் பறந்து கொண்டிருப்பதாகக் கனவு காண்கின்ருன்.

கனவு காண்பவன் கனவுப் பொருள்களின் உண்மையையும், கனவின் போது ஏற்படும் பல்வேறு அனுபவங்களின் உண்மையையும் நம்புகின்ருன். கனவிலிருந்து எழுந்திருக்கும் பொழுதுதான் அவன் இதுவரைத்தான் கண்டதும் அனுபவித்ததும் வெறும் கனவு, ஒரு பொய்த் தோற்றம், பொய் என்பதை உணருகின்ருன். இதே போன்றதுதான் இந்த நனவுலகத்தில் ஜீவனுடைய விஷயமும். இந்த அறியாத ஜீவன் இந்த விளங்காத நிலையிலுள்ள இந்திரிய சுகபோகமாக இருக்கின்ற உலகம் உண்மையென்று நம்புகின்ருன். ஆனுல் பொருள்களின் உண்மையைத் தெரிந்து கொள்ளும் பொழுது அவனுடைய திருஷ்டி கோணம் மாறும்பொழுது, அவித்தையாகிய திரை நீக்கப்படும் பொழுது, அவன் இந்த நனவுலகமும் கனவுலகத்தைப் போன்றே பொய்யானது என்பதை உணர்கின்ருன்.

கனவில் ஒரு ஏழை ஒரு சக்தி பொருந்திய பிரபுவாக ஆகின்ருன். அவன் பல்வேறு விதமான சுகங்களை அனுபவிக்கின்ருன். அவன் ஒரு மஹாராணியைத் திருமணம் செய்துகொள்ளுகின்ருன். ஒரு அழகான அரண்மனையிலே வசிக்கின்ருன். பல குழந்தைகளைப் பெறுகின்ருன். அவன் தன்னுடைய மூத்த மகளை ஒரு மஹாராஜாவின் மகனுக்கு மணம் செய்து கொடுக்கின்ருன். அவன் மனைவி மக்களுடன் கண்டம் முழுவதும் செல்கின்ருன். பிறகு அவன் திரும்பி வந்து பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுகின்ருன். விஷ ஜுரம் வந்து அவன் காசியில் இறக்கிருன். ஐந்து நிமிட நேரத்திற்குள் அவன் மேற்கூறிய அனுபவங்களைப் பெறுகின்ருன். என்னே அதியற்புதம் !

கனவிலிருப்பதைப் போலவே நனவிலே தென்படும் பொருள்களும் உருப்படியில்லாதது. இரண்டு நிலைகளுக்கும் உள்ள வேற்றுமை என்னவென்ருல், ஒன்று அகத்தைச் சார்ந்ததாகவும் சூக்ஷ்மமாகவும் இருக்கின்றது. மற்ருென்று புறத்தோற்றமாகவும், ஸ்தூலமாகவும், நீண்டதாகவும் இருக்கின்றது. ஞானிகள் நனவு நிலை, கனவு நிலை ஆகிய இரண்டையும் அவைகள் ஒவ்வொன்றின் விஷயத்திலும் பொருள் நுகர்ச்சியிலே இருக்கின்ற ஒற்றுமை காரணமாக ஒன்ருகவே கருதுகின்றனர். கனவும் மயக்கமும் அல்லது ஆகாயத்திலுள்ள ஒரு கோட்டையைப் போல இந்தப் பிரபஞ்சம் இருப்பதாக வேதாந்தம் பறை சாற்றுகின்றது என்று ஞானிகள் கூறுகின்றனர்.

கனவுகள் நேர் மாருக இருப்பவைகளைக் குறிக்கின்றன. நல்ல சாப்பாடு வசதியுள்ள ஒரு அரசன் தெருவிலே பிச்சை யெடுப்பதாகக் கனவு காணுகின்ருன். ஒரு கற்புடைய தூய்மையான சாதகன், மேஹ நோயினுல் அவஸ்தைப் படுவதாகக் கனவு காணுகின்ருன். ஒரு வீர நெஞ்சம் படைத்த போர் வீரன், அவனுடைய எதிரிக்கு அஞ்சி யுத்தக்களத்திலிருந்து ஓடுவதாகக் கனவு காணுகின்ருன். ஒரு பலஹீனமான நோயாளி ஒரு மல்யுத்தக்கார

ஞேடு குஸ்தி போட்டுக் கொண்டிருப்பதாகக் கனவு காண்கின்ருன். ஒரு உயிருள்ள மனிதன் இறந்து விட்டதாகக் கனவு காணுகின்ருன். அவன் அவனுடைய உயிருள்ள தந்தை இறந்து விட்டதாகக் கனவு கண்டு இரவிலே அழுகின்ருன். அவன் அவனுடைய தந்தையின் ஈமக் கிரியைகளை கவனிப்பதாகவும் அனுபவிக்கின்ருன். சில சமயங்களில் நகரத்தில் வசித்துக் கொண்டிருக்கும் ஒருவன் ஒரு சிங்கமும் ஒரு புலியும் எதிர்த்து வருவதாகக் கனவு கண்டு இரவிலே வீர் என்று கத்துகின்ருன். அவன் தன்னுடைய தலையணையை கைப் பெட்டி என்று நினைத்துக் கொண்டு அதை எடுத்துக் கொண்டு ரயில் நிலயத்திற்குப் புறப்படுகின்ருன். கொஞ்ச தூரம் நடந்து சென்ற பிறகு அது கனவு என்று கண்டு பிறகு வீட்டிற்குத் திரும்பி வருகின்ருன். சில பேர்கள் தாங்கள் கக்கூஸில் உட்கார்ந்திருப்பதாகக் கனவு கண்டு படுக்கையிலேயே மல ஜலம் கழித்து விடுகின்றனர்.

ஜனக மஹாராஜா பல பண்டிதர்களைப் பார்த்து "இது உண்மையில்லையா? அல்லது அது உண்மையில்லையா?" என்று கேட்டார். அதற்கு ஒரு பண்டிதர் "அது உண்மை இல்லை" என்று கூறினுர். ஜனகர் பண்டிதரைப் பார்த்து, ஓ பண்டிதரே "அது உண்மை இல்லை" என்ருல் என்ன பொருள்? என்று வினவினுர். பண்டிதர் "கனவு உண்மை இல்லை. 'அது' என்பது கனவு" என்று பதிலுரைத்தார். ஜனகருக்கு திருப்தி ஏற்படவில்லை. மற்ருெரு பண்டிதர் "இது (உலகம்) உண்மையில்லை" என்று கூறினுர். அஷ்டவக்ரர் "இரண்டும் உண்மை இல்லை" என்று கூறினுர். ஜனகர் "அஷ்டவக்ர ரிஷிஜி, இரண்டும் என்ருல் என்ன அர்த்தம்" என்று கேட்டார். அதற்கு அஷ்டவக்ரர் "கனவு, நனவு ஆகிய இரண்டு நிலைகளும் உண்மை இல்லை. பிரம்மன் மட்டும் தான் உண்மை" என்று பதிலுரைத்தார். ஜனகர் இப்பொழுது திருப்தியடைந்தார்.

கனவில் கூட நீங்கள் இறைவனோடு தொடர்பு கொண்டிருக்கின்றீர்கள். நீங்கள் உலகாயதக் காட்சிகள் எதையும் காண மாட்டீர்கள்.

ராஜா அஜாத சத்ரு, கார்க்யா என்ற பிராம்மணனை கையில் பிடித்துக் கொண்டு ஒரு மனிதன் தூங்கிக் கொண்டிருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றான். அரசன் அவனிடம் பேசினான். ஆனால் அவன் எழுந்திருக்கவில்லை. ஆனால் அஜாதசத்ரு அவனைத் தன்னுடைய கைகளால் தொட்டதும் அவன் எழுந்திருந்தான். இப்பொழுது அரசன் பிராமணனைப் பார்த்து "ஞானம் அடங்கியுள்ள இந்த மனிதனுடைய மனம் அவன் உறக்க நிலையில் இருக்கும் பொழுது எங்கிருந்தது, அது எங்கிருந்து திரும்பி வந்தது?" என்று வினவினான். ஆனால் கார்க்யர் பதில் சொல்ல முடியவில்லை. பிறகு அஜாத சத்ரு அந்த மனிதனுடைய மனம் அல்லது ஆத்மா கனவிலே எவ்வாறு சஞ்சரித்துக் கொண்டிருந்தது என்பதையும் எவ்வாறு எல்லா இடங்களும் அவனுக்குச் சொந்தமாக இருக்கிறது என்பதையும், அவன் எப்படி தன்னிச்சைப்படி இப்பொழுது ஒரு அரசனாகவும், இப்பொழுது ஒரு பிராமணனாகவும் இருக்க முடிகிறது என்பதையும், ஆனால் மறுபடியும் அதாவது ஒருவன் கனவற்ற ஆழ்ந்த உறக்கத்தில் இருந்து அதற்கு மேல் அவனுக்கு எந்தவித உணர்வும் இல்லாது போகும் பொழுது எவ்வாறு இன்னும் உயர்ந்த மகிழ்ச்சிகரமான நிலையொன்று இருக்கிறது என்பதையும் அவனுக்கு விளக்கிக் காட்டினான். இந்த நிலையில்தான் இந்த அதிசயமான உலகத்தினால் பாதிக்கப்படாதிருக்கும் மனிதனுடைய ஆத்மா ஆத்மனுக்கும் பிரம்மனுக்கும் வேறுபாடு இல்லாத உண்மையான தன்மையில் நிலைபெற்றிருக்கின்றது.

மேலை நாட்டு தத்துவக்ஞர்கள், அடி மனமானது ஆழ்ந்த உறக்க நிலையிலும் வேலை செய்கின்றது என்றும், அந்நிலையில் ஒரு சிறிது உணர்வும் இருப்பதாகவும்,

ஏனென்ருல் மனிதன் ஆழ்ந்த நித்திரையை அனுபவித் ததை ஞாபகத்தில் வைத்திருக்கின்ருன் என்றும் வற்புறுத்து கின்றனர். இது சரியல்ல. அடிமனமானது கனவு நிலை யில் மட்டும்தான் வேலை செய்கின்றது. ஆழ்ந்த உறக்க நிலையில் மனம் என்பது கிடையாது. அது அதனுடைய காரணத்தினுள் சிக்கிக் கொண்டிருக்கின்றது. அதாவது அது அப்போதைக்கு தன்னை காரண சரீரம் அல்லது ஆனந்தமய கோசத்துடன் ஐக்கியப்படுத்திக் கொண்டிருக் கின்றது. ஆனுல் காரண சரீரம் அல்லது மூல அவித்தை யானது ஆழ்ந்த உறக்க நிலையில் வேலை செய்து கொண் டிருக்கின்றது. சம்பந்தப்பட்ட சைதன்யம் அல்லது அறிவு அதாவது பிரக்ஞையும் ஆழ்ந்த உறக்க நிலையில் இருக் கின்றது. ஆழ்ந்த உறக்கத்தின் பேரானந்தத்தை ஞாபகத் தில் வைத்திருப்பது இந்தப் பிரக்ஞைதான். பிரக்ஞை யாகிய ஆழ்ந்த உறக்க நிலையோடு சம்பந்தப்பட்டிருக்கும் அறிவும், தைஜஸனுகிய கனவு நிலையோடு சம்பந்தப் பட்டிருக்கும் அறிவும், விஸ்வனுகிய விழிப்பு நிலையோடு சம்பந்தப்பட்டிருக்கும் அறிவும் ஒன்று தான். காரண சரீரம், வித்துடல், ஆனந்தமய கோசம், மூல அவித்தை, அல்லது அஞ்ஞானம் ஆகியவைகள் ஒரு பொருள் தரும் பல சொற்களாம்.

ஜீவனுனவன் மாயையினுடைய இந்த நவத்துவார நகரத்திலே ஆழ்ந்த நித்திரையை அனுபவிக்கின்ருன். இந்த நிலையில் விருத்தியும் கிடையாது, சங்கல்பமும் கிடையாது; குணமாறுபாடுகளோ அல்லது இந்திரியங் களின் விளையாட்டோ கிடையாது; ராக-த்வேஷ ஓட்டத் தின் இயக்கமோ, அறிவினுடைய இயக்கமோ கிடையாது. இந்த நிலையிலே உண்மை அல்லது பொய்யான ஞானம் என்பது இருப்பது கிடையாது.

உறக்கத்தின் போது மனிதன் புறப் பொருள்களி லிருந்து எல்லா இந்திரியங்களையும் விலக்கி உள்முகமாகச் செல்லுகின்ருன். ஒரு குழந்தை நன்ருக வளர்ந்த ஒரு

வனைக் காட்டிலும் அதிகமாகத் தூங்குகின்றது. ஒரு வளர்ச்சியடைந்த மனிதன் ஒரு கிழவனைக் காட்டிலும் அதிகமாக உறங்குகின்ருன். தூக்கமானது மனம், இந்திரியங்கள், உடல் ஆகியவற்றிற்கு ஓய்வு கொடுத்து ஒரு மனிதனை புத்துணர்ச்சியுடன் வேலைகளில் ஈடுபடுத்த ஆயத்தப்படுத்துகின்றது. ஆகவே தூக்கம் எல்லாம் ஜீவனே ஒரு மனிதன் பசியாயிருக்கும் போது அவன் வெளியே ஓடுகின்ருன். இது எதிர்மாருன நிலையாகும்.

ஆழ்ந்த உறக்கம் அல்லது சுழுத்தியில் எல்லா இந்திரியங்களும் மனமும் பூரணமான ஓய்வு பெற்றிருக்கின்றன. மனமானது அதனுடைய காரணமான காரண சரீரத்திலே சிக்கிக் கொண்டிருக்கின்றது. ஜீவனுக்கு இந்நிலையில் பிரக்ஞன் என்று பெயர். ஆனந்தமய கோசமானது இயங்கிக் கொண்டிருக்கின்றது. ஜீவனுக்கும் பிரம்மனுக்கும் இடையில் ஒரு திரை இருக்கின்றது.

உறக்கத்தின் பொழுது இரண்டு வஸ்துக்கள் இருக்கின்றன. ஒன்று பிரக்ஞை, மற்ருென்று மூல அஞ்ஞானம் (அல்லது அவித்தை). மனம் என்பது கிடையாது. மனமானது மூல அஞ்ஞானத்தோடு லயமாகி விடுகின்றது. ஆனந்தமய கோசம், காரண சரீரம், ஆகியவை மூல அவித்தைக் குரிய வேறு பெயர்கள். ஆனந்தமய கோசம் (வித்துடல்) உறக்கத்தின் போது வேலை செய்கின்றது. தூக்கத்தினுடைய ஆனந்த உணர்வு பிராக்ஞனுக்கு உண்டு. ஒரு மனிதன் கிணற்றில் விழுந்துவிட்ட மோதிரத்தை தண்ணீருக்குள் ஆழமாக முழுகி அதைக் கையிலே எடுத்துக் கொண்டு அப்பொழுது அவனுடைய உணர்ச்சியை எவ்வாறு வெளிப்படுத்த முடியாத நிலையில் இருக்கின்ருனே அதே போல உறக்கத்தின் போது அவன் உண்மையிலேயே சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், அந்த இன்ப நிலையை அவனுல் வெளிப்படுத்த முடிவதில்லை.

ஆழ்ந்த உறக்க நிலையில் நீங்கள் அனுபவிக்கும் ஆனந்தம் உடன்பாட்டு ஆனந்தமாகும். அது வெறும் எதிர்மறை சுகம் அல்ல. இந்தப் பேரானந்தம் இந்திரியங் களுக்கப்பாற்பட்டது. இது இந்திரியப் பொருள்களிடம் நேரடியான தொடர்பு கொண்டு அதன் மூலம் பெறப்படுவ தல்ல. ஆழ்ந்த உறக்க நிலையில் இயங்கிக் கொண்டிருப்பது காரண சரீரம் அல்லது ஆனந்தமய கோசமாகும். ஆழ்ந்த உறக்கத்தின் போது அவித்தை விருத்தியும், பிரக்ஞையும் (காரண சரீரத்தோடு தொடர்பு கொண்டுள்ள அந்த சைதன்யம்) பிரசன்னமாயிருக்கின்றன. மனமும், அகந் தையும் அஞ்ஞானத்தில் ஒன்றி யிருக்கின்றன. ஆழ்ந்த உறக்க நிலையில் அவைகள் பிரசன்னமா யிருப்பதில்லை. இந்தப் பிரக்ஞை ஆழ்ந்த உறக்கத்தின் பேரானந்தத்தை உணர்ந்துகொண்டிருக்கின்றது. ஜாக்ரத் நிலையிலே விஸ்வ னுடைய ரூபத்திலே பேரானந்தத்தை ஞாபகப் படுத்துகின் றவன் ''அவன்''தான் (இறைவன்). ஒருவனுல் என்ன அனுபவிக்கப் படுகின்றதோ அதை அவன் ஞாபகத்தில் வைத்திருக்க முடியும். எவ்வாறு கிணற்றில் வீழ்ந்த மோதிரத்தை முழுகி எடுக்கின்ற மனிதன் தண்ணீருக்குள் அதைக் கையிலெடுத்ததும் தன்னுடைய உணர்ச்சிகளை நீருக்கடியிலிருந்தவாறு வெளியிலுள்ளவர்களுக்குத் தெரி விக்க இயலாமலிருக்கின்ருனே அதேபோல பிரக்ஞன் தன் னுடைய பேரானந்தத்தைத் தெரிவிக்க இயலுவதில்லை. ஆனுல் விழிப்பு நிலையில் ஸ்தூல சரீரத்தோடு தொடர்பு கொண்டுள்ள சைதன்யமாகிய விஸ்வனுல் அதை உணர முடிகின்றது. விஸ்வன், தைஜஸன் (கனவு நிலையில் சூக்ஷ்ம சரீரத்தோடு தொடர்பு கொண்டிருக்கும் சைதன் யம்), பிரக்ஞன் ஆகியவைகள் ஒன்றே.

நீ எழுந்திருந்ததும் கனவு உண்மையற்றதாகப் போய் விடுகின்றது. கனவிலே விழிப்பு நிலை இருப்பதில்லை. கனவு நிலை, விழிப்பு நிலை ஆகிய இரண்டுமே ஆழ்ந்த உறக்க நிலையில் இருப்பதில்லை. கனவு, விழிப்பு ஆகிய இரண்டு நிலைகளிலும் ஆழ்ந்த உறக்க நிலை இருப்பதில்லை. ஆகவே

இந்த மூன்று நிலைகளும் உண்மையற்றவை. அவைகள் சத்துவம், ராஜஸம், தாமஸம் ஆகிய முக்குணங்களால் உண்டாக்கப்பட்டவை. பிரம்மன்தான் இந்த மூன்று நிலைகளுக்கும் மௌன சாக்ஷியாக இருப்பது. இது முக்குணங்களையும் கடந்து நிற்கின்றது. இது தூயப் பேரானந்தமும் தூய உணர்வுமாகும். இது "சத்" ஆகும்.

இதுதான் ஆழ்ந்த உறக்கத்திற்கும் சமாதிக்கும் உள்ள வேறுபாடு. நீ ஆழ்ந்த நித்திரையிலிருந்து திரும்பி வரும்பொழுது உனக்கு ஆத்மனுடைய ஞானம் ஏற்படுவதில்லை. உறங்கச் செல்லுமுன் இருந்த அதே மனம், அதே வாஸனைகள், அதே எண்ணங்கள், அதே சம்ஸ்காரங்கள் ஆகியவற்றை நீ உடைத்தாயிருக்கின்றாய். ஆனால் சமாதி விஷயத்தில் யோகி அல்லது முனிவர் பூரண ஞான விளக்கத்துடன் வெளிவருகின்றார். அவருக்கு ஆத்மனைப் பற்றிய ஞானம் அளிக்கப்படுகிறது. அவருடைய பழைய சம்ஸ்காரங்கள் அனைத்தும் எரிக்கப்பட்டு விடுகின்றன. மனோநாசம் ஏற்படுகின்றது. இப்பொழுது அவர் சம நோக்கும், சீரான மனோநிலையும் கொண்ட ஒரு மாற்றமடைந்த மனிதனாக இருக்கின்றார். அவர் எல்லா விதமான சந்தேகங்கள், பயம், ஆசைகள் ஆகியவற்றிலிருந்து விடுபட்டிருக்கிறார். அவரால் எல்லோருடைய சந்தேகங்களையும் போக்க முடியும்.

மயக்கம் (Swoon) என்பது அரைத் தூக்கமே. அதனால் மயக்க நிலையில் உள்ள மனிதன் பிரம்மனை பாதி அனுபவிக்கின்றான் அல்லது ஆத்மாவானது பிரம்மனோடு பாதி சேர்ந்திருக்கிறது என்று நீங்கள் பொருள் கொள்ளக் கூடாது.

மயக்கநிலை ஒரு பகுதி தூக்கத்தைப் போன்றதாகும். உணர்ச்சியற்ற தன்மை, ஆழ்ந்த உறக்கத்தின் ஒரு பகுதியோடும் இறந்த நிலையின் மறு பகுதியோடும் சேர்ந்திருக்கின்றது. இது மரணவாயிலாகும். கர்மத்திலே ஏதாவது மிச்சம் மிகுதி இருந்தால் அவன் உணர்விற்கு வருகின்றான்; வேலை ஏதும் மிகுதி இல்லாவிடில் அவன் இறக்கின்றான்.

மயக்க நிலையிலுள்ள மனம் காரண சரீரத்திலோ அல்லது தொண்டையிலுள்ள ஹிதா நாடியிலோ நிலைபெற்று இருப்பதில்லை. அது ஒரு திமிர்ப்பு நிலையிலே (இயக்கமற்ற நிலையிலே) இருக்கிறது. அது அசைவற்று இருக்கச் செய்கின்ற நிலையிலே இருக்கின்றது. அது ஹிதா நாடிக்கும், காரண சரீரத்திற்கும் இடையிலே ஒரு இடத்திலே ஓய்வு எடுத்துக் கொள்கின்றது.

மயக்கத்திலே ஆழ்ந்த உறக்கத்தில் பாதி இருக்கிறது. ஏனெனில் அது மற்ற மூன்று நிலைகளுக்கும் வேறுபட்டு இருக்கின்றது. மயக்க நிலையிலுள்ள ஒரு மனிதன் எப்பொருளையும் பார்ப்பதில்லை. மயக்க முற்றிருக்கும் மனிதனின் உடல் நிலத்தில் வீழ்கின்றது. ஆகவே மயக்கத்திலுள்ளவன் விழித்துக் கொண்டிருக்கவில்லை. அவன் முற்றிலும் உணர்வற்றிருக்கின்ற காரணத்தினால் அவன் கனவும் கண்டு கொண்டிருக்கவில்லை. அவன் இறந்து விட்டானா? அதுவுமில்லை. ஏனெனில் அவனுக்கு உயிரும் உஷ்ணமும் இருக்கிறது. அவன் தொடர்ந்து சுவாசித்துக் கொண்டிருக்கின்றான். மயக்கம் என்பது ஆழ்ந்த உறக்க நிலை அல்ல. மயக்க முற்றிருப்பவனுடைய உடல் நடுங்குகின்றது. அவனுடைய முகம் பயங்கரமாக இருக்கின்றது. அவனுடைய கண்கள் அகலத் திறந்து கொண்டிருக்கின்றன. ஆனால் தூங்கிக் கொண்டிருக்கும் மனிதன் அமைதியாகவும் சாந்தமாகவும் காணப்படுகின்றான். அவனுடைய கண்கள் மூடியிருக்கின்றன. அவனுடைய உடல் நடுங்குவதில்லை. தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு மனிதனை கையினால் இலேசாகத் தொட்டாலோ அல்லது அவனுடைய பெயரைச் சொல்லி அழைத்தாலோ அவன் எழுந்து விடுவான். ஆனால் மயக்க முற்றிருக்கும் ஒருவனை தடி கொண்டடித்தாலும் எழுப்ப முடியாது. மயக்க நிலையானது தலையில் தடியால் அடித்த காரணத்தினால் ஏற்பட்டது; ஆனால் தூக்கம் களைப்பு அல்லது சோர்வு காரணமாக ஏற்படுகின்றது.

ஆழ்ந்த உறக்க நிலை விதையாகும். விழிப்பு நிலையும், கனவு நிலையும் அதனால் உண்டாகும் பலன்கள். ஆழ்ந்த

உறக்க நிலையானது சமாதி நிலை அல்லது பரமாத்மாவோடு ஐக்கியப்பட்ட நிலையினின்று ஒரு சிறிதே அதனுடைய தன்மையிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றது. இது இவ்வாறு இல்லாதிருந்து உணர்வானது மறுபடியும் விழிப்பு, கனவு ஆகிய நிலைகளுக்கு திரும்பி வராவிட்டால், ஆழ்ந்த உறக்க நிலை (சுஷுப்தி) யானது சமாதி நிலை அல்லது பேருணர்வு நிலையாகவே இருக்கும்.

துரீயம் அல்லது நான்காவது நிலை மேற்கூறிய மூன்று நிலைகளையும் கடந்ததாகும். மனத்தையும் இந்திரியங்களையும் கட்டுப்படுத்தி, உடலுணர்வுக்கும் முக்குணங்களுக்கும் மேம்பட்டு, தன்னை சத்-சித்-ஆனந்த பிரம்மனோடு அபேதமாகக் காட்டிக் கொள்ளுகின்ற ஒரு முனிவன் இந்தப் பேரானந்த அல்லது பேருணர்வு நிலையிலே அனுபவித்துக் கொண்டிருக்கின்ருன்.

ஆழ்ந்த உறக்க நிலைக்கும், விழிப்பு நிலைக்கும் இடையேயுள்ள இலேசான இடைவேளை அல்லது சந்திக்கு தூஷ்ணிம் பூத அவஸ்தை அல்லது மனோ அமைதி நிலை என்று பெயர். இதைப் போலவே விழிப்பு நிலைக்கும், ஆழ்ந்த உறக்க நிலைக்கும் இடையேயும் ஒரு இடைவேளை அல்லது சந்தி உண்டு. மூற்கூறிய சந்தியிலே மனமானது ஆழ்ந்த உறக்கத்தின் ரஸானுபவத்துடன் வெளிவருகின்றது. பின்னல் கூறப்பட்ட சந்தியிலே இது உலகாயதப் பொருள்களின் ரஸானுபவத்தோடு உள்ளத்தின் ஒதுக்கிடத்திற்குள் நுழைகின்றது. இந்த இரண்டு சந்திகளிலும் மனமானது சங்கல்பத்திலிருந்தும், கவர்ச்சி அல்லது வெறுப்பிலிருந்தும் விடுபட்டிருக்கின்றது.

“ ஸ்வப்னப்ரபோதயோ: சந்தாவாத்மனோ
கதிமாத்மத்ருக்
பஸ்யன் பந்தம் ச மோக்ஷம் ச மாயா மாத்ரம்
ந வஸ்துத: ”

என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

"ஆத்ம தத்துவத்தை நாடுபவன் அதை, விழிப்பு நிலையும் உறக்க நிலையும் கூடுகின்ற அந்த சந்தியிலே காண வேண்டும். அவன், பந்தமும், விடுதலையும் ஜீவனுடைய மாயை காரணமாக ஏற்பட்ட பொய்த் தோற்றமேயன்றி, உண்மை அல்ல என்பதையும் காண வேண்டும்"

— பாகவதம் VII 3-V.

## 3. பிரம்ம வித்தை (ஞானம்)

பிரம்ம வித்தை அல்லது ஆத்ம ஞானமானது, செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து உள்ளத் தூய்மை எய்தியவனுக்காகவும், வினைகளினுடைய பலன்களிலே பற்றுதலில்லாதவனுக்காகவும் ஏற்பட்டதாகும்.

கேவல ஞானம் மோக்ஷத்திற்குரிய ஒரே வழியாகும் (சாதனம்). ஞானமானது விசாரம் அல்லது ஜீவாத்மாவுக்கும் பிரம்மனுக்குமுள்ள அபேதத்தைக் காட்டுகின்ற "தத்த்வம் அஸி" என்று சொல்லப்படுகின்ற மஹா வாக்கியத்தின் (உபநிஷத்துக்களின் மாபெரும் வாக்கியம்) சரியான கருத்தைப் புரிந்து கொள்ளுதலின் மூலமாக உதயமாகின்றது.

மரணமாகிய நெருப்பை ஞானமாகிய நீரினால் தணித்து விடலாம். ஞானத்தை, ஆத்மனைத் தியானிப்பதன் மூலம் பெறலாம். ஆத்ம ஞானம் விடுதலையை உண்டாக்குவதில்லை. அதுவே விடுதலையாக இருக்கின்றது.

"இவ்வுலகிலே செய்யப்படுகின்ற எல்லா நல்வினைகளிலும் எந்த ஒரு வினையும் மக்களைப் பரமபதத்திற்கு அழைத்துச் செல்வதிலே மற்றவற்றைக் காட்டிலும் சக்தி வாய்ந்ததாகக் கொள்ளப்படுவதற்கில்லை" என்று முனிவர்கள் கூறினர்கள். எல்லா செயல்களிலும் முக்கியமானது ஆத்மனுடைய உண்மை ஞானத்தை அதாவது உண்மை வஸ்துவைப் பெறுதல் தான் தலையாயது. அதுவே எல்லா ஞானங்களிலும் உயர்ந்ததாக இருக்கின்றது. ஏனெனில்

அது மரணமிலாப் பெருவாழ்வை உறுதிப்படுத்துகிறது ”
என்று பிருகு பதிலிறுத்தார். — மனு ஸ்மிருதி அத். XII.

கங்கைக்கு மூன்று நிலைகள் உள்ளன. குளிர் காலத்தில் அவள் சுத்த பிரம்மனைப் போன்று பரிசுத்தமாக இருக்கின்றாள். அவள் மிகவும் தெளிவாக கண்ணாடி போன்று இருக்கின்றாள். கோடையிலே அவள் தன்னுடைய உருவை மாற்றுகின்றாள். அவள் பனிக்கட்டி நீரால் நிரப்பப்படுகின்றாள். அவள் ஈஸ்வர ஸ்வரூபத்தை அதாவது மாயா விசிஷ்ட சைதன்யத்தை அதாவது மாயையோடு தொடர்பு கொண்டுள்ள சைதன்யத்தை மேற்கொள்கின்றாள். மழைக் காலத்தில் நீர் சேறாக ஆகின்றது. அவள் ஜீவ ஸ்வரூபத்தை, அவித்யா ஆவிஷ்ட சைதன்யத்தை, அதாவது அவித்தையோடு சம்பந்தம் கொண்டுள்ள சைதன்யத்தை மேற்கொள்ளுகின்றாள். இதே போல இந்த ஜீவனும் பக்தியின் மூலமாக ஈஸ்வரனுடைய ரூபத்தைக் கொள்கின்றான்; ஞானத்தின் மூலமாக பரப் பிரம்மனோடு அபேதமாகி விடுகின்றான்.

பிரம்மன் உண்மையானதும் சாசுவதமானதுமாகும். இந்த உடல் உண்மையில்லாததும் அழியக்கூடியதுமாகும். ஆத்மானாத்ம (self and not-self) ஞானத்திலிருந்து அமரத்துவமாகிய நீரூற்று அல்லது உபநிஷதங்களின் தீர்க்கதரிசிகளுடைய புராதன ஞானம், கிளம்புகின்றது.

பெரு முயற்சியின் மூலமாக விடுதலையை நல்குகின்ற ஆத்ம ஞானத்தை நீங்கள் பெற்றாக வேண்டி இருக்கிறது. இது பிரம்மனைப் பற்றிய ஞானமாகும். அது விடுதலைக்கு வழியாக அமைகின்றது. பிரம்ம ஞானமானது உன்னத நிலையை அடைவதற்குரிய ஒரு சாதனமாகும். பிரம்ம ஞானத்தைப் பெறுதல் பரா வித்தையாகும். பிரம்ம ஞானமானது சம்சாரத்திற்குக் காரணமான அறியாமையை முற்றிலும் அழித்து விடுகின்றது.

மறைந்திருக்கும் ஒரு புதையல் இருக்குமிடத்தை அறியாத மனிதன் ஒருவன் அதன் மீது தினந்தோறும் பல தடவைகள் நடந்து சென்ற போதிலும் அதைக் கண்டு பிடிக்க முடியாமல் இருப்பதைப் போல நீ தினந்தோறும் ஆழ்ந்த நித்திரையின் போது பிரம்மனிடம் நுழைந்தாலுங் கூட உன்னுல் அந்த பிரம்மன் அல்லது அழியாத ஆத்மா வைக் கண்டு பிடிக்க முடிவதில்லே. ஞானத்தின் மூலமாக அறியாமை அழிக்கப்பட்டால் உனக்கு அந்த மேலான தத்துவத்தைப் பற்றிய நேரடியான ஞானம் ஏற்படும்.

சூரியன் எவ்வாறு காரிருளேப் போக்குகின்ருனே அதேபோல ஆத்ம ஞானமானது மாபெரும் அறியாமையை அழிக்கின்றது.

ஒரு தீபத்தின் சுடரானது பேரிருளேப் போக்குகின்றது. அதே போல ஆத்ம ஞானம் மனிதவர்க்கத்தின் துன்பங்களுக்கும், இடுக்கண்களுக்கும் மூல காரணமாக இருக்கின்ற அறியாமை அல்லது அவித்தையை அழிக்கின்றது. ஆகவே ஆத்ம ஞானத்தைப் பெற்று, ஒளி விளக்கத்தை அடைந்து ஆனந்தமாகத் திரி.

எது நீளமோ, குட்டையோ இல்லாது, அதுவோ இதுவோ இல்லாது, அவ்வளவோ, அல்லது இவ்வளவோ இல்லாது இருக்கின்றதோ — அதை பிரம்மன் என்று புரிந்து கொள்ள வேண்டும். பிரம்மனே அறிந்து கொள்வதின் மூலம் மற்ற எல்லாம் தெரிந்து விடுகின்றது. அதன் பிறகு தெரிந்து கொள்வதற்கு வேறு எதுவும் இருப்பதில்லே.

பிரம்ம ஞானத்தை அடைவதின் மூலம் எண்ணிப் பார்க்க முடியாததாக இருப்பது எண்ணிப் பார்க்க முடிகின்றது, விளங்காமல் இருப்பது விளங்க வைக்கப்படுகிறது.

வைராக்கியம் மட்டும் உனக்கு மோக்ஷத்தைக் கொடுத்து மூல அஞ்ஞானத்தை அழித்து விடாது. ஆத்ம ஞானம் ஒன்றுதான் அவித்தையையும், அவித்தையின்

பலன்களையும், மனத்தையும், இந்திரியங்கள், பிராணன், ஸ்தூல சரீரம் ஆகியவற்றையும் அழிக்க முடியும்.

வித்தையும், அவித்தையும், இருளையும், ஒளியையும் போல் ஒன்றுக்கொன்று எதிரானது. அவித்தைக்கு மாயை என்றும் பெயர். அவித்தை ஒருவனை சம்சாரத்தில் பந்தப் படுத்துகின்றது. வித்தை ஒருவனுக்கு சம்சாரத்தைக் கடக்க உதவி புரிகின்றது.

சௌனகன் என்ற ஒரு பெரிய கிருஹஸ்தன் ஆங்கீர ஸரைப் பார்த்து, "ஓ பகவான், எதைத் தெரிந்துகொள் வதின் மூலம் எல்லாம் தெரிந்துவிடுகிறது" என்று கேட் டான். அது பர வித்தைதான். அதன் மூலம் அழியாத பிரம்மன் அறியப்படுகின்றது. "கஸ்மின் பகவோ விஜா நதே நிதம் விஜாநதம் பவதி".

ஞானம் உதயமாகும் பொழுது ஒருவன் மோக்ஷம் அல்லது விடுதலையைப் பெறுகின்றான். அவன் எல்லா விதமான துன்பங்கள், வலிகள் ஆகியவற்றினின்றும் விடு படுகின்றான். அவன் மனங் கடந்த பேரானந்தம் அல்லது எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்கின்ற நிலையான அமைதியை அனுபவிக்கின்றான்.

கீழே குறிப்பிடப்பட்டவைகள் வேதாந்தப் பிரமாணங் களாகும்: (ஞானத்திற்கான நிரூபணங்கள்)

1. பிரத்யக்ஷப் பிரமாணம் (நேரடி நிரூபணம்)
2. அனுமானம் (காண்பதின் மூலம் காணாததை யறிதல்.)
3. சப்த பிரமாணம் (வேதங்கள், அனுபூதிமான்கள் ஆகியோருடைய உறுதி மொழிகள்)
4. உபமானம் (அதைப்போல, இதைப்போல எனல்)
5. அர்த்தபத்தி (யூகித்தல்)
6. அனுபலப்தி (இல்லாதிருத்தலைப் பற்றிய ஞானம்)

ஜபம், தபஸ் முதலியவைகள் சம்ஸ்காரங்களைத் தேய்க்கின்றன. ஞானம் ஒன்றுதான் அவைகளைப் பூரண மாக ஒழிக்கின்றது.

மன ஒருமைப்பாடு, தியானம் ஆகியவற்றைப் பயிலா மல் நேரடியாக ஆத்ம ஞானம் அடைவது என்பது முடி யாது. நீ உணர்வுடன் கூடிய ஒரு உள்முகத் தேட்டம் (Conscious inward search) செய்து, நான்கு வித சாதனப் பயிற்சி மூலமாக உள்ளத்தைத் தூய்மையாக்கி, உறுதிப் படுத்திய பிறகு அதை அந்த மேலான ஆத்மனில் பதிய வைக்க வேண்டியிருக்கிறது.

ஆத்ம ஞானத்தைப் போன்றதொரு ஒளி வேறு எதுவும் கிடையாது. திருப்தியைப் போன்றதொரு செல்வம் வேறில்லை. சத்தியத்தைப் போன்ற நற்பண்பு வேறொன் றும் கிடையாது. ஆத்மனைப் போன்றதொரு பேரானந்தம் வேறில்லை. ஆத்மனைப் போன்ற நண்பன் மற்றெவருமில்லை. ஆகவே உன்னுடைய ஆத்மாவை அறிந்து கொள். திருப்தியை வளர்த்து வா. உண்மையே பேசு. ஆத்மா வின் பேரானந்த அமிர்தத்தைப் பருகு. ஆத்மனை நண்ப னுக்கிக் கொள்.

பிரம்ம ஞானத்தின் மூலமாகத்தான் அந்த விடுதலை பெறப்படுகின்றது. "பிரம்மனை அறிபவர்கள் யாராயிருப் பினும் அவர்கள் மரணத்தைக் கடந்து விடுகின்றனர். விடுதலைக்கு வேறு வழி ஒன்றும் கிடையாது" என்று சுருதிகள் அழுத்தந் திருத்தமாகப் பறை சாற்றுகின்றன. ஹ்ருதய ஞானேன முக்தி — விடுதலையானது ஆத்ம ஞானத்தின் மூலம் அடையப்படுகின்றது. அவன் மறுபடி பிறப்பது கிடையாது.

சம்சாரத்திற்கு மூலகாரணமாகிய அவித்தை அல்லது அஞ்ஞானத்தை சடங்குகள் செய்வதின் மூலம் நீக்கிவிட முடியாது. ஆனால் அது நிஷ்காம்ய பாவத்துடன் செய்யப் படுமானல் அது உள்ளத்தைத் தூய்மையாக்கும். ஆத்ம

ஞானம் ஒன்றுதான் அறியாமையையும் அதன் பலன்களை யும் களைந்தெறிவதற்குரிய ஒரே மார்க்கமாகும்.

இந்த நாம, ரூப, கிரியைகளோடு கூடிய உலக மானது பிரம்மன் அல்லது தூய, எங்கும் நிறைந்த, அழியாத ஆத்மாவின் மீது அறியாமையால், கயிற்றின் மீது பாம்பு எவ்வாறு சுமத்தப்படுகின்றதோ அதுபோல சுமத்தப் படுகின்றது. இந்த இரண்டு போலத் தோன்றுகின்ற தோற்ற மானது நீ ஆத்ம ஞானத்தை அடையும் பொழுது அத னுடைய பாகுபாடுகளாகிய கர்த்தா, போக்தா என்கின்ற தன்மைகள் மறைந்து போகும்.

## 4. அத்யாஸம் (கற்பனை)

"அத்யாஸம்" என்பது ஒரு பொருளினுடைய குணாதிசயங்களை மற்றொன்றின் மீது சுமத்துதல் அல்லது கற்பனை செய்தல். உதாரணமாக வெள்ளியினுடைய குணாதிசயங்கள் முத்துச் சிப்பியின் மீது சுமத்தப்படு கின்றன.

அதாவது ஒரு பொருளுக்கு அதற்குச் சொந்தமில்லாத குணாதிசயங்களை அதற்கு உரியதாகத் தவறுதலாக அதை பாவித்தல் அல்லது அதன் மீது சுமத்துதலாகும். பாம்புத் தன்மை கயிற்றின் மீது சுமத்தப்படுகிறது. இது அத்யாஸ மாகும். கற்பனை, பிராந்தி, அத்யாஸம் ஆகியவை ஒரே பொருளைக் கொடுக்கும் வார்த்தைகள். இந்த உலகமும் உடலும் பிரம்மன் அல்லது ஆத்மாவின் மீது சுமத்தப் படுகின்றன.

இந்த உடலுக்கும் ஆத்மனுக்கும் உள்ள சம்பந்த மானது சம்யோகமோ அல்லது சமவாய சம்பந்தமோ அல்ல. பிரகிருதிக்கும் புருஷனுக்கும் எந்த விதமான உண்மையான சம்பந்தமும் இருக்க முடியாது. தொடர்பு அத்யாஸ சம்பந்தம்தான். ஆத்மனை உடலோடு சம்பந்தப்

படுத்தியது மனத்திலேயுள்ள தவருன எண்ணமே. ஆத்மா எப்பொழுதும் அசரீரி (உடலற்றவன்) அதனுவாக இருப்பவன்.

எல்லா வேற்றுமைகளுக்கும் காரணம் உபாதி அல்லது வரையறுக்கப்பட சேர்மானமாகும். இந்த உபாதிகள் மாயை அல்லது பொய்யாக இருப்பதனுல் அவைகளால் ஏற்படுத்தப்பட்ட இந்த வேற்றுமைகளும் பொய்யானவைகளே. ஆகவே இரண்டாவது என்பது ஒன்றில்லாத பிரம்மன் மட்டுமே கடைசியாக எஞ்சி நிற்கின்றது. இவன் மட்டுமே முக்காலங்களிலும் இருக்கின்ருன்.

அத்யாஸ மென்பது ஒன்றை மற்ருென்ருக தவறுதலாக, உண்மையல்லாததை உண்மையாக, கற்பனை செய்துகொள்ளும் உள்ளப் போக்காகும். இந்த உலகத்தின் தோற்றம் இதற்குக் காரணமல்ல. இதை உண்மையென்று தவறுதலாக எண்ணிக் கொள்வதுதான் இதற்குக் காரணம். இது அறியாமை காரணமாகப் பிறக்கிறது. நீ உடலை உண்மையான ஆத்மா என்று தவறுதலாகக் கருதுகின்ருய். நீ அதனேடு பற்றுக் கொண்டிருக்கின்ருய். நீ அதை இறுகப் பிடித்துக் கொண்டிருக்கிருய். இது தேஹ அத்யாஸமாகும். அழியாத ஆத்மனைப் பற்றிய ஞானம் அத்யாஸத்தை அழிக்கும். எதிர்ப்புச் சக்தியை ஆரம்பித்து உன்னை தூய்மையான எங்கும் நிறைந்துள்ள ஆத்மனேடு அபேதமாக்கிக் கொள்ள முயற்சி செய்.

இந்த உலகம் என்பது பிரம்மனின்மேல் சுமத்தப்பட்ட வெறும் பிரமையே (அத்யாரோபம்). அபவாத யுக்தியானது இந்த அத்யாஸத்தை நீக்கும் தன்மையது. முத்துச் சிப்பியை வெள்ளி என்று தவருக எண்ணுதலும் அல்லது கானல் நீரை தண்ணீரென்று கற்பனை செய்து கொள்வதையும் விட்டுவிடுதல் போல இப்பிரபஞ்சமானது உண்மையிலேயே பிரம்மத்தில் இல்லை என்கின்ற எண்ணத்தை உறுதிப்படுத்துவது அபவாதமாகும். ஜீவன்

அதின் பலன்களையில்லாது காரணத்தின் உண்மை நிலையைப் பற்றி உறுதியாக சமாதானப் படுத்தப்பட வேண்டும். காரணத்தை விட்டு வேருக இருக்கின்ற எந்த ஒரு காரியமும் கிடையாது. பானை களிமண்ணை விட்டு வேருனதல்ல, துணி நூலை விட்டு வேருகப் பிரிந்ததல்ல, தங்க நகைகள் தங்கத்தை விட்டு வேருகப் பிரிந்திருப்பதல்ல. அதேபோல் இப்பிரபஞ்சமும் பிரம்மனை விட்டுப் பிரிந்து வேருக இருப்பதில்லை.

ஞானம் எதில் நிலைபெற்றிருக்கின்றதோ அது ஆத்மா. இது இரண்டு வகைப்படும். ஒன்று ஜீவாத்மா, மற்ருென்று பரமாத்மா. பரமாத்மா எல்லாமுணர்ந்த இறைவன். அவன் ஒரே ஒன்ருக இருக்கின்ருன். அவன் சுக துக்கத்திலிருந்து விடுபட்டிருக்கின்ருன். ஜீவாத்மா ஒவ்வொரு உடலிலும் வசிக்கின்றது. இது எங்கும் நிறைந்து சாசுவதமானதாக இருக்கின்றது.

இந்த உடல் உன்னுடைய கருவி மாத்திரமேயன்றி நீயே யல்ல. பயங்கொள்ளியாக இருப்பது மிகப் பெரிய பாவம். சுயநலத்தோடு இருப்பது மிகப் பெரிய குற்றம். ஒருவன் தன்னை உடலோடு அபேதமாக்குவது மிகப் பெரிய மதிகேடான தவறு. தன்னுடைய சொந்த ஆத்மாவையே மறந்து விடுவது மிகப் பெரிய தவறு.

நான் உங்களுக்கு ஒரு சிறிய கதை சொல்லுகின்றேன். செவிமடுத்து உற்றுக் கேளுங்கள். ஒரு சிங்கக் குட்டியானது அதனுடைய இறக்கும் தருவாயிலிருந்த தாயினுல் சில செம்மறியாடுகளுக்கிடையில் விடப்பட்டது. அவைகள் அந்த சிங்கக் குட்டியை பாதுகாத்து வளர்த்து வந்தன. அந்தக் குட்டிச் சிங்கம் பெரிய சிங்கமாக வளர்ந்து "பா-ஆ-ஆ" என்று கத்திற்று. ஒரு நாள் மற்ருெரு சிங்கம் வந்து இந்த ஆட்டுச் சிங்கம் மற்ற ஆடுகளோடு சேர்ந்து கொண்டு கத்துவதைக் கண்டது. அது ஆச்சரிய மேலீட்டினுல் திகைத்து நின்றது. அது அந்த

ஆட்டுச் சிங்கத்தைப் பார்த்து ''சகோதரா, என்ன விஷயம்? நீ ஏன் இவ்வளவு கேவலமான நிலையிலிருக்கின்ருய்?'' என்று கேட்டது. அதற்கு அந்த ஆட்டுச் சிங்கம் ''நான் ஒரு செம்மறி ஆடு. நான் இங்கு என்னுடைய சகோதர சகோதரிகளோடு சந்தோஷமாக இருக்கின்றேன்'' என்று பதிலளித்தது. ''நீ ஒரு பொய்யான மயக்கத்தில் இருக்கிருய்'' என்று கூறி அந்தச் சிங்கமானது ஆட்டுச் சிங்கத்தை அழைத்துக் கொண்டு ஒரு ஆற்றங்கரைக்குச் சென்று தண்ணீரில் அதனுடைய பிரதி பிம்பத்தைக் காட்டியது. அது அந்த ஆட்டுச் சிங்கத்தைப் பார்த்து, ''இப்பொழுது உன்னுடைய பிரதி பிம்பத்தைப் பார். நீ ஒரு சிங்கம், நான் ஒரு சிங்கம்'' என்று கூறியது. அந்த ஆடு பிரதி பிம்பத்தை உற்று நோக்கிப் பிறகு சந்தோஷத்துடன், ''எப்பேர்ப்பட்ட பயங்கரமான தவற்றை நான் செய்துவிட்டேன். நான் உண்மையிலேயே சிங்கம் தான். நான் செம்மறியாடு அல்லவே யல்ல'' என்று கூறியது. அது ஒரு பயங்கரமான கர்ஜனை செய்து விட்டு அந்தப் புதுச் சிங்கத்தோடு சென்றுவிட்டது.

சோதர, நீயும் அந்த ஆட்டுச் சிங்கத்தைப் போல் கத்திக்கொண்டிருக்கின்ருய். நீ உன்னுடைய உண்மையான தெய்வீக குணத்தை மறந்துவிட்டாய். நீ மாயையினுல் மயக்கப்பட்டிருக்கின்ருய். நீ அந்த மயக்கத்திலிருந்து தெளிந்து, ஓம் ஓம் ஓம் என்று கர்ஜித்து ஒரு வேதாந்தகேசரி (சிங்கம்) யாக ஆகு. நீ அழியாத ஆத்மாவாக இருக்கின்ருய். நீ உன்னை அழியக்கூடிய உடலோடு அபேதமாக்கிக் கொள்ளாதே. நீ உன்னை இறவாத, சாசுவதமான பிரம்மனேடு அபேதமாக்கிக் கொண்டு சுதந்திரமாக இரு.

எவ்வாறு ஒரு நாற்காலிக்கு சாக்ஷியாக இருப்பவன் நாற்காலியிலிருந்து வேறுபட்டு நாற்காலியாக இல்லாமல் இருக்கின்ருனே அதே போல்தான் இவ்வுடலுக்கு சாக்ஷியாக விளங்குபவனும் இருக்கின்ருன். அந்த சாக்ஷியின்

குணம், உண்மை, பேரானந்தம், ஞானம் ஆகியவையாம். நாற்காலியும், உடலும் உணர்ச்சியற்றவைகள் (ஜடப் பொருள்கள்), ஆகவே, ஓ ராமா, நீ இந்த உடல் அல்ல, நீ சாக்ஷியாக விளங்குகின்ற உணர்வு அல்லது அறிவாக இருக்கின்ருய் என்பதை அறிந்து கொள்.

ஆத்ம ஞானத்தை அடைவதற்கு ஒரு தடைக் கல்லாக இருக்கின்ற இந்தத் தோற்றம் அல்லது த்வைதம் அல்லது நாம ரூபங்களுடன் தோன்றுகின்ற இந்த உலகத் தோற்றம் கரைக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் உன்ஞல் பிரம்மனுடைய உண்மையான தன்மையைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். அதஞல் உயிருள்ள அல்லது உயிரற்ற வஸ்துக்கள் எல்லாம் அழிக்கப்பட வேண்டும் என்று பொருளல்ல. இரண்டு என்கின்ற மஞே பாவம் விடப்பட வேண்டும். நாம ரூபங்கள் விடப்பட்டு அதற்கு ஆதாரமானதும் மறைந்துள்ளதுமான சாரம் பற்றிக் கொள்ளப்பட வேண்டும். அறியாமை அழிக்கப் பட்டவுடனே உன்னிடமிருந்து பிரம்மனே மறைத்துக் கொண்டிருந்த நாம ரூபங்களாலாகிய உலகம் முழுதும் கனவுக் காட்சிகளேப் போல காணுமல் போய் விடும்.

கடலிலே வைக்கப்பட்டிருக்கும் பானையிலுள்ள நீரானது எவ்வாறு அந்தப் பானை உடைபட்டதும் கடலோடு இரண்டறக் கலந்து விடுகிறதோ, அதேபோல இந்த உடலாகிய பானையானது ஆத்மனேத் தியானிப்பதின் மூலம் உடைக்கப்படும் பொழுது இந்த ஜீவாத்மா அந்த பரமாத்மாவோடு சர்வ சமமாகி விடுகின்றது.

ஆத்மா கண்ணுக்குப் புலப்படாதவன், எல்லேயில்லாதவன், எங்கும் நிறைந்திருப்பவன். அவன் சத்-சித்-ஆனந்தமாக இருக்கின்ருன். இந்த உடல் பல பாகங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. இது முடிவுள்ளது. இது தசையால் ஆக்கப்பட்டிருக்கிறது. இருந்த போதிலும் அஞ்ஞானிகள் இரண்டையும் அபேதமாக்குகின்றனர்.

இதைவிட மோசமான அறியாமை எதாவது இருக்க முடியுமா?

ஆத்மா எப்பொழுதும் சாக்ஷியாக விளங்குகின்ற கர்த்தாவாகவே இருக்கிறது. அது ஒரு பொழுதும் பொருளாக இருப்பதில்லை. இந்தக் கர்த்தாதான் அறிவே வடிவான (சித்) பிரபஞ்ச ஆத்மாவாக இருக்கின்றான். இக் கர்த்தாவானவன், உடல்களும், அவைகளின் இந்திரியங் களும், இந்திரியப் பொருள்களுமாகிய அறிவற்ற தன்மை யுடைய ஜடப் பொருள்கள் அடங்கப் பெற்றவன்.

பிரம்மனுடைய பெருமையையும், மகிமைகளையும் யாரே வர்ணிக்கவல்லார்? வேதங்கள் கூட தங்களுடைய வரம்புக்குட்பட்ட திறமைக்குத் தக்கபடியே அவனைப் புகழ்ந்து பாடியுள்ளன. யாராலும் அவனுடைய ஆரம்பத் தையோ அல்லது முடிவையோ கண்டு பிடிக்க முடிய வில்லை. அவன் கால்களின்றி நடக்கின்றான், கைகளின்றி பிடிக்கின்றான், காதுகளில்லாமல் கேட்கின்றான், கண்களில் லாது பார்க்கின்றான், நாக்கின்றி சுவைக்கின்றான், மூக்கின்றி முகர்கின்றான், சருமமின்றி உணர்கின்றான், வாயில்லா மல் பேசுகின்றான். ஏனென்றால் அவன் ஒரு தூய உணர்வுத் திரளாக இருக்கின்றான். அவன் எங்கும் நிறைந்துள்ளான். அவனுக்கு எங்கு பார்த்தாலும் கைகளும், கால்களும், தலைகளும், முகங்களும் இருக்கின்றன. அவன் ஒரு அபூர்வ மான வஸ்து. அவன் மனோ வாக்கிற்கு அப்பாற்பட்டவன்.

பிரம்மனை வரையறுப்பது என்பது அவனை மறுப்பது ஆகும். பிரம்மனைப் பற்றிய போதுமான வர்ணனை ஒரு தொடர்ச்சியான எதிர்மறைகள்தான். ஆகவே தான், யாக்ஞவல்கிய முனிவர் பிரம்மனைப் பற்றிக் கூறும் பொழுது பிருஹதாரண்ய உபநிஷத்திலே ''நேதி நேதி — இது அல்ல, இது அல்ல, என்று பகர்கின்றார். நாம ரூபங்கள் அனைத்தையும் நீக்கிய பிறகு எஞ்சி இருப்பது பிரம்மன் ஒன்றுதான் என்பது இதிலிருந்து பொருள்படுகின்றது.

பிரம்மன் அல்லது ஆத்மா இப்பேர்ப்பட்டது என்று அறிந்து கொள்ள பூரணத்துவத்தை அல்லது விடுதலையை அடை. நீ உன்னை, உடலற்றவனாக எண்ணிக் கொள். மேலான ஆத்மனோடு உன்னை அபேதமாக்கிக் கொண்டு உனது எங்கும் நிறைந்துள்ள ஆத்மனுடைய மேலான அமைதியையும், சாசுவதமான பேரானந்தத்தையும் அனுபவி.

"ஐயா, பிரம்மனுக்கு உருவம் கிடையாது. அப்படியிருக்க நீங்கள் எப்படி பிரம்மாகார விருத்தி என்று கூறலாம்?" "குழந்தாய், மாயா வஸ்துக்களுக்கு இருப்பதைப் போன்ற ரூபம் பிரம்மனுக்கு இல்லை. சத்-சித் ஆனந்தமே அவன் வடிவம். சத்யம், ஞானம், ஆனந்தமே அவனுடைய உருவங்கள் என்று கூறுகின்றேன்."

படுதாவிலிருந்து சித்திரங்களையும், கல்லிலிருந்து சிற்பத்தையும், உன்னால் எவ்வாறு தனியாகப் பிரித்தெடுக்க முடியாதோ அதே போன்று அடித்தளம் அல்லது ஆதிஸ்தானம் அல்லது பிரம்மனிடமிருந்து உன்னால் நாம, ரூபங்களைத் தனியாகப் பிரித்தெடுக்க முடியாது.

காதணிகள், கைவளைகள், வங்கிகள், கழுத்தணிகள் ஆகியவைகள் எல்லாம் தங்கத்தின் மீது கற்பனையாக சுமத்தப்படுகின்றன. அது போலவே இந்தத் தோற்றங்கள், நாம ரூபங்கள் அனைத்தும் ஒவ்வொரு பொருளுக்கும் ஆதாரமாக விளங்குகின்ற பிரம்மன் மீது சுமத்தப்படுகின்றன.

எல்லா ஜீவன்களிடத்தும் உள்ள ஆத்மா ஒன்றே ஒன்றுதான். உபாதி, அந்தஹ்கரணம் (மனம்) ஆகியவை காரணமாக அது வெவ்வேறு ஆட்களிடத்தில் வேவ்வேருகத் தோற்றமளிக்கின்றது. ஆகாசம் ஒன்றே ஒன்றுதான். பானை, மேகம், அறை முதலிய உபாதிகள் காரணமாக அது கட-ஆகாசம், மேக-ஆகாசம், அறை-ஆகாசம் முதலிய பெயர்களால் பாகுபடுத்தப்படுகின்றது. பானையாகிய உபாதியானது அழிக்கப்பட்டு விட்டால், பானை உடைக்கப்

பட்டு விட்டால் அந்தப் பானை ஆகாசம் (கடாகாசம்) இந்தப் பிரபஞ்ச ஆகாசத்தோடு அபேதமாகி விடுகின்றது. அந்தஹ்கரணமாகிய உபாதியானது சாதனையின் மூலமாக இல்லாததாக்கப்பட்டு விடும் பொழுது இந்த ஜீவனானவன் எங்கும் நிறைந்த உணர்வோடு அபேதமாகி விடுகின்றான்.

ஒரு அறியாத மனிதன் தான் இந்த ஜீவனும் பிரம்மனும் அபேதமாக இருக்க முடியாது என்று கூறுகின்றான். அவன் முற்கூறப்பட்டது துன்பத்திற்குட்பட்டிருக்கிறது என்றும் பிற்கூறப்பட்டது எல்லாவிதமான துன்பங்களையும் கடந்து நிற்கின்றது என்றும் கூறுகின்றான். இது சரியல்ல. ஜீவனானவன் தன்னை இந்த உடலோடும், மனத்தோடும் அபேதமாக்கிக் கொள்ளுகின்ற காரணத்தினால் தான் துன்பமடைகின்றான். ஜீவன் தன்னுடைய அறியாமை காரணமாகவும், மனத்தோடும், உடலோடும் கொண்டுள்ள தொடர்பு காரணமாகவும் அவன் உலக வாழ்வின் துன்பங்களை அனுபவிக்கின்றான். அறியாமையானது ஆத்மஞானத்தின் மூலமாக அழிக்கப்படும் பொழுது, உடலோடும், உள்ளத்தோடும் கொண்டுள்ள தொடர்பு நீங்கும் பொழுது, ஆசைகளையும், விருப்பங்களையும், எண்ணங்களையும், மமதையையும் அழிப்பதின் மூலமாக மனமானது இல்லாததாக்கப்படும் பொழுது இந்த ஜீவன் பிரம்மனோடு அபேதமாகின்றான். ஜீவத்தன்மை மறைந்து விடுகின்றது. அவன் பிரம்மத்தன்மையை அடைகின்றான்.

முத்துச் சிப்பியானது, உண்மை அல்லது பொய் ஞானத்துக்குரிய வஸ்துவாக ஆகும் பொழுது அது தன்னுடைய இயல்பான நிலையினின்று மாறுபடுவதேயில்லை என்பது நிச்சயம். ஆனால் அதை அறிந்து கொள்பவன் அது என்னவாக இருக்கின்றதோ அதற்கு மாறுபட்ட வேறு ஏதோ ஒன்று என்று தானே கற்பனை செய்து கொள்கின்றான்.

தன்னை இந்த ஸ்தூல சரீரத்தோடு அபேதமாக்கிக் கொண்டிருக்கும் ஒரு அறியாத உலகாயத மனிதன், தன்

னுடைய இந்த உடலாகிய மூட்டையைப் போகுமிடமெங்கும் தினந்தோறும் சுமந்து செல்லுகின்ற ஒரு பிரத்யக்ஷமான கூலிக்காரன் அல்லது ரெயில்வே போர்ட்டராகவே இருக்கின்றான்.

மனிதன் முக்கியமாக (essence) ஒரு ஆத்மாவாக இருக்கின்றான். அவன் அடிப்படையில் ஒரு ஆவி அல்லது ஆன்மாவாக விளங்குகின்றான். அவன் தன்னுடைய மனமாகிய அறைக்குள்ளே ஒளிந்துகொண்டிருக்கும் ஆத்மாவைக் கண்டுபிடிப்பதற்காகவும், சாசுவதப் பேரானந்தத்தை அடையவும், ஆத்ம பாவத்துடன் மக்களுக்கு பணியாற்றவும் இந்த தேகத்தை அணிந்திருக்கின்றான்.

என் குழந்தாய், நீ ஏன் அழுகின்றாய்? நீ மிக உயர்ந்த உண்மையாக விளங்குகின்றாய். நீ சாசுவதப் பேரானந்த வடிவாக இருக்கின்றாய். நீ என்றும் மாற்றப்பட முடியாத ஒரு வஸ்துவாக இருக்கின்றாய். நீ மனம், இந்திரியங்கள் ஆகியவைகளின் பிடிக்கு அப்பாற்பட்டு இருக்கின்றாய். நீ எல்லை இல்லாதவன், கண்ணுக்குப் புலப்படாதவன், அழியாதவன். நீ எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஒரு பரிபூரணம். நீ காலத்தால் கட்டுப்படுத்தப் படாதவன். அகண்ட வெளியைப் போல் எல்லையற்றிருப்பவன். உனக்கு பிறப்பு இறப்பு எதுவுமில்லை. நன்மையும் தீமையும் உன்னைத் தீண்ட முடியாது.

மோக்ஷம் என்பது பிறப்பு இறப்புக்களிலிருந்து விடுபடுதல் ஆகும். இது நிரந்தரப் பேரானந்தத்தை அடைதலாகும். இதற்குத் தானாகவே இடம், காலம் எதுவும் கிடையாது; அதிலே அகம் புற நிலையும் எதுவும் கிடையாது. நீ மோக்ஷம் அல்லது கடைசி மீட்சியை அடையக் கடமைப்பட்டிருக்கிறாய். மோக்ஷமே உன்னுடைய லக்ஷியம். இந்தச் சிறிய "நான்" அல்லது அகந்தையை "நான் யார்?" என்கின்ற விசாரணையின் மூலமாகக் கொன்று விடு. நீ மோக்ஷத்தைப் பெற்று இவ்

வுலகின் சக்கரவர்த்தியாக மிளிர்வாய். நீ இப்பிறப்பிலேயே மோக்ஷத்தை அடைவாயாக.

தேஹ அத்யாஸத்தை (உடலோடு அபேதம் கொண்டிருத்தல்) அழிக்க நீண்டகாலம் பிடிக்கும்; நீ பரிபூரணமாக பிரம்மனிலே நிலைபெற்று விடும் பொழுது இது முற்றிலும் மறைந்து விடும். எவ்வளவுக்கெவ்வளவு பிரம்மபாவனை ஏற்படுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு தேஹ அத்யாஸம் குறைக்கப்படும். ஆகவே தினந்தோறும் அடிக்கடி பிரம்ம சிந்தனையின் மூலமாக இடைவிடாது பிரம்மனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதின் மூலமாக உன்னுடைய பிரம்ம பாவனையை பலப்படுத்திக்கொண்டு வா.

---

# அத்தியாயம் பதினொன்று

# வேதாந்தம்

## 1. வேதாந்த தத்துவம்

எல்லா தத்துவ தரிசனங்களிலும் வேதாந்தம் முதன்மை ஸ்தானம் வகிக்கின்றது. இது மானிடனின் கற்பனைத் திறன், அதனுடைய உச்சியையே அடைந்திருக்கின்ற ஒரு தத்துவ தரிசன முறையாகும். இது உண்மையிலேயே ஒப்புயர்வற்ற சிந்தனு முறையாகும். அதனுடைய அடிப்படைக் கொள்கைகளைப் பற்றிக் கொள்வதற்கு சூக்ஷ்மமான, கூர்மையான அறிவு தேவைப்படுகின்றது. அதனுடைய முடிவுகளிலுள்ள உறுதிப்பாடு ஒப்புயர்வற்றது. இது எல்லாவிதமான பிடிவாதச் சாயல்களிலிருந்தும் முற்றிலும் விடுபட்டிருக்கின்றது.

வேதாந்தம் என்பது ஒரு சமயக் கோட்பாடோ அல்லது சடங்கோ, அல்லது வழிபாட்டு முறையோ அன்று. இது உண்மைப் பொருளைப் பற்றிய விஞ்ஞானமாகும். நீ அழியாத, எங்கும் நிறைந்த ஆத்மனுக, சத்தாக உண்மையிலே, மேலான பிரம்மனுக இருக்கின்றாய் என்று தைரியமாக பிரகடனப்படுத்துகின்றது.

வேதாந்தம் மிகவும் அனுஷ்டானத்திற்குரியது. இது ஒரு முடியாத கொள்கையை உபதேசிக்கவில்லை. வாமதேவர், ஜட பரதர், சங்கரர் மற்றும் பலபேர்கள் வேதாந்தத்தின் உண்மையை உணர்ந்திருக்கின்றனர். விரும்பினுல் நீயும் உணரலாம். முறையான இடைவிடாத பயிற்சி தான் தேவை. ஸ்ருதிகளின் வாக்கிலேயும், உன்னுடைய குருவினுடைய வார்த்தைகளிலும் உனக்கு பரிபூரண நம்பிக்கை இருக்க வேண்டும். முதலில் உன் பேரிலேயே உனக்கு பரிபூரண நம்பிக்கை இருக்க வேண்டும்.

வேதாந்தம் அல்லது ஆத்மனைப் பற்றிய ஞானமானது இமயமலை காடுகளிலோ அல்லது குகைகளிலோ வசித்து வரும் சந்நியாசிகளினுடைய ஏகபோக சொத்தல்ல. உபநிடதங்களை வாசித்துப் பார். அதிலே வாழ்க்கை வியவகாரங்களிலே மிகவும் சுறு சுறுப்பாக ஈடுபட்டிருந்த பல க்ஷத்திரிய அரசர்கள் பிரம்ம ஞானம் உடையவர்களாக இருந்தனர் என்பதைக் காணுவாய். அவர்கள் பிராம்மண குருமார்களுக்குக் கூட உபதேசம் கொடுத்திருக்கின்றனர்.

வேதாந்தம் என்பது உபநிடதங்களின் மதமாகும். இது எல்லோருக்கும் சொந்தமான சொத்தாகும். எப்பேர்ப்பட்ட மதமாயினும் அதனோடு இதற்குச் சண்டை கிடையாது. இது சமரசக் கொள்கைகளை உபதேசிக்கின்றது. இது உலகிலுள்ள எல்லா மதங்களினுடைய ஊற்று ஸ்தானமாக விளங்குகின்ற அந்த சமரச மதக் கோட்பாட்டை உணர்த்துகின்றது. இது ஒரு பெரிய சமன்படுத்தும் இயந்திரமாகும். இது எல்லோரையும் ஒன்று சேர்க்கிறது. இது எல்லோருக்கும் இடங் கொடுக்கிறது.

உண்மையான, நிரந்தரமான ஆழ்ந்த வைராக்கியம் உடையவனும், துறவு மார்க்கத்தில் செல்லுபவனும் ஆகிய ஒருவனால் தான் வேதாந்தத்தைக் கடைப் பிடிக்க முடியும். தகிக்கின்ற வைராக்கியம் இல்லாதவர்களும், மனைவி, மக்கள், சொத்து ஆகியவற்றின் மீது இன்னும் பற்றுக் கொண்டிருப்பவர்களும், ஆனால் ஒரு மந்தரகமான வைராக்கியத்தை உடையவர்களும் ஆகிய இல்லறத்தார்க்கு தன்னலமற்ற சேவையோடு கூடிய பக்தி மார்க்கம் மிகவும் பொருத்தமானது.

வேதாந்தம் என்றால் "அடிமைத்தனம் இல்லை" என்று பொருள். இது எல்லோருக்கும் சுதந்திரத்தைக் கொடுக்கின்றது. இது எல்லோரையும் அணைத்துக் கொள்கின்றது. இது உபநிடதங்களின் மதமாகும். இது பரமஹம்ச சந்நியாசிகளின் மதமாகும்.

“நான் எங்கும் நிறைந்த, சுயம் பிரகாசமான, அறியாத, பிரிக்க வொண்ணத, சாசுவதமான, சத்-சித்-ஆனந்த பிரம்மன்”. இதுதான் வேதாந்தத்தின் கூட்டுத் தொகை.

ஸ்ரீ சங்கருடைய வேதாந்த தரிசனத்தின் அடிப் படைக் கொள்கைகள் பின்வரும் ஈரடிச் செய்யுளில் அழகாக சுருக்கிக் கூறப்பட்டுள்ளன. “கோடிக் கணக்கான புத்தகங்களில் கூறப்பட்டிருப்பவைகளை பாதிச் செய்யுளில் நான் தெரிவிக்கின்றேன்; பிரம்மன் உண்மையானது, உலகம் காணப்படுவது (உண்மையல்லாதது), ஜீவன் பிரம்மனைத் தவிர வேறில்லை”.

உண்மையான சாதகனுக்கு ஆத்மா ஒரு விலைமதிக்க முடியாத செல்வமாகும். ஆன்மீகச் செல்வமே அழியாச் செல்வம். “சுவர்க சாம்ராஜ்யம் ஒரு வயலில் புதைக்கப் பட்டிருக்கும் செல்வத்தைப் போன்றது. யாரோ அதைக் கண்டு பிடித்து அதை மறுபடியும் புதைத்து விட்டு, தன் னுடைய கண்டு பிடிப்பிலே ஆனந்தமடைந்து வீட்டிற்குச் சென்று தன்னிடமிருந்த சகலத்தையும் விற்று விட்டு அந்த வயலை வாங்கிக் கொண்டான்” என்று பகவான் இயேசு நாதர் பகர்கின்றார். (மத்தேயு 13-44).

வினைகளினால் சேர்த்து வைக்கப்படும் பலன்கள் அழியக்கூடியவை. ஆகவே விவேகமுள்ள மனிதன் வினை களின் மீதுள்ள எல்லாப் பற்றுகளையும் இழந்து விடுகின்றான். அவன் ஆத்மானுபூதியை மட்டும் அடைய விரும்பு கின்றான்.

மைத்ரேயி, யாக்ஞவல்கிய முனிவருடைய பாத கமலங்களில் அமர்ந்து இந்த ஆத்மா அழியாதது, பற்றற்றது, சுதந்திரமானது, வலி அல்லது அழிவிற்குட் பட்டதல்ல என்பதைக் கற்றுக் கொண்டார். இது உண்மை யான கல்வி.

புகழ்பெற்ற விஞ்ஞானி ஸ்ரீ J. C. போஸ், தான் புதிதாகக் கண்டு பிடித்த கருவிகளின் மூலமாக உலோகங்களுக்கும், தாவரங்களுக்கும் நரம்பு மண்டலம், நாடித் துடிப்பு, உணர்வு ஆகியவைகள் உண்டு என்பதை நிரூபித்துக் காட்டினார். ஒரு செடிக்கு மருந்து கொடுக்கலாம், விஷம் வைக்கலாம், மேலே உயர்த்தலாம், சோர்வடையச் செய்யலாம், களைப்படையச் செய்யலாம் என்று அவர் கூறுகின்றார். ஒரு தங்கக் கட்டியானது விஞ்ஞான சோதனைகளுக்கு இணங்கிக் கொடுக்கின்றது, அதைத் துண்டு துண்டாக வெட்டிய பொழுது ஒவ்வொரு துண்டும் அதே மாதிரி இணங்குகிறது. ஒரு பிராணிக்கும் ஒரு தாவரத்திற்கும் அடிப்படையில் வேற்றுமை ஒன்றும் இல்லை, அவருடைய அதிசயமான ஆராய்ச்சிகள் மேலை நாட்டு விஞ்ஞானிகளுடைய கண்களையும் திறந்தன. அவைகள் உயிருக்கும் உணர்வுக்கும் உள்ள ஒற்றுமையை நிரூபித்து வேதாந்தத்தின் உண்மைகளை ஊர்ஜிதப்படுத்தி விட்டன.

நீ ஒரு சிங்கமாக இருக்கின்றாய். ஆனால் பல காலமாக நீயே உன்னை ஒரு சிறு ஆட்டுக்குட்டியாக பாவித்துக் கொண்டு மயங்கிக் கிடக்கின்றாய். இப்பொழுது எழுந்து நில். உன்னிடமிருக்கும் அந்த மயக்கத்தை நீயே தெளிவித்துக் கொள்ள உறுதி பூண்டு மறுபடியும் ஒரு சிங்கத்தைப் போன்று, ஒரு வேதாந்த சிங்கத்தைப் போன்று கர்ஜனை செய். ஓம் ஓம் ஓம் என்று கர்ஜனை செய்.

சில சமயங்களில் நீ இறந்து விட்டதாகவும் உன்னுடைய உறவினர்கள் அழுது கொண்டிருப்பதாகவும் கனவு காண்கின்றாய். இறந்து விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கின்ற அந்த நிலையில் கூட நீ அவர்கள் அழுவதைப் பார்க்கவும், கேட்கவும் செய்கின்றாய். பிரத்யக்ஷ மரணத்திற்குப் பிறகும் கூட உயிர் உண்மையாக இருக்கிறது என்பதை இது தெளிவாகக் காட்டுகின்றது. இந்த ஸ்தூல உறையானது எறியப்பட்டு விட்ட பிறகும் நீ

இருக்கின்றாய். அந்த நிலைபேறு தான் ஆத்மா அல்லது பெரிய " நான் ".

" நான் இருக்கின்றேன் " என்று நீ உணர்கின்றாய். இதுவே கடவுள் இருக்கிறார் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றது. இருத்தல் என்பது கடவுள் அல்லது பிரம்மன் ஆகும். உனக்கு எல்லா விதமான சௌகரியங் களும் உடமைகளும் இருந்தும் உனக்கு இன்னும் ஏதோ தேவைப்படுவதைப் போலவே எப்பொழுதும் உணருகின் றாய். நிறைவுணர்ச்சியே கிடையாது. நீ எல்லாம் நிறைந்த கடவுளை உன்னோடு சேர்த்துக் கொண்டால் நீ நிறைவு பெறுவாய். நீ ஒரு கெட்ட செய்கையைச் செய்யும் பொழுது பயப்படுகின்றாய். உன்னுடைய மனச் சாட்சி உன்னைக் குத்துகிறது. இதுவும் கடவுள் இருக்கின் றார், அவர் உன்னுடைய எல்லா எண்ணங்களையும், செயல் களையும் சாக்ஷியாக இருந்து கவனித்துக் கொண்டிருக்கிறார் என்பதை நிரூபித்துக் காட்டுகிறது.

மேலை நாட்டுத் தத்துவ ஞானிகள் கூறுகின்ற " உயர்ந்த ஆத்மா " (Over soul), உபநிஷத்துக்களிலே கூறப்படும் பிரம்மன் அல்லது வேதாந்திகளின் ஆத்மாவே தான். ஜீவாத்மாவுக்கு ஆதாரமாக விளங்கும் பரமாத்மா தான் அந்த " உயர்ந்த ஆத்மா " வாகும். இந்த " உயர்ந்த ஆத்மா " வானது Kant னுடைய " தானே பொருளாக " இருக்கின்ற அல்லது ஸ்பினோஜாவின் சாரமாக விளங்குவதாகும் (The 'Oversoul' is the substance of Spinoza or the "Thing in itself" of Kant). வேதாந்தத் தின் சாரம் மெதுவாக மேலைநாட்டு தத்துவ ஞானிகளின் உள்ளங்களில் புகுந்திருக்கின்றது. அவர்கள் இப்பொழுது உடல் மனம் ஆகியவற்றிலிருந்து வேறாக இருக்கும் அழியாத ஆத்மா ஒன்று இருக்கிறது என்பதை ஒத்துக் கொண்டு விட்டார்கள்.

பிரஜையானவன் மஹாராஜாவைப் பார்த்திராவிட்டா லும், ராஜ்யத்தில் நிலை நாட்டப்பட்டிருக்கும் ஒழுங்கிலிருந்து

ராஜ்யத்தை ஆண்டு கொண்டிருக்கும் ஒரு மஹாராஜா இருக்கின்றார் என்பதை அவன் அறிந்து கொள்கின்றான். அதேபோல நீ கடவுளை நேருக்கு நேராகப் பார்த்திரா விட்டாலும் பிரபஞ்சத்தில் நிலைநாட்டப்பட்டிருக்கும் ஒழுங்கிலிருந்து அவன் இருப்பதை அறிந்து கொள்ளலாம்.

களி மண் பொம்மையைப் போன்ற இந்த ஸ்தூல சரீரத்தை பல்வேறு விதங்களில் ஆட்டி வைப்பவன் யார்? இந்த சரீரத்தின் சூத்திரதாரி யார்? அவனைக் கண்டுபிடி.

மனம், வாக்கு, காதுகள், கண்கள், மற்றும் இதர அவயவங்கள் எல்லாம் உறங்கிக் கொண்டிருக்கும் பொழுது பிராணன் ஒன்று தான் விழித்துக் கொண்டிருக்கின்றது. பிராணனுடைய அதிர்ச்சியை ஏற்படுத்துவது யார்? இந்தப் பிராணனுக்கு ஆதாரமாக விளங்குவது யார்? இது தான் பிரம்மன். அவனே ஒவ்வொன்றிற்கும் யோனி அல்லது கருவூலமாக விளங்குகின்றான்.

புறத் தோற்றங்கள் ஒவ்வொரு விநாடியும் மாறிக் கொண்டே இருந்த போதிலும் அவைகள் எல்லா வற்றுடனும் நீக்கமறக் கலந்திருக்கும் முடிவான உண்மை மாறாததாகவே இருக்கின்றது.

"இந்த ஆத்மனிலிருந்து ஆகாசம் பிறந்தது; ஆகாசத் திலிருந்து வாயு; வாயுவிலிருந்து நெருப்பு; நெருப்பி லிருந்து நீர்; நீரிலிருந்து பூமி; பூமியிலிருந்து தாவரங்கள்; தாவரங்களிலிருந்து உணவுப் பொருள்; உணவுப் பொருளி லிருந்து மனிதன்; இந்த மனிதன் உணவுச் சத்தினால் ஆக்கப்பட்டிருக்கின்றான்" என்று தைத்திரீய உபநிஷத் திலுள்ள பிரஹ்மானந்த வல்லியில் கூறப்பட்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள் (அத் 11-1)

இந்த சம்சாரம் அல்லது வாழ்க்கைச் சுழல் ஆதி யற்றது. கர்மத்திற்கும் ஆரம்பம் கிடையாது. எதற்கு

ஆரம்பம் இல்லையோ அதற்கு முடிவும் இல்லை. இது எல்லோரும் ஏற்றுக்கொண்ட நியதி. ஆகவே இந்த சம்சாரத்திற்கு முடிவே கிடையாது. ஆத்ம ஞானத்தை அடைந்த ஞானி ஒருவனுக்குத் தான் இதற்கு முடிவுண்டு.

நீ புலன்களினால் ஏமாற்றப்படுகின்றாய் அல்லது மயக்கப்படுகின்றாய். எது மாறுபாடடைந்து அழியக்கூடிய தாக இருக்கிறதோ அது உண்மையாக இருக்க முடியாது. உண்மையில் மனமோ அல்லது பொருளோ, உலகமோ அல்லது சிருஷ்டியோ கிடையாது. பிரம்மன் மட்டுமே அவனுடைய ஒப்பற்ற மகிமையில் பிரகாசித்துக் கொண் டிருக்கின்றான். இதுவே பரிபூரண உண்மை.

பிரம்மனைப் பற்றிய நேரடியான இயற்கை ஞானம் மட்டுமே நம்மை பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுவிக்க வல்லது. வேறு வழி யொன்றும் கிடையாது. ஸ்ருதிகள் வற்புறுத்திக் கூறுகின்றன :

வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்
தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி
நான்ய : பந்தா வித்யதே அயனாய.

"நான், சூரியனைப் போன்று பிரகாசம் பொருந்தியவனும், அறியாமையாகிய இருளைக் கடந்து நிற்பவனுமாகிய அந்த மஹா புருஷனை அறிவேன். அவனை அறிவதன் மூலமாகத் தான் ஒருவன் இறவாத்தன்மையை அடைகின்றான். சாசுவதப் பேரானந்தத்திற்கு வேறு வழி இல்லை.

(ஸ்வேதஸ்வதர உபநிஷத் III-8)

உண்மை அல்லது பிரம்மன் மனிதனால் உணரப்படக் கூடியதே. பலர் ஆத்மானுபூதி அடைந்திருக்கின்றனர். பல பேர்கள் நிர்விகல்ப சமாதியை அனுபவித்திருக்கின்றனர். ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ தத்தாத்ரேயர், மனஸூர் ஷாமஸ் தப்ரீஜ், பகவான் இயேசு நாதர், பகவான் புத்தர் ஆகியோர் எல் லோரும் அனுபூதி பெற்ற ஆத்மாக்களே. அவர்களுக்கு

உண்மை அல்லது தெய்வீக திருஷ்டி அல்லது அபரோக்ஷ அனுபூதியின் நேரடியான காட்சி கிட்டியிருக்கின்றது. ஆனால் அதை அறிந்த ஒருவன் அதை எடுத்துச் சொல்ல மார்க்கமில்லாத காரணத்தால் மற்றவர்களுக்குத் தெரியப் படுத்த முடியவில்லை. எல்லோருக்கும் பொதுவான ஐம் புலன்களினால் பெற்ற அனுபவங்களைக் கூட மற்றவர் களுக்குத் தெரியப்படுத்த முடிவதில்லை. கற்கண்டையே சுவைத்திராத ஒருவனுக்கு அதனுடைய ருசியை உன்னால் எடுத்துரைக்க முடியாது. ஒரு பிறவிக் குருடனுக்கு வர்ணத்தின் தன்மையை உன்னால் எடுத்து விளக்க முடியாது. ஒரு குரு அவருடைய சீடனுக்கு உண்மையை அறியும் மார்க்கத்தை அல்லது ஸஹஜ ஞான தத்துவத்தை வெளிப்படுத்துவதற்கு அழைத்துச் செல்லும் வழியை மட்டும் தான் எடுத்துரைக்க முடியும்.

"ஏகம் சத் விப்ரா பஹுதா வதந்தி - இருப்பது ஒன்று தான், ஞானிகள் அதைப் பல பெயர்களால் அழைக் கின்றனர்" (ரிக் வேதம் I ; 164-46) என்று வேதம் அநாதி காலம் தொட்டு பகர்கின்றது. கடவுள், பிரம்மன், அல்லா, ஈஸ்வரன், ஜெஹோவா, அஹுர் மஸ்டா முதலிய யாவும் ஒன்றே. நான், ஒப்பற்ற, சாசுவதமான, சஜாதீய சாரமாக விளங்குகின்ற, பிரிக்க முடியாத பேரானந்த ஞான ஸ்வரூபமாக விளங்குகின்ற அந்த மேலான பரம் பொருளுக்கு என்னுடைய வணக்கத்தைச் செலுத்துகின் றேன். அறிவினுடைய பலதிறப்பட்ட தன்மை காரண மாக ஞானிகள் அந்தப் பரம் பொருளைப் பல விதங்களில் அழைக்கின்றனர்.

ஓய்வு, அமைதி, பூரணத்துவம், விடுதலை, வாழ்வின் நிறைவு, நிர்வாணம், நிர்விகல்ப சமாதி அல்லது சஹஜ அவஸ்தை, கைவல்யம் அல்லது மோக்ஷம் என்று இது போன்ற எந்தப் பெயர் கொண்டு வேண்டுமானாலும், அழைத்துக் கொள்ளுங்கள்; இந்த அற்ப உலகாயதப் பொருள்கள் உனக்குப் பூரண திருப்தியைக் கொடுக்காத

காரணத்தால் நீ உன்னை யறியாமலேயே ஒவ்வொரு செயலிலும் அப்பரம்பொருளை நோக்கி ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றாய். காலினுடைய ஒவ்வொரு அடியும் அந்த சத்-சித்-ஆனந்த பிரம்மனை நோக்கியே எடுத்து வைக்கப் படுகின்றது.. ஒரு திருடன் அல்லது போக்கிரி கூட அந்த அழியாத பிரம்ம லோகத்தை நோக்கித்தான் சென்று கொண்டிருக்கின்றான். ஆனால் அவன் சுற்றி வளைந்த அல்லது நெளிந்த பாதையிலே சென்று கொண்டிருக்கின்றான்.

பிரம்மன் பரிபூரண உணர்வு மயமாக இருக்கிறது. உணர்வு ஒன்றுதான் முற்றிலும் உண்மையானது. இந்த ஜடப் பொருள் நம்முடைய சாதாரண உலகாயத அனுபவ ரீதியில் (வியவஹாரம்) பார்க்கும் பொழுதுதான் உண்மை யானது.

காலம் என்பது நேரத்தின் ஓட்டம். காலம் பகவான் அல்லது இறைவனுடைய சக்தியாகும் (கால சக்தி). ஆத்மா அல்லது பிரம்மன் காலங்கடந்தவன் (காலாதீதன்). காலம், இடம், காரணம் ஆகியவைகளுக்குட்பட்ட எல்லா வஸ்துக்களும் அழியக்கூடியவை. காலம் கடந்து நிற்பது எதுவோ அது அழியாதது.

பிரம்மன் துக்கத்திலிருந்து விடுபட்டவன். ஜீவன் துன்பம் நிறைந்தவன். பிரம்மன் சாசுவதமாகவே சுதந்திர புருஷன். ஜீவன் கட்டுப்பாட்டுக்குட்பட்டவன். பிரம்மன் சர்வ சக்திமான், சர்வக்ஞன் (எல்லாம் உணர்ந்தவன்), அபரிச்சின்னன் (எல்லையற்றவன்), எங்கும் நிறைந்தவன் (விபு, சர்வவியாபி). ஜீவன் அல்பக்ஞன், அல்ப சக்திமான், பரிச்சின்னன், ஏகதேசிகன்.

பிரம்மன் எல்லா ஜீவன்களுடைய இருதயத்திலும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அந்த மனங் கடந்த புருஷன். அவன் குருமார்களுக்கெல்லாம் குருவாகவும்,

கடவுள்களுக் கெல்லாம் கடவுளாகவும், தேவர்களுக் கெல்லாம் தேவனுகவும், சூரியர்களுக்கெல்லாம் சூரியனுக வும், ஒளிகளுக் கெல்லாம் ஒளியாகவும் விளங்குபவன். அவன் பேரானந்த ஞான சாகரமாக விளங்குகின்ற எல்லை யற்ற " நானு " க இருப்பவன். ஒவ்வொரு பொருளுக்கும் ஆதாரமாக இருப்பவன். அவன் உன்னுடைய உண்மை யான ஆத்மாவாக இருக்கின்ருன். அவன் பிறப்பற்றவன், இறப்பற்றவன், காலமற்றவன், இடமற்றவன், காரணமற்ற வன், அசைவற்றவன், மாற்றமற்றவன்.

நீ அழியாத ஆத்மன். அந்த ஆத்மாவை வெடி குண்டுகளோ அல்லது ஆயுதங்களோ காயப்படுத்த முடியாது. இது ஊறு படுத்தப்பட முடியாதது. கண்ணுக் குப் புலப்படாதது, அழிக்க முடியாதது. இந்த அந்தரங்க ஆத்மனில் வசி. மேற்கூறிய கொள்கைகளிலே நிலை பெற்றிரு. புலம்பலுக்கோ அல்லது பயத்திற்கோ இடமே கிடையாது. தைரியமாக இரு. உற்சாகத்துடன் இரு.

" நான் அந்த மாற்றமற்ற, சுயம் பிரகாசமான, சாசுவதமான, தூய்மையான, பரிபூரணமான, பிரிக்க முடியாத, எங்கும் நிறைந்த மேலான ஆத்மாவாக இருக்கின்றேன் " என்று எவன் ஒருவன் உணர்ந்து விடு கிருனே அவன் பந்தத்திலிருந்து விடுபடுகின்ருன். இதை உணராதவன் பந்தத்தில் சிக்கிக் கொண்டிருக்கின்ருன்.

நீ இருதயத்திற்குள்ளே மறைந்திருக்கும் இந்த அழி யாத ஆத்மனை உணர்ந்தால், அவித்தை (அறியாமை), காமம் (ஆசை), கர்மம் (செய்கை) என்கின்ற மூன்று முடிச்சுக்களும் துண்டிக்கப்பட்டுவிட்டால், அறியாமை, அவிவேகம், அகந்தை, விருப்பு வெறுப்புக்கள், கர்மம், உடல் என்று சொல்லப்படுகின்ற அறியாமைச் சங்கிலி யானது தகர்த்தெறியப்பட்டால் நீ இந்த பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுபடுவாய். அமர சாம்ராஜ்யத்தினுள் நீ நுழைவாய்.

மஹத் என்பது பிரக்ருதியின் முதல் மாற்றம் (விக்ருதி). மஹத் என்பது புத்தி (அறிவு). இது இரண்டு வகைப் படும். ஒன்று வியஷ்டி (தனித்தனி), மற்றொன்று சமஷ்டி (கூட்டு). சமஷ்டி மஹத் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மா.

மாயை அல்லது அவ்யக்தத்தின் மற்றொரு பெயர் தான் மூல பிரக்ருதி. இந்த தோற்றத்துடன் கூடிய பிரபஞ்சத்திற்கு இது தான் ஆதாரம் அல்லது வித்தாக இருக்கின்றது. பிரளய காலத்தின் போது பிரபஞ்சம் முழுவதும் இந்த மூல பிரக்ருதியில் எடுப்பு சாப்பாட்டுப் பாத்திரத்திலே (Tiffin-Carrier) எல்லா பாத்திரங்களும் அடங்குவதைப் போலவும், பிரயாணப் படுக்கைக்குள்ளே (bed canvas or bed holder) தலையணைகள், ஜமக்காளம், போர்வைகள், படுக்கை விரிப்புக்கள் முதலியவைகள் அடங்குவதைப் போலவும் அடங்கி விடுகின்றது.

ஸ்வரூபம் என்றால் ஆத்மன் அல்லது பிரம்மன் என்று பொருள். ஸ்வரூப தியானம் என்பது சத்தியம் அல்லது உண்மையை (ஆத்மா அல்லது பிரம்மனை) தியானிப்பதாகும். வேதாந்தம் என்றால் வேதங்கள் அல்லது ஞானத்தின் முடிவு என்று பொருள். நான்கு வேதங்களும் பிரம்மாவினுடைய வெளிச் சுவாசத்திலிருந்து வெளி வந்தவை. பிரம்மனைப் பற்றி விரிவாகப் புரிந்து கொள்ள மாண்டூக்ய உபநிஷத் ஒன்றைப் படித்தாலே போதுமானது.

பிரம்மனிடமிருந்து இந்த உலகம் தோன்றியிருக்கின்ற காரணத்தினால் பிரம்மனை ஒரு விகாரியாக (மாற்றமடையக் கூடியவனாக) ஆக்க வேண்டிய அவசியமில்லை. பிரம்மன் ஒரு சிறிதும் பாதிக்கப்பட வேண்டிய அவசியமில்லை. இந்த மாற்றம் ஒரு ரசாயன மாறுதல் அல்ல. பிரம்மன் எந்த விதத்திலும் பாதிக்கப்படாமலேயே இப் பிரபஞ்சத்தை வெளிப்படுத்தியுள்ளான். இந்த ஒரு பிரம்மன் தன்னுடைய சக்தியின் மூலமாக இந்த நாம ரூபங்கள் எல்லா

வற்றையும் அணிந்து கொண்டு பலவாகத் தோற்றமளிக்க முடியும். அவனிடத்தில் எந்த வித மாறுபாடும் கிடையாது. இந்த உலகம் வெறும் தோற்றமே. பிரம்மனே கல்லாகவும், மரமாகவும், நட்சத்திராதிகளாகவும் தோன்றுகின்றான். இந்த உருவங்களைச் செய்ய அவனுக்குக் கருவிகளோ அல்லது கைகளோ தேவையில்லை. அவன் சைதன்யமாக, சுயம்பிரகாசமான ஞானமாக விளங்குகின்றான். வெறும் விருப்பத்தின் மூலமாக அவனால் எண்ணற்ற உலகங்களை உண்டு பண்ண முடியும். எவ்வாறு ஒரு விதையினுடைய சக்தியானது ஒரு மரத்தை உண்டு பண்ணுகிறதோ அதுபோல பிரம்மனுடைய ஸ்வபாவமானது இந்த பிரபஞ்சத்தை உண்டு பண்ணியிருக்கிறது. தோற்றமானது (projection) நிலைபேற்றுடன் (Existence) சேர்ந்து இருக்கின்றது (Coexists). இப்பிரபஞ்சம் தோன்றக் காரணம் எப்படி இந்த பிரம்மனானவன் சத்-சித்—ஆனந்தத்திற்கு நேர்மாறான குணங்களுடன், அசத், ஜடம், துக்கம் ஆகியவற்றோடு கூடிய அவித்தையை எவ்வாறு உடையவனாக இருக்க முடியும் என்கின்ற புதிர் ஆகியவற்றை இந்த எல்லையோடு கூடிய அறிவினால் புரிந்து கொள்வது என்பது முடியாது. பிரம்ம ஞானத்தைப் பெறு. அப்பொழுதுதான் இந்த "அதிப் பிரச்னை" அல்லது மனங்கடந்த கேள்விக்கு உனக்கு விடை கிடைக்கும்.

ஸ்ருதியிலே ஒரு இடத்தில் பிரம்மன் "அவாங் மனோ கோசரனாக - மனோவாக்கிற்கு அப்பாற்பட்டவனாக" இருப்பதாகக் கூறியிருப்பதை நீங்கள் காணலாம். மற்றொரு இடத்திலே "மனஸைத் வருஷ்டவ்யம் – பிரம்மன் மனத்தினால் மட்டுமே பார்க்கப்படக் கூடியவன்" என்று இருப்பதையும் காணலாம். இவை ஒன்றுக்கொன்று நேர்மாறான, முரணானவைகள் அல்ல. இதன் பொருள் என்னவென்றால் பிரம்மனானவன் அகந்தை, மோஹம், காமம், கோபம் முதலிய தீய குணங்களிலிருந்து விடுபட்டிருப்பதும் விடுதலைக்குரிய நான்கு மார்க்கங்களோடு பொருந்தியிருப்

பதுமாகிய அந்த தூய, சூக்குமமான, கூரிய புத்தியினுல் காணப்படக் கூடியவன் என்பதுதான். தூய மனம் என்பது பிரம்மனைத் தவிர வேறில்லை.

எல்லாத் தோற்றங்களும் உண்மையில் கானல் நீரைப் போல இல்லாதிருப்பவைகளே. அவைகள் வெறும் பொய்த் தோற்றங்கள். எது நிலையற்றதோ அது உண்மையல்லாத தாகவும், எது நிலையானதோ அது உண்மையானதாகவும் இருத்தல் வேண்டும். பரிபூரண உண்மையாக இருப்பது ஒரு காரணமாகவோ அல்லது காரியமாகவோ இல்லை. இது பரம காரணமாக இருக்கிறது. உண்மையிலே நிலைத் திரு. (வஸ்து - ஸத்). உண்மையை ஞாபகத்தில் வை.

இடம், காலம், சித்தம், மனம், ஜீவன், மாயை ஆகியவைகள் உண்மையிலே இருக்கவில்லை. மாருக, இரண்டற்ற பிரம்மன் மட்டுமே இருக்கின்ருன். அவன் தனக்குரிய புராதன மகிமையுடன், எந்தவித சூழ்நிலையு மின்றி, ஏற்றத் தாழ்வு இன்றி, முதல், நடு, முடிவு இன்றி பிரகாசித்துக் கொண்டிருக்கின்ருன். ''பிரம்மன் மட்டுமே இருக்கின்ருன். பிரம்மன் மட்டுமே அந்த ஒப்பற்ற பேருண்மையாக விளங்குபவன். நான் பிரம்மனுக இருக் கின்றேன்'' என்று எப்பொழுதும் உணர்.

ஒவ்வொரு பொருளும் பிரம்மனே. ஆனுல் கிரியா அத்வைதம் என்பது சாத்தியமற்றது. நாம் பாவனை அத் வைதம் உடையவர்களாக வேண்டுமானுல் இருக்கலாம். ஒருவன் எந்த வேலையும் செய்யாதிருக்கும் பொழுது, அவன் வெகு தூரத்திலுள்ள குகையில் வசிக்கும் போது, அவன் சமூகத்திலிருந்து தொடர்பை முற்றிலும் அறுத்து இருக்கும் போதுதான் கிரியா அத்வைதம் சாத்தியமாகும். கேவல அத்வைதத்தை உபதேசித்த ஸ்ரீ சங்கரர் பௌத்தர் களைத் தாக்குவதற்கு நாகர்களின் படை ஒன்றைத் திரட்டினுர்.

ஸ்ரீ சங்கரர் கூறுகின்றார். ஏதோ ஒன்று வெளிப்புறத்தில் இருக்கிறது. இதை நீ மறுக்க முடியாது. ஆனால் இது வெறும் தோற்றம் தான். இது சம்பந்தமுள்ளதாக இருக்கிறது. இதற்குத் தனிப்பட்ட நிலைபேறு கிடையாது. இது வெறும் விவர்த்தமே (அத்தியாஸம்). எவ்வாறு பாம்பானது கயிற்றினுடைய விவர்த்தமோ, மோதிரமானது தங்கத்தின் விவர்த்தமோ அதே போல இந்த உலகம், இந்த உடல், இந்த மனம், இந்த பிராணு, இந்த இந்திரியங்கள் ஆகியவை எல்லாம் பிரம்மனுடைய விவர்த்தங்களே. விவர்த்த வாதமே ஸ்ரீ சங்கரருடைய வாதமாகும்.

எவ்வாறு குளத்து நீரில் சூரியன் பிரதிபலிக்கின்றதோ அது போல பிரம்மனுடைய சைதன்யம் அவித்தை அல்லது மனத்திலும் புத்தியிலும் பிரதிபலிக்கின்றது. குளத்திலுள்ள நீர் வற்றிவிட்டதும் பிரதிபிம்பம் எவ்வாறு மறைந்து விடுகின்றதோ அதே போல, ஜீவனுனவன் அவித்தையை அழிக்கும் போது அந்தக்கரணமாகிய ஏரி ஞானத்தின் மூலம் வரண்டு விடும் பொழுது உள்ளத்தில் ஏற்படுகின்ற சைதன்யத்தின் பிரதிபிம்பம் மறைந்து விடுகின்றது. இது வேதாந்தத்தில் ஆபாஸ வாதம் அல்லது பிரதிபிம்பக் கொள்கை என்று பெயர். இதற்கு பிரதிபிம்ப வாதம் என்றும் பெயர் உண்டு. ஆபாஸம் என்றால் பிரதிபிம்பம் அல்லது நிழல் (சாயா) என்று பொருள். பிரம்மன் அல்லது கூடஸ்தன் பிம்பமாக இருக்கின்றான். ஜீவன் அல்லது ஆபாஸக் குழந்தை (மானிட ஜீவன்) பிரதிபிம்பமாகும். அவித்தை அல்லது மனம் (அந்தஹ்கரணம்) தான் கண்ணாடி. இதற்கும் பிம்ப பிரதிபிம்ப வாதம் என்று பெயர்.

ஆத்மன் தூய்மையானது, சாசுவதமானது, மாறாதது, அழியாதது, சுயம் பிரகாசமானது; ஆனால் உடல் தூய்மையற்றது, மாறக் கூடியது, அழியக் கூடியது, உணர்ச்சியற்றது. இருந்த போதிலும் அறியாத மனிதர்கள் இவ்விரண்டையும் ஒன்றாக எண்ணுகின்றனர். இதை விட

மோசமான அறியாமை வேறு ஏதாவது இருக்க முடியுமா?

பானை உடைக்கப்படும் பொழுது எவ்வாறு அந்த கடாகாசமானது பிரபஞ்ச ஆகாசத்தோடு ஒன்றாகி விடுகிறதோ அதே போல உபாதிகள், உடல், மனம் ஆகியவைகள் கரைக்கப்படும் பொழுது ஜீவாத்மாவானவன் பிரம்மன் அல்லது பரமாத்மாவோடு ஒன்றாகி விடுகின்றான்.

ஸ்தூல ஆகாசம் இருக்கிறது. பிறகு சிதாகாசம் அல்லது மனத்தினால் வாஸம் செய்யப்படுகின்ற மானசீக வெளியும் இருக்கிறது. பிறகு சித்-ஆகாசம் அல்லது ஞான வெளியும் இருக்கின்றது. இந்த மூன்றும் பாவும் ஊடையும் போல பின்னப்பட்டிருக்கின்றன.

ஒரு முனையிலே எரிந்துகொண்டிருக்கும் குச்சி ஒன்றை வட்டமாக ஆட்டினோமானால் அப்பொழுது ஒரு வட்டவடிவமான நெருப்புத் தோற்றம் (ஆலத சக்கரம்) ஒன்று ஏற்படுகிறது. அதே போலத்தான் இந்த பிரபஞ்சத் தோற்றத்தின் பல்வேறு வகைகளின் விஷயமும் இருக்கின்றது. அந்த நெருப்பு வட்டம் ஒரு மாயத் தோற்றம். அதைப் போலவே இந்த சம்பந்தமுள்ள உலகமும் ஒரு மாயத் தோற்றம். ஒரே ஒரு உண்மைப் பொருள் எதுவென்றால் இடையறாது சாக்ஷியாக விளங்குபவனும், இந்த உலகத்திற்கு ஆதாரமாக விளங்குபவனுமாகிய பிரம்மன் ஒருவன் தான். மாயத் தோற்றத்திற்குக் காரணமாக இருப்பது அவித்தை. ஆத்ம ஞானத்தை அடைவதின் மூலம், அவித்தை அழிக்கப்படும் பொழுது நாம ரூபங்கள் மறைந்துவிடும், நீ எங்கும் ஆத்மனையே காண்பாய்.

ஓ மனிதா, நீ தெய்வீகமாக இருக்கின்றாய். நீ அழியாத ஆத்மா. நீ அரசர்களுக் கெல்லாம் அரசன். நீ இந்த உடல் என்கின்ற மயக்கத்தை விரட்டு. எங்கும் நிறைந்த உணர்வு, ஆத்மா அல்லது பிரம்மனோடு உன்னை

ஒன்றுக்கு. உன்னுடைய உண்மையான ஆதாரமான குணம் சத்-சித்-ஆனந்தமாகும். இதை உணர். இதை உணர்.

உன்னுடைய இருதயத்திலே எந்தவிதமான ஆசையையும் வளர்க்காதே. யாரிடத்திலும் பற்றுதலோ அல்லது ஆசையோ கொள்ளாதே. அக்ஷரம் அல்லது அழியாத பிரம்மனை நேசி. த்வைதத்திலிருந்து விடுபட்ட அந்த வழியைப் பின்பற்று. உலகத்திலிரு. ஆனால் அதை விட்டு விலகி இரு. உன்னை உடல், மனம் ஆகியவற்றிலிருந்து பிரித்து வேருக்கி விடு. உன்னை ஆத்மனோடு ஒன்றுக்கிக் கொள். எனக்கும் உனக்கும் இடையே எந்த வேற்றுமையையும் ஏற்படுத்தாதே. விருத்திகள் அல்லது எண்ணங்களுக்கு ஒரு சாக்ஷியாக மட்டும் இரு. அந்த ஒப்பற்ற ஒன்றை பலவற்றில் பார். அழியாத ஆத்மனை எல்லா ஜீவன்களிடத்திலும் காண்.

கருவி என்று ஒன்று இருக்கும் பொழுது அதைப் பயன்படுத்த யாராவது ஒருவர் இருக்க வேண்டும். மனம், புத்தி முதலியவைகள் கருவிகள். ஆகவே இக்கருவிகளைப் பயன்படுத்துபவனும் இவைகளை வழிநடத்திச் செல்பவனும் ஒருவன் இருத்தல் வேண்டும்.

ஒரு வீடு எவ்வாறு யாராவது ஒருவருடைய உபயோகத்திற்காக இருக்கின்றதோ அதேபோல காதுகள், கண்கள், கைகள், கால்கள், ஆகியவைகள் எல்லாம் இந்த காதுகள், கண்கள் முதலியவற்றை இயக்குகின்றவனுடைய உபயோகத்திற்காக இருக்கின்றன. அவன் இந்த காதுகள் முதலியவற்றிலிருந்து முற்றிலும் வேருனவனுக இருக்கின்ருன். அந்த இயக்குநன்தான் உண்மையான, எல்லையற்ற "நான்". அவன்தான் அகத்தில் ஆளுபவன், அவன் அழியாதவன். அவன் தூய உணர்வாக இருக்கின்றவன். காதுகளால் சப்தத்தைக் கேட்க முடிவதும், கண்களால் பொருள்களை அறிந்து கொள்ள முடிவதும் இந்த இயக்குந

னுடைய அறிவைப் பொறுத்திருக்கின்றது. சந்திரன் எவ்வாறு தனக்கு வேண்டிய ஒளியை சூரியனிடமிருந்து கடன் வாங்கிக் கொள்கின்ருனே அதே போல இந்த இந்திரியங்கள் அவைகளினுடைய ஒளி, அறிவு, சக்தி ஆகியவற்றை அவைகளை இயக்குகின்றவனும் அவைகளுக்கு ஆதாரமாக விளங்குகின்றவனுமாகிய ஆத்மனிடமிருந்து கடன் வாங்கிக் கொள்கின்றன. ஆகவே ஆத்மாவானவன் காதுகளுக்குக் காதாகவும், கண்களுக்குக் கண்ணுகவும், பிராணுக்களுக்குப் பிராணுவாகவும், மனங்களுக்கு மனமாகவும் இருக்கின்ருன் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும்.

நெருப்பு சாம்பலாலும், கத்தி உறையாலும், சூரியன் மேகங்களாலும், எலுமிச்சம் பழம் அல்லது கத்திரிக்காய்கள் இலைகளாலும், மாணிக்கக் கற்கள் பூமியாலும், (ஸ்ப்ரிங்) சுருள் கம்பியானது மெத்தையாலும், மெத்தையானது படுக்கை விரிப்பாலும் மறைக்கப்பட்டிருப்பதைப் போல், இந்த ஆத்மாவானது தசைகளாலும், எலும்புகளாலும், வஸ்துக்களாலும் மறைக்கப்பட்டிருக்கின்றது.

உன்னுடைய உணர்வு உன்னுடைய ஸ்தூல உருவத்திற்கு வெளியே இருக்கிறது என்பதை எண்ணிப் பார்த்து உணர். அப்பொழுது நீ எங்கும் நிறைந்த உணர்வோடு ஒன்ருக ஆக முடியும். நீ சீக்கிரத்தில் ஒரு சாக்ஷியாக ஆவாய். உன்னுடைய உடல் உன்னுடைய கைகளில் ஒரு கருவி என்பதை நீ உணர்வாய். உன்னுடைய கையிலே நீ ஒரு ஊன்று கோலைப் பற்றிக் கொண்டிருப்பதை எவ்வாறு உணருகின்ருயோ அதைப் போல உன்னுடைய உடல் மற்ருெரு கையிலுள்ள இன்ஞெரு கைத்தடி என்பதை உணர்வாய்.

ஒரு கிரிக்கட் பந்தயத்திலே பார்வையாளர்கள் விளையாடுபவர்களைக் காட்டிலும் அதிகமாக அனுபவிக்கின்றனர். ஆட்டக்காரர்களுடைய மனமானது வெற்றி

அல்லது தோல்வி எண்ணங்கள் காரணமாக ஆர்வத்தினுல் நிரப்பப்பட்டிருக்கும். அவர்களிடம் மன அமைதி இருக்க முடியாது. நீ இந்த உலகிற்கும், உன்னுடைய மனத்திற் கும் ஒரு சாக்ஷியாக மட்டும் இருந்தால், உன்னை அந்த சாக்ஷியோடு ஒன்று படுத்திக் கொண்டு விட்டால் உன்னுல் ஆத்மனுடைய பேரானந்தத்தை அனுபவிக்க முடியும். நீ ஆத்ம ஞானத்தை அடைவாய்.

பிராரப்தம் என்பது முற்பிறப்புக்களின் புருஷார்த்தமே யாகும். சஞ்சித கர்மங்கள் (கர்மங்கள் சேர்த்து வைக்கப் பட்டிருக்கும் களஞ்சியம்). அவித்தையைச் (அவித்யா ஆச்ரயம்) சார்ந்திருக்கிறது. கிரியமாண கர்மங்கள் அகங்காரத்தைச் (அகங்காராஸ்ரயம்) சார்ந்திருக்கிறது. பிராரப்த கர்மங்கள் இந்த ஸ்தூல சரீரத்தைச் சார்ந்திருக் கின்றன. ஒரு ஜீவன் முக்தனிடத்தில் அறியாமையானது ஞானேதயம் காரணமாக அழிக்கப்படுகிறது. ஆகவே சஞ்சித கர்மங்கள் அழிக்கப்படுகின்றன. அவனுக்கு அகங் காரம் என்பது கிடையாது. ஆகவே கிரியமாண கர்மங் களும் (தற்போதைய செய்கைகள்) அழிக்கப்படுகின்றன. இந்த திருஷ்டி கோணத்திலிருந்து நோக்குமிடத்து அவ னுக்கு சரீரம் என்பது கிடையாது. ஏனெனில் அவன் தன்னை எங்கும் நிறைந்த பிரம்மனேடு ஒன்ருக்கிக் கொள்கின்ருன். ஆகவே ஒருவன் ஆத்ம ஞானத்தைப் பெறும் பொழுது மூன்றுவித கர்மங்களும் அழிக்கப் படுகின்றன.

விதி என்பது உன்னுடைய சொந்த கர்மங்களினுல் கொண்டு வரப்படுகின்ற உன்னுடைய சொந்த சிருஷ்டியே யாகும். உன்னுடைய விதிக்கு நீயே எஜமானனுக இருக் கின்ருய். நீ எண்ணுகின்ற விதத்தை மாற்றிக் கொள். மூடத்தனமாக "நான் தான் உடல்" என்று எண்ணு வதை விடுத்து "நான் ஆத்மா" என்று எண்ணு.

"நான்தான் இந்த உடல், நான்தான் இந்த மனம், நான்தான் இந்தப் பிராணு. நான்தான் இந்த இந்திரி

யங்கள்'' என்று எண்ணுகின்ற வழக்கம் இப்பொழுது உன்னிடம் இருந்து வருகின்றது. தற்போதைய உன்னுடைய எண்ணுகின்ற முறையை மாற்றி ''நான் பிரம்மன், நான் எங்கும் நிறைந்த அறிவு'' என்று நினை. நீ உன்னுடைய விதியை வெல்லுவாய். நீ சாய்வாக எழுதுகின்ற வழக்கமுடையவனாக இருந்தால், உன்னால் அவ்வழக்கத்தை மாற்றி செங்குத்தாக எழுத முடியும். அதேபோல நீ எண்ணுகின்ற வழக்கத்தையும் உன்னால் மாற்ற முடியும். பழக்கத்தை வெல்லுவது விதியை வெல்லுவதாகும்.

விபரீத பாவனையாகிய சர்ப்பம் (நான் இந்த உடல், இந்த உலகம் உண்மையானது-என்கின்ற தவறான எண்ணம்) உன்னுடைய உள்ளத்திலே சீறும் பொழுது ''நான் பிரம்மன்'' என்கின்ற பிரம்மபாவனையாகிய கழியை எடுத்துக்கொண்டு ஆத்மனுடைய எண்ணமாகிய இடையறுத சிந்தனை ஓட்டத்தை நிலையாக வைத்திரு.

தேகத்துடன் அபேதமாக்கிக் கொள்ளுதல் (தேஹ அத்தியாஸம்) துன்பத்தைக் கொடுக்கிறது. ஒருவன் ஆத்ம ஞானத்தை அடையும் பொழுது உடலிலே ஏதாவது ஒரு நோய் இருந்தாலுங்கூட அவனுக்கு வலி ஏற்படுகின்ற உணர்ச்சி ஏற்படாது. அவன் உடலுணர்வைக் கடந்து நிற்கின்றான்.

காய சித்தியும், அணுக்களைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கக் கூடியவனுமாகிய மிக முன்னேறிய ஹடயோகி ஒருவனால் மட்டுமே தேகத்தை நோயின்றி வைத்திருக்க முடியும். உடல் நிலையை விட்டு மேலே சென்று எப்பொழுதும் உன்னை வலியற்ற, நோயற்ற ஆத்மனுடன் ஒன்றுபடுத்திக்கொள். நீ வலியிலிருந்து விடுபடுவாய். நீ ஆழ்ந்த உறக்கத்திலிருக்கும்போது நீ எந்த நோயினால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தாலும் வலி என்பது இருப்பதில்லை. உனக்குக் குளோரோபாரம் கொடுத்திருக்கும்

போது உன்னுடைய கால் துண்டிக்கப்பட்டால் கூட உனக்கு வலி ஏற்படுவதில்லை. உடலோடு மனம் தொடர்பு கொள்வதுதான் வலிக்குக் காரணமாக இருக்கின்றது. மனமானது உணர்வின் மூலமாக இந்த உடலிலிருந்து எடுக்கப்பட்டு இடைவிடாத தியானத்தின் மூலமாக பேரானந்த சொரூபமாகிய ஆத்மனிலே பதிய வைக்கப் பட்டு விட்டால் இந்த உடல் எந்த நோய்க்கு ஆளானாலும் உனக்கு வலி என்பது இருக்காது. இது தான் ஞானயோக சாதனை. பிராரப்தம் அனுபவிக்கப்பட்டாக வேண்டி யிருக்கிறது. ஆகவே இந்த உடல் நோய்க்கு ஆளாக வேண்டியிருக்கிறது. ஜீவன் முக்தன் எந்த விதமான வலி யையும் அனுபவியான். பார்ப்பவர்கள், ஞானியும் கூட துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்றார் என்று தவருக கற்பனை செய்யக்கூடும். இது ஒரு பெருந் தவருகும். ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு தொண்டையிலே புற்று நோய் இருந்தது. புத்தருக்கு தீராத இரத்தக்கடுப்பு இருந்தது. ஸ்ரீ சங் கரருக்கு மூல நோய் இருந்தது. ஆனால் அவர்கள் எந்த விதமான வலியையும் அனுபவிக்கவில்லை. டாக்டர்கள் ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் பார்த்து "நீங்கள் ஏன் இப்படி அவதிப்பட்டுக் கொண்டிருக்கின்றீர்கள்? உங் களால் இந்த ரண சிகிச்சையை, செய்து கொள்ள முடியாதா?" என்று வினவிய பொழுது அதற்கு அவர் "நான் என்னுடைய உள்ளத்தை காளிமாதாவிற்கு அர்ப் பணித்து விட்டேன். என்னுல் எப்படி இந்த உடலைப் பற்றி நினைக்க முடியும்? என்னுடைய மனத்தை மறு படியும் இந்த மாமிசக் கூண்டிற்குள் எப்படிக் கொண்டுவர முடியும். நான் எப்பொழுதும் பேரானந்தத்திலே இருக் கின்றேன்" என்று பதிலிறுத்தார்.

## 2. வேதாந்த உபதேசங்கள்.

வேதாந்தம் என்பது ஜீவாத்மாவானவன் பரமாத்மா வோடு அபேதமானவன் என்று உபதேசிப்பதும், ஜீவ னுடைய மயக்கத்தைப் போக்குவதுமாகிய உயர்ந்ததொரு

தத்துவமாகும். வேதாந்தம் சாதகனிடம் உள்ள பயம், துக்கம், துயரம், மயக்கம் ஆகியவற்றை ஒழித்து ஆத்மானுபூதியடைய உதவுகின்ற ஆத்ம விஞ்ஞானமாகும். வேதாந்தம் இந்த அஞ்ஞானத்தால் சூழப்பட்ட ஜீவனை மேலான பிரம்ம நிலைக்கு உயர்த்தி விடுகின்ற மகோன்னத தத்துவமாகும். வேதாந்தம் மனித வர்க்கத்தின் எல்லா பிணிகளையும் போக்கவல்ல சர்வ ரோக நிவாரணியாகும். வேதாந்தம் பிறப்பு இறப்புப் பிணிக்குக் கைகண்டதொரு மருந்து. வேதாந்தக் கொள்கைகளை ஏட்டளவில் படிப்பது மட்டும் போதாது. வேதாந்த தத்துவத்திலே நீ வாழ்ந்து காட்ட வேண்டும். நீ ஒரு அனுஷ்டான வேதாந்தியாக ஆக வேண்டும். வேதாந்தம் எடுத்துரைக்கின்ற இந்த ஆத்மாவை நீ உணர வேண்டும். அப்பொழுதுதான் நீ ஒரு விடுதலை பெற்ற ஞானியாக ஆவாய்.

வேதாந்தம், உடல், மனைவி, மக்கள், சொத்து ஆகியவற்றின் மீதுள்ள மோஹத்தை நீ விட்டொழிக்க வேண்டுமென்று விரும்புகின்றது. வேதாந்தம் எல்லாவித உலகாயத ஆசைகளையும், விருப்பங்களையும், உலகாயத வஸ்துக்களுக்கான நாட்டத்தையும் விட்டு விடச் சொல்கிறது. வேதாந்தம் அதிகாரம், பெயர், புகழ் ஆகியவற்றிற்கான ஆசையை நீ ஒழித்துக்கட்ட வேண்டுமென்று விரும்புகின்றது. வேதாந்தம் இந்த உலகத்தோடு கொண்டுள்ள எல்லா பந்தங்களையும் தொடர்புகளையும் மானசீகமாக தகர்த்தெறிய வேண்டும் என்று விரும்புகின்றது. வேதாந்தம் விவேகம் என்கின்ற வாளினால் உலகப் பற்றுக்கள் அனைத்தையும் இரக்கமின்றி அறுத்தெறிய வேண்டுமென்று விரும்புகின்றது.

வேதாந்தம் இறவாத் தன்மையையும், வெறுப்பையும், நம்பிக்கையற்ற தன்மையையும் (pessimism) போதிக்கிறது என்று சில அறியாத மனிதர்களே கூறுகின்றனர். இது மிகவும் வருந்தத் தக்க தவறாகும். வேதாந்தம் இறவாத் தன்மையைப் பற்றியோ அல்லது இறக்கும் தன்மையை அலட்சியம் செய்யவோ உபதேசிக்க

வில்லை. நடத்தை கெட்டவர்களால் பிரம்மனை உணர்வது என்பது முடியாத காரியம். நன்னடத்தையிலே பரிபூரண மடைந்தவனும் நான்கு சாதனங்களையுடையவனுமாகிய சாதகன் ஒருவன் ஒரு வேதாந்த மாணுக்கனுக ஆக முடியும். விவேகம், வைராக்கியம், அமைதி தன்னடக்கம் சகிப்புத்தன்மை, பொறுமை, நம்பிக்கை, குவிந்த மனம், விடுதலைக்கான தகிக்கும் வேட்கை ஆகிய பண்புகளை உடைய ஒரு சாதகன் வழி தவறிய வாழ்க்கையை நடத்துவான் என்று நீ எவ்வாறு எதிர்பார்க்க முடியும்? இது முற்றிலும் அபத்தமானது. வேதாந்தம் நீ மோஹம் அல்லது சுயநல அன்பையும் இந்த உடல் மீதுள்ள ஆசையையும் அழித்து, தூய்மையான, பற்றற்ற சமரச அன்பு அல்லது உன்னதமான தெய்வீகப் பிரேமையை வளர்க்க வேண்டுமென்று விரும்புகின்றது. இது ஒருபொழுதும் அதம பாவனையை (Pessimism) போதிப்பது கிடையாது. ஆனுல் இது அதற்கு எதிரிடையான உத்தம பாவனையின் (Optimism) சிகரத்தையே போதிக்கின்றது. "இந்த அல்ப மாயமான இன்பத்தை விட்டுவிடு. உனக்கு சாசுவதமான எல்லையற்ற பேரானந்தம் கிடைக்கும். இந்தச் சிறிய 'நான்' -ஐ கொன்று விடு. நீ அந்த எல்லையற்ற பரம்பொருளோடு ஒன்ருகி விடுவாய். நீ அமரனுக ஆகி விடுவாய். இந்த மாயா உலகத்தை விட்டுவிடு. இறைவனுடைய சாம்ராஜ்யம் அல்லது மேலான அமைதியே குடி கொண்ட பரந்த சாம்ராஜ்யத்தை அடைவாய்" என்று போதிக்கிறது. இதுவா அதம பாவனை? நிச்சயமாக இல்லை. இது அற்புதமான உத்தம பாவனையேயாகும்.

ஆண் பெண் என்கின்ற எண்ணம் ஆழமாக வேரூன்றியிருக்கின்ற மனிதன் நூறு கோடி பிறவிகளில் கூட வேதாந்தத்தைப் புரிந்து கொள்ளவோ அல்லது பிரம்மனை உணரவோ ஒரு பொழுதும் கனவு காண முடியாது.

நீ இப்பொழுது உன்னை இந்த அழியக் கூடிய ஸ்தூல சரீரத்துடன் அபேதப்படுத்திக் கொண்டிருக்கின்ருய்.

உன்னிடம் பலமான தேஹ அத்தியாஸம் இருக்கிறது. ஆத்மாவைப் பற்றிய கருத்து இப்பொழுது உன்னிடம் கிடையாது. அது இருப்பதைப் பற்றிய அசைக்க முடியாத துணிபும் கிடையாது. இப்பொழுது நீ உடலாக மட்டும் இருக்கின்ருய். நீ இப்பொழுது திருவாளர் இன்னுராக ( so and so ) இருக்கின்ருய். உன்னுடைய மனம் வாஸனை களாலும், அகங்காரத்தாலும் நிரப்பப்பட்டிருக்கிறது. நீ சாவைக் கண்டு அஞ்சுகின்ருய். நேரடியான ஞானத்தின் மூலம் இந்த அழியாத ஆத்மனை உணர வேண்டும். அப் பொழுதுதான் இந்த ஆத்மா அழியாதது என்பது உனக்குப் புலப்படும்.

இந்த ஆத்மா (ஜீவாத்மா) சம்சார நிலையில் எவ் வளவு காலம் இருக்கின்றதோ, ஆத்ம ஞானத்தை அடை வதன் மூலம் எவ்வளவு காலம் வரைக்கும் இந்த சம்சார நிலை ஒரு முடிவுக்கு வராமல் இருக்கிறதோ, அது வரைக்கும் இந்த ஆத்மா புத்தியோடு கொண்டிருக்கும் தொடர்பு நீங்கப் போவதில்லை. புத்தியுடன் தொடர்பு இருக்கும் பொழுது ஆத்மனுக்கு உடலோடும் தொடர்பு இருக்கத் தான் செய்யும். புத்தியுடனும் அதனுடைய உபாதி களுடனும் இந்த ஆத்மனுக்கு எவ்வளவு காலம் தொடர்பு இருந்து கொண்டு இருக்கின்றதோ அது வரை இந்த ஜீவன் சிறிய ஜீவனுகவே இருந்து இந்த சம்சாரத்தில் முதுமை, பிணி, துன்பம் ஆகியவைகளுடன் கூடிய பரிதாபகரமான நிலையில் தான் இருந்து வருவான். உண்மையிலே ஜீவாத்மா என்பது கிடையாது. ப்ராந்தி, பிரமை, அத் யாஸம் அல்லது கற்பனை காரணமாக கண்ணுடியிலே தோன்றுகின்ற பிரதி பிம்பத்தைப் போல அல்லது வானத் திலே தோன்றுகின்ற நீல நிறத்தைப் போல தோற்றமளிக் கின்ற ஒரு போலித் தோற்றமேயாகும்.

பரிணும (முடிவடையும்) வஸ்து எப்பொழுதும் அநித்யமானது. இது உன்னுடைய தினசரி வாழ்க்கை யின் அனுபவமாக இல்லையா? மனம், உடல், இந்திரி

யங்கள் ஆகியவைகளின் ஜீவாதாரமாக விளங்குகின்ற பிரம்மன் அல்லது ஆத்மன் அபரிச்சின்னன் (முடிவில்லாதது) நித்யமானது. ஆகவே ஓம் என்ற பிரணவத்தை பாடுவதன் மூலம் ஆத்மானுபூதியைப் பெறு. எல்லாத் துன்பங்களும் போய் விடும். நீ ஒரு தத்தாத்ரேயராக, அல்லது சங்கரராக ஆக முடியும்.

வழக்கமானது (Conventionality) அறிவு வளர்ச்சியைத் தடுக்கிறது. இது இருதயத்தைச் சுருக்கி விடுகிறது. உலகாயத வாழ்வின் வழக்கத்தினுல் ஏற்படுத்தப்பட்டுள்ள வேற்றுமையை விட்டு மேலே எழும்பு. தாழ்ந்த குணத்தை விட்டு விடு. வழக்கத்தினுல் (Conventionalism) அலைக் கழிக்கப்படாதே. உன்னுடைய உண்மைத் தன்மையாகிய சத்-சித்-ஆனந்தத்தை மேற்கொள். ஆத்மா அல்லது பிரம்மனை தியானம் செய். ஞான சூரியனை உதிக்கச் செய்வதின் மூலம் அறியாமையாகிய மேகத்தை விலக்கு. மூன்று சரீரங்கள் அல்லது ஐந்து உறைகளிலிருந்து உன்னை விடுவித்துக் கொள். மேலான அமைதியினுடைய வாசஸ் தலத்திலே வசி. ஓ ராம், எல்லையில்லா ஆனந்த சாகரத்தில் களித்திரு.

நீ இயற்கை யுணர்வினுல் தோன்றிய மனதை விருத்தி செய்தால், நீ ஆத்ம ஞானத்தைப் பெற்ருல், பிரம்மப் பேரொளி அல்லது அழியாத ஆத்மப் பிரகாசம் உன்னிடம் மின்னிடும். நீ உன்னுடைய ஆத்ம உணர்வுடன் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நீ மிக உன்னதமான ஞானத்தை அடைவாய். மேலான அந்தரங்க ஆத்மாவானது சத்தாகவும் சித்தாகவும் இருக்கிறது.

ஒவ்வொருவனும் சுதந்திரமாக இருக்க விரும்புகின்ருன். ஒவ்வொருவனும் ஒரு மேலான ஆதிக்கம் செலுத்தக் கூடியவனுக இருக்க விரும்புகின்ருன். ஒவ்வொருவனும் மற்றவர்களின் விருப்பங்களால் நடத்திச் செல்லப்பட விரும்புவதில்லை. ஒவ்வொருவனும் மற்றவர்கள்

தன்னுடைய கருத்துப்படி செல்ல வேண்டுமென்றும் அதைப் பின்பற்ற வேண்டும் என்றும் விரும்புகின்ருன். ஒவ்வொருவனும் தன்னுல் முடியுமாகில் மற்ற எல்லோரையும் ஆட்சி புரிய வேண்டுமென்று மனதிற்குள் எண்ணுகின்ருன். ஒவ்வொருவனும் தனக்குப் போட்டியாக யாரும் இருக்கலாகாது என்று விரும்புகின்ருன். உண்மையான காரணம் என்ன வென்ருல் அகிலப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாக விளங்குகின்ற அழியாத பிரகாசமயமான ஆத்மா உன்னிடத்தில் குடி கொண்டிருப்பது தான். உண்மையில் நீ இந்த ஆத்மாவாக இருக்கின்ருய். ஆகவேதான் உனக்கு அது மாதிரியான உணர்வும் ஆசையும் இருக்கின்றன. பரமாதிபத்யத் தன்மை (Suzerainship) உனக்கு முற்றிலும் இயற்கையானதே. பரமாதிபத்தியத்தன்மை ஆத்மாவினுடைய குணம். அறியாமை காரணமாக நீ இந்த உடலை ஆத்மாவாகத் தவருக எண்ணிக் கொண்டு இந்த உடலிலும், வியாபாரத்திலும், அலுவலகத்திலும், கல்லூரியிலும், விளையாட்டிலும், சாம்ராஜ்யத்திலும் எந்த ஒரு துறையிலும் உனக்குப் போட்டியாக யாரும் இருக்கக் கூடாது என்று முயற்சிக்கின்ருய். ஆத்மனை நீ உணர்வதின் மூலமாகத் தான் உனக்கு பரிபூரண ஏகாதிபத்தியம் கிடைக்கும். ஆத்ம ஸ்வராஜ்யம் ஒன்றுதான் உன்னை முற்றிலும் சுதந்திர புருஷனுக ஆக்க முடியும். ஆத்ம ஸ்வராஜ்யம் ஒன்றுதான் உன்னை இப் பிரபஞ்சம் முழுமைக்கும் ஏகச் சக்ராதிபதியாக ஆக்க முடியும். ஆகவே இந்த அற்புதமான ஆத்மனை உணர்ந்து மூவுலகிற்கும் ஒரு சக்தி பொருந்திய அதிபதியாக ஆகு.

ஓ மனிதா, சாராம்சத்தில் நீ ஆசீர்வதிக்கப்பட்ட தெய்வீகமாக இருக்கின்ருய். நீ அழியாத பேரானந்த ஆத்மனுக இருக்கின்ருய். நீயே அழகுகளுக்கெல்லாம் அழகாகவும், எல்லா அழகுகளுக்கும் ஊற்றுஸ்தானமாகவும் இருக்கும் பொழுது நீ ஏன் ஸ்தூல அழகுகளாகிய நிலப்பரப்பு, பூக்கள் ஆகியவற்றின் அழகினுல் கவரப்படு

கின்றாய் ? நீயே காலாதீதனாக இருக்கும் பொழுது நீ ஏன் காலத்தினால் கட்டுப்படுத்தப்படுகின்றாய் ? நீ " எனக்கு இப்பொழுது 40 வயது ஆகிறது " என்று ஏன் கூறுகின்றாய் ? நீ மரணத்தைக் கண்டு ஏன் அஞ்சுகின்றாய் ? நீ முடிவில்லாதவனாக இருக்கையில் " காலம் சென்று விட்டது " என்று ஏன் சொல்லுகின்றாய் ? நீ ஏன் " நான் பருத்து இருக்கின்றேன். நான் 5 அடி 6 அங்குல உயரம் இருக்கின்றேன் " என்று கூறுகின்றாய் ? நீயே சூரியர்களுக்கெல்லாம் சூரியனாகவும், ஒளிகளுக்கு ஒளியாகவும் இருக்கும் பொழுது நீ ஏன் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல்கள் ஆகியவற்றைப் புகழ்கின்றாய் ? நீ சக்ரவர்த்திகளுக்கெல்லாம் சக்ரவர்த்தியாகவும், எல்லா செல்வங்களுக்கும் ஆதாரமாகவும் விளங்கும் பொழுது நீ ஏன் " என்னிடத்தில் பணம் இல்லை. நான் மிகவும் ஏழை. நான் சல்லிக் காசும் அற்றவனாக இருக்கின்றேன் " என்று கூறுகின்றாய் ? நீ ஏன் யாசிக்கின்றாய் ? அகில உலகத்தையும் இயக்கிவைப்பவனாகவும் கட்டியாள்பவனாகவும் இருக்கையில் நீ ஏன் " நான் ஆதரவற்றவன். நான் தங்களுடைய மிகவும் பணிவான சேவகன் " என்று கூறுகின்றாய். நீ பேரானந்தமும் அமைதியுமே வடிவாக இருக்கும் பொழுது நீ ஏன் " நான் பரிதாபகரமான நிலையில் இருக்கின்றேன். நான் அமைதியின்றி இருக்கின்றேன் " என்று கூறுகின்றாய் ?

நீ சத் சொரூபமாக (Existence absolute) இருக்கையில் ஏன் மரணம் அல்லது யமதர்மனைக் கண்டு அஞ்சுகின்றாய் ? நீ சர்வ வல்லமையுடையவனாக இருக்கும் பொழுது ஏன் " நான் பலஹீனனாக இருக்கின்றேன் " என்று கூறுகின்றாய் ; நீ ஆரோக்கிய சொரூபமாக இருக்கையில் ஏன் " நான் அசௌக்கியமாக இருக்கின்றேன். நான் தீராத நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கின்றேன் " என்று கூறுகின்றாய் ? நீ சித் சொரூபமாக இருக்கும் போது (Knowledge absolute) ஏன் " நான் அறியாதவன்.

எனக்கு ஒன்றும் தெரியாது ” என்று கூறுகின்றாய் ? தூய்மை, ஏகாக்ரம், தியானம், அபேதப்படுத்துதல் ஆகியவை மூலமாக இந்த விசித்திரமான சத்-சித்-ஆனந்த ஆத்மாவை உணர். இந்த அதிசயமான ஆத்மனில் களிப் படைந்து விடுதலை பெறு. எனதன்பார்ந்த வீர சத்யகாமா, தத் த்வம் அஸி. நீ அதுவாக இருக்கின்றாய்.

நீ எங்கும் நிறைந்த அழியாத உணர்வாக விளங்கு கின்ற இறவாத, சாசுவதமான ஆத்மாவாக விளங்கு கின்றாய் என்பதை எப்பொழுதும் அறிந்து உணர். இது தான் உனக்கு உண்மையான சுதந்திரத்தையும், நிரந்தர மான பேரானந்தத்தையும் அளிக்க வல்லது. இச் செய்தியை உன்னுடைய நண்பர்களிடத்தும் உன்னோடு தொடர்பு கொள்கின்றவரிடத்தும் பரப்பு. நீ ஒரு புதிய ஒழுங்கை ஸ்தாபிக்கலாம். நீ லட்சக் கணக்கானவர் களுக்கு அமைதியையும் ஆறுதலையும் கொடுக்க முடியும்.

இருதயமாகிய விளக்கிலே வைராக்கியமாகிய எண் ணெயை ஊற்று. பக்தியாகிய திரியைப் போடு. இப் பொழுது ஞானமாகிய ஒளியை இடை விடாத தியானத் தின் மூலம் தூண்டிவிட்டுக் கவனித்துப் பார். இப்பொழுது அறியாமையாகிய இருள் அகற்றப்படும். உனக்கு உண்மை யினுடைய பிரம்மாண்டமான காட்சி தென்படும். நீ ஒளி பெறுவாய்.

பகுத்தறியக் கற்றுக் கொள். வைராக்கியமுடைய வனாக ஆகு. வாஸனைகளை ஒழித்துக் கட்டு. இந்திரியங் களை ஒழுங்கு படுத்து. மனத்தை குவியும்படிச் செய். விடுதலைக்காக ஏங்கியிரு. அகந்தையைக் கொல். சங்கற் பங்கள் அல்லது எண்ணங்களை இல்லாமல் செய். இந்த உலகத்தைக் கரைத்து விடு. அவித்தையை நீக்கு. பிரம்மனை உணர். இது தான் வேதாந்தத்தின் சாரம்.

பிரம்மனை அறி. அவித்தையை நிர்மூலமாக்கு. உலகத்தைக் கரை. த்வைதத்தை அழி. பயமற்றவனாகு.

சந்தோஷமாக இரு. ஆத்மனில் ஆனந்தமடை. உன்னுடைய சொந்த ஸ்வரூபத்தில் நிலை பெற்றிரு. அதை அறி. அதில் ஐக்கியமாகு. அதுவாக ஆகு.

பகலிலே உனக்கு ஒளி கொடுப்பது எது? சூரியன். இரவிலே சூரியன் இல்லாத போது உனக்கு ஒளி தருவது எது? சந்திரன், நட்சத்திரங்கள், விளக்குகள். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், ஆகியவை இல்லாத போது உனக்கு ஒளி கொடுப்பது எது? கண்கள். கண்கள் மூடப்பட்டிருக்கும் போது உனக்கு எது ஒளி கொடுக்கிறது? புத்தி அல்லது அறிவு. புத்தியிலே தெளிவு (Clcrity) அல்லது கலக்கம் இருக்கின்ற குறையை கண்டு பிடிப்பது யார்? அஹம் (நான்). அந்த அஹம் தான் ஒளிகளுக்கு ஒளியான, சாசுவத ஆத்மன் அல்லது எல்லையற்ற பரம்பொருளாகும்.

உருவங்களைப் பார்ப்பது கண்களினுடைய தர்மம். எல்லா உருவங்களுக்கும் ஆதாரம் அல்லது அடிப்படையாக விளங்குவது பிரம்மன். நீ ஒரு பொருளைப் பார்க்கும் பொழுது ஒப்பற்ற சாராம்சமாக விளங்குகின்ற பிரம்மனைப் பார். உருவம் மாயமான அல்லது உண்மையல்லாத பொருளாக இருப்பதால் அதை விட்டு விடு. இதர இந்திரியங்களுக்குரிய இதர வஸ்துக்களிடத்திலும் இதே மனோபாவனையைக் கொள். இதுதான் ''சர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ — எல்லா தர்மங்களையும் பரித்யாகம் செய்து விட்டு அடைக்கலத்திற்கு என்னிடம் தனியாக வா'' (கீதை அத் XVIII – 66) என்கின்ற சுலோகத்தின் பொருள்.

விவேகம் வித்து. வைராக்யம் வேர். குருவின் கருணையே நீர். பிரம்மஞானம் பழம். இது ஞானயோக மார்க்கம்.

நித்தியத்தையும் அநித்தியத்தையும் பாகுபடுத்தி அறிந்து கொள்ளக் கற்றுக் கொள். எல்லா ஜீவன்களிடத்தும், எல்லாப் பொருள்களிடத்தும் ஆத்மனைக் காண். நாம ரூபங்கள் மாயமானவைகள். ஆகவே அவைகளை திரஸ்கரித்து விடு. ஆத்மனைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பதை உணர். மெய், மனம், ஆன்மீக சம்பந்தமாக உன்னிடம் இருப்பவைகளை எல்லோருடனும் பகிர்ந்து கொள். எல்லோரிடத்தும் உள்ள ஆத்மனுக்குத் தொண்டு செய். உனது பக்கத்திலிருப்பவனை உன்னைப் போலவே நேசி. மாயமான வேற்றுமைகள் அனைத்தையும் உருக்கி விடு. மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து வைக்கும் எல்லா தடைகளையும் நீக்கு. எல்லோருடனும் கலந்து இரு. எல்லோரையும் அணைத்துக் கொள். ஆண் – பெண் என்ற எண்ணம், உடல் எண்ணம் ஆகியவற்றை பால் வேற்றுமையற்ற, உடலற்ற ஆத்மனை இடை விடாது சிந்திப்பதின் மூலமாக அழித்து விடு. நீ வேலை செய்யும் பொழுது மனத்தை ஆத்மனில் பதியவை. இது அனுஷ்டான வேதாந்தமாகும். இது தான் உபநிஷதங்கள், பண்டைய ஞானிகள் ஆகியோருடைய உபதேசங்களின் சாரமாகும். இது ஆத்மனில் வாழுகின்ற நிரந்தரமான, உண்மையான வாழ்க்கையாகும். தினசரி வாழ்க்கையாகிய போராட்டத்தில் இவைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வா. நீ ஒரு சக்தி பொருந்திய யோகி அல்லது ஒரு ஜீவன் முக்தனாகத் திகழ்வாய். இதிலே எள்ளளவும் சந்தேகமில்லை.

நீ ஒரு அனுஷ்டான வேதாந்தியாக இருக்க வேண்டும். கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுதலும், பிரசங்கம் செய்வதும் வெறும் அறிவு வித்தையும் இதெல்லாம் வெறும் மொழிப் போர்க் கலையுமேயாகும். இது போதாது. வேதாந்தமானது அனுஷ்டானத்திற்குரியதாக இல்லாவிடில் எந்தக் கருத்துக்கும் எவ்வித மதிப்பும் கிடையாது. நீ வேதாந்தத்தை உன்னுடைய ஒவ்வொரு செய்கையிலும் தினசரிப் பழக்கத்திற்குக் கொண்டுவர வேண்டும். வேதாந்தம் ஆத்மனுடைய ஒருமைப்பாடு அல்லது ஐக்கி

யத்தை போதிக்கின்றது. நீ எல்லோரிடையேயும் அன்புக் கிரணத்தை வீச வேண்டும். வேதாந்தத்தின் உண்மை யான அர்த்தம் உன்னுடைய கண்ணறைகள் அல்லது தசைகள், இரத்த நாடிகள், நரம்புகள், எலும்புகள் ஆகிய வற்றிற்குள் பதிந்து இருக்க வேண்டும். அது உன்னுடைய குணத்தோடு இரண்டறக் கலந்திருக்க வேண்டும். நீ ஐக்கியத்தைப் பற்றி எண்ண வேண்டும்; ஐக்கியத்தைப் பற்றிப் பேச வேண்டும், ஐக்கியத்திலே நடந்து காட்ட வேண்டும். ‘‘நான் சகலமுமாக இருக்கின்றேன். நான் எல்லோரிடத்தும் உள்ள ஒரு ஒப்பற்ற ஆத்மாவாக இருக் கின்றேன். என்னையன்றி வேறு எதுவும் கிடையாது’’ என்று நீ மேடையின் மீது பிரமிக்கவைக்கும் பிரசங்கம் செய்துவிட்டு அடுத்த விநாடியிலேயே சுயநலம், பாகுபாடு ஆகியவற்றேடு கூடிய மாறுபட்ட தன்மையை செயலில் காட்ட ஆரம்பித்தால் உன்னல் மக்களிடையே எந்த வித மான கருத்துப் பதிவையும் உண்டுபண்ண முடியாது. நீ ஒரு வறட்டு வேதாந்தி என்று அழைக்கப் படுவாய். யாரும் உன்னை லட்சியம் செய்யமாட்டார்கள்.

அத்வைதம் என்பது ஒரு வேதாந்தியிடத்தினின்று கிளம்புகின்ற நறுமணமாகும். அது வெகு தூரத்திற்குக் கொண்டு செல்லப்படுகின்றது. ஒரு உண்மையான வேதாந்தியுடன் தொடர்பு கொள்கின்றவர்கள் இந்த நறு மணத்தை நுகர்வார்கள். ‘‘நான் ஒரு வேதாந்தி. நான் வேதாந்தத்தைக் கடைப்பிடிக்க வருகிறேன்’’ என்று அவர் சொல்ல வேண்டிய அவசியமில்லை. நீ இந்த ஒருமைப்பாடு அல்லது சமத்துவமாகிய அகமகிழச் செய்யும் வேதாந்த நறுமணத்தை ஒரு வேதாந்த உபந்நி யாசகரிடமிருந்து நுகரவில்லையானல் அவன் கிராமபோனைப் போல எதையாவது திரும்பத் திரும்ப உளரிக் கொண் டிருக்கும் வறட்டு மனிதன் என்பதைத் தெரிந்து கொள். அவனுடைய வார்த்தைகள் ஆகாயத்திலே சுடப்படுகின்ற வெத்து வேட்டுக்களைப் போன்றவைகளே. கேட்பவர்

களுடைய உள்ளத்திலே அவர்களால் எந்த விதமான கருத்தையும் பதிய வைக்க முடியாது.

### 3. வேற்றுமையில் ஒற்றுமை.

இப்பிரபஞ்சத்திலே ஜீவ வஸ்துக்களைத் தவிர வேறெதுவும் இல்லை என்பதை நீங்கள் யூகித்தறியலாம். அப்பொழுது எல்லா ரூபங்களும் அழிந்துவிடும் எல்லா ரூபங்களும் ஒரே மாதிரியான வஸ்துவினால் தான் கட்டப்பட்டிருக்கின்றன. ஒரு மரம் அல்லது ஒரு மனிதன் அல்லது ஒரு நாய், அல்லது ஒரு மூட்டைப்பூச்சி அல்லது ஒரு கொசு ஒரே மாதிரியான பொருள் அல்லது ஜீவ வஸ்துவினு (protoplasm) லேயே ஆக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஜீவ வஸ்து என்பது உயிரை உள்ளே வைத்து உருவாக்கப்பட்டிருக்கின்ற வஸ்துவாகும். இது, வாழ்க்கைக்கு ஸ்தூல ஆதாரமாக இருப்பதும், முட்டையின் வெண் கருவை ஒத்த ரசாயனக் கலவையுடன் கூடிய சுருங்கும் தன்மை கொண்ட ஒரு சஜாதீயமான கட்டற்ற பொருளாகும். (It is a homogeneous, structureless substance, forming the physical basis of life, endowed with contractility with a chemical composition allied to that of albumen). எல்லா ரூபங்களையும் இணைக்கின்ற வஸ்துவினுடைய கயிறாக இருப்பதும் ஒரே பொருள் தான். இப்பிரபஞ்சத்தில் சக்தி (energy) அல்லது மனத்தைத் தவிர (mind) வேறொன்றும் கிடையாது என்பதையும் நீங்கள் யூகித்தறியலாம். ஞானயோக மார்க்கத்திலுள்ள மாணாக்கன் தூய உணர்வு என்கின்ற ஒரே ஒரு கயிறு மட்டுமே இருக்கிறது என்று எண்ணுகின்றான். "நூலிலே மணிக் கோர்வை போல இவையாவும் என் மீது கோர்க்கப்பட்டிருக்கின்றன" (அத். VII – 7) என்று பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனிடம் கூறுகின்றார்.

நாம ரூபங்களுக்குப் பின்னால் சர்வவியாபகமான ஜீவன் அல்லது மறைந்திருக்கும் பிரம்மன் அல்லது அந்தர்ப்பாவமான கடவுள் இருக்கிறது. ரூபங்களுக்கு அடியிலுள்ள

உண்மையை உணர முயற்சி செய். சிறு ஜந்துக்களையோ அல்லது பரி பக்குவமடையாத ஜீவன்களையோ அலட்சியம் செய்யாதே. உன்னிடம் துடிக்கின்ற அதே உயிர் தான் எறும்புகளிடமும், நாய்கள், யானைகள் மற்றும் எல்லா ஜீவராசிகளிடமும் துடித்துக் கொண்டிருக்கின்றது. மற்ற ஜீவராசிகள் அனைத்திற்கும் உனக்கும் உள்ள ஒருமைப்பாட்டையும் நெருங்கிய தொடர்பையும் உணர். தோற்றத்திலே அளவு மட்டுமே இருக்கிறது. எல்லா உருவங்களும் கடவுள் அல்லது சகுண பிரம்மனுக்குச் சொந்தமானவை. ஒரு மரம் அல்லது ஒரு செடி, ஒரு நாய் அல்லது ஒரு காரைப் பார்த்து உருவமாகிய திரைக்குப் பின்னால், உண்மையான, மறைந்து கிடக்கின்ற ஜீவன் அல்லது உணர்வை அந்த உருவத்திற்குப் பின்னாலும் அடியிலும் காண முயற்சி செய். இது மாதிரி நீ சில காலம் பயின்று வந்தால் சொல்லொணாத ஆனந்தத்தை அடைவாய். வெறுப்பெல்லாம் ஒழிந்து போகும். நீ சமரச அன்பையும், உணர்விலே ஐக்கியத்தையும் விருத்தி செய்வாய். இது அரிய, மகத்தானதொரு அனுபவமாக இருக்கும். இது முடிவில் ஒருமையாகிய வேதாந்த உணர்விலே கொண்டு போய்ச் சேர்க்கும்.

ஜீவன் (life) என்பது மரங்கள், எறும்புகள், பறவைகள், மிருகங்கள், மானிடர்கள் ஆகிய எல்லோரிடத்திலும் பொதுவாக இருக்கின்றது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், நாற்காலிகள், சுவர்கள், கற்கள், மிருகங்கள், பறவைகள், மானிடர்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் பொதுவாக இருப்பது எது? இருப்பு அல்லது நிலைபேறு (Existence). ஒரு மேஜை இருக்கிறது. ஒரு மரம் இருக்கிறது. நிலைபேறு என்பது சத்-சித்-ஆனந்த பிரம்மனுடைய சத் அம்சமாகும்.

சரீரங்களிலும், மனங்களிலும் தோன்றுகின்ற மனோகற்பிதமான வேறுபாடு மட்டுமே உண்டு. வர்ணத்திலும், கருத்துக்களிலும் வேறுபாடுகள் உண்டு. எல்லாவற்றிலும் ஆத்மா ஒன்றேதான். ஒரு திருடன், ஒரு

விபசாரி, ஒரு தோட்டி, ஒரு அரசன், ஒரு போக்கிரி, ஒரு முனிவன், ஒரு நாய், ஒரு பூனை, ஒரு எலி — ஆகிய அனைவரிடத்தும் ஒரே ஆத்மா தான் இருக்கின்றது பொய்யான தோற்றத்தையும், பாகுபாட்டையும் புறக்கணித்து விடு. சாராம்சத்தை அல்லது சத்தை (reality) எடுத்துக்கொள்.

பரிபூரண ஐக்கியம் என்கின்ற மனோபாவனையின் மூலமாக த்வைத மனப்பான்மையை நிர்மூலமாக்கு. பேத புத்தி அல்லது வேற்றுமைகள், பாகுபாடுகள், பிரித்து வைக்கும் தன்மை ஆகியவைகளை ஏற்படுத்தும் அறிவை அழித்து விடு. நீ இப்பொழுது இரண்டற்ற ஆத்மனுடைய சாசுவதப் பேரானந்தத்தை அனுபவிப்பாய். நீ இப்பொழுது ஒரு ஜீவன் முக்தன்.

ஒரு சூரியன் வெவ்வேறு பானைகளிலுள்ள தண்ணீரில் பல சூரியன்களாகத் தோன்றுவது போல ஒரே ஆத்மா பலவாகத் தோற்றமளிக்கின்றது. பல சூரியன்கள் பொய். அவைகள் வெறும் பிரதி பிம்பங்கள் மாத்திரமே. அதே போல பல ஜீவன்கள் மாயமானவைகள். ஒரு சூரியன் மட்டுமே உண்மை. அதே போல ஒரு ஒப்பற்ற பிரம்மன் மட்டுமே உண்மை.

இப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு அணுவிலும் துடிக்கின்ற தெய்வீக ஜீவனே மானிட ஜீவன்களின் இருதயங்களிலும் வாசம் செய்கின்றது. ஒரு எறும்பினுடைய ஆத்மாவே ஒரு மனிதனுடைய ஆத்மா. ஒரு பாவியினுடைய ஆத்மாவே ஒரு பரமஹம்ஸருடைய ஆத்மா. ஒரு ஆண்டியினுடைய ஆத்மாவே ஒரு பேரரசனுடைய ஆத்மா. இயற்கையிலுள்ள முடிவான உண்மையே மனிதனிடமுள்ள முடிவான உண்மையாகும். ஆத்மனை நேரடியான இயற்கை உணர்வு கொண்டு காண்பதே மனித வாழ்க்கையின் லக்ஷியமாகும்.

மனித வர்க்கம் முழுவதும் ஒன்று என்பதை உணர். மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து வைக்கின்ற பொய்யான தடைகள் அனைத்தையும் ஈவிரக்கமின்றி தகர்த்தெறி. எல்லா மதங்களுக்கும் அடிப்படைக் கொள்கைகளாக விளங்குபவைகள் எல்லாம் ஒன்றே என்பதைப் புரிந்து கொள்.

எல்லோருடனும் இருக்கின்ற உன்னுடைய ஒருமைப்பாட்டை உணர். சூரியன், ஆகாயம், காற்று, மலர், மரம், கொக்குகள், மிருகங்கள், கற்கள், நதிகள், சமுத்திரம் ஆகியவற்றோடு உனக்கிருக்கின்ற ஒருமைப்பாட்டை உணர். ஜீவனின் ஒருமைப்பாட்டையும் உணர்வின் ஐக்கியத்தையும் உணர். எல்லா ஜீவராசிகளிடத்தும், எல்லா மிருகங்களிடத்தும், எல்லா தாவரங்களிடத்தும் இருக்கின்ற அந்த ஒப்பற்ற ஒரு ஆத்மாவை எங்கும் காண்.

மானிடர்கள், பிராணிகள், தாவரங்கள், பாறைகள் ஆகிய எல்லாவற்றுடனும் உனக்கிருக்கின்ற ஐக்கியத்தை உணர். எல்லோருடனும் கலந்து பழகு. பாரசீகர்கள், அமெரிக்கர்கள், இத்தாலியர்கள், ஜப்பானியர்கள், ரஷியர்கள் ஆகிய எல்லோரும் உனக்குச் சொந்தமானவர்களே. நீ அவர்களுக்குச் சொந்தமானவன். அவர்களோடு ஐக்கியப்படு.

முதலில் உன்னுடைய ஒற்றுமையை உன்னுடைய குடும்பத்திலுள்ள எல்லா அங்கத்தினரிடத்தும், பிறகு உன்னுடைய இனத்தாரிடத்தும், பிறகு உன்னுடைய ஜில்லா வாசிகள் அனைவரிடத்தும், பிறகு உன்னுடைய மாகாணத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரிடத்தும், பிறகு தேசம் முழுவதினிடத்தும், பிறகு அகில உலகிலுமுள்ள எல்லா மக்களிடத்தும் உணர். இம் முயற்சியில் நீ வெற்றி பெற்று விட்டால்தான் உன்னால் உன்னுடைய ஒற்றுமை அல்லது ஒருமைப்பாட்டைக் கடவுளிடத்து உணர முடியும்.

ஞானிகள் கல்வியறிவும், பணிவும் பூண்ட ஒரு பிராம்மணனிடத்திலும், ஒரு பசுவினிடத்திலும், ஒரு யானையினிடத்திலும், ஒரு நாயிடத்திலும், ஒரு இழிமகனிடத்திலும் கூட சம நோக்குடனேயே பார்க்கின்றனர். இந்தச் சம நோக்கினுடைய தன்மை என்ன? அவர்களுக்கு யானை ஒரு நாயாகத் தோன்றுகிறதா ? குணங்கள் அல்லது தோற்றங்களில் சஜாதீயத் தன்மை (homogeneity) இருக்க முடியுமா ? குணங்கள் எப்பொழுதும் வித்தியாசமாகவும், வேற்றியல்புடன் (heterogeneous) கூடியதாகவும் இருக்கின்றன. யோகத்திலே பொருந்தியிருக்கின்றவராகிய ஞானி பிராமணனிடத்திலும், யானையினிடத்திலும், நாயினிடத்திலும், இழிமகனிடத்திலும் ஆத்மனைக் காணுகின்றார். எங்கும் அவர் அதையே கண்டு சமநோக்கை அனுபவிக்கின்றார். ஆத்மனுடைய நேசத்தின் மூலமாக ஒவ்வொரு பொருளிலும் சமத்துவத்தைப் பார்க்கின்றார். இந்த விஷயத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்.

நீ பார்ப்பதெல்லாம் கடவுள். நீ கேட்பதெல்லாம் கடவுள். நீ சுவைப்பதெல்லாம் கடவுள். நீ நுகர்வதெல்லாம் கடவுள். நீ உணர்வதெல்லாம் கடவுள். இதுதான் தோற்றமளிக்கின்ற அம்சம். இந்த ஸ்தூல சரீரம் விராட்டிற்குச் சொந்தம். இந்த சூக்ஷ்ம சரீரம் ஹிரண்ய கர்ப்பனுக்குச் சொந்தம். காரண சரீரம் ஈஸ்வரனுக்குச் சொந்தம். இப்பொழுது இந்த சிறிய "நான்" எங்கே இருக்கிறது ?

ஒரு கலவையான (synthetic) சமரச நோக்கு உடையவனாக இரு. வேற்றுமையில் ஒற்றுமையை காண். விவேகம், விசாரம், ஞானம் ஆகியவற்றின் மூலமாக தடைகள் அல்லது தடுப்புச் சுவர்களைத் தகர்த்தெறி. ஒருமைப்பாடு அல்லது ஒற்றுமையாகிய தெய்வீக திருஷ்டியைப் பெறு. சாசுவதப் பேரானந்தமாகிய சாம்ராஜ்யத்தில் ஊடுருவி உயரப் பறந்து செல். ஆத்மனுடைய ஒருமைப்பாட்டையுணர்ந்தவனும், அற்புத ஆத்மனுடைய மேலான

காட்சியைப் பெற்றிருப்பவனும் சந்தோஷமாக இருக்கின்றான்.

சிருஷ்டிகள் அனைத்திலும் தெய்வீக சாந்நித்யத்தை உணர். எல்லோருடனும் நட்புடனிரு. எல்லோரையும் நேசி. எல்லோரிடத்தும் அன்பாயிரு. சமரஸ அன்பை வளர். மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து வைக்கும் தடைகள் அனைத்தையும் அழி. விரிவடை. எல்லோருடனும் கலந்து பழகு. உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கின்ற எண்ணத்தை விட்டுவிடு. தீமைக்கும் அநீதிக்கும் ஒரு முற்று வைத்துவிடு. தூயதொரு மனச்சாட்சியை விருத்தி செய். மக்களிடையே ஞானத்தையும், ஆனந்தத்தையும் அமைதியையும் பரப்பு. சத்தியத்தையும், சன்மார்க்கத்தையும் ( righteousness ) பயிற்சி செய்.

குழந்தைக்கும் ஒரு ஞானி அல்லது ஒரு ஜீவன் முக்தனைப் போல சம நோக்கு இருக்கின்றது. அவனுக்கு நண்பன், விரோதி என்கின்ற எண்ணம் கிடையாது. இப்பொழுது நீ அவனை அடித்துவிட்டுப் பிறகு கையிலே ஒரு கற்கண்டுக் கட்டியை வைத்துக் கொண்டு கூப்பிடுகிறாய். அவன் அளவற்ற சந்தோஷத்துடன் உன்னிடம் ஓடி வருகின்றான். இந்தச் சமநோக்கில் அறியாமை இருக்கிறது. ஆனால் ஒரு ஞானியினுடைய சமநோக்கு ஆத்மனுடைய ஒற்றுமை அல்லது ஐக்கியத்தின் ஞானத்தினால் ஏற்பட்டதாகும்.

ஓ, அமுத மகனே, எல்லாவற்றிலும் அந்த ஒப்பற்ற சஜாதீயமான ஆத்மனைப் பார் ''ஓம் சித்-சத்-ஆனந்த ஆத்மா'' என்கின்ற மந்திர சூத்திரத்தை நீ எந்த ஒரு உருவத்தைப் பார்க்கும் பொழுதும் மானசீகமாக ஜபி பொய்யான நாம ரூபத்தை இல்லாததாக்கி அடிப்படையிலே அழியாத சாராம்சமாக விளங்குகின்ற அந்த ஒப்பற்ற பொருளுடன் ஒன்றாகஇருக்க முயற்சி செய். எல்லோருக்கும் ஆத்ம பாவத்துடன் தொண்டாற்று. போலி வேற்றுமைகள்

அனைத்தையும் உருக்கிவிடு. பாகுபாட்டை ஒழித்துவிடு. நியாயமற்ற வெறுப்புக்கள் அல்லது துரபிமானங்கள் அனைத்தையும் அழித்துவிடு. எல்லோருடனும் கலந்து பழகு. எல்லோரையும் சேர்த்துக் கொள். எல்லோரையும் அணைத்துக் கொள். உன்னிடம் இருப்பதை மற்றெல்லோருடனும் பகிர்ந்து கொள். ஒரு வினாடிகூட சோம்பி இருக்காதே. இடைவிடாத வேலையுடன் கூடியதொரு வாழ்க்கையை நடத்து. ஆனால் உள்ளத்திலே எப்பொழுதும் அமைதியைக் கொண்டு அதன் மூலமாக ஒரு அனுஷ்டான வேதாந்தியாகத் திகழ். அம்மாதிரியான அனுஷ்டான வேதாந்திகளின் மகிமை ஓங்குவதாக. அவர்கள் எங்கும் சந்தோஷத்தையும், அமைதியையும், அன்பையும் வீசிக் கொண்டிருப்பார்களாக. அவர்கள் சத்தியம், தெய்வீக ஒளி, தெய்வீகப் பிரகாசம் ஆகிய தீவட்டியை சுமந்து செல்பவர்களாக நடமாடட்டும். அவர்கள் தங்களுடைய வாழ்க்கையின் மூலமாகவே ஒரு அனுஷ்டான வேதாந்த வாழ்க்கையை எல்லோருக்கும் நடத்திக் காட்டுவார்களாக.

எல்லா ஜீவன்களும் ஆத்மா மயமே என்று உணர்ந்த ஞானிக்கு மயக்கமோ அல்லது துக்கமோ கிடையாது. ஏனெனில் அவருக்கு அதைவிட மற்றொன்று கிடையாது. அப்பேர்ப்பட்ட ஒரு ஞானி பிரத்தியக்ஷமான பிரம்மனாகவே விளங்குகின்றார். ஒவ்வொரு பொருளையும் பிரம்மனாக உணரும்பொழுது பிரம்மனைத் தவிர்த்து ஒரு துரும்புகூட இருப்பது கிடையாது. ஆகவேதான் சுருதிகள் ''எல்லாம் பிரம்மனே. வேற்றுமை என்று ஒரு பொருள் வேறொன்றும் கிடையாது.'' என்று வலியுறுத்திப் பிரகடனப்படுத்துகின்றன.

ஜீவனால் பிரம்மனாக முடியும். ஆனால் அவனால் ஈஸ்வரனாக ஆக முடியாது. ஜீவனுடைய உபாதியாக விளங்குகின்ற அவித்தை அழிந்ததும் ஜீவன் பிரம்மனோடு ஒன்றாக ஆகிவிடுகின்றான் (இது ஒரு சித்தாந்தம்).

நதிப் படுகையிலே ஓடினுலும், புட்டிக்குள் மூடி வைக்கப்பட்டிருந்தாலும், கங்கா ஜலம் ஒன்றுதான். அதே போல ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே பொருள்தான்.

வேற்றுமையிலே ஒற்றுமையைக் காண்கின்ற மனிதன் மதத்தைக் கடைப்பிடிக்கின்ற உண்மையான மனிதன். நம்மை விருப்பங் கொள்ளச் செய்கின்ற பொருள்கள் நம்மை வித்தியாசப்படுத்துகின்ற பொருள்களைக் காட்டிலும் நுண்ணியனவாகவும், ஆழ்ந்தும் இருக்கின்றன.

எங்கு த்வைதம் இருக்கின்றதோ அங்கு ஒருவன் மற்றொருவனைப் பார்க்கின்றுன். ஆனுல் ஆத்மன் மட்டுமே இவர்கள் எல்லாமாக இருக்கும் பொழுது ஒருவன் எப்படி மற்றொருவனைப் பார்க்க முடியும்? த்வைதத்திலே பயம் இருக்கிறது. த்வைதத்திலே சண்டைகளும் சச்சரவுகளும் இருக்கின்றன. த்வைதம் என்பது அறியாமை; த்வைதம் வருத்தத்தையும், துக்கத்தையும், நோய்களையும், மரணத்தையும் கொடுக்கின்றது. த்வைதத்தைக் கடந்து செல். திரைகளைத் தகர்த்தெறி. உறைகளைத் கிழித்தெறி. என தன்பார்ந்த மோஹன், இப்பொழுது அத்வைதத்தில் நிலை பெற்றிரு.

அன்பற்ற எண்ணங்களுக்கு இடங்கொடுக்காதே. அன்பில்லாத வார்த்தைகளைப் பேசாதே. மற்றவர்களிடமிருந்து உன்னைப் பிரித்து வைக்கும் சுவர்கள் அனைத்தையும் இடித்துத் தள்ளு. நீ பேதம் அல்லது வேற்றுமையை காணுவாயேயாகில் அன்பு இல்லாமல் போய்விடும். உன்னுடைய பிரசன்னத்தை மரம், கல், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மிருகங்கள் முதலியவற்றில் உணர். எல்லாம் ஆத்மா மயம். எல்லாம் ஒன்றே. அனைத்துலகும் உன்னுடைய சரீரம். இதை உணர். உன்னுடைய ஒருமைப்பாட்டை எல்லா ஜீவன்களிடத்தும் உணர்.

உன்னுடைய உள்ளத்திலே ஒரு ஆழமான பதிவை உண்டுபண்ணுவதற்காக நான் மறுபடியும் வற்புறுத்திக் கூறுவேன். உலகம் என்பது கிடையாது. நீ இந்த உடல் அல்ல. நீ எங்கும் நிறைந்த ஆத்மா. நீ அகர்த்தா. நீ மௌன சாக்ஷி. இந்திரியங்கள் அவைகளினுடைய தர்மங்களைச் செய்கின்றன. எங்கு பார்த்தாலும் ஆத்மாவே இருக்கின்றது. அகத்தே வாசம் செய்கின்ற பேரறிவுப் பிழம்பை உணர். நீ ஒரு பழத்தைப் பார்க்கும் பொழுது "இது ஒரு ஆத்மா" என்று சொல். எல்லா உருவங்களிலும் சாராம்சத்தைப் பார். வெளியுறைகளையும் மாயமான தோற்றங்களையும் தள்ளுபடி செய். இது (புற) பஹிர் நிர்விகல்ப சமாதிக்கு அழைத்துச் செல்லும். கண்களை மூடவேண்டிய அவசியமில்லை. இந்த வகையான சாதனைக்கு ஆசனமோ, அறையோ தேவையில்லை இந்த சாதனையானது புத்தி கூர்மையுடைய உலக மனிதர்களுக்குப் பொருத்தமானது. இது ஞானத்தோடு சேர்ந்த வேலையாகும். பரபிரம்மனுடைய ஆத்ம ஒளியானது மனமாகவும், பிரபஞ்சமாகவும் தோன்றுகின்றது. உலகம் மனத்தைத் தவிர வேறில்லை. உலகம் ஒரு நீண்ட கனவு. நான் உனக்கு வேதாந்தத்தின் சாரம் அல்லது ஞான யோகத்தைச் சுருக்கமாகக் கொடுத்திருக்கின்றேன். இதை ஜீரணம் செய். இதை உறிஞ்சு. இதைத் தன்மயமாக்கு. இதை எங்கும் தைரியமாக வெளிப்படுத்து. பயமற்றவனாக ஆகு. பிரம்மனைப் பிரகாசி. எனதன் பார்ந்த ஜோதி, தைரியமாக நடமாடு. அகத்தேயுள்ள சத்-சித்-ஆனந்த ஆத்மனில் எப்போதும் களித்திரு.

## 4. வேதாந்தத்தின் மகிமை.

வேதாந்தம் கலப்பற்ற இன்ப சாம்ராஜ்யத்திற்கும், அமரத்துவமும், சாசுவதப் பேரானந்தமும் குடிகொண்டிருக்கும் மேலான வீட்டை அடைவதற்கும் உரிய நேரடியான ராஜ பாதையாகும். இது இறந்து கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு உடனடியான வாழ்வைக் கொடுக்க வல்ல

சஞ்சீவினியாகும். இது ஒரு மனிதனை, அவனுக்கு சாப்பாட்டிற்கு வழியில்லாமல் போனாலும், அவன் கந்தை யுடுத்தி இருந்தபோதிலும், உடனே சக்கரவர்த்திகளுக்கு எல்லாம் சக்ரவர்த்தியாகவும், அரசர்களுக்கெல்லாம் அரசனாகவும், ஷாக்களுக்கெல்லாம் ஷாவாகவும் உயர்த்தி விடுகிறது. இது உண்மையான உள் பலத்தை அளிக்கிறது. இது ஊக்குவிக்கிறது, புதுப்பிக்கிறது, உயிர்ப்பிக்கிறது, பலமூட்டுகிறது, சக்தியூட்டுகிறது. இது நம்பிக்கையற்றோருக்கு நம்பிக்கையையும், சக்தியற்றோருக்கு சக்தியையும், தெம்பு இல்லாதவர்களுக்கு தெம்பையும், சந்தோஷமில்லாதவர்களுக்கு சந்தோஷத்தையும் கொடுக்கிறது.

ஒரு மனிதனை உயர்த்திவிடக்கூடிய ஒரே ஒரு தத்துவம் வேதாந்தம் தான். இது சகலத்தையும் அணைக்க வல்லது. இது வேதங்களின் மதமாகும். இது திக்கற்றவர்களுக்கும், சோர்வடைந்திருப்போர்க்கும், நம்பிக்கை இழந்திருப்போருக்கும், நம்பிக்கையையும், பலம், அமைதி, ஊக்கம் ஆகியவற்றையும் அளிக்கின்றது. வேதாந்தத்தைப் படிப்பது எவ்வளவு உள்ள முயர்த்துவதாக இருக்கிறது! வேதாந்தத்தை அனுஷ்டிப்பது இன்னும் எவ்வளவு உயர்த்துவதாக இருக்கிறது. வேதாந்த ஆசிரியர்களுக்கும், பிரம்ம வித்தை குருமார்களுக்கும் வணக்கங்கள்.

த்வைதத்தன்மை வளருமளவு இப் பூவுலக நிலை பேற்றுப் பயமும் அதிகரிக்கும். எங்கும் ஆத்மனையே காணும் பொழுது, பிரம்மனோடு. இரண்டற்ற நிலையாகிய ஐக்கியத்தை நீ அடையும்போது பார்ப்பதற்கு யாருமில்லாதபோது கேட்பதற்கு யாருமில்லாதபொழுது, தொடுவதற்கு யாருமில்லாதபோது பயம் என்பது எப்படி இருக்க முடியும்?

ஆத்ம லாபத்தைப் பெறுவதைவிடப் பெரியதொரு லாபம் வேறொன்று கிடையாது என்று ஞானிகள் வற்

புறுத்திக் கூறுகின்றனர். ஆத்மானு பூதியை ஒருவன் அடையும் போது எல்லா விதமான ஆசைகளும் பூர்த்தி செய்யப்பட்டு விடுன்றன. அவன் ஆத்மனுடைய மேலான ஒப்பற்ற பேரானந்தத்தை அனுபவிக்கின்ருன். அவன் ஆத்மனில் திருப்தியடைந்து விடுகின்ருன்.

வேதாந்தம் எல்லோரையும் தழுவுகிறது. இது எல்லாம் அடங்கப் பெற்றது. இது உபநிடதங்களின் மதம். இது எல்லோருக்கும் சொந்தமான சொத்து. எம்மத மாயினும் அதனுடன் இதற்கு சண்டை கிடையாது. இது சர்வவியாபகமான சமரசக் கொள்கைகளை போதிக்கின்றது. உலகிலுள்ள எல்லா மதங்களுக்கும் ஊற்று ஸ்தானமாக விளங்குகின்ற சமரஸ மதக் கொள்கை களை ( universal religion ) உள்ளத்தில் பதிய வைக்கின்றது. இது ஒரு பெரிய சமப்படுத்தும் இயந்திரம். இது எல்லோ ரையும் ஒன்று சேர்க்கின்றது. இது எல்லோருக்கும் இடம் கொடுக்கின்றது

வேதாந்தம், எல்லா சம்பிரதாயங்களையும், எல்லா மதங்களையும், எல்லா சித்தாந்தங்களையும், எல்லா மதக் கிளைகளையும், எல்லா தேசங்களையும் சேர்த்துக் கொள் கின்றது. இது இந்தியாவின் பண்டைய முனிவர்களின் கோட்பாடுகளை ( revelations ) பறை சாற்றுகின்றது. இது எல்லோருக்கும் சொந்தமான பொதுச் சொத்து. இது இருதயத்தை விரிவடையச் செய்து கண்களைத் திறந்து விடுகிறது. இது ஒரு புது வாழ்வை அளிக்கின்றது. இது ஒப்பற்ற சந்தோஷத்தையும், சாசுவதமான பேரானந்தத் தையும் கொடுக்கிறது. இது மனிதனை மனிதனிடமிருந்து பிரித்து வைக்கும் தடைகள் அனைத்தையும் நீக்கி எல்லா மக்களையும் ஒன்றுபடுத்துகிறது. இது ஆறுதல், பலம், அமைதி ஆகியவற்றைக் கொடுத்து எல்லாவித பயங்கள், சந்தேகங்கள், ஆவல்கள், பிரமைகளையும், மயக்கங் களையும் நீக்குகின்றது.

சூரியன் எவ்வாறு இருளைப் போக்குகின்றதோ அதே போல ஆத்ம ஞானம் அவித்தை அல்லது அறியாமையைப் போக்குகின்றது. பிறகு பிரம்மனை உன்னிடமிருந்து மறைத்துக் கொண்டிருந்த நாம ரூபங்களாலான உலகம் முழுதும் உருகி மறைந்து விடும்.

பிரம்ம ஞானமானது பிரம்மனிடமிருந்து மற்றவர்களுக்கும், குருவினிடமிருந்து சீடர்களுக்கும் (பரம்பரையாக) கொடுக்கப்பட்டு வருகிறது. ஆத்ம ஞானத்தை ஸ்ரீ கௌடபாதர், ஸ்ரீ கோவிந்த பாதருக்கும், ஸ்ரீ கோவிந்த பாதர் ஸ்ரீ சங்கராச்சாரியருக்கும், ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்ரீ பத்ம பாதருக்கும் இதுபோல ஒவ்வொருவரும் மற்றவருக்கும் கொடுத்தனர்.

நியாய தத்துவத்திலே ஏழு வகை உண்டு. அவைகளாவன :—

திரவியம் (பொருள் — Substance)
குணம் (Quality)
கர்மம் (செயல் — action)
சாமான்யம் (தொகுதி — Genus)
விசேஷம் (வேற்றுமை — Difference)
சமவாயம் (பிரிக்கவொண்ணுப் பற்று co-inherence)

அபாவம் (இல்லாமை - non—existence)
(பிரத்யக்ஷம் இந்திரிய ஞானம்). அனுமானம் (ஊகித்தல்) சப்தம் (வேதாந்த திருஷ்டாந்தம் அல்லது ஒரு ஆப்தத்தின் திருஷ்டாந்தம்) உபமானம் ஆகிய இந்த நான்கும் நியாய தத்துவத்திலே பிரமாணங்கள் (ஞானநிருபணங்கள்).

எது அறிகின்றதோ அது பரமாத்மா; எது ஒரு பொருளினுடைய ஞானத்தை ஏற்படுத்துகின்றதோ அது பிரமாணம் (நிரூபணம்) தெரிந்து கொள்ளக்கூடிய வஸ்து அல்லது பொருள் பிரமேயம்.

நேரடியான இந்திரிய ஞானத்தை நீ அதிகம் சார்ந்திருக்க முடியாது. ஆகாயத்தைப் பார். இது ஒரு வில் மண்டபம் (dome) போல் தோன்றுகிறது. இது நீல நிறம் போல் காணப்படுகின்றது. இது உண்மையே அல்ல. அநுமானத்தையும் உன்னால் சார்ந்திருக்க முடியாது. எல்லா பிரமாணங்களிலும் சப்தப் பிரமாணந்தான் மிகவும் நம்பக்கூடியதாக இருக்கிறது. ஏனென்றால் இது அனுபூதியடைந்த ஆத்மாக்களின்! நேரடியான அனுபவமாகும். இது இம்மியும் பிசகில்லாதது. சுருதிகள் சரியான பிரம்ம ஞானத்திற்குரிய ஒரு வழியாக அதிகாரத்தை உடையவைகளாக இருக்கின்றன.

ஆத்மஞானம் என்பது உணர்வதற்கான ஒரு பொருளேயன்றி வெறும் பேச்சுக்குரியதல்ல. இது அனுபவ-ஞானம். உபநிஷத்துக்களையும் பிரம்ம சூத்திரங்களையும் படித்து விடுவதனால் மட்டும் ஒரு மனிதன் இந்த ஆத்மஞானத்தைப் பெற்றுவிட முடியாது. வெறும் பிரசங்கமும் அதிகமாக உதவாது. ஒரு கிணற்றிலுள்ள தவளை சமுத்திரத்தின் ஆழத்தைக் காண முடியுமா? ஒரு குருடன் சூரிய வெளிச்சத்தினுடைய மகிமையை நீ எவ்வளவு தான் உபமான உபமேயங்களைக் கொண்டு விளக்கிய போதும், புரிந்து கொள்ள முடியுமா? கற்கண்டை சுவைத்துப் பார்த்திராத ஒரு மனிதன், நீ கற்கண்டின் சுவையைப் பற்றி எவ்வளவு தான் பிரசங்கம் செய்த போதிலும், கற்கண்டின் சுவையைப் புரிந்து கொள்ள முடியுமா? அத்மஞானமானது ஒருவன் தனக்குத்தானே, ஸ்ரவணம், மனனம், நிதித்தியாஸனம் ஆகியவற்றின் மூலம் உணர்ந்து அனுபவிக்க வேண்டிய விஷயமாகும்.

## 5. வேதாந்த அனுஷ்டானம்.

ஞானத்திற்கு முதல் படி ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் இடைவிடாத சேவை செய்தலாகும். இரண்டாவது படி பலன்களைக் கட்டுப் படுத்துதல், மூன்றாவது

பணிவு, சகிப்புத்தன்மை, தயை, சத்தியம், பிரம்மச்சரியம் போன்ற நற் பண்புகளை வளர்த்தல். நான்காவது தியானம். பிறகு நீ ஆத்மனுடைய இனிய அந்தரங்க சாரீரத்தைக் கேட்பாய். பிறகு இயற்கை யுணர்வாகிய மூன்றுவது கண் திறக்கப்படும். உனக்கு ஒளி விளக்கம் (ஞானோதயம்) ஏற்படும்.

ஸ்ரீ சங்கருடைய உபதேச ஸஹஸ்ரியில் ''அமைதியான மனத்தை உடையவனும், புலன்களைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பவனும், சித்த விகாரம் (காமம்) முதலிய குறைபாடுகளிலிருந்து விடுபட்டிருப்பவனும், கீழ்ப்படிதல் உடையவனும், நற்பண்புகள் அமையப் பெற்றிருப்பவனும், எப்பொழுதும் பணிவாக இருப்பவனும், விடுதலைக்காக ஏங்கிக் கொண்டிருப்பவனும் ஆகிய ஒருவனுக்கு வேதாந்தம் கற்பிக்கப்படவேண்டும்'' (–324-26/72) என்று கூறியிருப்பதை நீங்கள் காணலாம்.

வேதாந்த மாணுக்கர்கள் தினந்தோறும் கடோபநிஷத்தை வாசிக்க வேண்டும். ஆத்ம ஞானம் அல்லது ஆத்மானுபூதியைப் பற்றிய விஷயத்தைப் பற்றி நசிகேதஸுக்கும் யமனுக்கும் இடையே நடக்கின்ற வாக்குவாதம் ஒன்று அதில் இருக்கிறது. இதிலே ஆறு அத்தியாயங்கள் அடங்கியிருக்கின்றன.

சில வேதாந்த மாணுக்கர்கள் உடலைப் பற்றி கவனித்துக் கொள்வதில்லை. இது ஒரு பெருந்தவருகும். அவர்களுக்கு உடலின் மேல் எவ்வித மோஹமும் இருத்தல் கூடாது. பிரஹலாதனுக்கும் பகவான் விஷ்ணுவிற்கும் இடையே ஏற்பட்ட சம்பாஷணையை அவர்கள் செவிமடுப்பார்களாக; ''ஓ மாசற்ற பிரகலாதா, உன்னுடைய உடம்பை கவனித்துக் கொள். உன்னுடைய உடம்பை இது போன்ற பக்குவமடையாத காலத்தில் ஏன் விட்டுவிட நினைக்கின்ருய்? பொருள்களிடத்திலே விருப்பு வெறுப்பாகிய சங்கல்பமேயானது எவ்வளவு காலம் உன்னிடம்

குடிகொள்ளாது இருக்கின்றதோ அதுவரை உன்னுடைய உடல் இருந்தால் என்ன? இல்லாமற் போனால் என்ன? இப்பொழுது சமாதியிலிருந்து எழுந்திரு. ஜீவன் முக்தி நிலையில் உள்ள உன்னுடைய இந்த உடம்பின் மூலமாக இவ்வுலகில் நீதிபரிபாலனம் செய்துவா. இருந்த போதிலும் சம்சாரமாகிய சுமையின் கீழே சிக்கித் திணறுமல் இருத்தல் வேண்டும்.''

வெளியிலே உன்னுடைய ஊனக்கண்களால் பார்க்கின்ற இந்த ஸ்தூல கங்கை உண்மையான கங்கை அல்ல. ஆத்ம ஞானம் அல்லது சிவஞானம் தான் உண்மையான கங்கை. அது அமரத்துவத்தைக் (மரணமிலாப் பெரு வாழ்வை) கொடுக்கின்றது. உண்மையான கங்கை ஆகாசத்தைப் போல் எங்கும் வியாபித்திருக்கிறது. கார்த்திகை பௌர்ணமி தினத்தன்று குருமுக்தேஸ்வரத்தில் (உ. பி.) உள்ள கங்கைக் கரையில் நீராடுவதற்கு அற்புதமான தூய்மையாக்கும் சக்தி இருக்கிறது என்பதில் ஐயமில்லை. வெறும் நீராடல் மட்டும் போதாது. சிரவணம், மனனம், நிதித்தியாஸனத்தின் மூலமாக சித்த சுத்தியுடன் ஆன்மீக கங்கையிலே நீராடுதல் இன்றியமையாததாகும்.

பிரம்மன் காணப்படாமலிருப்பதற்குக் காரணம் மனம் மாசுபட்டு இருப்பதுதான். மாசற்றுத் தூய்மையாக இருப்பவர்கள், மனத்தையும் புலன்களையும் கட்டுப்படுத்துவதன் மூலம் அவனை சமாதியில் உணர்கின்றனர். ''உறக்கமின்றி, பந்தனம் செய்யப்பட்ட சுவாசத்துடன் திருப்தி பெற்ற மனங்களுடன், அடக்கப்பட்ட புலன்களுடன், அவனைத் தியானிக்கின்ற யோகிகள், மகத்துவம் பொருந்திய சாசுவதமான ஒப்பற்ற பொருளாகத் திகழ்கின்ற அவனைக் காண்கின்றனர்'' என்று ஸ்மிருதியும் பகர்கின்றது.

உன்னதமான ஆத்மனுடைய உண்மையான தன்மையைப் புரிந்து கொள். அவன் கர்மங்கள், வலி, கடுந்

துயரங்கள் பாவம் ஆகியவைகளினுல் தீண்டப்படாதவன். அவன் சாசுவதமான, உடலற்ற, எங்கும் நிறைந்த, சுதந்திரமான, மாறுபாடு இல்லாத, சுயம்பிரகாசமான, சுயமாக நிலைத்திருக்கின்ற, சர்வத்தையும் தன்னகத்தே அடக்கி வைத்துள்ள ஒரு ஒப்பற்ற பொருளாகத் திகழ்கின்ருன்.

புலனுறுப்புக்கள் ஸ்தூல சரீரம், மனம், பிராணுக்கள், அறிவு, முதலியவை எல்லாம் அவித்தையினுல் உண்டு பண்ணப்பட்ட பொருள்கள் ஆகும். அவைகள் உபாதிகளாகும். நேதி–நேதி (இது அல்ல, இது அல்ல) என்ற வேதாந்தக் கொள்கையின் மூலமாக அவற்றை இல்லாததாக்கிவிடு அல்லது நீக்கிவிடு. கடைசியாக மிகுதியாக நிற்பது ஆத்மன் அல்லது பிரம்மன் மட்டுமே. ஆகவே கேவலோஹம் "நான் தனியாக இருக்கின்றேன்" என்று பாவத்துடன் ஜபித்து ஆத்மீக பேரானந்தத்தை இப்பொழுதே அனுபவி. எனது அன்பார்ந்த குழந்தாய். சீலா, இப்பொழுது சாதனையை ஆரம்பி.

அகவாழ்வு மிகவும் முக்கியமானது. உலகம் உண்மையற்றது. இது ஒரு நிழல். இது மாயையினுடைய இந்திர ஜாலமாகும். இது ஸ்வப்னம் (கனவு). பிரம்மன் மட்டுமே உண்மை. நீ பிரம்மனிலிருந்து உபாதியைக் (மனம், உடல், இந்திரியங்கள்) கழித்த மிகுதி. 'தத் தவம் அஸி'- நீ அதுவாக இருக்கின்ருய். இந்த மூன்று கருத்துக்களையும் திரும்பத் திரும்பக் கூறுவதில் நான் சலிப்படைவதே கிடையாது. அவைகள் உன்னுடைய கண்ணறைகள், இரத்தம், நரம்புகள், எலும்புகள் ஆகியவற்றிற்குள் ஊடுருவிப்பாய வேண்டும். உன்னுடன் தொடர்பு கொள்ளுவோர்கள் அனைவருடைய உள்ளங்களிலும் இக் கருத்துக்களைப் பதிய வை. பக்தி, தன்னலமற்ற கர்மம் ஆகியவற்றையும் உபதேசம் செய்.

ஒரு சமயம் பார்வதி தேவி பரமசிவனைப் பார்த்து, "தேவே, ஞானத்தின் மூலமாகத்தான் பிறப்பு இறப்புச்

சுழலிலிருந்து விடுதலை பெறப் படுகிறது என்று சிலர் கூறுகின்றார்கள். அப்படியிருக்க யோகத்தினால் என்ன பிரயோஜனம்?'' என்று கேட்க அதற்கு சிவபெருமான் ''ஒரு யுத்தத்தில் வெற்றி ஒரு வாளினால் தான் அடையப் படுகிறது; ஆனால் சிப்பாயும், வீரமும் இல்லாமல் அந்த வாளினால் என்ன பயன்?'' என்று பதிலிறுத்தார். ஆகவே ஞானம், யோகம் ஆகிய இரண்டுமே அவசியமான தேவைகளாகும். ''ஆத்மானுபூதி அல்லது ஆத்ம ஞானத்தை அடைந்த பல ஞானிகள் யோகத்தையே பயிலாமல் இருந்தது எப்படி?'' என்று நீ கேட்கலாம். அவர்கள், அவர்களுடைய முற் பிறவிகளிலே யோகத்தைப் பயின்று விட்டனர் என்பதுதான் அதற்குரிய தெளிவான பதிலாகும்.

''அலைகள் சமுத்திரத்தைச் சேர்ந்தவை. சமுத்திரம் அலைகளைச் சேர்ந்ததல்ல. அதே போல நான் பிரம்மனைச் சேர்ந்தவன். பிரம்மன் என்னைச் சார்ந்தவரல்ல'' என்று ஸ்ரீ சங்கரர் கூறியிருக்கிறார். ஸ்ரீ சங்கரருக்கு மிக உன்னதமான அத்வைத உணர்வு இருந்த போதிலும், அவர் கேவல அத்வைத வேதாந்தத்தின் பிரதிநிதியாகத் திகழ்ந்த போதிலும், அவர் பக்தியைப் புறக்கணிக்க வில்லை. அவர் மிகப் பெரும் பக்தராக இருந்தார். அவர் தக்ஷிணாமூர்த்தியின் பேரில் ஸ்தோத்திரங்களும், ஹரி ஸ்தோத்திரங்களும், தேவி ஸ்தோத்திரங்கள் முதலியவைகளும் இயற்றியிருக்கின்றார். அவைகள் அவருடைய பக்தி பாவத்தை மிக உன்னதமான முறையில் எடுத்தியம்புகின்றன. அவர் ஒரு சுஷ்க (வரட்டு) வேதாந்தியாக இருக்கவில்லை.

ஸ்ரீ சங்கரருடைய கொள்கைப்படி: ''ஸ்வஸ்வரூபானுசந்தானம் பக்திரித்யாபிதீயதே — ஒருவன் தன்னுடைய உண்மையான தன்மையைத் தேடிச் செல்வது பக்தி என்று கூறப்படும்.'' அவர் மேலும், ''விடுதலைக்கு ஏதுவாக இருக்கின்ற பொருள்களிலே பக்தியே தலையாய ஸ்தானம் வகிக்கின்றது'' என்று கூறுகின்றார்.

ஜீவனுனவன் நித்திரையினின்று எழுந்தவுடன் ''நான் நல்ல தூக்கத்தை அனுபவித்தேன். எனக்கு ஒன்றுமே தெரியாது'' என்று கூறுகின்ருன். மனமானது அதனுடைய லயஸ்தானத்திலிருந்து வெளிவந்த வுடனேயே பிரக்ஞையினுடைய அனுபவங்களும் மூல அக்ஞானமும் மனத்திலும், சம்பந்தப்பட்ட சைதன்யத் திலும் பிரதிபலிக்கப்படுகின்றன.

ஓம், ஸோஹம், ஆத்மா ஆகியவற்றை நினைவி லிறுத்து, மௌனமே ஆத்மா. மையமே ஆத்மா. மையத் தில் நிலைபெற்று அமைதியையும், பலத்தையும் பெறு. விரும்பு, பெறு.

சுவாசத்தை உள்ளிழுக்கும் போது ''ஸோ''வை ஜபிப்பதற்குக் கஷ்டமாகத் தோன்றினுல், ''ரா'' அல்லது ''நான்'' அல்லது ''சிவோ'' அல்லது ''ஓ''வை ஜபிக் கலாம். சுவாசத்தை வெளிவிடும் போது ''மா'', ''பிரஹ் மன்'', ''ஹம்'', அல்லது ''ம்'' ஐ ஜபிக்கலாம். ஸோஹம்; ஸ: என்ருல் அவன். அஹம் என்ருல் ''நான் இருக்கிறேன்'' என்று பொருள். ''நான் அவனுக இருக் கின்றேன்''. இதுதான் ஸோஹத்தின் பொருள். நான் பிரம்மனேடு ஜீவனுக்கிருக்கும் ஒற்றுமையைக் காட்டு கின்றேன்.

எனது அன்பார்ந்த பிரகாஷ், உன்னுடைய மனத் திற்கும், இந்திரியங்களுக்கும் ஒளியையும், சக்தியையும் கொடுக்கின்ற மூலாதாரப் பொருளாகிய ஆத்மாவை— ராமை நீ மறந்திருக்க மாட்டாய் என்று நான் நம்பு கின்றேன். அவனுடைய பிரசன்னத்தை நீ உன்னுடைய போட்டோ நெகட்டிவ்களிலும், புகைப்பட ரசாயனங் களிலும், வாடிக்கைக்காரர்களிடமும் உணருவாயா? வேலையிலிருக்கும் பொழுதும், இருட்டறையில் பிளேட் டுகள் கழுவிக் கொண்டிருக்கும்போதும் ''ஓம் ராம்'' என்று ஜபி. உன்னுடைய ஆத்மானுபூதிக்கு இது ஒரு சுலபமான சாதனையாகும்

கண்ணபெருமானுடைய தரிசனம் நேருக்கு நேராக உனக்குக் கிட்டும். நீ பலமுறை அவரோடு பேசவும் செய்யலாம். நீ அவரோடு விளையாடலாம், சாப்பிடலாம். ஆனால் கடைசி விடுதலையை நீ பெற வேண்டுமானால் உன்னிடம் ஆத்ம சாக்ஷாத்காரம் இருத்தல் வேண்டும். நாமதேவருக்குக் கிருஷ்ண பரமாத்வினுடைய தரிசனம் பலமுறை கிடைத்திருந்தது. இருந்த போதிலும் கோரா-கும்பார் என்ற குயவ ஞானியால் அவர் அரை வேக்காடுடன் கூடிய ஞானி என்று பிரகடனப்படுத்தப்பட்டார். அவர் பூர்ணத்துவம் அல்லது கைவல்யத்தை அடைவதற்கு விசோபா கேசரிடம் செல்ல வேண்டியதாயிற்று.

இறைவழிபாடு, வேதபாராயணம், குரு சேவை ஆகியவைகள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி சாசுவதப் பேரானந்தத்தை அடைவதற்கு வழி கோலுகின்றன.

இறைவன் அல்லது ஆத்மனை, ஞானம், திருப்தி, அமைதி, சந்தோஷம், சமநோக்கு என்கின்ற மலர்களால் வழிபடு. இது உண்மையான வழிபாடாக அமையும். ஞானம், திருப்தி முதலிய காணிக்கைகளோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து ரோஜா, மல்லிகை, சந்தணக் குழம்பு, வாசனைப் புகை, மிட்டாய்கள், பழங்கள் ஆகிய காணிக்கைகள் ஒன்றுமே சரி இல்லை. இவைகளெல்லாம் ஆரம்ப சாதகர்களால் அளிக்கப்படுகின்ற காணிக்கைகளாகும்.

அறியாமை காரணமாக உன்னை விட்டு வேருக இருக்கின்ருன் என்று வழிபடுகின்ற ஆண்டவன், உன்னைவிட்டு விலகி தூரத்தில் இல்லை. அவர் வெளியில் எங்கும் வாசம் செய்யவில்லை என்பதை நீ உணர்வாய். உன்னுடைய இருதய அறைக்குள்ளே வசித்து வருகின்ற ஆத்மாதான் அவர். அவர் அகத்திலே ஆட்சி புரிபவர்.

"எதுவும் இல்லை. எதுவும் எனக்குச் சொந்தமல்ல. நான் எல்லோரிடத்தும் இருக்கின்ற ஆத்மனுக இருக்

கின்றேன்.'' என்று துணிந்து கூறு. இது வேதாந்த சாதனை. இது தெய்வீக உணர்விற்கும் ஐக்கியம், ஒருமைப் பாடு ஆகியவற்றின் அத்வைத ஆத்மானுபூதிக்கும் அழைத்துச் செல்லும்.

பெரும்பகுதி, பயிற்சியையே சார்ந்திருக்கிறது. பயிற்சி மனிதனைப் பூரணத்துவமடையச் செய்கின்றது என்பதை நீ அறிவாய். லக்ஷியத்தை நெருங்கிக் கொண் டிருக்கும் பொழுது உதயமாகின்ற அளவு கடந்த ஆனந் தத்தின் சிலிர்ப்பை உணர். இப்பொழுது நீ அதிசயிக்கத் தக்கதொரு அமைதியை அனுபவிப்பாய். ஆத்ம கமலம் இப்பொழுது பரிபூரணமாக மலர்ந்திருக்கும். ஆழ்ந்த மௌனத்திலுள்ள அமிர்தத்தைப் பருகு. அந்த எல்லையிலா மௌனத்திலே ஆத்மனுடைய விசித்திரங்கள் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் உனக்கு வெளிப்படுத்தப்படும். அவித் தையும், மாயையும் அவைகளின் பலன்களாகிய மோஹம், பயம் முதலியவைகளும் ஓட்டம் பிடிக்கும். பிறகு எங்கு பார்த்தாலும் ஒளி, ஞானம், தூய்மை, பேரானந்தம் ஆகியவைகளே காணப்படும்.

ஒருவன் பூரணத்துவம் அல்லது ஆத்ம ஞானத்தை அடைவது ஜடா முடியின் மூலமல்ல, அனல் தெறிக்கும் பிரசங்கங்கள், புலமை ஆகியவற்றின் மூலமல்ல, அற்புதங் களைச் செய்து காட்டுவதன் மூலமுமல்ல. எவனிடத்திலே ராக–துவேஷங்களாகிய இரு நீரோட்டங்களும், அகங் காரம், காமம், வெகுளி ஆகியவைகளும் முற்றிலும் அழிக் கப்பட்டிருக்கின்றனவோ, அவன் மிகவும் சந்தோஷ முடையவனாக இருக்கின்றான். அவனே ஒரு பிராமணன் அல்லது விடுதலை பெற்ற ஆத்மா, அல்லது ஜீவன் முக்தன் ஆவான்.

சிந்தித்துப் பார்க்காமல் உண்மை அல்லது பிரம்மனை தெரிந்து கொள்ளவோ அல்லது உணரவோ முடியாது. சிந்தனை செய்தலானது ''நான் யார்?'' என்கின்ற

விசாரணையில் அடங்கியுள்ளது. ஆத்மனுடைய தன்மை என்ன? பிரம்ம சிந்தனையானது அமரத்துவம் அல்லது சாசுவதப் பேரானந்தத்திற்கு அழைத்துச் செல்கின்றது. ஆகவே இடைவிடாத பிரம்ம சிந்தனையில் உன்னை ஈடு படுத்து. "நீ எப்படி நினைக்கின்ருயோ அப்படி ஆகின்ருய்". நீ பிரம்மனைப் பற்றி நினைத்தால் நீ பிரம்மனுக ஆவாய். பிரம்மனுக ஆவது என்பது அமரத்துவத்தையும் சாசுவதமான அமைதியையும் அடைதலாகும்.

அனுசந்தானம் என்ருல் விசாரணை அல்லது துருவி ஆராய்தல் என்று பொருள். அனு என்ருல் பின்ஞல் என்று பொருள். சம் என்ருல் பயனுள்ள வகையில், தானம் என்ருல் கவனத்தைச் செலுத்து, என்று பொருள். ஆத்மா அனுசந்தானம் என்பது ஆத்மனுடைய தன்மையைப் பற்றி விசாரணை செய்தலாகும். இது விசாரம் என்ற சொல்லுக்கு ஒத்த சொல்லாகும்.

ஞான யோக மார்க்கத்திலே, புலனுகர்ச்சிப் பிரபஞ்சத்தினுடைய மாய வஸ்துக்களைச் சுட்டுத் தள்ள நித்ய-அநித்ய-வஸ்து-விவேகமானது ஒரு இயந்திரத் துப்பாக்கியாகப் பயன்படுகின்றது.

நான் யார்? பிரம்மன் என்ருல் எது? இந்த சம்சாரம் என்பது என்ன? வாழ்க்கையின் லட்சியம் என்ன? லட்சியத்தை அடைவது எப்படி? பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை அடைவது எப்படி? மோக்ஷத்தினுடைய சொரூபம் என்ன? எங்கிருந்து? எங்கே? எவ்விடத்திற்கு? இவ்வாறு விடுதலையை நாடுகின்ற சாதகன் வாழ்க்கையின் லக்ஷியத்தை நாடி எப்பொழுதும் விகாரம் செய்தவண்ணம் இருத்தல் வேண்டும்.

சிருஷ்டி இரண்டு வகைப்படும். ஒன்று ஜீவ சிருஷ்டி. மற்ருென்று ஈஸ்வர சிருஷ்டி. நான் என்பதும் என்னுடையது என்பதும் ஜீவ சிருஷ்டியாகும். ஒரு மனிதனை

இந்த சம்சாரத்தில் பந்தப்படுத்துவது ஜீவ சிருஷ்டியாகும். ஜீவ சிருஷ்டி மனோமய சிருஷ்டி என்றும் வழங்கப்படுகின்றது. பஞ்ச பூதங்களும் ஆண்டவனால் சிருஷ்டிக்கப் பட்டிருக்கின்றன. ஈஸ்வர சிருஷ்டி மனிதனை பந்தப்படுத்த முடியாது. அதற்கு மாறாக அது மனிதன் விடுதலை பெற உதவி செய்கின்றது.

''பாகுபடுத்தப்பட முடியாததற்கும் மேம்பட்டு விளங்குவது'', காரணமாகவோ அல்லது காரியமாகவோ பிறவாமல் இருப்பது'', ''எதிலிருந்து வாக்கும் மனமும் தடை செய்யப்பட்டு திரும்பி விடுகின்றனவோ அது'', எது இதுவுமல்லாமல் அதுவுமல்லாமல் இருக்கின்றதோ அது'', ''தெரிந்தது தெரியாதது ஆகிய இரண்டிற்கும் வேறு பட்டது'' எதுவோ அது பிரம்மன் அல்லது நிலையான வஸ்து என்று சுருதிகள் வலியுறுத்திக் கூறுகின்றன. அவன் உண்மையான கட்டுப்படுத்தப்படாத சத். அவன் உண்மைகளுக்கெல்லாம் பேருண்மையாக (சத்யஸ்ய சத்யம்) விளங்குபவன்.

வேதாந்த மாணாக்கன் நேதி நேதி என்ற சித்தாந்தத்தை தினசரி அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருகின்றான். ''நான் இந்த அழியக் கூடிய உடல் அல்ல. நான் இந்த மனம் அல்ல. நான் இந்த பிராணனுமல்ல. நான் இந்திரியங்களுமல்ல'' என்று அவன் கூறுகின்றான். நேதி-நேதி என்றால் இது அல்ல, இது அல்ல என்று பொருள். இதுதான் அபாவமார்க்கமாகும் (path of negation). ஆனால் அவன் சர்வ வியாபகமான ஆத்மாவோடு தன்னை அபேதப் படுத்திக் கொள்ள அவன் முயற்சிக்கின்றான். இப்பயிற்சியானது ஆத்மானுபூதியை அடைவதில் போய் முடிகிறது. எங்கும் நிறைந்திருக்கும் பிரம்மானுபவத்திற்கு உடனடியாக அழைத்துச் செல்கின்றது.

ஒரு வீட்டில் பத்து அறைகள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இரவிலே அவ்வறைகளிலுள்ள இருட்டு

ஒரே மாதிரியாகவே இருக்கிறது. ஒரே ஒரு இருள்தான் இருக்கிறது. நீ ஒரு அறைக்கு ஒரு விளக்கைக் கொண்டு சென்றால் விளக்கு வைக்கப்பட்டிருக்கும் அறையிலுள்ள இருள் மட்டும் நீக்கப்படுகின்றது. இதே போல் சைதன்யம் என்பது எல்லா ஜீவன்களிடத்தும் ஒன்றுதான். எல்லா ஜீவன்களிடத்தும் பொதுவான ஒரே ஒரு உணர்வுதான் இருக்கின்றது. அறியாமையாகிய இருள் ஒரு ஜீவனிடத்தில் அழிக்கப்பட்டால் அவன் ஒருவன் மட்டுமே பூரண விளக்கம் அல்லது ஆத்ம ஞானத்தைப் பெறுகின்றான். ஒரு ஜீவன் பிரம்ம ஞானத்தை அடையும் பொழுது மற்ற ஜீவன்கள் ஜீவன் முக்தர்களாவதில்லை. ஏனெனில் அந்தஃகரணம் அல்லது தடுப்புச் சுவர் ஒவ்வொரு ஜீவனிடத்திலும் வெவ்வேறாக இருக்கின்றது.

ஆத்மன் சர்வ வியாபகமாகவும், பாகுபடுத்தப்பட முடியாதவனாகவும் இருக்கின்றான். ஒருவன் வேறு எதையும் பார்க்காத பொழுது, வேறு எதையும் கேட்காத பொழுது, வேறு எதையும் முகாரத பொழுது, வேறு எதையும் சுவைக்காத பொழுது, வேறு எதையும் உணராத பொழுது வேறு எதையும் புரிந்து கொள்ளாத பொழுது அது ஆத்மாவாக இருக்கிறது. ஆத்மா மேல், கீழ், முன், பின், வலம், இடம் ஆகிய எல்லா பக்கங்களிலும் இருக்கிறது. எல்லா ஜீவன்களுக்கும் ஜீவாதாரமாக விளங்குவது ஆத்மாதான். மனமானது தனக்கு வேண்டிய ஓய்வை ஆழ்ந்த உறக்கத்தில் ஆத்மாவில்தான் எடுத்துக் கொள்கின்றது. ஆத்மா மனத்தை எண்ணத்தில் ஈடுபடுத்துகின்றது. ஆத்மா தூய்மையான சர்வவியாபகமான சூக்ஷமமான ஆவியாக இருப்பதால் அது உருவமற்று, வர்ணமற்று, குணமற்று, நாமமற்று, சரீரமற்று இருக்கிறது. ஆனால் அது பேரானந்தமும் ஞானமும் சேர்ந்த ஒரு திரளாக (mass) இருக்கிறது.

இந்த சரீரத்திற்குள்ளே ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் உணர்வு அல்லது சைதன்யத்தின் உதவியின்றி உன்னால் கேட்க, பார்க்க, சுவைக்க, பேச, நடக்க, நினைக்க, உணர, அறிய முடியாது. ஒரு பிணத்தினால் பேசவோ,

பார்க்கவோ அல்லது கேட்கவோ முடியாது, ஏனென்றால் அதனிடத்தில் ஜீவ சைதன்யம் கிடையாது.

நீ சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், இமய மலையின் பனி மூடிய சிகரங்கள், மல்லிகை, ரோஜா, நயாகரா நீர்வீழ்ச்சி, பரந்த சமுத்திரம் ஆகியவற்றைப் புகழ்ந்து பாராட்டுகின்றாய். நீ ஆகாயக் கப்பல், நீராவிக் கப்பல் ரயில், தந்தி, கம்பியில்லாத் தந்தி ஆகியவற்றை மெச்சுகின்றாய். மூளையிலே தன்னுடைய இருப்பிடத்தைக் கொண்டுள்ள மனம் இன்னும் அதிசயமானது. கண்மூடிக் கண் திறப்பதற்குள் இது கொழும்புவிலிருந்து லண்டனுக்கும், இமயமலையிலிருந்து பெர்லினுக்கும் சென்று விடுகிறது. பிரபஞ்சம் முழுவதிலும் நீக்கமற நிறைந்திருப்பவனும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மனம் ஆகியவற்றை எல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றவனுமாகிய பிரம்மன்தான் மாபெரும் அதிசயம்.

மாயையினுடைய இந்த நவத்துவார நகரத்தில் ஜீவன் ஆழ்ந்த உறக்கத்தை அனுபவிக்கின்றான். இந்நிலையில் விருத்தியோ, அல்லது சங்கல்பமோ, சித்தவிருத்தியிலே மாறுபாடோ அல்லது இந்திரியங்களின் சேஷ்டைகளோ, ராகத்வேஷ ஓட்டங்களின் இயக்கமோ, அல்லது அறிவினுடைய வேலையோ கிடையாது. இந்த நிலையில் பொய்யான அல்லது உண்மையான ஞானம் இருப்பது கிடையாது.

விழிப்பு நிலையில் ஏற்பட்ட அனுபவங்களானது, வாஸனைகள், சம்ஸ்காரங்கள் மூலமாக, மாறுதல்களுடனும், கூடுதல்களுடனும், விநோதமான கலவைகளோடும், கனவிலே திரும்பவும் உண்டுபண்ணப்படுகின்றன. கனவுக் காட்சிகள் எல்லாவற்றையும் சிருஷ்டிப்பது மனமே. மனம்தான் விஷயம். மனமேதான் வஸ்துவும். மனமே, பெண், குதிரை, வண்டி, சாரதி, பாதை, நதி, நகரம் முதலியவைகளாக உருவெடுக்கின்றது.

இப்பிரபஞ்சமானது நன்மை, தீமை என்று சொல்லப் படுகின்ற இரண்டு பலம் பொருந்திய சக்திகளால் அடங்கப் பெற்றிருக்கிறது. நன்மையும் தீமையும் இரட்டைச் சக்திகள். அவைகள் இரண்டும் ஒரே தந்தைக்குப் பிறந்த இரட்டைக் குழந்தைகள். அவைகள் த்வந்துவங்கள் அல்லது எதிர் மாருன ஜோடிகள். அவைகளுக்கு சுதந்திரமான நிலைபேறு கிடையாது. நன்மையைப் பெருமைப் படுத்த தீமை இருக்கிறது. இது அதனுடைய வர்த்தனேபபத்தி (raison d'etre). தீமையானது எதிர் மறையான நன்மையாகும். தீமை நன்மையின் கருவூலம். தீமை ஒரு அழிக்கும் சக்தி. நன்மை ஒரு ஆக்கும் சக்தி. இப் பிரபஞ்சத்தில் முழு நன்மையோ அல்லது முழுத் தீமையோ கிடையாது. தீமைக்கு நன்மையை விட்டு அப்பால் தனிப்பட்ட நிலைபேறு கிடையாது. எங்கெல்லாம் தீமை இருக்கிறதோ அங்கெல்லாம் நன்மை இருக்கின்றது. எங்கெங்கு நன்மை இருக்கின்றதோ அங்கெல்லாம் தீமையும் இருக்கின்றது.. இந்த சம்பந்தமுள்ள உலகத்தில் நீ பரிபூரண நன்மையை எதிர்பார்க்க முடியாது. பிரம்மனிடத்தில் மட்டுமே பரிபூரண நன்மையை நீ எதிர் பார்க்க முடியும். நன்மை தீமை ஆகிய இரண்டிற்கும் பின்னுல் இருக்கின்ற அடிப்படை உண்மையாகிய திருஷ்டி கோணத்திலிருந்து நோக்கும் பொழுது நன்மையும் தீமையும் காற்ருேடு காற்ருகக் கரைந்து போய்விடும். நன்மையும் தீமையும் மானசீக சிருஷ்டிகளே. நன்மை தீமையைக் கடந்து மேலான சாந்தியும் அமரத்துவமும் இருக்கின்ற வாசஸ்தலத்தை அடை. ஆத்ம ஞானம் பெற்ற ஞானிக்கு நன்மையோ தீமையோ கிடையாது.

கெட்ட வஸ்து என்று இந்த உலகில் கிடையாது. மல ஜலம் கெட்ட வஸ்துதானே என்று நீ சொல்லலாம். நான் இல்லை என்று சொல்லுகின்றேன். இது காய்கறித் தோட்டங்களுக்கு உரமாகப் பயன் படுகின்றது. மலத்தினுடைய தீவிரமான புகாரை இப்பொழுது கேள் :

"ஓ நண்பரே, என்னைக் குறை கூறுதே. நான் உன்னுடைய நாக்கு, வயிறு, குடல்கள் ஆகியவற்ருேடு தொடர்பு கொண்டதனுல் தான் கெடுக்கப்பட்டேன். இதற்கு முந்திய நிலையிலே நான் இனிமையானதொரு ஆரஞ்சுப் பழமாக இருந்தேன். நான் சுவைமிக்க ரஸகுல்லா வாக இருந்தேன். நான் கல்மி மாம்பழமாக இருந்தேன்." நல்லதும் கெட்டதும் சம்மந்தப்படுத்தும் சொற்களே. அவைகள் மானசீக சிருஷ்டிகள். மாம்பழம் இனிமையான தல்ல. கற்பனை தான் இனிமையானதாக இருக்கிறது. மங்கை அழகாக இல்லை. அழகாக இருப்பது கற்பனைதான். மலம் அசுத்தமான்தல்ல. கற்பனைதான் அசுத்தமாக இருக் கிறது. மனதைத் திருத்து. ஆதாரமாக இருக்கின்ற ஆத்மனை நினை. அப்பொழுது எல்லாம் புனிதமானதாகவும் தூய்மையானதாகவும், நல்லதாகவும், அழகாகவும் இருக்கும். கெட்டதை நல்லதாக மாற்று. சுவர்க்கத்தை பூமிக்குக் கொண்டு வருவதற்கு இது தான் மார்க்கம்.

வக்கீல் தொழில் சிறந்தது என்றும், இலாபகரமானது என்றும் ஒரு டாக்டர் நினைக்கின்ருர். வைத்தியத் தொழில் சிறந்தது, இலாபகரமானது என்று ஒரு வக்கீல் நினைக் கின்ருர். இருவரும் ஒரு ஏக்கத்தின் கீழ் சிரமப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். இது தான் மாயை. இது மனதி னுடைய மற்ருெரு தந்திரம். எச்சரிக்கையாக இரு. விவேகத்தைப் பெறு.

ஆசை, வலி, விருப்பு, வெறுப்பு ஆகியவைகள் எல்லாம் மனத்தினுடைய குணுதிசயங்கள். சாங்கியர்கள் அல்லது ஞானிகள் ஆத்மனிலோ அல்லது உடல் துன்பத் தினின்று எது வந்தாலும் அதிலிருந்தோ வலியைக் காண் பதில்லை. இவைகள் ஒவ்வொன்றையும் செய்வது பிரக்ருதி என்பதும் ஆத்மா ஒரு மோனமாக இருக்கின்ற சாக்ஷி மாத்திரமே என்பதையும் அவர்கள் அறிவார்கள். கர்மங் கள் குணங்களைச் சார்ந்தவைகள் என்பதை அவர்கள்

நன்கு அறிந்து "நான் எதையுமே செய்வது கிடையாது" என்று எண்ணுகின்றனர்.

இந்த ஆத்மா சுயநிலைபேறும், சுயப்பிரகாசமும் உடையவன். அவன் காதுக்குக் காதாகவும், கண்ணுக்குக் கண்ணாகவும், நாக்கிற்கு நாக்காகவும், மனத்திற்கு மனமாகவும், உயிருக்கு உயிராகவும இருக்கின்றான். புலன்கள், மனம், பிராண ஆகியவை அனைத்தும் தங்களுடைய சக்தியை ஒவ்வொரு பொருளுக்கும் ஆதாரமாக விளங்குகின்ற பிரம்மனிடமிருந்து பெறுகின்றன. அவனில்லாமல் உன்னால் கேட்க முடியாது. அவனின்று உன்னால் பார்க்க முடியாது. அவனில்லாமல் உன்னால் சுவாசிக்க முடியாது. அவனின்றி உன்னால் எண்ணமுடியாது. அவன்தான் அகத்தை ஆட்சிபுரிபவன் (அந்தர்யாமி).

எதிலிருந்து தன்னுடைய சிந்தனைசக்தியின் மூலமாக இந்த எல்லையற்ற, சர்வவியாபகமான ஆத்மன் உருவெடுத்ததோ அதுதான் மனம் என்று அழைக்கப்படுகின்றது. மனம் உண்டுபண்ணுகிறது. அழிக்கவும் செய்கிறது. அது தன்னுடைய கற்பனை சக்தியின் மூலமாக பிரபஞ்சம் முழுவதையும் சிருஷ்டிக்கின்றது. மனத்தினுடைய பிரதான அம்சம் கற்பனைத் திறன். சுகதுக்கங்கள் எல்லாவற்றையும் சிருஷ்டி செய்வதும் அனுபவிப்பதும் இதுதான். பந்தத்திற்கும் விடுதலைக்கும் காரணமாக இருப்பதும் இதுதான். மனமே சகலமும், சர்வமும் இதுவே, இது உன்னுடைய ஆப்த நண்பனும், பரம விரோதியுமாகும். கீழ்மனம் உன்னுடைய விரோதி. இது பலவிதமான பற்றுதல்களை ஏற்படுத்துகின்றது. இது பலவிதமான இழிந்த ஆசைகளாலும், பசிகளாலும் நிரப்பப்பட்டுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலான மனம் ஒரு அரிய நண்பனும், நன்மை பயப்பதுமாகும். ஏனெனில் இது வாழ்க்கையின் லட்சியத்தை அடைவதற்கு உண்மையான ஆலோசனைகளை வழங்குகின்றது. மேல்மனம் உனக்கு வழிகாட்டும் குருவாக அமைகின்றது. அதனுடைய இனிய, மெல்லிய குரலைக்

கேட்டு அதன் உபதேசங்களைப் பின்பற்று. தூய மனத்தினுடைய குரல்தான் இறைவனுடைய குரலாகும். இது பிழைபடாத குரலாகும். ''ஒரு மனிதன் தன்னைத் தன்னுடைய சொந்த ஆத்மாவின் மூலமாகவே உயர்த்திக் கொள்ள வேண்டும். அதனால் இந்த ஆத்மனை அவன் பலஹீனப்படுத்தாமல் இருக்கட்டும். ஏனெனில் இந்த ஆத்மா ஒருவனுக்கு நண்பனாகவும் இருக்கிறது. இந்த ஆத்மா ஒருவனுக்கு விரோதியாக இருக்கிறது. இந்த ஆத்மா (நம்முடைய தன்மையிலே ஜீவனுள்ள பாகம்) தன்னை இந்த ஆத்மாவின் மூலமாக வென்று விட்ட ஒருவனுடைய ஆத்மனுக்கு நண்பன். தன்னை வெல்லாத ஒருவனுக்கு இந்த ஆத்மா விரோதங்கொண்டு (புற) விரோதியைப் போல நடந்து கொள்கின்றது'' அத். VI - 5-6. என்று கீதையிலே கூறியிருப்பதை நீ காணலாம்.

வெளியற்ற பிரம்மனிடத்தில் வெளி எவ்வாறு தோன்றியது? கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, ஆகியவை எவ்வாறு வந்தன? இதுவும் மனதினுடைய சிருஷ்டி அல்லது தந்திரமாகும். நீ களைத்திருந்தால் ஒரு பர்லாங்கு தூரம் ஒரு மைலாகத் தோன்றும். நீ தெம்பாக இருந்தால் ஒரு மைல் தூரம் ஒரு பர்லாங்காகத் தோன்றும். ஒரு ஜீவன் முக்தன் அல்லது ஞானிக்கு காலமும் இல்லை, தூரமும் இல்லை. காலம், தூரம் ஆகியவற்றைக் கடந்த ஒப்பற்ற பிரம்மனையே அவர் காண்கின்றார்.

எவன் மனதினுடைய மாறுபாடுகள் அல்லது விருத்திகளுக்கு சாக்ஷியாக விளங்குகின்றானோ, அம்மாதிரியான மாறுபாடுகள் எழுவதற்கு முன்னதாகவே இருக்கின்றானோ, மனதினுடைய மாறுபாடுகளிலேயே இருக்கின்றானோ அவன் பிரம்மன் அல்லது மேலான ஆத்மனாவான்.

மேடு-பள்ளம், அகம்-புறம், உயர்வு-தாழ்வு, பெரியது-சிறியது, மெலிவு-பருமன், நற்பண்பு-தீய பண்பு, நல்லது-கெட்டது, சுகம்-துக்கம், அழகு-குரூரம், இப்

பொழுது-பிறகு, இங்கு-அங்கு ஆகியவை எல்லாம் சம்பந்த முள்ள பதங்களாகும். இவைகள் எல்லாம் மானசீக சிருஷ்டிகளே. மேடு பள்ளமாகும், பள்ளம் மேடாகும். அந்தப் பெரிய குச்சியுடன் ஒப்பிடும் பொழுது இந்தக் குச்சி சிறியது. அந்தப் பெரிய குச்சி அதைவிடப் பெரிய இன்னொரு குச்சியுடன் ஒப்பிடும் பொழுது சிறியதாக ஆகிவிடுகிறது. அகம் புறமாக ஆகும், புறம் அகமாக ஆகும். ஒரு சமயத்தில் நல்லதாக இருப்பது மற்றொரு சமயம் கெட்டதாக இருக்கிறது. ஒருவனுக்கு நன்மையாக இருப்பது மற்றொருவனுக்குத் தீமையாக இருக்கிறது. ஒருவனுக்கு தர்மமாக இருப்பது மற்றொருவனுக்கு அதர்மமாக இருக்கிறது. ஒரு காலத்தில் தர்மமாக இருப்பது மற்றொரு காலத்தில் அதர்மமாக இருக்கிறது. பிரம்மன் மெலிந்தோ அல்லது பருத்தோ, பெரிதாகவோ அல்லது சிறிதாகவோ இல்லை. பிரம்மனிடத்தில் அகமோ அல்லது புறமோ, நற்குணமோ அல்லது தீய குணமோ, சுகமோ அல்லது துக்கமோ, நல்லதோ அல்லது கெட்டதோ கிடையாது. அது பேரானந்தமும் ஞானமும் கூடிய ஏகரஸமாக இருக்கிறது. அதிலே மனதினுடைய லீலைகளோ, காலமோ அல்லது தூரமோ, கிழக்கோ அல்லது மேற்கோ, இறந்த காலமோ அல்லது எதிர்காலமோ, வியாழக்கிழமையோ அல்லது வெள்ளிக்கிழமையோ கிடையாது.

நீ உனது அன்பிற்குரிய சதோதரனுகிய ஸ்ரீ பானர்ஜீயை உனது முன்னிலையில் பார்க்கின்றாய். நீ பானர்ஜீ, என்று அறிவதும் அழைப்பதும் எதை? பானர்ஜீ, அவனுடைய கைகளோ, கால்களோ, தலையோ, மார்போ அல்லது வயிறோ அல்ல என்பது நிச்சயம். அவனுடைய கைகளும், கால்களும் துண்டிக்கப்பட்டாலும் கூட, அவனுக்கு லியூகோ டெர்மா அல்லது வெள்ளைத் தோல் நோய் வந்தாலுங்கூட, அவனுடைய கண்விழிகள் நீக்கப் பட்டு விட்டாலுங்கூட, அவனிடத்து உனக்கு அதே அன்பு தான் இருக்கும். நீ அவனை பானர்ஜீ என்ற பெயரைச் சொல்லித்தான் அழைப்பாய். பானர்ஜீ இந்த ஸ்தூல

சரீரம் அல்ல என்பதை இது நிரூபிக்கின்றது. ஸ்தூல சரீரம் பஞ்ச பூதங்களால் மட்டுமே ஆனது. இதற்கு ஒரு ஆரம்பமும் ஒரு முடிவும் உண்டு. பானர்ஜீ எண்ணங்களும், கருத்துக்களும், சித்த விகாரங்களும், உணர்ச்சிகளும், சைதன்யங்களும் அடங்கப் பெற்றவன் என்றும், மனமே பானர்ஜீ என்றும் இப்பொழுது நீ கூறலாம். எண்ணங்கள் மாறுகின்றன. மனம் மாறுகிறது. மனது சூக்ஷ்மமான வஸ்துவினுல் ஆக்கப்பட்டிருக்கிறது. தன் மாத்திரைகளினுடைய அபஞ்சீகிருத சத்துவப் பகுதியானது மனதை அமைப்பதற்குச் செல்கிறது. மனமானது அவித்தை அல்லது அறியாமையின் பலன். அதற்கு ஒரு ஆரம்பமும் ஒரு முடிவும் உண்டு. பானர்ஜீயினுடைய எண்ணங்களும், நடத்தையும் மாறினுலுங்கூட நீ அவனுடைய தோற்றத்தைப் பற்றிக் கொண்டிருக்கிருய். ஆகவே அவன் எண்ணங்கள் கூட அல்ல. அவன் மனம், இந்திரியங்கள், சரீரம் ஆகியவைகள் அல்ல. மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஒளி கொடுப்பவன் ஆண்டவனே. உண்மையான பானர்ஜீ மனம், வாக்கு, காலம், தூரம், காரணம் ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டிருக்கும் அழியாத ஆத்மாதான். சரீரமும் மனமும் அவித்தையினுல் சிருஷ்டிக்கப்பட்ட அவனுடைய மாயமான தொடர்ச்சிகளே (appendages) ஆகும்.

ஏரியினுடைய மேல் மட்டம் சைதன்ய மனத்திற்கு ஒப்பிடப்படுகின்றது. ஏரியினுடைய அடிமட்டம் உபமனத்திற்கு (அடிமனம்) ஒப்பிடப்படுகின்றது. ஏரியினுடைய அடித்தளத்திலிருந்து மேல்மட்டத்திற்கு வருகின்ற பொருள்கள் அடிமனத்திலிருந்து சைதன்ய மனிதன் மேல் மட்டத்திற்கு வருகின்ற பிரதி பிம்பங்களுக்கு ஒப்பாகக் கூறப்படுகின்றன. மனதைத் தொந்தரவுபடுத்துகின்ற விக்ஷேப சக்தியானது ஏரியினுடைய தண்ணீரை அசைய வைக்கின்ற காற்றிற்கு ஒப்பாகக் கூறப்படுகிறது. விழிப்பு நிலையின்போது இந்த விக்ஷேப சக்தி, ஜீவனுடையதும், இந்திரியங்களுடையனவுமாகிய சங்கற்பங்கள் மனத்தை

அலையை வைக்கின்றன. ஆழ்ந்த உறக்க நிலையில் மன மானது பரிபூரண ஓய்வு பெற்று இருக்கின்றது.

மனமானது மதுவுண்ட வண்டைப் போல சுழலு கின்றது. வஸ்துக்களிலிருந்து இந்திரியங்களை வேருக்கு. எல்லாக் கவர்ச்சிகளையும் ஒழி. பிராணனைக் கட்டுப் படுத்து. உடலின் வாயில்களை மூடு. ஒரு யானையை உன்னால் எவ்வாறு கைப்பற்ற முடிகிறதோ அதே போல இப்பொழுது நீ உன்னுடைய மனத்தைக் கைப்பற்றலாம். திரும்பத் திரும்பத் தன்னை எதிர்த்து வரும் எதிரிகளை ஒரு வீரன் எப்படித் தன்னுடைய வாளினால் கொன்று வீழ்த்து கின்றானே அது போல் வஸ்த்துக்களைப் பற்றிய எண்ணங் கள் அனைத்தையும் அவைகள் திரும்பத் திரும்ப எழுந் திருக்கும் போது கொன்று வீழ்த்து. எல்லா விருத்திகளும் இறந்துபடும்பொழுது மானசீக இருள் நிலையை நீ அடை வாய். இந்த இருளை விவேகத்தின் மூலம் நீக்கு. பிறகு நீ பிரகாசம் பொருந்திய ஒளியைக் காண்பாய். இப்படி யைத் தாண்டு. ஒரு சூன்யப் பிராந்தியத்தை நீ கடக்க வேண்டிவரும். பிறகு தூக்கத்தையும், மோஹத்தையும் நீ கடக்க வேண்டியுளது. கடைசியாக நீ நிர்விகல்ப சமாதிக்குள் நுழைவாய்.

கண்ணோ, வாக்கோ, அல்லது மனமோ அங்கு செல் லாது. சூரியன் அங்கு பிரகாசிக்க மாட்டான். நெருப்பு அங்கே எரியாது. காற்று அங்கே வீசாது.

அந்த நிலையான மேலான பரம்பொருளை ஊனக் கண் களால் காண முடியாது. கைகளால் பற்ற முடியாது. காதுகளோ, கண்களோ இல்லாதிருப்பவனும், வாயோ அல்லது மூக்கோ இல்லாதிருப்பவனும், எலும்பு, தசை, இரத்தம் ஆகியவை இல்லாதிருப்பவனும், சொர சொரப் பாகவோ அல்லது வழுவழுப்பாகவோ இல்லாதிருப்பவனும் ஆதியற்று, அந்தமற்று, காலமற்று, இடமற்று இருப்ப வனும், இவ்வுலகிற்கு ஆதாரமாக இருப்பவனும், வேதங்

களின் பிறப்பிடமாக இருப்பவனும், தேவர்களுக்கெல்லாம் தேவனாக விளங்குபவனும் ஆகிய அவனே பரப்பிரம்மன். அவன் நமக்கு தெளிந்த புத்தியையும், ஐக்கிய திருஷ்டியையும் அளிப்பானாக.

வாசனைகளின் அழிவு (வாசனா க்ஷயம்) மனத்தினுடைய அழிவை (மனோநாசம்) உண்டுபண்ணுகின்றது. மனமானது அழிக்கப்படும்பொழுது எஞ்சியிருக்கும் எல்லா எண்ணப்பதிப்புகளும் (சம்ஸ்காரங்கள்) அழிக்கப்படுகின்றன. அப்பொழுது ஒருவன் ஜீவன் முக்தி அல்லது கடைசி விடுதலையை அடைகின்றான்.

உதடுகள் இரண்டு உள்ளன ; ஆனால் பேச்சு ஒன்றுதான். கால்கள் இரண்டு இருக்கின்றன. ஆனால் அசைவு ஒன்றுதான். கண்கள் இரண்டு இருக்கின்றன ஆனால் வழிபடும் மூர்த்தி ஒன்றுதான். வஸ்துக்கள், ஸ்தூலம் சூக்ஷ்மம் என்று இரண்டு வகைகள் இருக்கின்றன. ஆனால் ஆத்மா ஒன்றுதான் இருக்கின்றது. மேல் மனம் (சுத்த மனஸ்). கீழ் மனம் (அசுத்தமனஸ்) என்று மனத்திலே இரண்டு வகைகள் இருக்கின்றன. ஆனால் அடிப்படையாக இருக்கும் ஆவி (spirit) ஒன்றுதான். க்ஷரம் அக்ஷரம் (அழியக்கூடியது, அழியாதது) என்று புருஷர்களிலே இரு வகை உண்டு. ஆனால் புருஷோத்தமன் (மேலான புருஷன்) ஒருவன்தான்.

ஆழ்ந்த உறக்கத்திலே உன்னுடைய அனுபவம் என்ன ? நீ மட்டுமே இருக்கின்றாய். இரண்டாவதாக ஒரு பொருள் இல்லை. கலவியின் போது உன்னுடைய அனுபவம் என்ன ? இரண்டு ஒன்றாக ஆகியிருக்கிறது. ஆப்த நண்பர்களுக்கு உடல் இரண்டாக இருந்த போதிலும் ஒரே இருதயமும், ஒரே மனமும், ஒரே ஆத்மாவும் உடையவர்களாக இருக்கின்றனர். மாயை அல்லது அவித்தையினுடைய மந்திர ஜாலத்தின் மூலம் ஒன்று பலவாகத் தோன்றுகிறது. பல எனப்படுபவைகள் கயிற்றிலே உள்ள சர்ப்பத்தைப் போல பொய்த் தோற்றமே.

உணர்பவன், உணரப்படுபவைகள் ஆகியவைகள் அடங்கப் பெற்ற அனுபவம் முழுதும் மனதினுடைய ஒரு வெறும் கற்பனையேயன்றி வேறில்லை. பிரம்மனோடு ஐக்கிய பாவத்தை அடைவதற்கு முன்னர் இந்த ஆவரணம் அல்லது திரை கிழிக்கப்பட வேண்டியிருக்கிறது. அவித்தையினுடைய இந்த முடிச்சை, ஆத்ம ஞானமாகிய வாளினால் துண்டித்து விட்டு, சாசுவதப் பேரானந்த சாம்ராஜ்யத்திற்குள்ளே உயரே உந்திச் சென்று ''ஓம் அஹம் பிரஹ்மா அஸ்மி, ஸிவோஹம், ஸோஹம், சத்-சித்-ஆனந்த ஸ்வரூபோஹம்'' என்கின்ற வேதாந்த கீதத்தை உன்னுடைய மூல மகிமையுடன் கர்ஜனை செய்.

## 6. வேதாந்தத்தில் தியானம்

பிரம்ம நிஷ்டை என்பது பிரம்மனிடத்தில் பக்தி பூண்டிருத்தலாகும். இது தன்னை ஒருவன் பிரம்மனிலே நிலைநிறுத்தி வைப்பதாகும். ஒருவன் எல்லாவிதமான புறத் தொழில்களையும் விட்டுவிட்டு எண்ணம் முழுவதையும் பிரம்மனிடத்தே செலுத்தி மற்ற சகலத்தையும் நீக்கி நிலையாக பிரம்மனிடத்திலே பக்தி பூண்டிருத்தலானது இதிலே அடங்கப் பெற்றிருக்கிறது.

ஞானம் என்றால் என்ன? அபேத தர்சனம்தான் ஞானம் — பரமாத்மாவோடு ஜீவாத்மாவினுடைய அபேதத்தை நேரடியாக உணர்தலே ஞானம் ஆகும். தியானம் என்றால் என்ன? த்யானம் நிர்விஷயம் மன:—புலனுகர்ச்சிப் பொருள்களை எண்ணுவதிலிருந்து விடுபட்டுள்ள மனோநிலைதான் தியானம் எனப்படும்.

பிரம்மன் ஒன்றுதான் ஒரே ஒரு ஜீவனுள்ள உண்மையாகும். அவன் உன்னுடைய சொந்த அந்தரங்க ஆத்மா. அவன் கடந்த, நிகழ், எதிர் காலங்களில் இருக்கின்றான். அவன் சுயம்பிரகாசமாகவும், சுயநிலை பேறுடையவனாகவும் இருக்கின்றான். அவன் சத்-சித்-ஆனந்த சொரூப

மாக இருக்கின்றான். அவன்தான் இந்த உலகத்திற்கு அடிப்படை அல்லது ஆதாரமாக விளங்குகின்றான். அவன் அழியாத எங்கும் நிறைந்த, பிரிக்கவொண்ணாத, சாசுவத மான, பிறப்பற்ற, மாறுபாடற்ற, இறப்பற்ற, காலமற்ற, இடமற்ற பொருளாகத் திகழ்கின்றான். உன்னுடைய இருதயத்தைத் தூய்மைப்படுத்து. தியானத்தின் மூலமாக இந்த பிரம்மனை உணர்ந்து விடுதலையையும், அமரத்துவத் தையும், பேரானந்தத்தையும் பெறு.

அறிபவனை நீ எவ்வாறு அறிய முடியும்? அறிபவன் எப்பொழுதும் கர்த்தா அல்லது சாக்ஷியாகாவ இருக் கின்றான். புறவஸ்துக்களை உன்னால் அறிய இயலும். ஆத்மா அல்லது அறிபவனை நீ தீவிரமான தியானத்தின் மூலமாகவும், இயற்கையுணர்வின் மூலமாகவும்தான் உணர வேண்டியிருக்கிறது.

பிரம்மன் அல்லது எல்லையற்ற பரம்பொருளை அறிந்து கொள்வது என்பது அவனோடு இரண்டறக் கலப்பதாகும். பிரம்மனை அறிவது என்பது பிரம்மனாக ஆவதாகும். அவனை அறிதல் என்பது சாசுவத ஜீவியமாகும். ஆகவே பிரதிபலிப்பின் மூலமாகவும், தியானத்தின் மூலமாகவும் அவனை அறி.

இடைவிடாத சாதனையாலன்றி இந்த அழியாத ஆத்மனை அடைதல் என்பது முடியாது. ஆகவே அமரத் துவத்தையும், விடுதலையையும் அடைய விரும்புவோன் ஆத்மனை நீண்டகாலம் தியானித்து வரவேண்டும்.

சத்-சித்-ஆனந்த மலையாகிய உப்பு மலையினுடைய எப்பகுதியிலும் பிரம்மனை நீ உன்னுடைய தூய மனத்தின் உதவி கொண்டு ஆழ்ந்த தியானத்தின் போது சுவைத் தாலும் நீ பேரானந்தத்தை அனுபவிப்பாய்.

அன்பார்ந்த மல்லிகா, இந்த அதிஉன்னதமான கார்த்திகை தீபத்தை தியானத்தின் போது ஆழ்ந்து கவனித்து அமைதியிலே நிலைபெற்றிரு நீயே அந்த

ஆன்மீக ஒளிப் பிழம்பாக ஆகு. அந்த ஒளிமயமான ஆத்மனேடு உன்னை ஒன்றுபடுத்து. நீ சூரியர்களுக்கெல் லாம் சூரியனுகவும், ஒளிகளுக்கெல்லாம் ஒளியாகவும் இருக்கிருய். நீ இந்த உலகின் ஜோதியாகத் திகழ்கிருய். இதை உணர். இதை உணர். ஓ சுயம்பிரகாசமான அர்ஜுனு!

ரேடியோ அலைகளின் மூலமாக நீ டில்லியிலிருந்து கொண்டு கான்ஸ்டாண்டி நோபிள், கல்கத்தா, பம்பாய், லண்டன், பெர்லின், ஆகிய இடங்களில் பாடப்படுகின்ற பாட்டுக்களைக் கேட்க முடிகிறது. இது ஒலிபரப்புதல் ஆகும். ஸ்தூல மட்டத்திலே ரேடியோ அலைகளின் மூலமாக ஒற்றுமை ஏற்படுகிறது. ஆத்மாவினுடைய ஒற்று மையை வேதாந்த நிதித்யாஸனம் அல்லது அகம்க்ர உபா சனையின் மூலம் உன்னுல் உணர முடியும்.

ஒருசமயம் பாஸ்கலி என்ற சீடன் தன்னுடைய குரு வினிடம் சென்று அந்த நிலையான மேலான எல்லையற்ற பொருளாகிய உபநிஷதங்களிலே கூறப்பட்டிருக்கின்ற பிரம்மன் எங்கு இருக்கிருன் என்று கேட்டான். அவர் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. சீடன் அவரை மறுபடியும் திரும்பத் திரும்பக் கேட்டான். ஆனுல் குரு வாயே திறக்க வில்லை. அவர் மௌனமாக இருந்தார். கடைசியாக குரு ''நான் திரும்பத் திரும்ப உனக்கு எடுத்துரைத்தும் உன்னுல் என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் என்ன செய்யட்டும்? எல்லையற்ற பரம்பொருளாகிய அந்த பிரம்மன் ஆழ்ந்த மௌனமே'' என்று கூறினுர்.

நீ ஒருமுறை ஒரு விநாடி நேரம் அந்த எங்கும் நிறைந்த, தூய, அழியாத சத்-சித்-ஆனந்த ஆத்மன் அல்லது பிரம்மனை நினைத்தால்கூட அது யமுனையும், கங்கையும், சரஸ்வதியும் பிரயாகையிலே கூடுகின்ற இட மாகிய புனிதமான திரிவேணி சங்கமத்திலே ஆயிரத் தெட்டு முழுக்குப் போட்டதற்குச் சமமாகும். இதுதான்

உண்மையான மானசீகமான புனிதஸ்நானம் ஆகும். அகத்திலே செய்யப்படுகின்ற இந்த ஞானஸ்நானத்தோடு ஒப்பிடுமிடத்து இந்த ஸ்தூல சரீர ஸ்நானம் ஒன்றுமேயில்லை. உயர்ந்த ஆன்மீக ஞான சாம்ராஜ்யத்தில் எப்பொழுதும் உயரமாக உந்திச் சென்று கொண்டிரு.

ஒரு முனிவர் மௌனத்தின் மூலம் உபதேசிக்கின்றார். மௌனமே மிகமிகப் புனிதமான உபதேசமாகும். மௌனமே மிகச் சக்தி வாய்ந்த மொழியாகும். இது உள்ளத்தின் மொழியாகும். தக்ஷிணாமூர்த்திப் பிரபு, இளங்குமாரர்களுக்கு (சனகன், சனந்தனன், சனாதனன், சனத்குமாரன்) மௌனத்தின் மூலம் பிரம்ம வித்தையை உபதேசித்தார்.

உண்மையான ஏகாந்த இடம் இரண்டில்லாத ஒன்றாக இருக்கின்ற பிரம்மன்தான். அங்கு சப்தமோ அல்லது வர்ணமோ இல்லை. எந்தவிதமான தொந்தரவும் அங்கு இல்லை. உன்னுடைய சாதனையில் ஆரம்பத்தில் உன்னோடு இருக்கின்ற ஒரே துணைவன் பிரம்மன்தான். ஆழ்ந்த தியானத்தின்போது நீ அதுவாக ஆகும்பொழுது நீ தனியாக விட்டுவிடப்படுகிறாய் (சிவ: கேவலோஹம்).

பரம்பொருளினிடத்தில் உன்னுடைய மனத்தைப் பரிபூரணமாகப் பதிய வைப்பதற்கு தீவிரமான தன்னொழுக்கமும், முறையான தியானமும் உனக்கு உதவியாக இருக்கும்.

நீர்க்குமிழி வெடித்து சமுத்திரத்தோடு ஒன்றாக ஆகிவிடுகின்றது. இந்த சரீரம் வெடிக்கும்போது, மனம் உருகும்பொழுது இந்த ஜீவாத்மா பிரம்மனோடு ஒன்றாக ஆகின்றது. நிராகார தியானத்தில் கீழ்க்கண்ட சூத்திரங்கள் உனக்கு மிகவும் உதவியாக இருக்கும்:

‘‘நான் சத்-சித்-ஆனந்த சாகரம் ஓம் ஓம் ஓம்’’

"நான் ஒளிக்கடல் ... ... ... ... ... ஓம் ஓம் ஓம். மேற் கூறிய விளக்கத்தையும் ஞாபகத்தில் வைத்திரு.

வேதாந்த மாணுக்கர்கள் தியானத்திற்காக ஆசனத்தில் அமர்ந்தவுடனே அவர்கள் பிரம்ம வித்தை குருமார்களான பிரம்மா, வசிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், சங்கரர், சுரேஸ்வராச்சாரியார், பத்மபாதர், த்ரோடகர், தத்தாத்ரேயர், தக்ஷிணுமூர்த்தி, ஸ்ரீ கிருஷ்ணர் மற்றும் இதரர்களையும் வணங்க வேண்டும். இது அவர்களுடைய பாவங்களையும் தடைகளையும் நீக்கும். அவர்கள் தங்களுடைய பாராயணத்தை ஆரம்பிக்குமுன்னதாக அவர்களை ஞாபகப்படுத்திக் கொண்டால் அவர்களால் உபநிடதங்கள், பிரம்ம சூத்திரங்கள், இதர வேதாந்தக் கருத்துக்கள் ஆகியவற்றினுடைய உண்மையான பொருளை தெளிவாகப் புரிந்து கொள்ளமுடியும்.

நிர்குண தியானத்திற்கு நீ நான்கு "சொல் மூர்த்தி"களாகிய சத்-சித், ஆனந்தம் அல்லது ஜோதி ஆகியவற்றில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். பிரம்ம உணர்விலே நீ நிலைபெற்று விடும்பொழுது இந்த "சொல் மூர்த்தி" தாஞகவே விழுந்துவிடும். இச் "சொல் மூர்த்திகள்" நிர்குண தியானத்தைப் பழக ஆரம்பிப்பவர்களுக்கு பயனுடையனவாக இருக்கும்.

இந்திரியங்கள், மனம், புத்தி, வஸ்துக்கள், பஞ்ச பூதங்கள் ஆகியவற்றைத் தனித்தனியாகப் பிரித்தெடுத்து விட்ட பிறகு எஞ்சி இருப்பது சின்மாத்திரை அல்லது தூய உணர்வு ஆகும். இதுவே சிதானந்தமுமாகும். இந்தச் சின்மாத்திரை மட்டுமே எப்பொழுதும் இருக்கின்றது. இது சத். இந்தத் தூய உணர்வை தியானித்து விடுதலையைப் பெறு.

"உலகெலாம் பரவிய பொருள் அழிவற்றதென்று அறிக. அழியாப் பொருளை அழிக்க யாருக்கும் இயலாது"

கீதை அத். II — 17. ''அவிநாசி'' என்றால் அழிக்கப்பட முடியாதது என்று பொருள். ஆத்மன் அவிநாசி. இந்த சுலோகம் ஆத்மனுடைய அழியாத் தன்மையைப் பற்றிப் பேசுகின்றது. இந்த சுலோகத்தினுடைய முக்கியத்துவத்தைப் பற்றி தியானிப்பது ஆத்மானுபூதிக்கு வழிகோலும். இந்தச் சுலோகத்தின் கருத்தை தியானிப்பது ஆத்ம சிந்தனையாகும். ''அவிநாசி'' என்கின்ற சொல்லைத் தியானிப்பதனால் அது நிறைந்த தைரியத்தைக் கொடுப்பதோடு, மனோ சக்தியையும் வளர்க்கிறது. இந்தச் சொல்லை இடைவிடாது மானசீகமாக ஜபி. பயம் உன்னை ஆட்கொள்ளும்போது ''அவிநாசி ஆத்மா நான் — ஓம் ஓம் ஓம்'' என்ற சூத்திரத்தை ஜபி.

சத் - சித் - ஆனந்த பரப்பிரம்மனிடத்தில் சூரிய உதயமோ, சூரிய அஸ்தமனமோ இல்லை; அங்கு இரவோ அல்லது பகலோ இல்லை; அங்கு ஒன்றோ அல்லது இரண்டோ கிடையாது; அங்கு ஜீவனோ, அல்லது ஜீவனல்லாததோ இல்லை. இங்கு வாக்கெல்லாம் மௌனத்தில் முடிகிறது. செய்பவனும், செய்யப்படுகின்ற பொருளும் ஒன்றாகி விடுகிறது. இங்கு பார்ப்பவனும் (சாக்ஷி) இல்லை, பார்க்கப்படுகின்ற பொருளும் இல்லை. ''ஸோஹம்'' ''நான் அவனே'' என்று கூறப்படுகின்ற அந்த உணர்வு இழக்கப்பட்டு விடுகிறது. பார்ப்பவனும், காட்சிக்குரிய பொருள்களும் இழக்கப்பட்டு விடும் பொழுது எது இருக்கிறது, எது இல்லை என்று சொல்வதற்கு யார் அங்கு இருக்க முடியும்?

அகத்தே இருக்கும் ஆத்மனிலே உள்ள அழகாக வாழ்க்கையின் அழியாத இனிமையைச் சுவைத்துப் பார். ஆத்மனில் வாழ்ந்து ஆசிபெற்ற அழியாநிலையை அடை. தியானம் செய்து சாசுவத வாழ்க்கையின் ஆழாழங்களையும் தெய்வீக மகிமையின் உன்னத சிகரத்தையும் அடைந்து அதன் பயனாக பரமாத்மனோடு ஐக்கியமாகின்றதாகிய பரிபூரண மகிமையைப்பெறு. இப்பொழுது உன்னுடைய

நீண்ட களைப்பையூட்டுகின்ற பிரயாணம் முடிவடைகின்றது. நீ உன்னுடைய நிரந்தர சாந்தி நிகேதனமாகிய மனதிற்கினிய மூல கிருஹமும், பரம்தாமனுமாகிய லக்ஷிய இல்லத்தை அடைந்து விட்டாய்.

வேதாந்த மார்க்கத்திலுள்ள மாணுக்கன் தியான சமயத்தின் போது ஏற்படுகின்ற ஒலிகள், ஒளிகள், காட்சிகள் ஆகியவற்றைப் புறக்கணித்து விடுகின்ருன். அவன் எல்லாவிதமான உருவங்களையும், காட்சிகளையும், நிராகரிப்பதின் மூலம் அவன் உபநிஷதங்களின் மந்திரங்களுடைய முக்கியத்துவத்தைத் தியானம் செய்கின்ருன். சூரியனே, சந்திரனே அல்லது நட்சத்திரங்களோ அங்கு பிரகாசிப்பதில்லை. இந்த மின்னலும் பிரகாசிப்பதில்லை. அதைவிட இந்த நெருப்பும் பிரகாசிப்பது கிடையாது. அப்பரம் பொருள் பிரகாசிக்கும் பொழுது அவனைத் தொடர்ந்து எல்லாம் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியினுல் இவைகள் யாவும் பிரகாசிக்கின்றன.

அவன் இந்த மாதிரியும் தியானம் செய்கின்ருன்; "அங்கு காற்று வீசுவதில்லை, அங்கு நெருப்பு எரிவதில்லை, அங்கு சப்தமோ அல்லது ஸ்பரிசமோ, மணமோ அல்லது நிறமோ, ருசியோ, அங்கு மனமோ அல்லது பிராணுவோ அந்த ஏகரசத்தில் கிடையாது"

"அசப்த, அஸ்பர்ஸ, அரூப, அகந்த,
அப்ராணு, அமாணு, அதீந்திரிய, அத்ருஸ்ய,
சிதானந்த ரூப: சிவோஹம், சிவோஹம்,
நான் பேரானந்தசிவம், நான் பேரானந்த சிவம்"

பேரானந்த துரீய நிலையை அடைபவன் சந்தோஷமுடையவனுக இருக்கின்ருன். தன்னுடைய சொந்த சத்-சித்-ஆனந்த ஸ்வரூபத்திலே நிலைத்திருப்பவன் ஆசீர்வதிக்கப்பட்டவன். வாழ்க்கையின் இறுதி லக்ஷியத்தை அடைந்தவன் அமைதியாக இருக்கின்ருன். ஞானிகள், ரிஷிகள்

ஆகியோருடைய அழியா வாசஸ்தலமாம் மாசற்ற புனிதமான பிரம்மனுடைய இருக்கையை அடைகின்றவன் சந்தோஷமுடையவனுக இருக்கின்ருன்.

ஞான மார்க்கத்திலே மூன்று முக்கிய படிகள் உள்ளன. (1) ஸாதனை நிலை (2) காட்சிகள், அல்பம் (3) சகஜ அவஸ்தை அல்லது ஒருவன் பிரம்ம உணர்விலே அல்லது தன்னுடைய சொந்த சத்-சித்-ஆனந்த ஸ்வரூபத்திலே உறுதியாக நிலைபெற்றிருத்தல். நீ காட்சிகள், அல்பம் ஆகியவற்றை அடையும் பொழுது சாதனையை நிறுத்தி விடாதே. சஹஜ அவஸ்தை அல்லது பூமாவில் நிலைபெற்றிருக்கும் வரை அதைத் தொடர்ந்து செய்.

இப்பொழுது அகண்ட பிரம்மாகார உணர்வைத் தொடர முயற்சி செய். அந்நிலையை உன்னுல் எவ்வளவு நேரம் வைத்திருக்க முடியுமோ அதுவரை வைத்திருக்கவும். “ அதிலே ” நிலை பெற்றிரு. எப்பொழுதும் சகஜ அவஸ்தையுடனிரு. இப்பொழுது இதுவே உன்னுடைய லக்ஷியமும் முயற்சியுமாக இருத்தல் வேண்டும். கடந்த ஆறு மாத கால ஆன்மீக சாதனையிலே நீ போதுமான அளவு முன்னேறி இருக்கின்ருய்.

உடலை மறந்து விடு. உலகை மறந்து விடு. நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரை மறந்து விடு. எல்லாவற்றையும் மறந்து விடு. உன்னிடத்தேயுள்ள சாசுவதமான, மாருத, சுயம்பிரகாசமான தத்துவத்தை தியானம் செய். அதிலேயே நிலைபெற்றிரு. அதிலேயே ஐக்கியமாகு. நீ இப்பொழுது ஒரு ஜீவன் முக்தன் அல்லது பாகவதன்.

பிரம்மன் இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டவன். ஆனுல் சாதகன் “ அஹம் பிரம்மா அஸ்மி – நான் பிரம்மன் ” “ தத்-த்வம்-அஸி நீ அதுவாக இருக்கின்ருய் ” என்பனவற்றைப் போன்ற உபநிஷதங்களின் மஹாவாக்கியங்களை தியானிப்பதன் மூலம் உற்பத்தி செய்யப்படுகின்ற

பிரம்மாகார விருத்தியின் மூலமாக பிரம்மனுடைய நேரடி யான உணர்வைப் பெறுகின்றான்.

ஜீவாத்மனுக்கு பரமாத்மாவோடு உள்ள அபேதத் தன்மையை உணர்தலானது காம்ய நிலைபேற்றிலிருந்து (relative existence) பிறந்த துன்பங்கள் அனைத்தையும் ஒழிப் பதோடு ஒரு ஜீவனிடத்திலுள்ள அஞ்ஞானத்திரையையும் நீக்குகின்றது. இந்த அனுபூதியானது " தத்-த்வம்-அஸி " என்ற மஹாவாக்கியத்தினுடைய சரியான முக்கியத்துவத் தைத் தியானிப்பதன் மூலம் வர முடியும்.

அழுது கொண்டிருக்கும் குழந்தையை சமாதானப் படுத்துவதற்காகத் தாயானவள் எப்படி அதற்கு முன்னால் ஒரு வாழைப் பழத்தையோ, அல்லது ஒரு ரொட்டி யையோ, அல்லது ஒரு மிட்டாயையோ வைக்கின்றாளோ, அதே போல ஆன்மீக குருவானவர், மூன்று ஜுரங்களின் காரணமாக இந்தச் சம்சாரத்திலே அழுது கொண்டிருப் பவர்களுக்கு முன்பாக ஜீவாத்மாவுக்கு பரமாத்மாவோடு உள்ள அபேதத் தன்மையை பிரகடனப்படுத்துகின்ற மஹா வாக்கியங்களாகிய மிக ருசிகரமான மதிப்பு மிக்க ஆன்மீக உணவை வைக்கின்றார். எனது அன்பார்ந்த குழந்தைகாள், இனிமேல் அழாதீர்கள். நீங்கள் சாரத் திலே சத்-சத்-ஆனந்த பிரம்மன். இந்த அழியக்கூடிய சரீரத்தோடு அபேதப்படுத்துகின்ற தன்மையை விட்டு விடுங்கள். " தத்-த்வம்-அஸி - நீ அதுவாக இருக் கின்றாய் ". ஆத்மனை உணர்ந்து ஆனந்தமடை.

" தத்-த்வம்-அஸி "யினுடைய சரியான முக்கியத் துவத்தைப் புரிந்துகொள். இந்த மஹா வாக்கியத்திலி ருந்து எழுகின்ற, பரமாத்மாவோடு ஜீவாத்மாவுக்குள்ள அபேதத்தன்மை சம்பந்தப்பட்ட ஞானமே விடுதலைக்கு வழியாகும்.

"நான் பிரம்மனாக இருக்கின்றேன்" "பிரம்மன் நானே" என்பதை உணர். இந்த ஆத்மனை அந்த தூய்

மையான, இரண்டற்ற மேலான ஆத்மனேடு ஐக்கியப் படுத்தி வாழ்க்கையின் இறுதி லட்சியமாகிய பேரின்பப் பெருவீட்டை அனுபவி. இப்பொழுது நீ உன்னுடைய சரீர வாழ்க்கை இருப்பதைக்கூட உணரமாட்டாய். இப் பொழுது நீ இந்த உலகம் பிரம்மன் அல்லது ஆத்மனிலி ருந்து வேருக இருப்பதைக் காண்கின்ருய்.

ஹே சௌம்யா, ஓம், ஓம், ஓம் என்று பாடு. சிவோஹம், சிவோஹம், சிவோஹம். தைரியமாக இரு. எப்பொழுதும் உற்சாகத்துடனிரு. இந்த மாமிசக் கூண்டிலிருந்து வெளி யே வா. நீ இந்த அழியக்கூடிய உடலல்ல. நீ சத்-சித்-ஆனந்த பிரம்மனுகிய அழியாத ஆத்மா. நீ ஆண் பெண் பாலில்லாத ஆத்மா. நீ அரசர்களுக்கு அரசனுடைய மகன். சக்கரவர்த்திகளுக்குச் சக்கரவர்த்தியாக விளங்கும் உப நிஷதங்களின் பிரம்மனும், உன்னுடைய இருதயத்திற் குள்ளே வசிப்பவனும், உன்னுடைய மனத்திற்கு மௌன சாக்ஷியாக இருப்பவனுமாகிய அவனுடைய மகன். அது மாதிரி நடந்து கொள். அது மாதிரி உணர். உன்னுடைய பிறப்புரிமைக்காக நாளையிலிருந்தல்ல, அதற்கு அடுத்த நாளிலிருந்தல்ல, இந்த விநாடி முதற்கொண்டே வாதாடிக் கேள். தத்-த்வம்-அஸி — நீ அதுவாக இருக்கின்ருய், ஓ வீர நிரஞ்சனு.

தத்-த்வம்-அஸி — நீ இறவாதவன் — நீ பிரம்மன். இந்த விஷயத்தில் உறுதியாக இரு. நீ ஒரு துப்பாக்கி முனையிலே இருந்தாலும் சரி, அல்லது ஒரு பீரங்கியின் வாயிலே இருந்தாலும் சரி, இக்கோட்பாட்டை விடாமல் பற்றிக் கொள். இந்த ஆத்மன் அழிக்கப்பட முடியாதவன். நீ ஆத்மனுக இருக்கின்ருய்!

---

# அத்தியாயம் பன்னிரண்டு

# ஞான யோகம்

## 1. பிரம்மன் என்பது என்ன ?

பிரம்மன் அல்லது பரமாத்மா என்பவன் இடம், காலம், சிருஷ்டி ஆகியவைகளுக்கு அப்பாற்பட்டவன். அவன் எல்லையற்றவன். அவன் சாந்த வடிவானவன். அவன் எல்லா சரீரங்களிலும் சமமான பிரகாசத்துடன் பிரகாசிக்கின்ருன். அவன் எந்த ஒரு குறிப்பிட்ட வஸ்துவாகவும் இருக்க முடியாது. அவன் சைதன்யம் அல்லது தூய உணர்வு. அவன் வஸ்து. ஆத்மா அல்லது பிரம்மன் அல்லது பரமாத்மாதான் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் செல்வம். இது ஆபரணங்களுக்கெல்லாம் ஆபரணம். இது ரத்தினங்களுக்கெல்லாம் ரத்தினம். இது எந்தக் கொள்ளைக் காரனுலும் திருடப்பட முடியாத, அழிக்கமுடியாத, குறையாத, மேலான செல்வமாகும். மனிதன் வேண்டுவனவற்றையெல்லாம் கொடுக்கின்ற சிந்தாமணிகளுக்கெல்லாம் இது சிந்தாமணியாகும்.

எவன் தானே எல்லாவற்றையும் பார்க்கின்ருனே, எவனை யாராலும் பார்க்க முடியாதோ, புத்தி முதலியவற்றை எவன் ஒளிபெறச் செய்கின்ருனே, ஆனல் எவனை அவைகள் ஒளிபெறச் செய்யமுடியாதிருக்கின்றனவோ — அவனே பிரம்மன். அதுவே ஆத்மா.

இப்பிரபஞ்சத்திற்கு ஆதாரமாக இருப்பவனும், உணர்வே வடிவாக இருப்பவனும், பேரானந்த சொருபமாக இருப்பவனும், மாறுபாடு இல்லாதிருப்பவனுமாகிய சுயம் பிரகாசமான தூய ஜீவனே பிரம்மன்.

ஒரு மேலான தத்துவம் இருக்கிறது. இது ஆத்மா. இது பரப்பிரம்மன். இது அழியாதது, பிறவாதது, தேயா

தது, இறவாதது. இது புராதனமானது. இது ஒன்றுனது. இது அறிவும் ஆனந்தமும் சேர்ந்த ஒரு திரள்.

பிரம்மன்தான் மிகப் பெரிய சச்சிதானந்த சாகரம். பிரம்மன் ஒரு மனோசாகரத்தாலும், ஒரு பிராண சாகரத்திலும், ஒரு ஆகாச சாகரத்தாலும், தன் மாத்திரைகளினுலும் சூழப்பட்டிருக்கிறது.

அந்தக் கேளாத கேள்வியினன், பாராத பார்வையினன் எண்ணுத எண்ணத்தவன், தெரியாத தேர்வினன் பிரம்மன்.

அந்தப் பிறவாத, அழியாத, இறவாத, அமரத்துவ, பயமற்ற, (அஜம், அஜரம், அம்ருதம், அபயம்) ரஸம் பிரம்மன்.

எதிலிருந்து இந்த உலகம் வெளி வந்ததோ, எதிலே இந்த உலகம் நிலைபெற்றிருக்கிறதோ, எதிலே இந்த உலகம் ஐக்கியமடையப் போகின்றதோ, அது பிரம்மன்.

ஆத்மன் நித்தியமானது. இது மாருதது (நிர்விகாரி). இது ஒரு ஞானத் திரள் (பிரக்ஞான கனம் சித்கனம், விக்ஞான கனம்). இது அழியாதது (அக்ஷரம்).

ஆத்மன் அல்லது தூய ஆவி, காலமற்றது, இடமற்றது, வெளியற்றது, முடிவற்றது. இது ஞானம் நிறையப் பெற்றது (ஞான மயம்). இது சாந்தமானது. சுய ஒளியுடையது (ஸ்வயம் ஜோதி). இது ஜ்யோதிர்மயமானது. (ஒளி நிறைந்தது). வேதாந்த மாணுக்கர்கள் அனைவரும் பிரம்மானுபவத்தைப் பெற இந்த ஆத்மனைத் தேடுகின்றனர். இது பரம் வஸ்து என்று அழைக்கப்படுகின்றது. இது அமரத்துவத்தைக் கொடுக்கிறது.

எதிலே கிழக்கோ அல்லது மேற்கோ, ஒளியோ அல்லது இருளோ, இன்பமோ அல்லது துன்பமோ, பசியோ

அல்லது தாகமோ, ஹர்ஷமோ அல்லது சோகமோ, லாபமோ அல்லது நஷ்டமோ இல்லேயோ, அதுவே பிரம்மன்.

ஆத்மன் நிரவயவன் (அங்கங்களில்லாதவன், கை, கால்களற்றவன்). ஆகவே அவன் அகர்த்தா (அக்ரியா, நிஷ்கிரியா). நிரவயவ ஆத்மனின்மேல் நீ எவ்வாறு காரக நிலேயை (agency) சுமத்த முடியும்?

ஆத்மனுக்கு சரீரம் கிடையாது. இது அதாணு நிராகாரம். அப்படியிருக்க ஜரமும் (கிழத்தன்மை) மரணமும் ஆத்மனுக்கு எவ்வாறு இருக்க முடியும்? ஆத்மன் அஜரன், அமரன், அவினுசி (தேய்வில்லாதவன், மரணமற்றவன், அழிக்கப்பட முடியாதவன்).

மனம், சரீரம், அல்லது கற்கண்டைப் போன்று ஆத்மன் ஒரு வஸ்துவல்ல. நிலேயான அறிவே அதனுடைய தன்மையாக அமைகின்றது. ஜீவாத்மா பரமாத்மனேடு (பிரம்மன்) அபேதமானது.

எல்லா உணர்வுகளிலும் (cognition) ஆத்மன் எப்பொழுதும் சாக்ஷியாக இருப்பவனுகவே விளங்குகின்முன். ஏனெனில் இது எல்லேயற்றது, சுயம்பிரகாசமானது. இது தாணுகவோ அல்லது வேறு ஒன்றினுலோ தோற்றுவிக்கப்பட்டதல்ல இது நேரடி உணர்வு அல்லது உடனடியான, இயற்கையுணர்வோடு கூடிய ஞானமாகிய அபரோக்ஷத்வத்தின் மூலமாக அறியப்படுகின்றது அல்லது வெளிப்படுத்தப்படுகிறது.

பிரம்மனே சச்சிதானந்த மென்று புத்தி ஊகித்தறிய இயலும். ஆகவேதான் இந்த குணங்களெல்லாம் அவனுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல் பிரம்மன் சச்சிதானந்தத்திலிருந்தும் வேறுபட்டவன். அதனுல் பிரம்மன் ஒரு சூன்யம் அல்லது பூஜ்யம் என்ருே ஒரு எதிர்மறையான யூகம் அல்லது ஆத்யாத்மிக கருத்து என்ருே அர்த்த

மல்ல. ஒரே ஒரு ஒப்பற்ற உண்மை அல்லது ஜீவப் பேருண்மையாக அவன் இருக்கின்ருன். அவன் நிலைபேறு. அவன் சாரம் அல்லது சத்துப் பொருள்.

மனம் எப்பொழுதும் சுகத்தைத் தேடித் திரிகிறது ; ஏனென்ருல் அது (பிரம்மன்) ஆனந்தத்திலிருந்து பிறந்தது. நீ ஒரு மாம்பழத்தை விரும்புகின்ருய். ஏனெனில் அது உனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறது. எல்லாப் பொருள் களிலும் உன்னுடைய ஆத்மனையே மிகவும் அதிகமாக நீ நேசிக்கின்ருய். ஆத்ம நேசமானது, ஆத்மாவினுடைய தன்மை ஆனந்தமாகத்தான் இருக்க வேண்டும் என்கின்ற துப்பைக் கொடுக்கின்றது.

உன்னுடைய இருதயத்தின் அறைகளுக்குள்ளே அந்தர்யாமியாக அல்லது அக ஆட்சியாளனுக, அல்லது கட்டுப்படுத்துபவனுக அல்லது சூத்திரதாரியாக அல்லது சாக்ஷியாக இருப்பவனுகிய அந்த இரண்டாவதில்லாத மேலான பரம்பொருளும், முதல், நடு, முடிவு என்பதில்லாத வனும், இவ்வுலகத்திற்கு மூல காரணமானவனும், வேதங் கள், சரீரம், மனம், இந்திரியங்கள், பிராணுக்கள் ஆகியவற்றிற்கு ஆதாரமாக இருப்பவனும், எங்கும் நிறைந் திருப்பவனும், மாற்றமில்லாதிருப்பவனும், ஏகரஸமாக விளங்குபவனும், கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலத்திலும் இருப்பவனும், சுயநிலை பேற்றை யுடைய ஸ்வயம்புவாக விளங்குபவனும், சுதந்திரமாக இருப்பவனும், சுயம் ஜோதியாக விளங்குபவனுமாகிய அந்த அந்தராத்மாதான் கடவுள் அல்லது ஆத்மன் அல்லது பிரம்மன் அல்லது புருஷன் அல்லது சைதன்யம் அல்லது புருஷோத்தமன்.

ஆத்மா அறிந்துகொள்ளப்படுவதிலிருந்து (Knowable) வேறுபட்டது. அவன் அறிந்துகொள்ள முடியாததற்கும் அப்பாற்பட்டவன். அவன் எண்ணிப்பார்க்கப்பட முடியாத வன். இதனுல் அவன் ஒரு சூன்யம் என்றே அல்லது எதிர்

மறையான யூகம் என்றோ அல்லது ஆத்யாத்மீக கருத்து என்றோ பொருளல்ல. அவன் ஒரு ஞானத் திரளினன் அல்லது தூய உணர்வினன். உணர்வானது கல் அல்லது பிளாட்டினம் அல்லது தங்கத்தைக் காட்டிலும் அடர்த்தி யானது. அவன் ஒருவன்தான் உண்மையான ஜீவிய வஸ்துவாக, ஒவ்வொன்றிற்கும் ஆதாரமாக இருப்பவன்.

ஆத்மா மனிதனிடமுள்ள அழியாத வஸ்து அல்லது ரஸம். எண்ணங்கள், ஆசைகள், யூகங்கள் ஆகியவற்றின் பிறப்பிடம் ஆத்மா. ஆத்மா ஆன்மீகமானது, ஏனெனில் இது வஸ்து, மனம் ஆகியவற்றைக் கடந்தது. இது அழியாததாக இருக்க வேண்டும். ஏனெனில் இது காலம், இடம், உற்பத்தி ஆகியவற்றைக் கடந்தது, இது ஆதி யற்றது, முடிவற்றது, காரணமற்றது, எல்லையற்றது.

பரமாத்மா அல்லது ஆத்மா அல்லது பிரம்மன், இந்த உலகத்திற்கு அடிப்படையாக இருப்பதும், பிரிக்கவொண் ணாத சுயம்பிரகாசமானதும், மாறுபாடற்றதும், எங்கும் நிறைந்ததும், மௌன சாக்ஷியும் அல்லது விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளின் சக்தியுமாகிய அந்த நிலைத்த, இடைவிடாது இருக்கின்ற, அழிக்க முடியாத வஸ்துவாகும். இந்த ஆத்மனை அறிந்து கொள் பவன் அமரத்துவத்தை அடைவதோடு பேரானந்தமும் அமிர்தமும் இருக்கின்ற வாசஸ்தலத்திற்குள் நுழைகின்றான்.

பிரம்மன், ஆத்மன் அல்லது புருஷன் என்கின்ற பெயர்களாலும் அழைக்கப்படுகின்றான். புருஷன் அவ்வாறு அழைக்கப்படுவதற்கு அவன் இந்த உடலில் சயனித் திருப்பது, அல்லது அவன் தனக்குத்தானே நிறைந்திருப்பது அல்லது நாம் காண்கின்ற பொருள்களிலெல்லாம் அவன் ஊடுருவி இருப்பதுதான் காரணம்.

ஆத்மன்தான் முடிவான உண்மை. இதுதான் முடிவான வேதாந்த தத்துவம். இது எல்லாவற்றிற்கும்

ஆதாரமானது. இது ஒன்றுதான் உயிருள்ள உண்மை. இது உபநிஷத்துக்களின் பிரம்மன். இது இவ்வுலகிற்கு ஆதாரம். இந்த சரீரத்திற்கும், பிராணனுவிற்கும் இதுதான் முட்டுக்கால். இது மனிதனல்லாத முழுமுதற் பொருள்.

பிரம்மன் அல்லது ஆத்மா அல்லது பரமாத்மா சுயம் பிரகாசமுடையது. பிரம்மன் வேறு எதனுலும் தோற்றுவிக்கப்பட முடியாதவன். பிரம்மன் எல்லாப் பொருள்களையும் தோற்றுவிக்கின்றுன். சுயம் பிரகாச தத்துவமானது வேதாந்தமாகிய மாளிகை முழுவதும் கட்டப்பட்டிருக்கும் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்று. ஆத்மா சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல், நெருப்பு, புத்தி, இந்திரியங்கள் ஆகியவைகளுக்கு ஒளியைக் கொடுக்கின்றது. ஆத்மாவினுடைய ஒளியினுல் தான் இவைகளெல்லாம் பிரகாசிக்கின்றன. ஆனுல் இவைகளால் ஆத்மாவை ஒளிபெறச் செய்ய முடியாது.

ஆத்மா மட்டுமே இருக்கின்றது. இது நாம் காணுகின்ற வஸ்துக்களைப் போல் தோற்றமளிக்கின்றது. இது ஒரு கயிறு ஒரு சர்ப்பம் போலத் தோன்றுவது போலாகும். ஆத்மா இந்த காணப்படுகின்ற வஸ்துக்களின் தோற்றத்தை அணிந்து கொள்கின்றது. இது தானுகவே பிரகாசிக்கிறது. இது சுயம் பிரகாசமானது எல்லாப் பொருள்களும் அதைத் தொடர்ந்து தான் பிரகாசிக்கின்றன. அதாவது அவைகள் தங்களுடைய ஒளியை சுயம்பிரகாசமான ஆத்மாவினிடத்திருந்து பெறுகின்றன.

பிரம்மன்தான் மனிதனுடைய ஆத்மா. அவன்தான் இப்பிரபஞ்சத்தின் ஆத்மா. பிரம்மன் மட்டும்தான் எல்லை இல்லாதவன். இரண்டு முடிவில்லாத பொருள்கள் இருக்க முடியாது. இரண்டு முடிவற்ற பொருள்கள் இருந்தால் அவைகளுக்குள்ளேயே யுத்தம் ஏற்பட்டுவிடும். ஒரு முடிவற்ற வஸ்து ஏதாவது ஒன்றை சிருஷ்டி செய்யும். மற்ருென்று ஏதாவது பொருளை அழிக்கும். முடிவற்ற

பொருள் ஒன்றே ஒன்று தான் இருக்க முடியும். இந்த ஆத்மா ஒரு முடிவற்ற பிரம்மன். மற்ற எல்லாப் பொருள் களும் அதனுடைய தோற்றங்களேயாம்.

பிரம்மன் பிறவாதவன், இறவாதவன், மாறுபாடில்லா தவன், உடலற்றவன், அழியாதவன், பயமற்றவன். அவனுக்கு நாமமோ அல்லது ரூபமோ கிடையாது. அவ னுக்கு சுருக்கமோ, விரிவோ அல்லது அழகோ, குரூரமோ கிடையாது. பிரம்மன் என்பதே பயமற்ற தன்மையாகும். எவன் பிரம்மனை அறிகின்றானோ அவன் அழியாதவனாகவும், பயமற்றவனாகவும் ஆகின்றான்.

உள்ளே பார். உள்ளே பேரானந்த ஊற்று இருக் கிறது. அதுதான் உண்மையான வாழ்வு. எது உண்மை யான "நான்"? அது ஆத்மா. அது அந்தராத்மா, அது பிரம்மன். அது தூய உணர்வு.

## 2. பிரம்மனுடைய தன்மை

அனந்தம், நிராகாரம், நிர்குணம், நிர்விசேஷம், அத்ரிஷ்டம் ஆகியவைகள் அவனுடைய எதிர்மறையான தன்மைகள், சச்சிதானந்தம், சத்யம், சாந்தம், ஞானம் ஆகியவைகள் அவனுடைய நேரடியான உடன்பாட்டுத் தன்மைகள்.

"ஆத்மன் எல்லாவற்றையும் ஊடுருவி இருக்கின்றது, பிரபையுடன் கூடியது, உடலற்றது, சேதமில்லாதது, தசைகளற்றது, தூய்மையானது, பாவத்தால் தீண்டப் படாதது; தூர திருஷ்டி உள்ளது, எல்லாமுணர்ந்தது, மனோவாக்கைக் கடந்தது, தானே தோன்றியது; இது பல்வேறு விதமான சாசுவதமான ஜீவராசிகளுக்கும் அதனதனுடைய வேலைகளை முறையாக வகுத்துக் கொடுத் திருக்கின்றது." மந்திரம் 8. இது ஈஸாவாஸ்ய உப நிஷத்திலே ஆத்மனுடைய தன்மையைப் பற்றிக் கொடுக் கப்பட்டிருக்கும் வர்ணனை.

ரூபமுள்ள வஸ்துக்களுக்குத்தான் உற்பத்தியும், நாசமும் உண்டு. உருவமற்ற சைதன்யம் அல்லது பிரம்ம னுக்கு உற்பத்தியும் நாசமும் உண்டு என்று கூறுவது மதியீனமானது. அவன் நிராகாரம் (உருவமற்றவன்). இது தூய உணர்வு.

நீ எந்தப் பையனையும் கீழ்க்கண்ட கேள்வியைக் கேட்டுப் பார்க்கலாம். அவன் இந்த அழியாத ஆத்ம னுடைய உண்மையான தன்மையை விளக்குகின்ற விடை களை அளிப்பான். “ஏ பையா, உன் பெயர் என்ன?” “என் பெயர் ராமன்”. “இந்தப் பெயர் உன்னுடைய உடலுக்குச் சொந்தமா அல்லது ஆத்மாவுக்குச் சொந்தமா?” “இந்தப் பெயர் என்னுடைய உடலுக்குச் சொந்தம்” என்று ராமன் பதில் கூறுகிறான். “இந்தத் தொப்பி யாருடையது?” “இது என்னுடையது” என்று ராமன் கூறுகின்றான். “இந்த தொப்பி அழிக்கப் பட்டால் நீயும் அழிந்து விடுவாயா?” “இல்லை” என்று ராமன் பதிலளிக்கின்றான். “உன்னுடைய உடல் அழிந் தால் நீயும் அழிந்து விடுவாயா?” “இல்லை. ஆத்மா அழியாதது” என்று ராமன் கூறுகின்றான்.

“சத்யம், ஞானம், அனந்தம் பிரம்மன் - உண்மை, அறிவு, எல்லையற்றது, பிரம்மன்” (தைத்-உபநிஷத் II-I) இது வேதாந்திகளால் அடிக்கடி தர்க்கங்களின் போது எடுத்துரைக்கப்படுகின்றது.

இமயமலை, சமுத்திரம், பரந்த ஆகாயம், சூரியன் ஆகிய நான்கும் எல்லையற்ற தோன்றாத மறைந்துள்ள பிரம்மனுடைய நான்கு பிரதிநிதிகளாக பூமியில் திகழ் கின்றன.

சுருதிகள் பிரம்மனுடைய தன்மைகளைப் பற்றி வலி யுறுத்திக் கூறுகின்றன. “ஆகாசவத் சர்வகத் நித்ய” - “ஆகாசத்தைப் போன்று அவன் சர்வ வியாபகமாகவும், நிரந்தரமாகவும் இருக்கின்றான்”. பிரம்மனுடைய எல்லை

யற்ற தன்மையைப் பொறுத்த மட்டில் ஒரு வகையில் இப் பூமியில் ஒப்பிடத்தக்கவைகளாக இருக்கின்ற வஸ்துக்கள் ஆகாசம், சமுத்திரம் ஆகிய இரண்டும். ஆகாசம் சூக்ஷ்ம மானது, சர்வ வியாபகமானது, எந்தவித ஆதாரமும் இல்லாமல் இருக்கிறது. பிரம்மனும் சூக்ஷ்மமானவன், சர்வ வியாபி, எந்தவித ஆதாரமும் இல்லாதவன் (நிரா லம்பன்). ஆகவே ஆகாசத்திற்கும், பிரம்மனுக்கும் ஒப்பிடப்பட்டது.

புன்னகை, சிரிப்பு, பாடல், ஆடல் ஆகியவைகள் ஒருவனுடைய சந்தோஷமான நிலைக்கு அறிகுறிகள். நீ சாரத்தில் பேரானந்த வடிவினன் என்பதற்கு இவைகள் குறிப்பைக் கொடுக்கின்றன. பேரானந்தம் என்பது ஆத்ம னுடைய குணம் என்பதை இவைகள் குறிக்கின்றன. பிரம்மன் ஆனந்த சொரூபன் (ஆனந்தகனம்) என்பதைக் குறிக்கின்றன.

பிரம்மன் ஒரு அறிவுத் திரன்—(சித்கணன், விக்ஞான கணன், பிரக்ஞானகணன்). அவன் வேறு எந்த குணாதி சயங்களும் இல்லாதவன். அவன் முற்றிலும் எந்தவிதமான வேற்றுமையும் இல்லாதவன். பிருஹதாரண்யக உபநிஷத் திலே (அத் IV - 13) ''ஒரு உப்புக் கட்டிக்கு உட்புறமோ அல்லது வெளிப்புறமோ கிடையாது. ஆனால் அது முழு வதும் அவை நிறம்பிய ஒரு திரளாக இருக்கிறது. அதே போலத்தான் அந்த ஆத்மாவுக்கு உட்புறமோ அல்லது வெளிப்புறமோ கிடையாது. ஆனால் அது முற்றிலும் ஞானமே வடிவானது'' என்று கூறியிருப்பதை நீங்கள் காணலாம். ஒரு உப்புக் கட்டியின் உள்ளும் புறமும் ஒரே மாதிரியான உவர்ப்புச் சுவையைத் தவிர வேறு எந்தச் சுவையும் எப்படி இல்லையோ அதேபோல பிரம்மனிடத்தில் உள்ளும் புறமும் ஒரே மாதிரியான ஞானமே இருக்கிறது. உட்புறமும், வெளிப்புறமும் மானசீக சிருஷ்டிகளே. மன மானது மௌனத்திலே கரையும் பொழுது உட்புற வெளிப் புற எண்ணங்கள் மறைந்து போகின்றன. ஞானி எல்லை

யற்ற, ஏகமாகத் திகழ்கின்ற உணர்வுத் திரளான அந்த ஒப்பற்ற ஒன்றையே உணர்கின்ருன்.

நீரின் பரப்பு விரியும்பொழுது சூரியனுடைய பிரதி பிம்பம் விரிவடைகின்றது. தண்ணீர் சுருங்கும்போது இது சுருங்குகின்றது. நீர் அலையும்போது இது ஆடுகிறது; நீர் பிளவுபடும் பொழுது இதுவும் பிளவுபடுத்தப்படுகின்றது. நீரினுடைய எல்லாத் தன்மைகளிலும், நிலைமைகளிலும் பங்கெடுத்துக் கொள்கின்றது. அந்நிலைமை நெடுகிலும் உண்மையான சூரியன் மாற்றமடையாமலே இருக்கின்றது. அதேபோல பிரம்மன் ஒரு பொழுதும் மாருதவனுக இருப் பினும், தான் வசிக்கின்ற, சேர்ந்து வளர்வதைப் போல் தோன்றுகின்ற இன்னபிற காரியங்களோடு சேர்ந்த உடல் மற்றும் இதர உபாதிகள் ஆகியவற்றின் தன்மைகளிலும், நிலைமைகளிலும் பங்கெடுத்துக் கொள்வது போலத் தோன் றுகின்ருன், ஆனல் உண்மையில் அவ்வாறு கிடையாது.

த்வைதத் தன்மை அனைத்திலிருந்தும் பிரம்மன் விடு பட்டவன். அவன் உள்ளும் புறமும் இல்லாதவன். அவன் ஒரு சஜாதீயமான, பிரிக்கவொண்ணுத, அழியாத ரஸமாக இருக்கின்ருன். அவன் ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி என்கின்ற மூன்று அவஸ்தைகளிலிருந்தும் விடுபட்டவன். அவன் வட்டமாகவோ அல்லது முனையுடனே இல்லை. அவன் குட்டையாகவோ, அல்லது நெட்டையாகவோ, பருத்தோ அல்லது மெலிந்தோ இல்லை.

பிரம்மன் சூக்ஷ்மாதி சூக்ஷ்மமாக இருக்கின்ருன் அவன் நன்மை, தீமைக்கு அப்பாற்பட்டிருக்கின்ருன். அவன் அமைதி, சாசுவதம், மாருத்தன்மையுடையவனுக இருக்கின்ருன். அவன் அசைவு, அசைவற்ற தன்மை (சேதனம், அசேதனம்) ஆகியவற்றிலிருந்து விடுபட்டிருக் கின்ருன். அவன் ஆகாய வெளியைப் போல் சுதந்திரமாக இருக்கின்ருன். அவன் மாசற்றவனுகவும் பரிபூரணனுகவும் இருக்கின்ருன். அவன் இருத்தல், இல்லாமை ஆகியவற் றிற்கு அப்பாற்பட்டிருக்கின்ருன்.

பிரம்மன் பிரிக்கவொண்ணாத சாந்தி பரிபூரணனாக இருக்கின்றான். அவன் இறப்பற்றவன். மரணம் என்பது உடலிலிருந்து ஜீவ சுவாசம் நீங்குதலாகும். இது ஜீவ சுவாசத்தோடு சம்பந்தப்பட்டுள்ள இந்த ஜீவன் விஷயத்தில் மட்டும்தான் சாத்தியமேயொழிய இந்த ஜீவ சுவாசத்தோடு சம்பந்தமில்லாத பரமாத்மனுடைய விஷயத்தில் சாத்தியமில்லை. ''பிரம்மன் பிராண அற்றவன், மனமற்றவன், தூய்மையானவன்'' என்று சுருதி உரைக்கின்றது.

ஆத்மனுக்கு கர்மத்திடம் தொடர்பு கிடையாது. அவன் கர்மத்தின் ஒரு அங்கமல்ல. ஆத்மன் ஒரு பலனோ (effect), அல்லது பொருளோ (product) அல்லது திரிபோ அல்ல. அவன் அடையக்கூடிய ஒரு பொருளுமல்ல, அல்லது சுத்தீகரணம் செய்யத்தக்க வஸ்துவுமல்ல. அவன் கர்த்தாவுமல்ல, போக்தாவுமல்ல. அவன் எப்பொழுதும் மௌன சாக்ஷி மாத்திரமே.

கண் அவனைக் காண முடியாது. மனம் அவனை அடைய முடியாது. இந்த ஸ்தூல உலகாயத அறிவு அவனைப் பற்ற முடியாது. வாக்கு அவனை வர்ணிக்க முடியாது. வாக்கு அவனைப் போதுமான வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத காரணத்தால் அது மனத்தோடு திரும்பி வந்துவிடுகிறது. ஞானிகள் ''நாங்கள் அவனை வர்ணிக்க எடுத்துக்கொண்ட முயற்சிகளில் வஞ்சிக்கப்பட்டோம். அவனுடைய மகிமை வர்ணிக்க முடியாதது. அவனை வர்ணிப்பது அவனை மறுப்பதாகும்'' என்று கூறுகின்றனர். எல்லையுள்ள ஒரு மனம் எல்லையற்றதை எவ்வாறு பற்ற முடியும்? ஆனால் அவனை விடுதலைக்கான நான்கு மார்க்கங்களையுடையவனும், இடைவிடாது தியானம் செய்கின்றவனும், கூரிய, சூக்ஷ்மமான தூய புத்தியுடையவனுமான சாதகனால் நேரடியாக உணர முடியும்.

## 3. வேதாந்தக் கொள்கை

பரம் பொருள் பேரானந்தம். பரம்பொருள் மட்டுமே பேரானந்தம். பரம் பொருள் பிரம்மன் அல்லது ஆத்மன்

அல்லது பரமாத்மா. பரம் பொருள் பரிபூரணம். பரம் பொருள் பூமா அல்லது காலம், இடம், உற்பத்தி ஆகிய வற்றைக் கடந்த கட்டுப்படுத்தப்படாதது. பரம் பொருள் அமரத்துவம். எங்கு ஒருவன் வேறு எதையும் பார்ப்பது இல்லையோ, வேறு எதையும் கேட்பது இல்லையோ, வேறு எதையும் அறிவது இல்லையோ, அங்கு பரம் பொருள் இருக்கிறது. பரம் பொருள் தன்னுடைய சொந்த மகிமை யிலேயே நிலைத்திருக்கிறது. பரம் பொருள் மேலான சாந்தி. பரம் பொருள் பயமற்றதன்மை. பரம் பொருள் சத்-சித்-ஆனந்தம். பரம் பொருள் சம்பூரணமானது, பிரிக்கப்பட முடியாதது. பரம் பொருள் சுயமாக இருப்பது, தன் னகத்தே எல்லாம் அடங்கப் பெற்றது. சுயம் பிரகாசமானது. பரம் பொருள் மட்டுமே உண்மை. முக்காலங்களிலும் பரம் பொருள் மட்டுமே இருக்கின்றது. நீ அந்தப் பரம் பொருளை தேடி, புரிந்து கொண்டு, உணர்தல் வேண்டும்.

நீ பார்ப்பதெல்லாம் பாவ பதார்த்தம். பதார்த்தம் என்றால் ஒரு பொருள். எது இருக்கின்றதோ அது பாவம் (Bhava). நீ ''இது மிக மிகப் பெரிது. இது மிக மிக இனிப் பானது. லண்டன் மிகப் பெரிய நகரம்'', என்று சொல்லும் பொழுது இந்த ''மிக'' என்பது ''அபாவ பதார்த்தத் தை''க் குறிக்கின்றது. இது மனத்தாலும் ஊகிக்கப்பட முடியாதது. பிரம்மன் அல்லது பரிபூரணன் இந்த ''அபாவ பதார்த்த'' ரகத்தின் கீழ் வருகிறது. ஏனெனில் இது எல்லையற்றது.

சாதகர்களுக்கு பிரம்மன் அல்லது ஆத்மனைப் பற்றி வர்ணிக்க மொழி இல்லாத காரணத்தால், ஞானிகள் பொதுவாக ஆகாசம் எவ்வாறு பிரம்மனுக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளதோ அதைப் போல முன்பு வர்ணிக்கப்பட் டிருக்கும் பல்வேறு நிலைகளின் அமைதித் தன்மையை பிரம்மனுக்கு ஒப்பாகக் கூறுகின்றனர். அவர்கள் பிரம்ம னுடைய தன்மையை சாதகர்களுக்கு எடுத்து விளக்கு

வதற்கு உலகாயத அனுபவங்களிலிருந்து கிடைத்த உதாரணங்களை எடுத்துக் கொள்கின்றனர்.

பிரம்மன் சச்சிதானந்தம். பிரம்மன் சுயப்பிரகாச முடையவன். பிரம்மன் மாறுபாடு இல்லாதவன். மரண மில்லாதவன். பிரம்மன் இது மட்டுமல்ல, ஆனால் மிகவும் உன்னதமானவன், மிகவும் வேறுபட்டவன். இது மனங் கடந்த ஏதோ ஒரு பொருள். வேதாந்திகள் அதை ''வஸ்து'' என்று அழைக்கின்றனர். பிரம்மன் வரையறுக் கப்பட முடியாதது. மேற் கூறியது ஒரு தாற்காலிக இலக் கணம். ஏனெனில் நாம் இப்பிரபஞ்சத்தில் அசத், ஜடம், துக்கம் ஆகியவற்றை அனுபவிக்கின்றோம், நாம் பிரம்ம னுக்கு சத்-சித்-ஆனந்தத்திற்கு எதிர்மாறான தன்மைகளை அளிக்கின்றோம். இது வேதாந்தத்தில் ''அதத்வ்யவ்ருத்தி லக்ஷணம்'' ஆகும்.

''பிரம்மன் கீழும் உளது. பிரம்மன் மேலும் உளது. பிரம்மன் முன்னும் உண்டு. பிரம்மன் பின்னும் இருக்கிறது. ''பிரம்மன் இவை அனைத்துமாக இருக்கிறது''. ''இந்தப் பிரம்மனை எவன் அறிகிறானோ அவன் அமரத் துவத்தை அடைகின்றான்''. ''ஆத்மனை அறிந்தவன் துக்கத்தைக் கடக்கின்றான்'' என்று சுருதிகள் பகர் கின்றன.

யாக்ஞவல்கியருக்கும் சாகல்யருக்கும் இடையில் நடந்த சம்பாஷணை ஒன்று இங்கே கொடுக்கப்பட்டுள்ளது:- ''கிழக்குப் புறத்தில் நீ எந்த தெய்வமாக இருக்கின்றாய்? ''சூரியன்''. ''சூரியன் எங்கே இருக்கிறது?'' ''கண் களில்'' ''கண்ணினுடைய இருப்பிடம் எது?'' ''வர்ணங் களில்'' ''இருதயத்தில்'' என்று அவர் கூறினார். ''ஏனெ னில் வர்ணங்கள் இருதயத்தால் உற்பத்தி செய்யப்படு கின்றன ஆகவே இருதயம் (பரமாத்மா) வர்ணங்களுக்கு இருப்பிடம்.''

''பின்பு எதனால் அவன் யாரைப் பார்க்கவேண்டும்?'' என்று பிருஹதாரண்யக உபநிஷத்திலே I -4I- 13 நீங்கள் காணலாம். ஆத்மன் காணக்கூடிய வஸ்து அல்ல என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது. இது எப்பொழுதும் தெரிந்து கொள்ளும் கர்த்தாவாகவே இருக்கிறது. கர்மத்திற்கு ஒரு காரகனோ (agent) அல்லது ஒரு செயப்படு பொருளோ அல்லது ஒரு கருவியோ கிடையாது. ஸ்தூல மட்டத்தில்தான் பார்ப்பவன், காட்சி, பார்க்கப்படும் பொருள் என்ற திரிபுட்டி அல்லது மூன்றும் உண்டு. அறிபவனை யாரால் அறிய முடியும்? எவனால் அவன் (கடவுள்) இவை எல்லாவற்றையும் அறிகின்றானோ அவனை (கடவுளை) ஒருவன் எவ்வாறு அறிய முடியும்? காட்சியைக் காணுபவனை உன்னால் காண முடியாது. கேள்வி (hearing)யைக் கேட்பவனை உன்னால் கேட்க முடியாது; உணர்வை உணருபவனை உன்னால் உணரமுடியாது; ஞானத்தை அறிபவனை உன்னால் அறிய முடியாது.

வைசேஷிக தத்துவத்திலே ஆறு பதார்த்தங்கள் அல்லது வகைகள் இருக்கின்றன. அவைகள் திரவியம் (பொருள்), குணம் (தன்மை), கர்மம் (செய்கை), சாமான்யம் (இனம்), விசேஷம் (வேற்றுமை) சமவாயம் (நெருங்கிய சம்பந்தம்) எனப்படும்.

அந்தஹ்கரணம் சூக்ஷ்மமான பொருளால் ஆனது. சூக்ஷ்ம பூதங்கள் அல்லது வஸ்துக்களின் மூலதத்துவங்கள் அதாவது தன்மாத்திரைகள் மனத்தை அமைக்கச் செல்கின்றன. மனமானது வாயு தன்மாத்திரையிலிருந்து உண்டாக்கப்படுகிறது. ஆகவே அது வாயுவைப் போல அலைந்து கொண்டிருக்கின்றது. புத்தி ஐந்து தன்மாத்திரைகளிலிருந்து உண்டாக்கப்படுகின்றது. சித்தம் தண்ணீர்த் தன்மாத்திரையினால் அமைக்கப்படுகிறது. அகங்காரமானது பூமி தன்மாத்திரையிலிருந்து உண்டாக்கப்படுகிறது. உள்ளம் ஆகாச தன்மாத்திரையிலிருந்து உண்டாக்கப்படுகிறது.

அறிவிலிகளாக இருந்த பல சந்நியாசிகளை இந்திரன் கொன்றான். அவர்களைக் கொன்றது அவனை பாதிக்கவே இல்லை. அவனிடத்தில் கர்மங்களை அழிக்க ஞான அக்னி இருந்தது. அவன் தான் அகர்த்தா, அபோக்தா, அசங்கா (செய்யாதவன், அனுபவியாதவன், பற்றற்றவன்) என்பதை அறிந்திருந்தான். ஜனக ராஜா பல புலவர்களை தான் பிரம்ம வித்தையைப் பற்றிக் கேட்ட கேள்விக்கு அவர்களால் பதில் கூற முடியாத பொழுது சிறையில் அடைத்தார். அவர் ஒரு சிறிதும் பாதிக்கப்படவில்லை. அவர் ஒரு ஞானி. ஆகவே தான் கீதை "எவன் அகந்தையான எண்ணங்களிலிருந்து விடுபட்டிருக்கின்றானோ, எவனுடைய பகுத்தறிவு பாதிக்கப் படாமலிருக்கின்றதோ அவன் இம்மக்களைக் கொன்றாலும் கூட அவன் கொல்லப்படுவதுமில்லை, கட்டுப்படுத்தப் படுவதுமில்லை" என்று கூறுகின்றது.

ஒவ்வொருவனுக்கும் அவனவனுக்குச் சொந்தமான ஒரு தனி உலகம் உண்டு. குரங்கு அல்லது நாய்க்கு அதற்கெனத் தனி உலகம் உடையதாய் இருக்கிறது. ஒரு செவிடன், ஒரு குருடன், ஒரு பைத்தியக்காரன், ஒரு காட்டுமிராண்டி, ஒரு நாகரிக மனிதன், ஒரு குழந்தை, ஒரு சாதகன், ஒரு போக்கிரி, ஒரு திருடன், ஒரு அரசன், ஒரு விவசாயி - ஆகிய எல்லோரும் அவரவர்க்குரிய தனி உலகம் உடையவராய் இருக்கின்றனர்.

"சோதனை அல்லது அதிர்ஷ்டம்" "புருஷார்த்தம் அல்லது பிராரப்தம்" "சுதந்திர விருப்பமும் தேவையும்", "தக்தீர் அல்லது தக்தில்" ஆகியவைகள் ஒரே பொருள் தரும் பல சொற்கள்.

அறியாமையாகிய சர்ப்பத்தினால் கடிக்கப்பட்ட மனிதன் ஞானம் அல்லது பிரம்ம ஞானம் என்கின்ற கருட மந்திரத்தினால் சொஸ்தப்படுத்தப்படுவான்.

உண்மையான "நான்" நிலையான ஆத்மாவே, உண்மையான "நான்" மாறுதலில்லாதது. ஆனால் சரீரம் இடைவிடாது மாறிக் கொண்டிருக்கிறது. சரீரம் அசுத்தங்கள் நிறைந்தது. அப்படி இருக்கும் போது சரீரம் எவ்வாறு நிரந்தரத் தூய்மை பெற்ற ஆத்மாவாக இருக்க முடியும்?

இந்த வேடிக்கையான கதையைக் கொஞ்சம் கேள். கானல் நீரிலே குளித்து விட்டு ஆகாய மலர்களாலான மாலையால் முடி சூட்டப் பெற்று, ஒரு மலடியினுடைய இந்தப் பிள்ளை, முயல் கொம்பினாலான ஒரு வில்லைப் பூட்டிக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறான். இது எவ்வளவு உண்மை! இந்த உலகமும் இந்தக் கதை எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மைதான்.

முற்றிலும் நன்மை பயக்கும் வேலையும் கிடையாது. முற்றிலும் தீமையே பயக்கும் வேலையும் கிடையாது. "எல்லா வேலைகளும், நெருப்பை எவ்வாறு புகை மூடிக் கொண்டிருக்கிறதோ அது போல, குறைகளால் மூடப் பட்டிருக்கின்றன" என்று கீதை பகர்கின்றது.

அத். XVIII - 48.

அஹம் இரண்டு வகைப்படும். ஒன்று சமஷ்டி அஹம் அல்லது கூட்டு ஆணவம். மற்றது வியஷ்டி அஹம் அல்லது தனித்த ஆணவம். சமஷ்டி அஹம் ஈஸ்வரன். வியஷ்டி அஹம் ஜீவன் அல்லது மனிதன். இந்த ஜீவன் முதலில் அகந்தையை வளர்க்கின்றான் - "அஹம் ஜீவா - நான் ஜீவன்" என்று உணர ஆரம்பிக்கின்றான். அதன் பிறகு தான் அவன் உலகையும் ஈஸ்வரனையும் அறிகின்றான். வியஷ்டி அஹம் இன்றேல் சமஷ்டி அஹமோ அல்லது ஈஸ்வரனோ, உலகமோ இருக்க முடியாது.

நீ இந்த சரீரம் அல்ல என்று உணர்ந்த உடனே நீ விஷயத்திலிருந்தும், மரணத்திலிருந்தும் விடுதலையடை

கின்றாய், கர்மத்தின் தளையிலிருந்தும், ஆசைகளின் இரும்புச் சங்கிலிகளிலிருந்தும், இந்த உலகாயத வாழ்க்கை யாகிய கானல் நீரிலிருந்தும் அதனோடு கூடிய துன்பங்கள், கேடுகள் ஆகியவற்றிலிருந்தும் விடுபடுகின்றாய்.

நீ ஒரு நீர்வீழ்ச்சியைப் பார்க்கின்றாய். நீர் தொடர்ச்சியாக விழுகின்றது. நீ ஒரு புகைப்படம் எடுத்தால் படத்தில் நீர்வீழ்ச்சியைக் காணுகின்றாய், ஆனால் படத்தில் நீரினுடைய அசைவு காணப்படுவதில்லை. சலனம் மானசீக சிருஷ்டி. இது மனம், கண் ஆகியவற்றின் தந்திரம். சலனம் என்பது சம்பந்தச் சொல். பொருள் நகர்வதாகத் தோன்றுகிறது. சலனம் மாயத் தோற்றம். நகர்கின்ற வஸ்துக்களுக்குப் பின்னால் முற்றிலும் நகராத ஆத்மன் அல்லது பிரம்மன் இருக்கின்றான். சர்வ வியாபகமாகவும், எல்லையற்றுமிருக்கின்ற இந்த பிரம்மன் எங்கு நகரமுடியும்? உட்கார்ந்தவாறே அவன் வெகுதூரம் செல்கின்றான். படுத்துக் கொண்டே அவன் எங்கும் இருக்கின்றான், ஏனென்றால் அவன் சர்வ வியாபி, எல்லையற்றவன்.

பத்து மூடர்கள் ஒரு ஆற்றை நீந்தி அக்கரைக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்தனர். அவர்கள் தாங்கள் எல்லோரும் பத்திரமாக வந்து சேர்ந்து விட்டார்களா என் பதைப் பார்க்க எண்ண ஆரம்பித்தனர். ஒருவன் மற்ற ஒன்பது பேர்களையும் எண்ணிவிட்டு பத்தாவது ஆளாகிய தன்னை எண்ண மறந்துவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினான். ஒருவன் மூழ்கிவிட்டான் என்று அவன் நினைத்து விட்டான். மற்ற ஒன்பது பேர்களும் இதே போல் தன்னை எண்ண மறந்துவிட்டு பத்தாவது ஆள் முழுகி விட்டான் என்று கதற ஆரம்பித்தனர். ஒருவன் அழுதபொழுது மற்ற ஒன்பது பேரும் அழுவதற்கு அவனோடு சேர்ந்து கொண்டனர். அவர்களுடைய மூடத்தனத்தைப் பார்த்துக் கொண்டு அருகில் நின்று கொண்டிருந்த ஒருவன் "அடே மனிதா, யாரும் காணாமல் போய்விடவில்லை. இங்கு பத்து மனிதர்கள் இருக்கிறீர்கள். பத்தாவது ஆசாமி நீயேதான்.

நீ உன்னை எண்ணுவதற்குத் தவறி விட்டாய்'' என்று எடுத்துக் காட்டினான். பிறகு எல்லோரும் அளவற்ற சந்தோஷமடைந்தனர்.

எப்படி அந்த மனிதனுடைய மனமானது தன்னை விட்டு வெளியேயுள்ள ஆட்களை எண்ணுவதிலேயே கவரப் பட்டிருக்கும் பொழுது தேவையான எண்ணிக்கையைப் பூர்த்தி செய்கின்ற தன்னையே, அவன் தன்னுடைய இருப்பிற்கு அருகிலிருந்த போதிலும், பார்க்கத் தவறி விடுகின்றானோ அதேபோல இந்த ஜீவன் அவனுடைய அறியாமை காரணமாக, உண்மையில் தான் பிரம்மனோடு ஒன்று என்பதை முற்றிலும் மறந்தவனாக இருக்கின்றான். இவ்வாறு பிரம்மன் ஆத்மனாகவே இருந்த போதிலும் அறியாமை காரணமாக அவன் அடையப்படுவதில்லை. ஆனால் அவன் சுருதிகளாலும், குருவினாலும் உபதேசிக்கப் பெறும்பொழுது, எப்படி ஒரு மனிதன் அறியாமை காரணமாக தேவையான எண்ணிக்கையைப் பூர்த்தி செய்கின்ற தன்னையே மறந்து விட்டு, பிறகு வேறு யாரோ ஒருவரால் ஞாபகமூட்டப்பட்டு ஞானத்தின் காரணமாக தன்னை மறுபடியும் கண்டு கொள்ளுகின்றானோ அதுபோல அவன் எல்லாவற்றிற்கும் ஆத்மனான பிரம்மன் தன்னுடைய சொந்த ஆத்மன் தான் என்பதைக் காணுகின்றான்.

## 4. வேதாந்தமும் இதர சம்பிரதாயங்களும்

சாங்கிய தத்துவத்தின்படி பிராண தத்துவம் என்பது கிடையாது. பிராணன் எல்லா உறுப்புக்களும் சேர்ந்து செய்கின்ற கூட்டுக் காரியமாகும்.

நியாய தத்துவத்திலே (கௌதம ரிஷியினுடைய இந்திய தர்க்க சாஸ்திரம்) பிரமேயம் (proposition) விவாதம் (reasoning), பிரமாணம் (example), பிரயோகம் (application), தீர்மானம் (conclusion) ஆகியவைகள் நியாயத்தினுடைய (syllogism) ஐந்து அவயங்களாகும்.

வேதாந்தத்தில் மூன்று வாதங்கள் அல்லது கொள்கை கள் உள்ளன. அவைகளாவன :— சாங்கிய தத்துவக்ஞர் களுடைய பரிணும வாதம். உதாரணம்: பால் தயிராக மாறுதல், ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய விவர்த்த வாதம். உ-ம் : கயிற்றில் சர்ப்பம், ஸ்ரீ கௌடபாதருடைய அஜாத வாதம் அல்லது பிரபஞ்சத்தின் அபரிணுமக் கொள்கை. (theory of non - evolution . முதல் வாதம் மிகக் கீழானது. விவர்த்தம் நடுத்தரமானது. அஜாத வாதம் மிக உயர்ந்தது.

கணுத ரிஷியினுடைய வைசேஷிக தத்துவத்தின் ஆறு வகைகளாவன : திரவ்யம் (பொருள்), குணம் (தன்மை), கர்மம் (செய்கை), சாமான்யம் (தனித் தனி யானது), விசேஷம் (குறிப்பிட்ட), சமவாயம் (ஏககாலத் திலிருத்தல்).

சாங்கிய முறையிலே பிராணுக்கள் கிடையா. சித்த மும் கிடையாது. இது தான் வித்தியாசம். வேதாந்தம் என்பது சாங்கிய தத்துவத்தினுடைய விளக்கம் அல்லது பூர்த்தியாகும். சாங்கிய முறையிலே பல புருஷர்கள் இருக் கின்றனர். ஆனல் வேதாந்தத்தில் ஒரே ஒரு எல்லையற்ற (அகண்ட) பிரிக்கவொண்ணுத ஆத்மா மட்டுமே உண்டு.

சில ராஜ்யங்களில் பிரதம மந்திரியே சகலமும். அவர் நினைத்ததைச் செய்ய முடியும். மஹாராஜா பெயரளவில் மட்டும் தான். அதே போல சாங்கியர்களுடைய புருஷன் பெயரளவிலிருக்கும் தலைவன் மட்டுமே. அவருடைய பிரசன்னம் மட்டுமே தேவை. பிரக்ருதிதான் சர்வமும், அவள் சிருஷ்டி முழுவதையும் செய்கின்ருள்.

சத்—சித்—ஆனந்தத் தன்மைகளினுல், பிரம்மனிடத் தில் அஸத் அல்லது உண்மை அல்லாதது, அவித்தை அல்லது அறியாமை, துக்கம் அல்லது நோய் இல்லை என் பதை நீ உண்மையாகவே புரிந்து கொள்கின்ருய். சத்— சித்—ஆனந்தத்திற்கு எதிர் மாருன தன்மைகள் பிரம்ம

னிடத்தில் காண முடியாது. அதே போல, அனந்தம், அம்ருதம் என்ற குணங்கள், எதிர்த் தன்மைகளான அந்தமும் (முடிவு) ம்ருத்யுவும் (மரணம்) பிரம்மனிடத்தில் காண முடியாது என்பதைக் குறிக்கின்றன. இது வேதாந்தத்தில் வ்யாவ்ருத்தி என்று கூறப்படுகின்றது.

ஸத்தா—ஸாமான்யன் என்பது நிர்குண பிரம்மனுக்குள்ள மற்ெருரு பெயர். ஜீவாத்மா தன்னை பரப்பிரம்மனோடு ஐக்கியப்படுத்திக் கொண்டு அந்த மேலான ஆத்மனோடு அபேதமாக ஆகின்ற நிலைக்கு துரியாதீதம் என்று பெயர்.

பிரம்மனிடத்தில் எப்படி பரிணமம் (மாறுபாடு) இருக்க முடியும்? பிரம்மன் என்ருல் மாபெரும் பொருள், எல்லையற்றது, பரிபூரணம் என்று பொருள். பால் தயிராக ஆகிறது. இது பரிணமம். ஸாவயவ வஸ்துவில் மட்டுமே பரிணமம் ஏற்பட முடியும். ஸாவயவம் என்ருல் " அங்கங்களுடையது " என்று பொருள். கைகள், கால்கள், பாதங்கள் முதலியவைகளுடன் கூடிய ஒரு மனிதனுடைய சரீரத்தைப் போல பிரம்மன் நிரவயவன் (அங்கங்களற்றவன்). பிரம்மனிடத்தில் எவ்விதப் பரிணமமும் இருக்க முடியாது. இக்கருத்தை நன்ருகப் புரிந்து கொள். நீ பலவிதமான மானசீக சித்திரவதைகள், ஆவல்கள், கவலைகள் ஆகியவற்றிலிருந்து காப்பாற்றப்படுவாய்.

ஸ்ரீ ராமானுஜருடைய ஸவிசேஷ பிரம்மனின் கல்யாண குணங்கள், ஸ்ரீ சங்கரருடைய அனந்த குணங்கள் அல்லது நிர்விசேஷ பிரம்மனின் ஒரு அம்சம் மட்டுமேயாகும். நிர்குணம் என்றதும் சுத்த பிரம்மன் அல்லது பர பிரம்மன் முற்றிலும் குணங்களற்றவன் என்று அர்த்தமல்ல. நிர்குண பிரம்மன் என்ருல் களஞ்சியம் என்று பொருள். ஸ்ரீ ராமானுஜரைப் பின் பற்றுவோர்களில் சிலர் அறியாமை, பகை ஆகியவை காரணமாக " ஸ்ரீ சங்கரருடைய நிர்குண பிரம்மன் ஒரு கற்பாறை போன்றவன், சூன்யமானவன்,

அவன் முற்றிலும் வரட்சியானவன். அப்பேர்ப்பட்ட நிர்குண பிரம்மனிடத்தில் ரஸம் என்பதே கிடையாது'' என்று குறை கூறுகின்றனர். இது அறியாமை தான். ஸ்ரீ சங்கரருடைய நிர்குண பிரம்மன் ''ரஸோ வை ஸஹ - ஆனந்தோ வை ஸஹ''. ரஸமும் ஆனந்தமும் நிரம்பப் பெற்றவன். அவன் எல்லாவற்றையும் தெரிந்துகொண் டிருப்பவன் அல்ல. அவன் ஞானமே வடிவானவன். அவன் சர்வ அழகோடு கூடியவன் என்பது அல்ல. அழகே தான் அவன் வடிவம். இது ஸ்வரூபம். இது ரஸம். அவன் சகல ரஸங்களின் வடிவமாக இருக்கின்றான்.

## 5. தத்துவங்கள்

நாம ரூபங்களும், நீ வெளியே காணுகின்ற தோற்றங் களும் மாயையினுடைய காரியங்கள். மாயை அவ்யக்த மானது (தோன்றாதது, மறைந்துள்ளது); அவ்யாக்ருதி யானது (பாகுபடுத்தப்படாதது). இது சத்துவம் (தூய்மை), ரஜஸ் (மனவெழுச்சி), தமஸ் (மந்தம்) ஆகிய முக்குணங்களின் சமநிறையாக விளங்குகின்ற இறைவ னுடைய வர்ணிக்கவொண்ணாத (அனிர்வசனீய) சக்தி யாகும். ஜீவன்களினுடைய கர்மங்களுக்குப் பலன்களைக் கொடுப்பதற்காக இறைவனுடைய விருப்பத்தினால் இந்தச் சமநிலை பாதிக்கப்படும்பொழுது, மஹாகல்பத்தின் ஆரம் பத்தில் இவ்வுலகமானது வெளித் தள்ளப்படுகின்றது.

''உலகங்கள் இருக்கவே இருக்கின்றன. நான் இந்த உலகங்களின் ரக்ஷகர்களை சிருஷ்டிக்க வேண்டும்'' என்று பிரம்மன் எண்ணினார். அவர் தண்ணீரிலிருந்து மட்டும் புருஷனை (ஹிரண்யகர்ப்பனை) வெளியே எடுத்துச் சேகரித்து அவனை உருவாக்கினார். தியான அக்னியின் மூலமாக (ஐக்ஷாந்தம்) அவர் அவனைச் சூடாக்கினார். இவ்வாறு அவன் சூடுபடுத்தப்படும் பொழுது, அவனுடைய இருதயம் வெடித்து, இருதயத்திலிருந்து மனமும், மனத் திலிருந்து அதனுடைய இஷ்ட தேவதையான சந்திரனும் வெளிவந்தன. இருதயம் மனதின் இருப்பிடம். ஆகவே

இருதயம் வெடித்தபொழுது மனம் வெளியே வந்தது. சமாதியில் மனமானது தன்னுடைய மூல இருப்பிடமாகிய இருதயத்திற்குச் செல்கின்றது. உறக்கத்திலும்கூட இது இருதயத்தில் மனத்திற்கும் பிரம்மனுக்கும் இடையே அறியாமை என்கின்ற ஒரு திரையுடன் நிலைபெற்றிருக்கின்றது''. (ஐத்தரேய உபநிஷத். 1-3-4).

நிலத்திலுள்ள விதையிலிருந்து முளை கிளம்புவதைப் போல அவ்யக்தம் அல்லது மாயையிலிருந்து முதலில் மஹத் தத்துவம் வெளிவருகிறது. மஹத்திலிருந்து அஹங்காரம் கிளம்புகிறது. பிறகு மனம், இந்திரியங்கள், பிராணு, பஞ்ச பூதங்களான தன்மாத்திரைகள் ஆகியவைகள் தோன்றுகின்றன. பிறகு இந்த பஞ்ச பூதங்களினின்றும் வெளிப் பிரபஞ்சம் முழுவதும் சிருஷ்டிக்கப்படுகின்றது.

தன்மைகள் இருபத்து நான்கு. அவைகளாவன:— சப்தம் (ஒலி), ஸ்பர்சம் (தீண்டல்), ரூபம் (நிறம்), ரஸம் (சுவை), கந்தம் (மணம்), பரிமாணம் (சுற்றளவு) சங்க்யா (எண்ணிக்கை), சம்யோகம் (சேர்க்கை), விபாகம் (பிரிவு), ப்ரிதக்த்வம் (தனிமை), குருத்வம் (நிறை), திரவத்வம் (திரவத் தன்மை), பரத்வம் (பசைத் தன்மை), சம்ஸ்காரம் (தன்மை அல்லது போக்கு), தீ(Dhee) (புரிந்து கொள்ளல்), த்வேஷம் (வெறுப்பு) சுகம் (களிப்பு), துக்கம் (நோய் அல்லது துயரம்), இச்சா (ஆசை), தர்மம் (நன்னெறி), அதர்மம் (தீயநெறி), ப்ரயத்னம் (முயற்சி).

வஸ்துக்கள் ஒன்பது. அவைகள் பஞ்ச பூதங்கள் ஐந்தும், திக் (வெளி), காலம், ஆத்மா, மனஸ் (மனம்) ஆகியவைகளும் ஆம்.

வாஸுதேவம், சங்கர்ஷணம், பிரத்யும்னம், அனிருத்தம் ஆகிய நான்கும் சதுர்வியூகம் அல்லது நான்கு ரூபங்கள் ஆகின்றன. இந்நான்கு ரூபங்களும் பரமாத்மா, ஜீவாத்மா, மனம், அஹங்காரம் ஆகிய நான்கோடும் அபேதமானவை.

பிரம்மனுடைய ஒரு நாள் 4,32,00,00,000 மானிட வருஷங்களுக்குச் சமம். இது தான் உலகினுடைய ஆயுட் காலம் என்று கருதப்படுகின்றது.

அழிவு என்பது எந்தப் பொருளையும் அதனுடைய காரணத்தோடு சிக்க வைத்து விடுதலாகும்.

## 6. பிரம்ம வித்தை மாணுக்கர்கள்

வாஜஸ்ரவன், விஸ்வஜித் யாகத்திலே தன்னுடைய சொத்து முழுவதையும் தானமாகக் கொடுத்து விட்டான். அவனுக்கு நசிகேதஸ் என்ற பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். வாஜஸ்ரவன் ரித்விக்குகளுக்கு உபயோகமறற் பசுக்களை தானமாக அளித்தான். தன்னுடைய தந்தை யின் தானத்திலே நசிகேதஸுக்கு சந்தோஷம் ஏற்பட வில்லை. அவன் அவனுடைய தந்தை அந்த யக்ஞத்தின் முழுப் பயனையும் அடைய மாட்டார் என்றும், அவர் சந்தோஷமற்ற உலகங்களைத்தான் அடையக்கூடும் என் றும் எண்ணினுன்.

ஆகவே அவன் தன்னுடைய தந்தையாரைப் பார்த்து "அப்பா, என்னை நீங்கள் யாருக்குக் கொடுக்கப் போகிறீர் கள்?" என்று வினவினுன். இதை அவன் திரும்பத் திரும்ப மும்முறை கேட்டான். தந்தை மிகவும் சலிப் படைந்து கோபமான வார்த்தைகளால் "யமனுக்கு உன்னைக் கொடுக்கப் போகிறேன்" என்று கூறினுர்.

பிறகு நசிகேதஸ் யமதர்மனுடைய அரண்மனைக்குச் சென்றுன். யமதர்மன் அப்பொழுது வெளியே போயிருந் தார். ஆகவே நசிகேதஸ் மூன்று இரவுகள் பட்டினி கிடந்தான்.

யமதர்மன் திரும்பி வந்தார். அவர் நசிகேதஸைப் பார்த்து "ஓ பிராம்மணரே! நீர் என்னுடைய வீட்டில் ஆகாரமின்றி இருந்ததனுல் அதற்கு பதிலாக மூன்று வரங்

களைக் கேண்மின். உமக்கு என்னுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.'' என்று கூறினார்.

பிறகு நசிகேதஸ் யமனிடம் மூன்று வரங்களைக் கேட்டான். 1. ''என்னுடைய தந்தையாகிய கௌதமர் ஏக்கத்திலிருந்து விடுபட வேண்டும், மன அமைதி பெற வேண்டும், என்மீது கோபம் கொள்ளக்கூடாது, என்னை அவர் சந்தோஷமாக வரவேற்க வேண்டும்''. 2. ''ஓ யம தர்மா! மோட்சத்திற்கு அழைத்துச் செல்லும் அக்னியை நீர் அறிவீர். மோட்சத்தை உலகமாகக் கொண்டிருப்பவர்கள், அமரத்துவத்தை எதன் மூலம் அடைந்தனரோ அந்த அக்னியை (யக்ஞத்தை) எனக்கு விளக்கிக் கூற வேண்டும்.'' 3. ''மரணத்திற்குப்பின் மனிதன் என்னவாகின்றான்? சிலர் சொல்லுகிறார்கள். — அவன் இருக்கின்றான், என்று, சிலர் அவன் இருப்பதில்லை என்கின்றனர் — இந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்து இதனுடைய உண்மையை தயவு செய்து உபதேசிக்க வேண்டும்.''

யமதர்மன் முதலிரண்டு வரங்களையும் மனமுவந்து அளித்தார். மூன்றாவது வரத்தைக் கொடுக்க அவர் மறுத்து விட்டார். '' இங்கு பண்டைய கடவுளர்களுக்குக்கூட இது விஷயத்தில் சந்தேகம் இருந்து வருகிறது. இது அதி சூக்ஷ்மமான கேள்வி. இது தெரிந்து கொள்வது சுலபமல்ல. ஓ நசிகேதஸ், வேறு ஏதாவது வரத்தைக் கேள். இவ்விஷயத்தைப் பொறுத்து என்னை வற்புறுத்தாதே'' என்று யமன் கூறினார்.

யமதர்மன், நசிகேதஸினுடைய நேர்மையைக் காணவும், அவனிடம் உண்மையான வைராக்கியமும், விவேகமும் இருக்கிறதா என்பதையும் பார்க்க விரும்பினார். அவர் அவனுக்கு யானைகள், செல்வம், ராஜ்யாதிகாரம், சேவை செய்ய அப்ஸர கன்னிகள், நீண்ட ஆயுள், பிள்ளைகள், பேரன்மார்கள், கால்நடை, தங்கம், குதிரைகள், ரதங்கள், இன்னிசை வாத்தியங்கள் போன்ற பலவிதமான ஆசை வஸ்துக்களை அளித்தார்.

யமனால் இவ்வாறெல்லாம் தூண்டப்பட்ட போதிலும் நசிகேதஸ் திடசித்தத்துடன் நின்றான். அவன் யமனைப் பார்த்து "ஓ யமதர்மரே, இவைகள் எல்லாம் அற்ப ஆயுளுடைய வஸ்துக்கள். இவைகள் சகல இந்திரியங்களின் சக்தியை அழிக்கத் தூண்டுவன. மிக நீண்ட ஆயுட் காலமும் பிரத்யக்ஷமாகப் பார்க்குமிடத்துக் குறுகியதே. எல்லையற்ற பரம்பொருளுக்கு முன் காலம் எம்மாத்திரம்? இந்த அப்ஸர கன்னிகளும் இதர சுகபோகங்களும் துன்பத்தையே விளைவிக்கின்றன. ஏனெனில் இவைகள் நற்குணம், பலம், அறிவு, வீரியம், புகழ் ஆகியவற்றை அழிக்கின்றன. இவைகள் ஒருவனை நாஸ்திகனாக ஆக்குகின்றன. ரதங்கள், பொன், நாட்டியம், சங்கீதம், அப்ஸர ஸ்திரீகள், ஆகியவற்றையெல்லாம் நீங்களே உங்களுக்கு வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு ஆத்மனுடைய தன்மையை வெளிப்படுத்துகின்றதும், ஆத்மனுடைய அழியாத் தன்மையைத் தெரிவிப்பதுமாகிய அந்த வரம்தான் தேவை" என்று கூறினான்.

யமன் நசிகேதஸை ஒரு தகுதியுள்ள சாதகன் என்று கண்டதினால் அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். அவர் அவனுக்கு பிரம்ம வித்தையாகிய ஆத்ம ஞானத்தை உபதேசித்தார்.

ஸ்வேதகேது அருணேயன் (அருணியினுடைய பேரன்) பாஞ்சாலர்களின் சபையை அடைந்தான். பிரவாஹண ஜைவாலி (பாஞ்சால மன்னன், ஒரு க்ஷத்திரியன்) அவனைப் பார்த்து "சிறுவனே, உன்னுடைய தந்தை உனக்கு உபதேசித்திருக்கிறாரா?" என்று கேட்டான். "ஆம் அரசே" என்று அவன் பதில் கூறினான். "மனிதர்கள் இங்கிருந்து எந்த இடத்திற்குச் செல்லுகின்றனர் என்பது உனக்குத் தெரியுமா?" "தெரியாது அரசே" என்று அவன் கூறினான். "தேவர்களுடைய பாதையும் தந்தைமார்களின் பாதையும் எங்கு பிரிகிறது என்பது உனக்குத் தெரியுமா?". "தெரியாது ஐயா" என்று அவன் சொன்னான். "அந்த உலகம்

(தந்தைமார்களின் உலகம்) ஏன் நிரம்பி இருக்கிறது என்று உனக்குத் தெரியுமா?''. ''தெரியாது ஐயா'' என்று அவன் பதில் சொன்னான். ''அப்படியானால் நீ உபதேசிக்கப்பட்டிருக்கிறாய் என்று ஏன் கூறினாய்? இவ்விஷயங்களைத் தெரியாத ஒருவன் எப்படி உபதேசம் பெற்றவன் என்று எவ்வாறு கூறமுடியும்?''. பிறகு சிறுவன் மனவருத்தமுற்று தந்தையிடம் வந்து ''அப்பா நீங்கள் எனக்குக் கற்றுக் கொடுத்திராவிட்டாலும் நீங்கள் எனக்கு உபதேசித்திருப்பதாகக் கூறினீர்கள். அந்த ராஜன்யன் (க்ஷத்திரிய வம்சத்து அரசன்) என்னிடம் ஐந்து கேள்விகள் கேட்டான். அவைகளில் ஒன்றிற்காவது என்னால் பதில் கூற முடியவில்லை''என்று கூறினான். அதற்குத் தந்தையானவர் ''நான் இவற்றை அறிந்திருந்தால் நான் ஏன் இவற்றை உன்னிடம் சொல்லாமல் விடவேண்டும்'' என்று கூறினார்.

பிறகு கௌதமர் அரசனுடைய அரண்மனைக்குச் சென்றார். அரண்மனையை அடைந்ததும் அரசன் அவருக்கு தகுதியான ஆசனத்தைக் கொடுத்தான். காலையில் சபா மண்டபத்திற்கு அரசனிடம் சென்றார். அரசன் அவரைப் பார்த்து ''ஓ மாண்புமிக்க கௌதமரே, மானிட உலகத்தைச் சேர்ந்த பொருள்கள் சம்பந்தப்பட்ட ஒரு வரத்தைக் கேளுங்கள்''. என்று சொன்னான். அதற்கு அவர் ''மனிதர்களுக்குரிய அப்பேர்ப்பட்ட வஸ்துக்கள் உம்மிடமே இருக்கட்டும். என்னுடைய பையனைக் கேட்ட அதே ''பேச்சை'' என்னிடம் ''கூறவும்'' என்று பதிலிறுத்தார்.

மன்னன் திடுக்கிட்டான். ''இங்கு கொஞ்ச காலம் தங்கியிருங்கள்'' என்று ஆணையிட்டான். பிறகு அவன் ''கௌதமரே, என்னைக் கேட்ட அந்த விஷயத்தைப் பொறுத்த மட்டில் இதற்கு முன்பு இந்த ஞானம் எந்த பிராமணரிடத்தும் சென்றது கிடையாது. ஆகவே இந்த உபதேசம் எல்லா மக்களுக்குள்ளும் க்ஷத்திரியர்களுக்கு மட்டுமே உரியது'' என்று கூறினான்.

ஜனகர் யாக்ஞவல்கியரை "இந்தப் புருஷன் என்ன ஒளியைச் சார்ந்தவன்?" என்று வினவினார். அதற்கு அவர், "ராஜாதிராஜ, இவன் சூரியனுடைய ஒளியைச் சார்ந்தவன். சூரியனுடைய ஒளியினால் மனிதன் கீழே உட்காருகின்றான், நடக்கிறான், வேலை செய்கின்றான், வீடு திரும்புகின்றான்". "இதுவும் அதைப் போன்றதே, ஓ யாக்ஞவல்கியரே".

"சூரியன் அஸ்தமித்த பிறகு இந்தப் புருஷன் எந்த ஒளியைச் சார்ந்தவன், ஓ யாக்ஞவல்கியரே?" "பின்னும் அவனுக்குச் சந்திரன் ஒளி கொடுக்கிறது. சந்திரனொளியில் அவன் அமருகிறான், நடக்கிறான். காரியங்களைச் செய்கிறான். வீடும் திரும்புகிறான்" "இதுவும் அதுபோன்றதே யாக்ஞவல்க்யரே"

"ஓ யாக்ஞவல்க்யரே சூரியனும் அஸ்தமித்து, சந்திரனும் அஸ்தமித்து விடும்பொழுது இந்தப் புருஷனுக்கு எந்த ஒளி பயன்படுகிறது?" "நெருப்பும் அவனுடைய ஒளிதான். அந்த நெருப்பொளியின்மூலம் அவன் உட்காருகின்றான், நடக்கின்றான், அவனுடைய வேலையைச் செய்கின்றான், வீடு திரும்புகின்றான்". இதுவும் அதே போன்றதே, ஓ யாக்ஞவல்கியரே.

"சூரியனும் அஸ்தமித்து, சந்திரனும் அஸ்தமித்து, நெருப்பும் ஓய்ந்திருக்கும்போது இந்த புருஷன் எந்த ஒளியாக இருக்கின்றான், ஓ யாக்ஞவல்கியரே?" "வாக்கும் அவனுடைய ஒளிதான். வாக்கினுடைய ஒளியின் மூலம் அவன் உட்காருகின்றான். நடக்கின்றான். அவனுடைய வேலையைச் செய்கின்றான், வீடு திரும்புகின்றான். ஆகவே ஓ ராஜாதிராஜ ஒருவன் தன்னுடைய சொந்தக் கரத்தையே அடையாளம் கண்டுகொள்ள முடியாத ஒரு வேளையில் வாக்கு எங்கிருந்து கிளம்புகின்றதோ அங்கு அவன் போகின்றான்". இதுவும் அப்படியே ஓ யாக்ஞவல்கியரே."

‘‘சூரியனும் அஸ்தமித்து, சந்திரனும் அஸ்தமித்து, நெருப்பும் ஓய்ந்து, வாக்கும் ஓய்ந்து விட்டபொழுது இந்தப் புருஷன் எந்த ஒளியாக இருக்கின்றன், ஓ யாக்ஞ வல்கியரே ?’’ ‘‘ஆத்மாவும்கூட அவனுடைய ஒளியே. ஆத்ம ஒளியின் மூலம் அவன் உட்காருகின்றன், நடக் கின்றன், அவனுடைய வேலையைச் செய்கின்றன், வீடு திரும்புகின்றன்’’. ‘‘எந்த ஆத்மா?’’ அங்கங்களிடையே ஞானத்தின் தன்மையை உடையதாய் இருப்பதும், இருத யத்திலே வாசம் செய்து வருவதும், ஆகிய அந்த ஆத்மா ஒளியாகவும் ஆத்மா புருஷனுகவும் இருக்கின்றன்’’.

## 7. அரசியலில் அமைதி

அரசியல் என்பது ராஜ தர்மம். இது மஹாபாரதத் திலும், மனு, யாக்ஞவல்கிய ஸ்மிருதிகளிலும் வருகின்றது. தர்மம், மதம், கடவுள் மூன்றும் இணைந்து இருக்கின்றன. உண்மையான நீதியும், ஆன்மீக அடிப்படையும் இல்லாத அரசியல் வெறும் சூன்யமாக நலிந்துவிடும். சமூகம், அரசியல் ஆகியவற்றிற்கு அஸ்திவாரம் இறைவன். ஆகவே அரசியலை ஒரு போதும் மதம், தர்ம சாஸ்திரம் ஆகியவை களிலிருந்து வேறுபடுத்த முடியாது. வரட்டு அரசியல் லஞ்சத்திலும் அழிவிலும்தான் போய் முடியும். ஒரு அரசியல் வாதியினுடைய லக்ஷியம் உலகத்திலும், உலகத் தின் மூலமாகவும், தேச சேவையின் மூலமாகவும் ஆத்மானுபூதி அடைதலாகும்.

இந்தியா அல்லது எந்த ஒரு தேசமும் ஸ்வராஜ்யம் அடைய வேண்டுமானுல் அரசியல் காரியங்களும், ஆன் மீகப் பயிற்சிகளும் கைகோர்த்து இணைந்து சென்ருல்தான் முடியும். ஒவ்வொரு வேலையும் ஒரு யோகம் என்றும், இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படும் காணிக்கை என்றும் தொண்டர்கள் கருத வேண்டும். அவர்கள் சுயநலம், அகந்தை, தனது என்கின்ற மனப்பான்மை, பேராசை, காமம் முதலியவைகளிலிருந்து விடுபடுவதோடு தெய்வீக

நற்பண்புகளாகிய தூய்மை, அஹிம்சை, சத்தியம், பொறுமை, புலனடக்கம், தெய்வீக அன்பு, பரந்த சர்வ வியாபக சகிப்புத்தன்மையுன் கூடிய பரந்த உள்ளம், திடமான கடவுள் நம்பிக்கை ஆகியவைகளும் உடையவர்களாகத் திகழ வேண்டும். அவர்களுக்கு கர்மயோகத்தின் கொள்கைகள், வேதாந்த தத்துவம் ஆகியவைகளைப் பற்றிய பரந்த ஞானம் இருத்தல் வேண்டும். அவர்கள் பலன்களை எதிர்பாராமலும், தரகர் மனப் பான்மை இல்லாமலும், ''நானே கர்த்தா'' என்கின்ற எண்ணமில்லாமலும் தொண்டாற்ற வேண்டும். அவர்கள் தங்களுடைய சேவைகள் அனைத்தையும் அவற்றின் பலன் களையும் இறைவனுக்கு ஈஸ்வரார்ப்பணமாக அளித்துவிட வேண்டும்.

கொலை செய்தவனைத் தூக்கிலிடும் முறை நல்லதல்ல. நாம் அவனுடைய அறிவு வளர்ச்சிக்கும், மேற்கொண்டு அபிவிருத்திக்கும் உள்ள சந்தர்ப்பங்களை அபகரித்து விடுகின்றோம். அவன் தூக்கிலிடப்படக் கூடாது. ஆனால் அவன் அறிவு புகட்டப்புட வேண்டும்.

குழந்தை பிறப்பதற்கு முன் கடுமையான பிரசவ வேதனை இருப்பதைப் போல இப்பொழுது உலகத்தில் ஒரு புது ஒழுங்கு, ஒரு புது சகாப்தம், ஒரு புது பண்பாடு, ஒரு புது நாகரிகம் பிறப்பதற்கான வேதனை இருந்து வருகின்றது.

மக்கள் வெஞ்சினமடையும்பொழுது நல்லது கெட்டது என்கின்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதில்லை. அவர்கள் தங்களுடைய பகுத்தறிவுச் சக்தியை இழந்து விடுகின்றனர். அவர்கள் மிருக பலத்தை வெளிப்படுத்துகின்றனர். அவர்கள் நியாய புத்தியை இழந்து விடுகின்றனர்.

ஓ சாந்தியின் தோழர்களே! எழுமின்! விழிமின்! அபார சக்தியுடன் வேலை செய்மின்! சாந்தியைப் பாரெங்

கும் பரப்புமின்! உங்களுடைய முயற்சியிலே எதையும் மிச்சம் விட்டு விடாதீர்கள். சாந்தியை நிலைநாட்ட பூமியையும் ஆகாயத்தையும் புரட்டுங்கள். சாந்தியைப் பற்றி எண்ணுங்கள். சாந்தியைப் பற்றிப் பேசுங்கள். சாந்திக்காக வேலை செய்யுங்கள். சாந்திக்காகப் போராடுங்கள். சாந்தியை நிலைநாட்டுபவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். ஏனெனில் அவர்கள் தேவ சாம்ராஜ்யத்தினுள் நுழைகின்றனர். நாட்டிலே அமைதி நிலவும் பொழுதுதான் ஞானிகள் தங்களுடைய ஆன்மீக உபதேசங்களைப் பரப்பவும், சாதகர்கள் யோகத்தைப் பயிலவும் முடியும்.

## 8. சாதகர்களுக்கான குறிப்புகள்

குழந்தையிடமிருந்து நீ பல ஆன்மீக பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம். எல்லோருக்கும் வழங்குவதற்குக் குழந்தையிடம் செய்தி ஒன்று உளது. நீ குழந்தையிடம் உபநிஷத்துக்கள் வெளிப்படுத்தும் கருத்துக்களையும், தீர்க்கதரிசிகள், முனிவர்கள், ரிஷிகள் ஆகியோருடைய உற்சாக மூட்டும் அனுபவங்களையும் காணலாம். நீ குழந்தையிடம் ஒரு புதிய அனுஷ்டான மதத்தைக் காணுவாய். குழந்தையானது புராதனச் செய்தியாகிய சாந்தி, இசைவு, சுதந்திரம், பேரானந்தம் ஆகியவற்றை வழங்குகின்றது. குழந்தையை ஜாக்கிரதையாக கவனித்துப் பார். அந்த ஆன்மீகப் பாடங்களை கற்று ஞானத்தைப் பெறு. புதிதாகப் பிறந்த குழந்தை எப்பொழுதும் சமாதி அல்லது இறைவனோடு பேரானந்த ஐக்கிய நிலையில் இருக்கிறது அவனுடைய கண்கள் எவ்வளவு சாந்தத்துடன் இருக்கின்றன. அவன் பிரம்மனாகவே இருக்கின்றான். அவன் பெற்றோர்களை உற்று நோக்கி, அடையாளம் கண்டு கொண்டு புன்னகை பூக்கும் பொழுதுதான் மாயை அவனுள் புகுகின்றாள்.

பாவங்களுக்கு, நற்கருமங்கள் செய்தல், அவற்றை எல்லோருமறிய வெளியிடுதல், பச்சாதாபப்படுதல், பிச்சை

போடுதல், தவம் செய்தல், எல்லாவற்றையும் துறந்து தீர்த்தங்கள் அல்லது புனித க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செல்லுதல், சாஸ்திரங்களை இடை விடாது தியானம் செய்தல் ஆகியவைகளின் மூலமாக பிராயச்சித்தம் கிடைக்கின்றது.

துறவைப் பயின்றிருப்பவன் புதிதாக பாவங்களைச் செய்ய முடியாதவனாகி விடுகின்றான். "நம்மைவிட மேலான பிராம்மணர்களுக்கு 'இருக்கைகள் முதலியன கொடுத்து அவர்கள் உன்னால் வசதி செய்து கொடுக்கப்பட வேண்டும். நம்பிக்கையோடு கொடு. நம்பிக்கை யில்லாமல் கொடுக்காதே. சந்தோஷமாக, பணிவுடன், பயத்துடன், அன்புடன் கொடு. பிறகு ஏதாவது செய்கை அல்லது நடத்தையில் சந்தேகம் ஏதாவது ஏற்பட்டால் அப்பொழுது நீ நல்ல நடு நிலைமையுள்ள பிராம்மணர்கள், கொடுமையற்றவர்களாக இருக்கும் வரையிலும், ஆனால் கடமையிலே கருத்துக் கொண்டு இருப்பவர்களும், அவர்கள் நியமிக்கப்பட்டாலும், நியமிக்கப்படாவிட்டாலும் எப்படி நடந்து கொள்வார்களோ அதைப் போல நீ நடந்து கொள். பாவத்தால் குற்றம் சாட்டப்பட்டவர்கள் விஷயத்தில் நீ நடுநிலைமையுள்ள பிராம்மணர்கள், கொடுமையற்றவர்களாக இருக்கும் வரையிலும், ஆனால் கடமையிலே கருத்துக் கொண்டு இருப்பவர்களும், அவர்கள் நியமிக்கப்பட்டாலும், படாவிட்டாலும் எப்படி நடந்து கொள்வார்களோ அதைப் போல நீ நடந்து கொள். இது தான் விதி. இதுதான் உபதேசம். இதுதான் வேதங்களின் கருத்து. இதுதான் உத்தரவு. இது பின்பற்றப்பட வேண்டும் - இதுவேதான் பின்பற்றப்பட வேண்டும்". இது தான் உண்மையான கல்வி.

மிக மிக ஆரோக்கியமாக உள்ள இளைஞன் கூட அந்த இனிமையான ஆழ்ந்த உறக்கத்தை ஒரு மணி நேரத்துக்கு மேல் பெற முடியாது. இவ்விஷயத்தில் மேலை நாட்டு மனோதத்துவ ஞானிகளும் ஒத்துக் கொண்டிருக்

கின்றனர். ஒரு வயதுவந்தவனுக்கு ஆறு மணி நேரத் தூக்கம் முற்றிலும் போதுமானது. இரவு 10 மணிக்குப் படுக்கைக்குச் செல். விடியற்காலை 4 மணிக்கு எழுந்திரு.

இரு பொருள்கள் ஒப்பிடப்படும் பொழுது அவைகளுக்குப் பொதுவாக உள்ள ஒரு சில குறிப்பிட்ட விஷயத்திலோ அல்லது அம்சத்திலோ மட்டும்தான் அவ்வாறு இருக்கும். உதாரணங்கள் குறிப்பிட்ட விஷயத்தை மட்டுமே தெளிவுபடுத்தும். எல்லா அம்சங்களிலும் பரிபூரண ஒற்றுமையை நீ காணமுடியாது. அந்த இரண்டு பொருள்களின் பரிபூரண ஒற்றுமையை ஒரு போதும் காண முடியாது.

நம்மிடையே வேறுபட்ட கருத்துக்கள் அல்லது வேறுபட்ட கொள்கைகள், அல்லது வேறுபட்ட நோக்கங்கள், அல்லது வேறுபட்ட அபிப்பிராயங்கள் இருக்கின்றன என்கின்ற காரணத்தால் நாம் ஒருவர் மற்றொருவருடைய விரோதியாக இருக்க வேண்டியதில்லை.

நீ கடிதங்கள் எழுதும்போது தெளிவாக வரிக்குவரி நல்ல இடைவெளி விட்டு எழுது. ஒரு மஹா கஞ்சனாக இராதே. நீ தெளிவில்லாமல் எழுதினாலும், நீ கிறுக்கி எழுதினாலும், ஒரு உறையினுள் எழுதிப் போட வேண்டிய அவ்வளவு கருத்துக்களையும் ஒரு அஞ்சல் அட்டையிலேயே எழுதினாலும் நீ ஒரு மிகவும் கெட்ட கர்மத்தைச் செய்தவனாகின்றாய். படிப்பவர் தன்னுடைய கண்களை உறுத்த வேண்டியிருக்கிறது. அவர் சலிப்படைகிறார். அவர் தன்னுடைய மதிப்புமிக்க நேரத்தை அதிகம் வீணாக்க வேண்டியிருக்கிறது.

நீ இடைவிடாது ஆவியைப் பற்றியே (spirit) நினைத்துக் கொண்டிருந்தால், ஒரு மனிதன் இந்த உடலை விட்டுப் பிரியும்போது அவனுடைய கடைசி சிந்தனையின் மூலமாக அவனுடைய அடுத்த பிறவி நிர்ணயிக்கப்படுகின்றது என்கின்ற மாற்றவொண்ணா விதி அல்லது கோட்

பாட்டின்படி நீயும் ஒரு பேயாக ஆகிவிடுவாய். கடைசி எண்ணமானது அவன் தன்னுடைய வாழ்க்கையிலே எண்ணி வந்த ஆழ்ந்த எண்ணங்களினுல் பெறப்படுகின்ற பலனேயாகும். எப்பொழுதும் இறைவன் அல்லது பிரம் மனைப் பற்றி நினை. உன்னுடைய கடைசி எண்ணமும் இறைவன் அல்லது பிரம்மனைப் பற்றியதாக இருக்கும். நீ அமரத்துவத்தையும், விடுதலையையும் அடைவாய்.

ஆவிகளுடன் கொண்டுள்ள செய்தித் தொடர்பு, அவைகளின் செய்திகள் ஆகியவைகள் மேற்கொண்டும் வாழ்க்கை இருக்கின்றது என்ற உண்மையை நிலைநாட்டியிருக்கின்றன. ஆனுல் பிரிந்து சென்றுவிட்ட ஆத்மாக்களுடன் செய்தித் தொடர்பு வைத்துக் கொள்ள முயற்சிப்பதனுல் நீ அதிகம் பயனடைய மாட்டாய். நீ பிரிந்து சென்ற ஆத்மாக்களை, உன்னுடைய பிரார்த்தனை, கீர்த்தனை, காணிக்கை செலுத்துதல், சிரத்தை முதலியன செய்வதன் மூலமாக சௌகரியமாக இருக்கச் செய்யலாம். நீ அவர்களோடு தொடர்பு கொள்ள முயற்சிப்பதின் மூலம் நீ அவர்களை பூமிக்குப் பாத்தியப்பட்ட ஆத்மாக்களாகச் செய்கின்ருய். நீஅவர்களை மேற்கொண்டு உயர்ந்த ஆன்மீக மண்டலங்களுக்குச் செல்ல அனுமதிப்பதில்லை. அவர்கள் உன்மீது பற்றுக் கொள்வர். நீயும் அவர்கள் மீது பற்றுக் கொள்வாய். மேலும் ஆத்மாக்களைப் பற்றிய எண்ணங்கள் உன்னை உன்னுடைய கனவிலே மிகவும் தொந்தரவு செய்யும். ஆவிகளின் செய்திகள் எப்பொழுதும் உண்மையாக ஆவதில்லை. நீ உன்னுடைய சொந்த ஆத்மனை உணர உன்னுல் முடிந்த வரை முயற்சி செய். எல்லா உலகங்களும் களிப்பெய்தும், நீ உலகமனைத்துக்கும் உதவுவாய். உன்னுடைய முன்னேர்கள் எல்லோரும் அமைதி பெறுவர். எவன் ஒருவன் தன்னைத் தூய்மைப் படுத்திக் கொள்கின்ருனே அவன் உலகமனைத்தையும், அவனுடைய மூதாதையர்களையும் தூய்மைப் படுத்துகின்ருன். சங்கு அல்லது சிப்பியைத் தேடி அலையாதே.

உன்னுள்ளே இருக்கும் விலைமதிப்பற்ற ஆன்மீக முத்தைப் பற்றிக் கொள்.

வஸந்தகாலம் அதன் எழில் முழுதும் விளக்கிய வண்ணம் வந்திருக்கிறது. வாழ்க்கையின் வஸந்தத்தை அனுபவி. உன்னுடைய வாழ்க்கையில் ஒரு வஸந்த காலம் இருக்கட்டும் – அவ்வாழ்க்கை இறைவனோடு கொண்டுள்ள இனிய ஐக்கியம், ஆத்மானுபூதியின் மலர்களோடும், பழங்களோடும், பக்தி, பிரம்மஞானம், சுதந்திரம் அமரத்துவம், சாந்தி, பேரானந்தம் ஆகியவற்றோடு கூடியதாகும்.

மக்கள் பழைய பொருள்களை எறிந்து விடுவதில்லை. 50 வருஷங்கள் வரை வைக்கப்பட்டிருக்கும் பழைய சர்க்கரை, பழைய அரிசி, பழைய ஊறுகாய்கள், பழைய கற்கண்டு, பழைய நெய் முதலியவை மிகவும் மதிப்பு வாய்ந்தவை. ஏனெனில் அவைகள் மிகவும் உயர்ந்த சக்தி வாய்ந்தவை. அவைகள் பல நோய்களை நீக்க வல்லவை. ஆகவே மக்கள் அவற்றை மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வைக்கின்றனர். இதேபோல வேதாந்த நோக்குடையவனும், ஆத்மனை எல்லா சரீரங்களிலும் பார்ப்பவனுமாகிய கணவனுக்கு வயதான மனைவி மிகவும் பிரியமானவளாக இருக்கின்றாள். உணர்ச்சியுள்ள எஜமானனுக்கு ஒரு பழைய நாணயமுள்ள வேலைக்காரன் பிரியமானவனாக இருக்கின்றான்; சில மனசாட்சியுள்ள மக்களுக்கு பழைய உள்ளன்போடு கூடிய நண்பர்கள் மிகவும் பிரியமானவர்களாக இருக்கின்றனர்.

நீ எல்லாப் பக்கங்களிலும் விஷக் கிருமிகளால் சூழப்பட்டிருக்கின்றாய். உன்னுடைய உடல் நோய்க் கிருமிகளால் நிரப்பப்பட்டுள்ளது. இருந்த போதிலும் நீ ஜீவித்துக் கொண்டிருக்கிறாய். இது ஒரு பெரும் புதிர். இதுதான் அதிசயங்களிலே மிகப் பெரிய அதிசயம்.

ஒரு மனிதனுடைய தனித்தன்மையானது (individuality) அவனுடைய வியக்தித்துவத்திலிருந்து (personality)

வேறுபட்டது. ஒருவனுடைய தனித்தன்மையை விருத்தி செய்து கொள்வதிலே கேடு ஒன்றும் இல்லை. திடமான தனித்தன்மையுடைய ஒரு மனிதன் வேதாந்தம் அல்லது ஞானயோகத்தை அனுஷ்டிக்கத் தகுதியுடையவனாவான். "அஹம் அஸ்மி – நான் இருக்கிறேன்". இது தனித் தன்மை. இது சாத்வீகமானது. வியக்தித்துவம் என்பது ஒருவனுடைய சொந்த மானசீக சிருஷ்டியாகும். இது ராஜஸீகமானது.

மேலை நாட்டில் வியக்தித்துவம் என்பது ஒரு பெரிய வஸ்து. ஒரு ஹிந்துவுக்கு இது ஒன்றுமேயில்லை. பட்டங்கள், மதிப்புக்கள், அந்தஸ்து, நிலை, மதிப்பு ஆகியவைகள் ஒருவனுடைய வியக்தித்துவத்தை ஊசலாட்டுகின்றன. வியக்தித்துவத்தை அழித்தல் என்பது ஒரு மேலைநாட்டானுக்கு சாவு அடியாகும். வியக்தித்துவத்தை அழிப்பது ஒரு ஹிந்துவுக்கு ஒரு மகிழ்ச்சிகரமான விஷயமாகும். ஒரு ஹிந்து அமரத்துவத்தை அடையும்பொருட்டு தன்னுடைய சிறிய வியக்தித்துவத்தை அழிக்கப் பாடுபடுகின்றான். வியக்தித்துவம் என்பது அகந்தையாகும். ஒரு ஹிந்து தியாகத்தையும், சந்நியாசத்தையும் (துறவு) வரவேற்கின்றான். ஹிந்துவினுடைய மனத்திலே மத உணர்வு தீவிரமாகவே இருக்கிறது. "தியாகம்", "சந்நியாசம்" என்கின்ற வார்த்தைகளே மேலை நாட்டு மக்களுடைய உள்ளங்களிலே கிலியை உண்டுபண்ணுகிறது. "விட்டு விடுதல்" என்பது ஹிந்துக்களின் உள்ளங்களிலே பதிய வைக்கப்பட்டிருக்கிறது. "எடுத்துக் கொள்ளுதல்" என்பது மேலைநாட்டார்களுடைய உள்ளங்களிலே பதிய வைக்கப்பட்டிருக்கிறது.

மாயை விநோதமானவள்! அவள் விசித்திரமான முறையில் ஜீவர்களை மயக்கிக் கட்டுப்படுத்துகின்றாள். அவள் அறிவை அழித்து அவர்களை உணர்ச்சி, பேராசை, அதிகாரம் ஆகியவற்றிற்கு அடிமையாக்கி விடுகின்றாள். வயதான தாய் தன் மகனைத் திருமணம் செய்து கொள்ளும்

படி கட்டாயப்படுத்துகிருள். அவள் தன்னுடைய மருமகள் தன்னுடைய வயதான காலத்தில் தனக்கு நன்ருக சேவை செய்வாள். இரவில் கால்களைப் பிடித்துவிடுவாள், வெற்றிலைபாக்கு மடித்துக் கொடுப்பாள், தேத்தண்ணீர் போட்டுக் கொடுப்பாள் என்றெல்லாம் எண்ணுகிருள். மருமகள் வீட்டிற்குள் நுழைந்ததும் அவள் வீட்டிற்கு எஜமானி ஆகிவிடுகின்ருள். பணப்பெட்டி, இதர பெட்டிகள் முதலியவற்றின் சாவிகளைக் கைப்பற்றிக் கொள்கின்ருள். மருமகள் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று மாமியார் எண்ணுகிருள். அறியாத மாமியார் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று படித்த நாகரீகமான மருமகள் விரும்புகின்ருள். மாமியார் இளம் மருமகளை அடக்க முயற்சிக்கின்ருள். இதே போல மருமகளும் எண்ணுகிருள். மாமியார் தன்னைக் கொடுமைப் படுத்துவதாக மருமகள் எண்ணுகின்ருள். இதேபோல மாமியாரும் நினைக்கின்ருள். பொழு விடிந்தால் வீட்டில் ரகளைதான். பரிதாபகரமான நிலையில் பிள்ளை தவிக்கின்ருன். அவன் தன்னுடைய தாயையும் மகிழ்விக்க முடியாது, தன் மனைவியையும் மகிழ்விக்க முடியாது தவிக்கின்ருன். மத்தளத்தைப் போல அவன் இருபக்கமும் அடிபடுகின்ருன். செல்வம் இருந்தென்ன, விதவிதமான பொருள்கள் இருந்தென்ன, அவர்களுக்கு வீட்டிலே அமைதி கிடையாது. மற்றவர்களை அடக்கியாள முயற்சிப்பதில் என்ன பயன்? எல்லாம் அழியக்கூடியனவாக இருக்கையில் அதிகாரங்களினுல் யாது பயன்? கீழ்ப்படியக் கற்றுக்கொள். மற்றவர்களுக்குச் சேவை செய்யவும், அவர்களை மகிழ்விக்கவும் கற்றுக்கொள். எல்லோரும் உன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் வந்துவிடுவர். நீ எல்லோருடைய உள்ளங்களையும் ஊடுருவிப் பாயமுடியும். கீழ்ப்படிந்து நடத்தல் தியாகத்தைக் காட்டிலும் சிறந்தது. பணிவு உனது அகந்தையை ஒழித்து அந்தரங்க ஆன்மீக பலத்தையும், சந்தோஷத்தையும், சாந்தியையும் கொடுக்கும்.

காற்றிலுள்ள வெடியுப்பை (நைட்ரஜன்) நேரடியாகக் கிரஹிக்கின்ற பாக்டீரியா கிருமிகளை மனிதனுடைய உடலுக்குள் செலுத்தி விட்டால், பிறகு மனிதன் ஆகாரத்தை நீக்கி விடலாம். ஏனெனில் பாக்டீரியா கிருமிகள் அவனுக்குத் தேவையான நைட்ரஜனைக் கொடுத்து விடும். மனிதனுக்கும் பாக்டீரியாவுக்கு மிடையே ஒருவித கூட்டு (symbiosis) இருக்கும். மனிதனுக்குத் தேவையான அளவு வெடியுப்பை பாக்டீரியாக்கள் கொடுத்து விடும். அதற்குப் பதிலாக அவைகள் மனிதனிடமிருந்து ஏதாவது சிலவற்றைப் பெற்றுக் கொள்ளும். "symbiosis" என்கின்ற பதமானது பலவகைப்பட்ட ஜீவ ஜந்துக்களுக்கிடையே யுள்ள உடற் கூற்றுத் தொடர்பைக் குறிக்கும் பொருட்டு டி பாரி என்பவரால் புகுத்தப்பட்டது. (Symbiosis is a term introduced by De Bary to denote certain kinds of physiological partnership between organisms of different kinds best restricted to such intimate and complimentary partnership as exist between algoid and fugoid elements in lichens or between uni-cellular algae and Radiolarians) பலருடைய கடவுள் தற்காலத்தில் அவர்களுடைய வயிற்றளவில் மட்டுமே கட்டுண்டு கிடக்கின்றது. மேற் கூறிய சோதனை வெற்றி பெற்றால் மனிதன், தெய்வ சிந்தனைக்கும், ஆன்மீக தேட்டத்திற்கும் அதிக நேரம் செலவழிக்க முடியும். மனிதனுடைய பசியைக் கட்டுப்படுத்தி உணவை விட்டொழிக்க அவனுக்கு உதவிபுரியும் இந்த பாக்டீரியாக்களுக்கு நன்றி.

நீ ஒரு நல்ல தோல் பெட்டி வாங்க வேண்டுமென்று விரும்பினால் கடைவீதியிலுள்ள கடைக்குக் கடைச் சென்று கடைசியாக உன்னுடைய தேவையைப் பூர்த்தி செய்யக் கூடிய சரியான சூழ்நிலை அமைந்த கடைக்குள் செல்லுகிறாய். கடைக்காரனும் ஒரு தகுதியான ஆசாமிக்காக ஆவலோடு காத்திருக்கின்றான். இது ஒரு இரட்டைப் பொருத்தமாகும். இதே போல தன்னுடைய மேல் படிப்புக்காக ஆக்ஸ்போர்டு செல்ல வேண்டுமென்கின்ற தீவிர

ஆசையுடையவனும், ஆனால் இந்த ஜன்மத்திலே தன் னிச்சையைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாமலிருப்பவனு மாகிய ஒரு ஏழைப் பையன் அடுத்த பிறவியிலே தகுதி யான சூழ்நிலைகளைப் பெற்று, பட்டப் படிப்புக்காக மேல் நாடு செல்லக்கூடிய ஒரு மகனைப் பெற வேண்டுமென்று காத்துக் கிடக்கும் ஒரு பணக்காரக் குடும்பத்தில் பிறக் கின்றான். இதுவும் ஒரு இரட்டைப் பொருத்தமே.

"சக்ஷுர்ப்யாம், ஹஸதே வித்வான்,
தந்தௌஷ்டப் யாந்து மத்யமஹ
அதம அட்டஹாஸேன, ந ஹஸந்தி
முனீஸ்வராஹ"

வித்துவான் கண்களின் மூலம் புன்னகை புரிகின்றான்; மத்திமமானவான் பற்களாலும் உதடுகளாலும் சிரிக்கின் றான்; கடை நிலையிலிருப்பவன் எக்காளமிட்டுச் சிரிக்கின் றான்; ஆனால் முனீஸ்வரன் ஒரு பொழுதும் புன்னகை புரிவது மில்லை, சிரிப்பதுவுமில்லை.

வாழ்விற்காக ஏங்கவும் வேண்டாம், சாவிற்காக விரும்பவும் வேண்டாம். ஆனால் வேலைக்காரன் எஜமான னுடைய உத்தரவுக்குக் காத்திருப்பது போல் காலம் வரும் வரை காத்திரு. இது ஒரு ஞானியினுடைய உதாசீன விருத்தியாகும்.

யோகப் பயிற்சியானது அழைத்துச் செல்லக்கூடிய கடைசி உச்சி ஸ்ரீ சக்கரமாகும். ஸ்ரீ வித்தையிலே நீ பூரணத்துவம் அடையும் பொழுது யோகப் பயிற்சியின் மூலம் நீ அடைய வேண்டியது மிகுதி ஒன்றும் இல்லை.

ஒரு கூலிக்காரனுக்கு அவனுடைய தினசரி சொற்ப கூலியுடன் ஒரு குறிப்பிட்ட அளவு கவலை இருக்கிறது; ஒரு குமாஸ்தாவிற்கு அவனுடைய வேலையைப் பொருத்த பொறுப்புக்கள் இருக்கின்றன; ஒரு தாசில்தாருக்கு ஒரு தாசில் சம்பந்தப்பட்ட எல்லா கவலைகளும் இருக்கின்றன;

ஒரு உதவி கலெக்டருக்கு அவருடைய சப் டிவிஷனைப் பொறுத்த கவலை; ஒரு கலெக்டருக்கு அவருடைய ஜில்லாவைப் பொறுத்த கவலை; ஒரு கவர்னருக்கு அவருடைய மாகாணத்தைப் பொறுத்தமட்டில் கவலை; ஒரு வைஸ்ராய்க்கு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் பிராந்தியம் முழுவதைப் பற்றிய கவலை. "முடிசூடும் தலைக்குக் கவலை அதிகம்" (uneasy lies the head that wears the crown). மனிதன் பெரியவனாக ஆக அவனுடைய கவலைகளும் பொறுப்புகளும் அதிகரிக்கின்றன.

தங்களுடைய நற்பண்புகளின் சிறப்புக் காரணமாக பிரம்ம லோகத்திற்குச் செல்பவர்கள் அடுத்த கல்பத்தில் அவர்களுடைய தகுதிக்கேற்றவாறு தெய்வீக ஆசாரியாதிபத்தியத்திலே பொறுப்புள்ள பதவிகளை வகிக்கின்றனர். ஹிரண்ய கர்ப்பனை வழிபடுபவர்கள் ஹிரண்ய கர்ப்பன் அல்லது பிரம்மாவோடு பரபிரம்மனுக்குள் பிரம்மாண்டத்தின் கடைசி அழிவு காலத்தின்போது புகுகின்றனர்.

ஸ்வர்க்க வாசத்திற்கு வழிகோலுகின்ற ஜ்யோதிஷ்டோமம் போன்ற யாகங்களும், ஒரு குறிப்பிட்ட நோக்கம் ஈடேறுவதற்கோ அல்லது இச்சா பூர்த்திக்கோ செய்யப்படும் இதர சடங்குகள் காம்ய கர்மம் என்று அழைக்கப்படும். ஒரு பிராம்மணனைக் கொலை செய்தல், குடித்தல், மற்றும் இதர தீய பழக்கங்கள் நிஷித்த கர்மம் அல்லது தடை செய்யப்பட்ட செய்கைகள் ஆகும். சந்தியாவந்தனம் போன்ற தினசரி சடங்குகள் நித்ய கர்மம் என்று கூறப்படும்.

---

# அத்தியாயம் பதின்மூன்று

# ஜீவன் முக்தன்

## 1. ஜீவன் முக்தன்

### (குணாதிசயங்களும் அனுபவங்களும்)

ஜீவன் முக்தன் ஒரு விடுதலை பெற்ற ஞானி. அவர் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே விடுவிக்கப்படுகின்றார். அவர் உலகத்தில் தான் வாழுகின்றார். ஆனால் அவர் உலகத்தைச் சார்ந்தவரல்ல. அவர் எப்பொழுதும் பரமாத்மாவின் சாசுவதப் பேரானந்தத்தில் திளைத்த வண்ணமாக இருக்கின்றார். அவருக்கு இந்த உடல், இந்திரியங்கள் ஆகியவற்றோடு அபேதத்தன்மை கிடையாது. ஆகவே அவர் அவருடைய பிராரப்தத்தின் எச்சத்தைத் தீர்க்கும் பொழுது அவருக்கு போகம், போக்தா என்கின்ற எண்ணம் கிடையாது. அவருக்கு கர்மம் அல்லது காரக எண்ணம் கிடையாது. அவர் பற்றுதல் அல்லது அகந்தை இன்றி, சீரான மனோ நிலையுடனும், சமநோக்குடனும் சந்தோஷமாக அலைந்து திரிகின்றார். அவருடைய நிலை வர்ணிக்க முடியாதது; அவர் பிரம்மனாகவே இருக்கின்றார்.

ஒரு ஜீவன் முக்தன் ஒரு ஆன்மீக வீரன். அவர் ஆத்ம ஞானத்தையுடைய விளக்கமடைந்த ஞானியாவார். அவர் மனிதர்களில் தலையாயவராவார். அவர் மனத்தை வென்றவர். அவர் ஆசைகள், விருப்பம், பயம், மயக்கம், கர்வம், அகந்தை முதலியவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டவர்.

ஒரு ஜீவன் முக்தனுக்கு, ஒரு போக்கிரிக்கும் ஒரு முனிவருக்கும் இடையேயும், தங்கத்திற்கும் கல்லுக்கும், உயர்விற்கும் தாழ்விற்கும், ஆணுக்கும் பெண்ணுக்கும், மனிதனுக்கும் மிருகத்துக்கும், தூற்றுதலுக்கும் போற்று

தலுக்கும், நன்மதிப்பிற்கும் கெட்ட மதிப்பிற்கும், இடையேயும் வேறுபாடு என்பது கிடையாது. அவர் எங்கும் அந்த ஒப்பற்ற ஒரு ஆத்மனையே காணுகின்றார். ஒவ்வொருவரிடத்திலும் அவர் தெய்வீகத்தைப் பார்க்கின்றார். அவர் மனமற்றவராதலால் எல்லா வேற்றுமைகளும், தடைகளும் அவரிடமிருந்து மறைந்து விட்டன.

ஏக ரஸமான அமிர்தம் நிறைந்த பரந்த பிரம்ம சாகரத்திலே ஜீவன் முக்தன் பார்ப்பதுமில்லை, கேட்பதுமில்லை. அவர் தன்னுடைய சொந்த ஆத்மனிலேயே தன்னுடைய சொந்த சத்-சித்-ஆனந்த ரூபத்தன்மையிலேயே தங்கியிருக்கின்றார். அவர் நிர்விகல்ப சமாதியின் மூலமாக அவருடைய ஆத்மாவை இரண்டாவதில்லாததாகக் காண்கின்றார். அவருடைய காட்சி அல்லது அனுபவம் வர்ணனைக்கப்பாற்பட்டது. அவர் மேலான அமைதியை அடைந்திருக்கிறார். அவர் ஒரு தூயத்தன்மை பொருந்தியவராக இருக்கின்றார். அவர் தன்னை சைதன்யம் அல்லது தூய உணர்வாகவே உணர்ந்து இருக்கிறார். அவர் எப்பொழுதும் தன்னுடைய சொந்த ஆத்மாவாகிய உத்யான வனத்தில் பரிபூரண சௌக்கியத்துடன் இளைப்பாறிக் கொண்டிருக்கின்றார்.

ஜனக ராஜா ஒரு முனிவரைப் பார்த்து " ஓ மதிப்பிற்குரிய முனிபுங்கவரே, நீங்கள் ஏன் காலையிலும், நடுப்பகலிலும், மாலையிலும் சந்தியா செய்வதில்லை " என்று கேட்டார். அதற்கு முனிவர் " ஓ ராஜன், ஞான சூரியனவன் என்னுடைய இருதயத்தின் சிதாகாசத்தில் எப்பொழுதும் பிரகாசித்த வண்ணமிருக்கின்றான். எனக்கு சூரியோதயமும் கிடையாது. சூரியாஸ்தமனமும் கிடையாது. சூரியோதயமோ அல்லது சூரியாஸ்தமனமோ இல்லாத பொழுது நான் எவ்வாறு சந்தியா செய்ய முடியும்? தவிர என்னுடைய வயதான பாட்டி, மாயை இறந்து விட்டாள் " என்று பதிலுரைத்தார். ஜனக ராஜா முனிவருக்கு முன்பாக சிரம் (தலை) தாழ்த்தி அந்த இடத்தை

விட்டு மௌனமாக அகன்று விட்டார். அம்முனிவர் பிரம்ம சைதன்யத்திலே நிலைபெற்றிருக்கும் உண்மையான ஜீவன் முக்தன் என்பதை அவர் புரிந்து கொண்டார்.

வெளியற்ற பிரம்மனிடத்தில் வெளி எவ்வாறு தோன்றியது? கிழக்கும், மேற்கும், வடக்கும், தெற்கும் எப்படி வந்தது? இதுவும் மனத்தினுடைய ஒரு சிருஷ்டி அல்லது தந்திரமாகும். நீ களைத்திருந்தால் ஒரு பர்லாங்கு தூரம் ஒரு மைலாகத் தோன்றுகின்றது. நீ தெம்பாக இருக்கும் பொழுது ஒரு மைல் ஒரு பர்லாங்காகத் தென்படுகிறது. ஒரு ஜீவன் முக்தன் அல்லது தீர்க்கதரிசிக்கு காலமோ அல்லது தூரமோ கிடையாது. அவர் காலமும் இடமுமற்ற ஒப்பற்ற பிரம்மனையே காணுகின்றார்.

ஒரு ஜீவன் முக்தன் அகந்தை, சந்தேகம், பயம், துக்கம் ஆகியவற்றிலிருந்து முற்றிலும் விடுபட்டிருக்கின்றார். ஒருவன் பூர்ணத்துவத்தை அடைந்து விட்டான் என்பதை இந்நான்கு அடையாளங்களும் குறிக்கின்றன.

ஹர்ஷ – சோகத்திலிருந்து (உற்சாகம், சோர்வு) விடுதலை பெற்றிருத்தல், சமநோக்கு, சீரான மனோநிலை, திரிகால ஞானம் (இறந்த, நிகழ், எதிர்கால ஞானம்) ஆகியவைகள் ஒரு ஜீவன் முக்தனுடைய முக்கிய லக்ஷணங்களாகும்.

தேக அத்தியாஸம் துன்பத்தைக் கொடுக்கிறது. ஒருவன் ஆத்ம ஞானத்தை அடையும் பொழுது, உடலிலே ஏதாவது நோய் இருந்த போதிலும் அவன் துன்பத்தை அனுபவிப்பதில்லை. அவன் சரீர உணர்விற்கு மேம்பட்டு இருக்கின்றான். அணுக்களை அடக்கியாள்பவனும், காய சித்தி அடைந்தவனுமாகிய மிக உன்னதமான ஹடயோகி ஒருவனால்தான் உடலை நோயின்றி வைத்திருக்க முடியும். உடலிற்கு மேம்பட்டு எழுந்து எப்பொழுதும் உன்னை துன்பமற்ற, நோயற்ற ஆத்மாவோடு அபேதமாக்கிக் கொள். நீ துன்பத்திலிருந்து விடுபடுவாய். நீ ஆழ்ந்த உறக்கத்தில்

இருக்கும் பொழுது நீ ஏதாவது நோயினுல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாலும் வலி தெரிவதில்லை. உனக்கு குளோரோ பாரம் கொடுத்திருக்கும் போது காலே துண்டிக்கப்பட்டா லும் கூட வலி தோன்றுவதில்லை. உடலோடு மனமானது இணைக்கப் படுவதுதான் வலிக்குக் காரணமாக இருக் கின்றது. உடலை விட்டு மனமானது உணர்வின் மூலமாக வெளியில் எடுக்கப் பட்டு விட்டால், இடைவிடாத தியா னத்தின் மூலம் பேரானந்த மயமான ஆத்மனில் பதிய வைக்கப்பட்டு விட்டால், இந்த உடல் எந்த நோய்க்கு ஆளான போதிலும் உனக்கு வலி என்பதே இருக்காது. இது ஞானயோக சாதனையாகும். பிராரப்தம் தீர்க்கப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே இவ்வுடல் நோய்க்கு ஆளாக வேண்டி இருக்கிறது. ஜீவன் முக்தன் எந்த விதமான வலியையும் அனுபவிப்பதில்லை. பார்ப்பவர்கள் தவருக ஞானிகூட அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிருர் என்று எண்ணக்கூடும். இது ஒரு பெருந்தவருகும். ராமகிருஷ்ண பரம ஹம்ஸருக்குத் தொண்டைப் புற்று நோய் இருந்தது. புத்தருக்குத் தீராத வயிற்றுக் கடுப்பு இருந்தது. ஸ்ரீ சங்கர ருக்கு மூல வியாதி இருந்தது. ஆனுல் அவர்கள் எவ்வித வலியையும் அனுபவித்ததில்லை. டாக்டர்கள் ராமகிருஷ்ண பரம ஹம்ஸரைப் பார்த்து “ நீங்கள் ஏன் இவ்வாறு அவஸ் தைப் பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களால் இந்த ரண சிகிச்சையைச் செய்து கொள்ள முடியாதா?” என்று கேட்டனர். அதற்கு அவர் “ நான் என்னுடைய மனத் தைக் காளி தேவிக்கு அர்ப்பணித்து விட்டேன். என்னுல் எப்படி இந்த உடலைப் பற்றி நினைக்க முடியும்? நான் எப்படி என்னுடைய மனத்தை மறுபடியும் இந்த மாமிசக் கூண்டிற்குள் கொண்டு வர முடியும்? நான் எப்பொழுதும் பேரானந்தத்தில் திளைத்த வண்ணமிருக்கின்றேன்” என்று பதிலுரைத்தார்.

சாந்தி, சந்தோஷம் (திருப்தி), சமதா (சீரான மனேநிலை), சுக துக்கத்திலிருந்து (ஹர்ஷ-சோகம்) விடு

பட்டிருத்தல், நிர்பயதா (பயமற்ற தன்மை) ஆகிய ஐந்தும் ஒரு ஜீவன் முக்தனுக்குரிய முக்கியமான அடையாளங் களாகும்.

ஆத்மானுபூதி அடைந்த ஒருவருடைய வார்த்தை கள் கேட்போருக்கு சாந்தியையும், இசைவையும், சக்தி, பலம் ஆகியவற்றையும் கொடுக்கவல்லவை. அவைகள் அவருடைய மகிமை, சாந்தி, ஆசித்தன்மை ஆகியவற் றுடன் கூடிய அந்தரங்க வாழ்வின் பெருக்காகும். சூழ்ந் துள்ள அனைவரிடத்தும் அவர் சந்தோஷத்தையும், அன்பையும் ஊட்டி பிரகாசிக்கச் செய்வார்.

ஆத்ம ஞானத்தை அடைகின்ற ஒருவர் எல்லாவித மான ஆசைகளிலிருந்தும் முற்றிலும் விடுபடுகிறார். ஏனெனில் எல்லாம் தன்னகத்திலேயே உள்ளன, தன்ன கத்தை விட்டு வெளியே ஆசைப்படுவதற்கு ஒன்றுமில்லை என்பதை அவர் அறிகிறார். "ஆப்த காமஸ்ய கா ஸ்ப்ருஹா — எல்லாவற்றையுமுடையவன் எதற்கு ஆசைப் பட முடியும்?" பிரம்மன் பரிபூரணன், (சகலமும் நிரம்பப் பெற்றவன்), நிரபேக்ஷன் (எல்லாம் அடங்கப் பெற்றவன்). ஆத்மனை உணர்ந்திருப்பவனும், ஆத்மனை எல்லா ஜீவன் களிடத்தும் காண்பவனும், எல்லா ஜீவன்களையும் ஆத்ம னிடத்துக் காண்பவனுமாகிய ஒருவனுடைய உள்ளத்தில் ஆசை எப்படி எழ முடியும்?

மனமானது தன்னுடைய உண்மையான சத்-சித்- ஆனந்தத் தன்மையிலே ஒடுங்கப் பெற்றிருப்பவரும், அறியாமையாகிய விரோதியை வென்றவரும். "நான்" "என்னுடையது" என்கின்ற தன்மையற்றிருப்பவரும், கர்வம், சுய அன்பு, பொறாமை, வெறுப்பு ஆகியவற்றைக் களைந்தவருமாகிய அந்த ஒளி விளக்கமடைந்த ஞானி யானவர், எல்லையற்ற பேரானந்தப் பெருங்கடலில் திளைத் தவராக இருக்கின்றார்.

யார் ஒரு பரமஹம்ஸன்? எல்லா ஜீவன்களுள்ளும் ஆத்மனைக் காணுபவனும், பாலும் தண்ணீரும் சேர்ந்த கலவையிலிருந்து தண்ணீரை விட்டுப் பாலை மட்டும் பிரித்தெடுத்து அருந்துகின்ற அன்னப் பறவையைப் போல, ஐந்து கோசங்களும், ஐந்து பூதங்களும் சேர்ந்த கலவையிலிருந்து ஆத்மாவை மட்டும் பிரித்தெடுக்கின்றவனுமாகிய ஒருவனே பரம ஹம்ஸனுவான். குளிர் காலத்தில் பாய்ந்தோடும் கங்கா ஜலத்தைப் போல் இருப்பவன் எவனோ, பரிவிராஜக வாழ்க்கையை நடத்திக் கொண்டு பற்றற்ற நிலையில் இருப்பவன் எவனோ அவன் ஒரு பரம ஹம்ஸன்.

மிக உன்னத பிரம்மனை அறிபவன் அமரத்துவத்தை அடைந்து சாசுவதப் பேரானந்தத்தை அனுபவிக்கின்றான். அவன் துன்பத்தைக் கடந்து நன்மை தீமைக்கு அப்பால் செல்லுகின்றான். அவன் சந்தேகம், மயக்கம், கட்டுப்பாடு ஆகியவற்றிலிருந்து விடுபடுகின்றான். அவன் அவித்தை, காமம், கர்மம் எனப்படுகின்ற இருதயத்தின் மும்முடிச்சுகளிலிருந்து விடுபடுகின்றான். அவனுடைய நிலை வர்ணனைக்கு அப்பாற்பட்டது.

சஞ்சித கர்மங்கள் (கர்மங்களின் களஞ்சியம்) அவித்தையைச் (அவித்யா ஆஸ்ரயம்) சார்ந்திருக்கின்றன. கிரியாமன கர்மங்கள் அகந்தையைச் (அஹங்காராஸ்ரயம்) சார்ந்திருக்கின்றன. பிராரப்த கர்மங்கள் ஸ்தூல சரீரத்தைச் சார்ந்திருக்கின்றன. ஒரு ஜீவன் முக்தனிடத்தில் ஞானோதயத்தின் மூலம் அறியாமை அழிக்கப்படுகிறது. ஆகவே சஞ்சித கர்மம் அழிக்கப்படுகின்றது. அவனுக்கு அகந்தை கிடையாது. ஆகவே கிரியாமன கர்மங்கள் (தற்போதைய செயல்கள்) அழிக்கப்படுகின்றன. இந்த திருஷ்டி கோணத்திலிருந்து பார்க்கும் பொழுது அவன் தன்னை சர்வ வியாபகமான பிரம்மனோடு அபேதமாக்கிக் கொள்ளுகின்ற காரணத்தால் அவனுக்கு சரீரம் கிடையாது. ஆகவே ஒருவன் ஆத்ம ஞானத்தை அடையும்

பொழுது மூன்று விதமான கர்மங்களும் அழிக்கப்படு கின்றன.

நற்கருமங்கள் செய்தவர்கள் சொர்க்கத்திற்குச் செல் கின்றனர். உபாசனை செய்தவர்கள் பிரம்ம லோகத்திற்குச் செல்லுகின்றனர். ஞானிகள் எந்த லோகத்திற்கும் செல்வ தில்லை. அவர்கள் சர்வ வியாபகமான பிரம்மனோடு ஐக்கிய மாகி விடுகின்றனர்.

கார்கி ஒரு ஞானி. அவளுடைய பெயர் பிருஹ தாரண்யக உபநிஷத்திலே வருகிறது. அவள் ஜனகராஜ னுடைய அவையிலே நிர்வாணமாகத் தோன்றி யாக்ஞ வல்கிய முனிவரோடு தத்துவ விவாதம் செய்தாள்.

ஒரு ஞானிக்கு அவருடைய தோள்களே தலையணை. ஆகாயமே அவருடைய மேற்கூரை. புல் நிறைந்த தரையே அவருடைய பட்டு மெத்தை அல்லது அழகான பச்சைக் கம்பளம், நட்சத்திரங்களே எண்ணற்ற மின்சார விளக்கு கள், பிரபஞ்ச பங்காவை வீசிக் கொண்டிருக்கும் வாயு பகவானும், விராட்டுமே அவருடைய பணிப் பெண்கள், அகண்ட வெளியே ஆடை, கைகளே எப்போதும் தயாராக இருக்கும் பாத்திரங்கள், துறவைத் தன்னுடைய மனைவியாக அணைத்துக் கொண்டு, எவ்விதக் கவலையு மின்றி ஞானம், வைராக்கியம், உபரதி என்கின்ற தன்னு டைய குழந்தைகளுக்கிடையே எங்கு வேண்டுமானாலும் படுத்துறங்கி மேலான சாந்தி அல்லது கலப்பற்ற ஆனந் தத்தை அனுபவிக்கின்றார்.

ஒரு ஜீவகோடி ஜீவன் முக்தன் என்பவர் படிப்படி யான பரிணாமத்தின் மூலமாகவும், தன்னுடைய சொந்த முயற்சிகளின் மூலமாகவும் ஆத்மானுபூதியடைந்தவர் ஆவார். அவர் தன்னை தியானத்தின் மூலமாக ஜீவத் தன்மையிலிருந்து பிரம்மத் தன்மைக்கு விடுவித்துக் கொண்டிருக்கின்றார். அவர் பல பிறவிகளை எடுத்திருக்

கிறார். இருந்த போதிலும் எப்படியோ அவர் தன்னை பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுவித்துக் கொள்ளச் சமாளித்து விட்டார். அவரால் ஒரு சிலருக்குத்தான் உதவ முடியும். அவரால் பல பேரை உயர்த்திவிட இயலாது. அவரை 4 அல்லது 5 ஆட்களைச் சுமந்து செல்லக்கூடிய ஒரு மாட்டு வண்டி அல்லது ஆற்றிலுள்ள ஒரு ஓடத்திற்கு ஒப்பிடலாம். ஆனால் சாசுவத விடுதலை பெற்ற ஈஸ்வர கோடி ஜீவன் முக்தன் இவ்வுலகத்தில் தர்மத்தை நிலைநாட்டவும், நல்லவர்களை ரக்ஷிப்பதற்காகவும், மனிதவர்க்கத்திற்கு நன்மை செய்வதற்காகவும் பிறந்தவர். அவர் இப்பிறவியில் எந்த விதமான சாதனையோ அல்லது தியானமோ செய்வது கிடையாது. அவர் கடவுளினுடைய ஒரு அம்சமாக விளங்குபவர். அவர் ஒரு பிறவிச் சித்தர். அவர் அவருடைய பால பருவத்திலேயே ஞான மூட்டப்படுகின்றார். அவரால் பலமக்களை உயர்த்திவிட முடியும். அவர் தோன்றி லோகசங்கிரஹ வேலை முடிந்ததும் மறைந்து விடுவார். அவரை ஏராளமான மக்களை ஏற்றிச் செல்லும் ரயில்வண்டி அல்லது சமுத்திரத்திலிருக்கும் பெரியதொரு நீராவிக் கப்பலுக்கு ஒப்பிடலாம். ஸ்ரீ சங்கரர் ஒரு ஈஸ்வர கோடி ஜீவன் முக்தர், ஸ்ரீ வாமதேவர் ஒரு ஜீவகோடி ஜீவன் முக்தர்.

ஞானிகள் இரண்டு வகைப்படுவர். அதாவது : கேவல ஞானி, சித்த ஞானி. கேவல ஞானி என்பவர் உலகத்திற்கு அதிகம் உதவாது தனக்காக மட்டும் ஆத்மானுபூதியைப் பெற்றவர். அவர் தனக்கு மட்டுமே நன்மை செய்யக்கூடியவர். அவர் இரவில் மட்டும் மின்னுகின்ற நட்சத்திரத்தைப் போன்றவர். அவர் உலகத்திற்குப் பரந்த அளவில் புலப்படமாட்டார். ஆனால் ஒரு சித்தஞானி சூரியனைப் போல மகிமையுடன் இவ்வுலகில் பிரகாசிக்கக் கூடியவர். அவர் ஞானியும் யோகியும் சேர்ந்தவராவார். அவரால் உலகிற்கு ஏராளமாக உதவி செய்யமுடியும். ஸ்ரீ சங்கராச்சாரியார் ஒரு சித்த ஞானி. மதலசா ஒரு கேவல ஞானி.

உலகிற்கு உள்ளுணர்வு நிரம்பப் பெற்ற மக்கள் தேவைப்படுகின்றனர். ஞானத்தை அடைந்த எழுச்சி பெற்ற ஆத்மாக்கள் இவ்வுலகிற்கு ஒரு வரப்பிரசாதமாகும். அவர்கள் மக்களை நல்வழியில் நடத்திச் சென்று அவர்கள் அறியாமையாகிய சாகரத்தைக் கடக்க அதன் மூலம் அமரத்துவத்தையும் சாசுவதப் பேரானந்தத்தையும் அடையவும் உதவி புரிவார்கள். அவர்கள் கல்வி ஸ்தாபனங்களின் தலைவர்களுக்கு வழிகாட்டுவார்கள்.

"எதுவும் என்னுடையதல்ல அல்லது எல்லாம் என்னுடையதே" என்று ஒரு வேதாந்தி கூறுகின்றார். உலகம் வெறும் தோற்றமே ஆனபடியால் "எதுவும் என்னுடையதல்ல" என்று அவர் கூறுவது முற்றிலும் சரியே. அவர் ஆத்மனை உணர்ந்து விட்ட காரணத்தாலும், பிரம்மன் அல்லது ஆத்மனுக்கப்பால் இவ்வுலகத்திற்கு நிரந்தரமான நிலைபேறு எதுவும் இல்லாத காரணத்தாலும் "எல்லாம் என்னுடையதே" என்று கூறுகின்றார். அவர் நுகரும் இந்திரியத்தையும் பிருத்வி தத்துவத்தையும் கட்டுப்படுத்தி விட்டதால் நுகரும் பொருள்கள் அனைத்தும், இந்திரியமும் அவருக்குச் சொந்தமாகின்றன. அவர் சுவை அல்லது நாக்கையும், அபஸ் தத்துவத்தையும் கட்டுப்படுத்திவிட்டதால் சுவைக்குரிய எல்லா பொருள்களும், பழங்களும் மற்றும் இதர சுவைகளும் அவருக்குச் சொந்தமாகின்றன. திருஷ்டிப் புலன் அல்லது கண்ணையும், அக்னி தத்துவத்தையும் அவர் அடக்கி விட்டதால் எல்லாக் காட்சிப் பொருள்களும், அழகுகளும், தோட்டங்களும், அவருக்கு உரிமையாகின்றன. ஸ்பரிசப் புலனையும், வாயு தத்துவத்தையும் அவர் அடக்கி விட்டதால் ஸ்பரிசப் பொருள்கள் அனைத்தும் அவருக்குச் சொந்தமாகின்றன. கேள்விப் பொறியையும் ஆகாச தத்துவத்தையும், அவர் கட்டுப்படுத்தி இருப்பதால் எல்லாச் சப்தங்களும், சங்கீதமும் அவருக்குச் சொந்தமாகின்றன.

சர்க்கரையால் செய்த பூனை ஒன்று ஒரு குழந்தைக்கு உண்மையான பூனையாகும். அக்குழந்தைக்கு சர்க்கரை

புலப்படாது. ஏனெனில் அது பூனையால் விழுங்கப் பட்டு விட்டது. பூனை சர்க்கரையை மறைத்து விட்டது. ஒரு முதியவனுக்கு அது வெறும் சர்க்கரை மட்டுமே. சர்க்கரை பூனையை விழுங்கி விட்டது. இதே போல ஒரு ஜீவன் முக்தன் அல்லது விடுபட்ட ஞானிக்கு மாயமான நாமரூபங்கள் அனைத்தையும் விழுங்கிவிட்ட பிரம்மனே தென்படுகிறான். அவர் எங்குப் பார்த்தாலும் பிரம்மனையே காண்கின்றார். நாம ரூபங்கள் எல்லாம் மறைந்து போகின்றன. ஒரு உலகாயத மனிதனுக்கு நாம ரூபங்கள் பிரம்மனை விழுங்கி விடுகின்றன அல்லது மறைத்து விடுகின்றன. அவன் மாயமான ரூபங்களை மட்டுமே பார்க்கின்றான்.

யாக்ஞவல்கியர் மைத்ரேயியிடம் "ஓ மைத்ரேயி, சிவபிரான் மீது கொண்ட பேரன்பின் தூண்டுதல் காரணமாக பார்வதிதேவி தன்னை அவருடைய உடலிலே பாதியாக ஆக்கிக் கொண்டார்; ஆனால் நீயோ அதையும் விட மிகுந்த அன்பு பூண்டு என்னுடைய ஜீவன் முழுவதிலும் கலந்து கொள்ள வேண்டுமென்று ஏங்கிக் கொண்டிருக்கின்றாய்" என்று கூறினார். ஆத்மானுபூதி அடைந்தவன் அல்லது பிரம்மனை அறிந்தவன் எல்லா ஜீவன்களினுடைய அந்தராத்மாவாக ஆகிவிடுகின்ற காரணத்தினால் அவன் எல்லோருள்ளும் புகுகின்றான்.

சர்வ வியாபகமான, அழியாத, பிரிக்க முடியாத, சுயம் பிரகாசமான, ஆத்மாவையே எங்கும் காணுகின்ற ஒரு ஜீவன் முக்தன் அடைய வேண்டியதோ அல்லது அறிந்து கொள்ள வேண்டியதோ மிச்சம் எதுவுமில்லை. அவர் பூரணத்துவம், உன்னதப் பேரானந்தம், உயர்ந்த ஞானம் ஆகியவற்றை அடைந்துவிட்டார்.

ஒரு ஞானி தன்னை உலகிலுள்ள எல்லா உடல்களோடும் (சமஷ்டி, அபிமானி, தெய்வீக அபேதம்) அபேதமாக்கிக் கொண்டாலும், அவர், தன்னுடைய பிராரப்தத்தினால் வந்ததும் தான் அணிந்திருக்கின்றதுமான

இந்த உடலோடு தனக்கு ஒரு சிறு விசேஷத் தொடர்பு உண்டு என்பதை அறிந்திருக்கிறார்.

ஒரு ஜீவன் முக்தன் அல்லது பாகவதனுடைய கண்கள் ஒளி வீசுபவைகளாக இருக்கின்றன. அவருடைய தலையின் உச்சியிலும், இரு புருவங்களுக்குமிடையேயுள்ள ஸ்தானமாகிய திரிகூடியிலும் ஒரு பிதுக்கம் காணப்படும். அவர் கூறுவனவெல்லாம் உன்னுடைய மனத்திலே பதிப்பிக்கப்பட்டுவிடும். உன்னுடைய ஆயுள் முடியும்வரை அவற்றை உன்னால் மறக்கமுடியாது. அவரிடம் அபாரமான கவரும் சக்தி இருக்கிறது. அவர் உன்னுடைய சந்தேகங்கள் அனைத்தையும், அற்புதமான வகையில் தெளிய வைப்பார். அவருடைய பிரசன்னத்தில் நீ ஒரு விசித்திரமான ஆனந்தத்தையும் அமைதியையும் அனுபவிப்பாய். அவருடைய சந்நிதானத்திலே உன்னுடைய சந்தேகங்கள் அனைத்தும் நீங்கிவிடும். மௌனமே அவருடைய மொழி. அவர் மிகவும் இரக்கமுடையவர். அவர் சுயநலம், கோபம், பேராசை, அகந்தை, காமம், கர்வம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டவர். அவர் சத்தியம், சாந்தி, ஞானம், பேரானந்தம் ஆகியவற்றின் திருவுருவமாகத் திகழ்பவர்.

பழங்கள், நெருப்பு, கத்தி, மரங்கள், நதிகள் முதலியவைகளடங்கிய ஒரு படத்தைப் பார்க்கும்பொழுது அவைகள் எல்லாம் பொய்யானவைகள் என்று எவ்வாறு நீ எண்ணுகின்றாயோ அதேபோல ஜீவன் முக்தன் அல்லது விடுபட்ட ஞானி இவ்வுலகைப் பார்க்கும்பொழுது இந்த ரூபங்களனைத்தும் பொய்யானவை என்று உணருகின்றார்.

ஒரு படத்திலுள்ள ஒரு நாகம், அல்லது ஒரு புலியைக் கண்டு எப்படி யாரும் அஞ்சமாட்டார்களோ அதேபோல ஆத்மஞானத்தைப் பெற்றிருக்கும் ஜீவன் முக்தன் உயிருள்ள நாகம் அல்லது புலியைக் கண்டு அஞ்சமாட்டார்.

இப்பிரபஞ்சத்தில் பிரம்மனையன்றி வேறொரு உண்மையும் இல்லை என்றும், தான் பிரம்மனே என்றும் ஒவ்வொரு பொருளும் பிரம்மனே என்றும், உணர்ந்த

ஞானியானவர் பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுபடுகின்றார், அவர் சுதந்திரம், பூரணத்துவம், அமரத்துவம் ஆகியயற்றை அடைந்து விட்டவர் ஆவார். அவர் ஒரு ஜீவன் முக்தர். அதாவது ஜீவித்திருக்கும் பொழுதே விடுதலை அடைந்தவராவார்.

நீ ஒரு பெரும் விழாவில் ஒரு பெருந்திராளன மக்கட் கூட்டத்தைப் பார்க்கும்பொழுது நீ சாதாரணமாக அவர்களைப் பார்ப்பதைத் தவிர யாரிடத்தும் உனக்குப் பற்று என்பது இருப்பதில்லை. அதேபோல ஒரு ஜீவன் முக்தன் இவ்வுலகை நோக்குகின்றார். அவருக்கு யாரிடத்தும் பற்று கிடையாது.

ஒரு ராஜாவினுடைய அரண்மனையில் கண்ணாடியாலான ஒரு பெரிய மண்டபம் இருந்தது. அம்மண்டபத்தினுள் நுழையும் போதெல்லாம் அரசர் தன்னுடைய சொந்த ஆத்மாவையே அல்லது பிரதி பிம்பத்தையே கண்டார். எங்கு பார்த்தாலும் தன்னுடைய ஆத்மனைப் பார்ப்பதிலே அவர் அளவற்ற மகிழ்ச்சி கொண்டார். அவருடைய நாயும் அம்மண்டபத்தினுள் நுழைந்தது. எல்லாப் பக்கங்களிலும் நாயினுடைய பிரதி பிம்பம் தெரிந்தது. எல்லாப் பக்கங்களிலும் பல நாய்கள் இருப்பதாக அந்த நாய் எண்ணியது. அது இதர நாய்களைக் கடிப்பதற்காக அங்கு மிங்கும் தாவிக் குதிக்க ஆரம்பித்தது. இதே போல ஒரு ஞானி இவ்வுலகில் எங்கும் தன்னுடைய சொந்த ஆத்மனையே கண்டு பெரு மகிழ்வு எய்துகிறார். ஆனால் ஒரு அறியாத மனிதன் மற்ற மக்கள் தன்னை விட்டு வேறு பட்டவர்கள் என்றும் வித்தியாசமானவர்கள் என்றும் எண்ணி அவர்களை வெறுக்கவும், அவர்களோடு சண்டை போடவும் செய்கின்றான்.

பிரம்மனை அறிந்தவன் நன்மை தீமை ஆகியவற்றைக் களைந்து துன்பத்திலிருந்து விடுபடுகின்றான். அவன் பரமாத்மாவோடு மேலான அபேதத் தன்மையை அடை

கின்றான். அவன் ஆத்மனில் ஆனந்தத்தை அடைகின்றான்.

ஜீவன் முக்தர்களிடையே வாழ்க்கை முறை வேறுபடுகிறது. பகீரதன் அரச போகத்தில் வாழ்ந்தான். மற்றொரு ஞானி பிச்சைக்கார முறையில் வாழ்ந்தார். ஒரு முனிவர் எப்பொழுதும் தியான நிலையிலேயே இருந்தார். அவர் ஒரு பொழுதும் வேலை செய்வதில்லை. அவர் ஒரு போதும் பேசுவதும் கிடையாது. அவர் எப்பொழுதும் ஏகாந்தத்திலேயே இருக்கிறார். ஜடபரதர் இவ்விதமான வாழ்க்கை வாழ்கின்றார். மற்றொரு முனிவர் சந்தடி நிறைந்த, நெருக்கடியான நகரத்தில் வசிக்கின்றார். அவர் சேவையிலே மூழ்கியிருக்கின்றார். அவர் மக்களோடு பேசுகின்றார். அவர் பிரசங்கங்கள் செய்வதோடு மத சம்பந்தமான வகுப்புக்கள் நடத்துதல், புத்தகங்கள் எழுதுதல் முதலிய வேலைகளைச் செய்கின்றார். ஸ்ரீ சங்கரர் இது மாதிரியான வாழ்க்கையை நடத்தினார். இதற்குப் பிராரப்தம் காரணமாக இருக்கிறது. ஒவ்வொரு முனிவருக்கும் அவரவர்க்கான பிராரப்தம் உண்டு. எல்லா முனிவர்களும் ஒரே மாதிரியான வாழ்க்கை உடையவர்களாகவும், ஒரே மாதிரியான பிராரப்தம் உடையவர்களாகவும் இருந்தால் இந்த உலகம் ஒரு சிறைக் கூடத்தைப் போலாகிவிடும் தோற்றத்திலே பல்வேறு வகைகளைக் கொடுப்பது பிரக்ருதியின் தன்மையாகும்.

"ஒரு ஜீவன் முக்தன் அல்லது வேலை செய்யும் ஒரு வியவஹார ஞானிக்குக் கூட கோபமும், துன்பமும் உண்டு. ஆனால் இது ஆபாஸ மாத்திரமே (வெறும் போலித் தோற்றம்). இது எரிக்கப்பட்ட துணி போன்றது. இது ஒரு ஆற்று நீரில் தடி கொண்டு அடித்து ஏற்படுத்தப்பட்ட ஒரு பதிப்பைப் போன்றது." என்று சில வைதீக வேதாந்திகள் கூறுகின்றனர். இது தவறு. ஒரு ஜீவன் முக்தன் எந்த நேரத்திலும், எந்தச் சூழ்நிலையிலும், கோபத்தின் ஒரு அறிகுறியைக் கூடக் காட்ட முடியாது.

அவர் முற்றிலும் மனமற்றிருக்கின்றுர். அப்படி இருக்க அவரிடத்து கோபம் எவ்வாறு எழ முடியும்? முடியவே முடியாது. நீங்கள் சுகதேவருடைய கதையைக் கேட்டதில்லையா? ஜனகராஜாவினுடைய வாயிற்காப்போனால் அவர் மிகவும் மோசமான முறையில் நடத்தப்பட்ட பொழுது பரிபூரண அமைதியுடன் கூடிய மனத்தவராய் இருக்கவில்லையா? ஆபாஸ மாத்திர ரகத்தைச் சார்ந்த கோபத்தையாவது அவர் வெளிப்படுத்திஞரா?

ஈஸ்வரன் நிர்குண பிரம்மனில் இருந்து கொண்டு நிர்குண பிரம்ம உணர்வை இழக்காமல் வேலே செய்ய முடியும். அவர் மாயையைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கின்றுர். ஒரு அவதாரம் கூட தன்னுடைய சொந்த சொரூபத்தில் இருந்து கொண்டு வேலை செய்ய முடியும். ஆனால் ஏழாவது பூமிகாவிலுள்ள ஒரு ஞானி வேலை செய்ய முடியாது. (பழைய வைதீக தத்துவம்).

ஆருவது அல்லது ஏழாவது பூமிகாவிலுள்ள ஒரு ஞானி இந்த உலகத்தில் வேலை செய்ய முடியாது. அவர் எப்பொழுதும் பிரம்மனிலேயே ஐக்கியமடைந்து இருப்பார். அவர் வேலை செய்ய விரும்பினல் நான்கு அல்லது ஐந்தாவது பூமிகாவிற்கு இறங்கி வரவேண்டும். (பழைய வைதீக தத்துவம்).

ஒரு ஞானிக்கு இரட்டை உணர்வு உண்டு. ஆறு அல்லது ஏழாவது பூமிகாவில்கூட அவர் தன்னுடைய சொந்த சொருபத்தில் இருந்து கொண்டு ஒரு அவதாரத்தைப்போல வேலை செய்யமுடியும். கீழிறங்கி வரவேண்டிய அவசியமில்லை. (கொரானரீ – திருஷ்டாந்தம்; இப்புறமும் அப்புறமும் திருப்புவதன் மூலமாக மட்டும் தன்னுடைய ஒற்றைக் கண்ணை மட்டும் உபயோகப்படுத்தும் காக்கையின் விளக்கம்) (புது ஆராய்ச்சி தத்துவம்).

பிரம்மனை உணர்ந்த உடனே ஒரு ஜீவன் முக்தன் மறைந்துவிட முடியாது. அம்மாதிரி இருந்தால் சாதகர்

களுக்கு மதோபதேசம் எப்படி சாத்தியமாகும்? மதோப தேசங்களை ஜீவன் முக்தர்களிடமிருந்து சாதகர்கள் பெறு வதை நாம் பார்த்திருக்கின்றோம். பாலைப் பாலோடும், எண்ணெயை எண்ணெயோடும், தண்ணீரைத் தண்ணீ ரோடும் ஊற்றும்பொழுது அது எவ்வாறு அதனுடன் ஐக்கிய மாகிவிடுகின்றதோ அதேபோல ஆத்மானுபூதியடைந்த ஞானி ஆத்மனோடு இரண்டறக் கலந்துவிடுகின்றார். இதை பற்றி சந்தேகம் கிடையாது. வாமதேவர், ஜடபரதர், மன்ஸுர், ஷாம்ஸ் தப்ரீஜ், மதலஸா, சூடாலை ஆகியோர் ஆத்மனோடு அவர்களுடைய ஒருமைப்பாட்டை உணர்ந்து தங்களுடைய அனுபவங்களையும், வீரோபதேசங்களையும், பெருமளவில் அல்லல்பட்டுவரும் மனித சமுதாயத்திற்கு விட்டுச் சென்றிருக்கின்றனர்.

கற்பூரம் எவ்வாறு உருகி நெருப்போடு ஒன்றுகிவிடு கின்றதோ அதேபோல ஞானியினுடைய மனமும் உருகி பிரம்மனோடு ஒன்றுகி விடுகின்றது.

ஆத்மானுபூதியடைந்த ஞானி ஆத்மனோடு ஒன்றுகி விடுகின்றார். அவர் பிரம்மனாகவே ஆகிவிடுகின்றார். ஞானாக் னியினால் அவருடைய மூன்று சரீரங்களும் எரிக்கப்பட்டு விடுகின்றன. பார்ப்பவர்கள் அவருடைய ஸ்தூல சரீரத் தைக் காண்கின்ற போதிலும், ஞானி தன்னை பிரம்மனோடு அபேதப்படுத்திக் கொண்ட காரணத்தால் அவருடைய சொந்த திருஷ்டியிலே அவருக்குச் சரீரம் கிடையாது.

ஒரு ஜீவன் முக்தன் ஆன்மீக சக்தியின் உற்பத்தி நிலையம். அவர் தன்னுடைய ஆன்மீக மின்னோட்டத்தை உலகின் பல்வேறு மூலை முடுக்குகளுக்கும் பாயச் செய்கின் றார். அவருக்கு முன்பாக உட்கார். உன்னுடைய சந்தே கங்கள் தானாக நீக்கப்பெறும். நீ ஒரு விசித்திரமான ஆனந்தச் சிலிர்ப்பையும், சாந்தியையும் அவருடைய சான்னித்தியத்திலே உணர்வாய்.

என்னே பேரதிசயம். என்னே வியத்தகு காரியங்களை இந்த ஜீவன் முக்தர்கள் செய்கிறார்கள்! அவர்கள் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கும் போதே விடுதலை பெற்ற ஞானிகளாகி விட்டார்கள். அவர்களுடைய சத்சங்கல்பத்தின் மூலமாக அவர்கள் அற்புதங்களைச் செய்கின்றார்கள். அவர்கள் பூவுலக கடவுளர்கள். அவர்கள் எவ்வளவு சக்தி வாய்ந்தவர்களாக இருக்கின்றனர். அவர்கள் எப்பொழுதும் கலங்காத மனமுடையவர்களாக இருக்கின்றனர். எங்கு சென்றாலும் அவர்கள் மக்களைக் கவர்ந்து விடுகின்றனர். அவர்கள் பேசுவது கிடையாது, ஆனால் அவர்களுடைய மௌனத்தின் மூலமாகவே சாதகர்களுக்கு உபதேசிக்கின்றனர். அப்பேர்ப்பட்ட உன்னத ஜீவன்களுக்கு வந்தனங்கள்.

ஞானம் சக்தியாகும். மருந்துகளைப் பற்றியும், மனித இயந்திரத்தைப் பற்றியும் அதனுடைய வேலை முறையைப் பற்றியும், வைத்திய சாஸ்திரத்தைப் பற்றியும், நோயை அறிந்து அதற்கான சிகிச்சையைப் பற்றியும் அறிந்துள்ள ஒரு வைத்தியர் ஒரு சக்தி பொருந்திய மனிதன் ஆவார். அவர் ஆயிரக் கணக்கானவர்களைக் கவர முடியும். சட்ட ஞானம் படைத்த ஒரு சட்ட நிபுணரிடம் கவரும் தன்மையும் சக்தியும் இருக்கின்றன. யுத்த தந்திரங்களையும், போர் நுணுக்கங்களையும் பற்றிய ஞானம் படைத்த பிரதம தளபதிக்கும், தளபதிக்கும் அற்புதமான கவரும் தன்மையும் சக்தியும் இருக்கின்றன. அவர்கள் முன்னிலையில் சேனை முழுவதும் சக்தி பெற்று அவர்களுடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியத் தயாராக இருக்கின்றது. போலீஸ்காரனுடைய விரல் உயர்ந்தால் தெருவிலுள்ள மோட்டார் கார்கள் எல்லாம் நின்று விடுகின்றன. நெருப்பிலிருந்து உஷ்ணம் எவ்வாறு பிரிக்கப்பட முடியாததோ அது போல ஞானத்திலிருந்து சக்தி பிரிக்கப்படமுடியாதது. மாயைக்கு மூலாதாரமான பிரம்மனே எல்லாச் சக்திகளுக்கும் சேமிப்பு நிலையமாகும். பிரம்ம ஞானம் படைத்த ஒரு ஞானியிடம் அபாரமான சக்தி இருக்கிறது. அவர்

அவருடைய சத்-சங்கல்பத்தின் மூலமாக விரும்புகிறார். சகலமும் நடந்தேறுகிறது.

தாமஸ குணம் படைத்த இறைச்சி முதலியவை போன்ற உணவுப் பொருளை சத்துவப் பொருள்களாக (தூய்மையான பொருள்களாக) ஆக்கக் கூடிய சக்தி ஒரு ஞானிக்கு உண்டு. அவரால் இறைச்சியை ஹல்வாவாக மாற்ற முடியும். அவர் எதையும் உலகாயத மக்களைப் போல சுகபோகத்திற்காக உண்பது கிடையாது. அவருடைய மனத்தில் எவ்விதமான பதிப்பும் உண்டாக்கப்படுவதில்லை. அவர் எப்பொழுதும் சாக்ஷியாகவே உணருகின்றார். அவர் தன்னை சரீரம், மனம், இந்திரியங்கள் ஆகியவற்றிலிருந்து பிரித்து வைத்திருக்கின்றார். அவர் எப்பொழுதும் உள்ளே இருக்கும் ஆத்மனிடமிருந்து ஆனந்தத்தைப் பெறுகின்றார். அவர் எந்த வகையான உணவிலும் மிகவும் ருசிகரமான வகையாக உண்டுவிட்டதாக ஒரு பொழுதும் எண்ணுவது கிடையாது. எனது அன்பிற்குரிய நண்ப ஐய்தயாள், அவருடைய நிலை வர்ணிக்க முடியாதது. உன்னால் அவரைப் புரிந்துகொள்ள முடியாது.

ஆத்மானுபூதியடைந்த ஒரு மனிதனுடைய சொற்கள் சாந்தி, இயைவு, சக்தி, பலம், ஆகியவற்றைக் கேட்போரிடத்துக் கொடுக்க வல்லவை. அவைகள் அவருடைய மகிமையும், சாந்தியும், ஆசித்தன்மையும் பெற்ற அந்தரங்க வாழ்க்கையின் ஊற்றுப் பெருக்காகும். அவர், சுற்றியுள்ள அனைவரிடத்தும் சந்தோஷத்தையும், அன்பையும் புகட்டிப் பிரகாசிக்கச் செய்வார்.

கான்பூருக்கருகாமையில் ஒரு யோகி இருக்கின்றார். அவரிடம் பல சித்திகள் அமைந்துள்ளன. அவர் கந்தையுடன் அலைந்து திரிகின்றார். அவர் அவதூத நிலையில் இருக்கின்றார். ஒரு சமயம் ஒரு ஐரோப்பிய உத்தியோகஸ்தர் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்த

போது அவருடைய தலையின்மீது ஒரு பெட்டியை பலவந்த மாகச் சுமத்தி எடுத்து வரச்செய்தார். அந்த ஐரோப்பிய உத்தியோகஸ்தர் குதிரையின்மேல் முன்னால் சவாரிசெய்து கொண்டு போய்க் கொண்டிருந்தார். அவர் திரும்பிப் பார்த்தபோது அந்தப் பெட்டியானது மங்கள்தாஸினு டைய தலைக்கு மேல் 3 அடி உயரத்தில் நகர்ந்து வந்து கொண்டிருப்பதைக் கண்டார். அந்த உத்தியோகஸ்தர் திகைத்துப் போய்விட்டார். அவர் குதிரையிலிருந்து இறங்கி வந்து அந்த யோகியின் முன்னிலையில் சாஷ்டாங்க மாக வீழ்ந்து வணங்கி தான் செய்த பெருந் தவற்றிற்காக மிகவும் உருக்கமான வார்த்தைகளால் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

ஒரு ஜீவன் முக்தன் அல்லது ஞானி, தான் விடுதலை பெற்றிருப்பதை அறிகிறார். மறுபிறப்பு தீர்ந்து விட்டது என்பதை அவர் உணருகின்றார். அவர் தன்னுடைய கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றி விட்டதாகவும், இந்த உலகத்திற்கு மறுபடி திரும்பப் போவதில்லை என்ப தையும் உணர்கின்றார். அவர் மேலும் எல்லாவற்றையும் தான் அடைந்து விட்டதாகவும், அவருடைய ஆசைகள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டு விட்டன என்பதையும், மேற்கொண்டு கற்றுக்கொள்ள ஒன்றுமில்லை என்பதையும், மிக உயர்ந்த ஞானத்தைப் பெற்றுவிட்டதாகவும் உணரு கின்றார்.

ஒரு ஜீவன் முக்தனுக்கு இந்த உலகம் மறைந்து விடுகின்றது. அவர் எங்கும் பிரம்மனையே காண்கின்றார். இந்த உலகம் மறுபடியும் வந்தாலும்கூட, கானல் நீர் அல்லது கயிற்றுப் பாம்பைக் கண்ட மனிதன் அதைக் கானல் நீர் அல்லது கயிற்றுப் பாம்பு என்று அறிந்ததும் எவ்வாறு மயக்கமுறாமல் இருக்கின்றானோ அதுபோல அவர் அதனால் மயக்கப்படுவதில்லை. அவருக்கு இவ்வுலகம் மறுபடியும் வந்தாலுங்கூட அது எதிர்மறை ஜோடிகளாக இருப்பதும், துன்பங்கள், தொல்லைகள், வலிகள், துயரங்கள்

ஆகியவையுடன் கூடியதுமாகிய அதே உலகமாக இருக்காது. இது துன்பங்களும், துயரங்களுமடங்கிய சிறைக் கூடமாக இருக்காது. தொந்தரவுகளும் துக்கங்களும் நிறைந்த இந்த உலகமானது சத்-சித்-ஆனந்தமாக மாறி விடுகின்றது. எல்லா தடைகளும், சகல ஏற்றத் தாழ்வுகளும், சகல வேற்றுமைகளும், சகல துவைதத் தன்மைகளும், நிர்பந்தங்களுக்குட்பட்ட சகல சூழ்நிலைகளும், ஒப்பற்ற சர்வ வியாபக ஆத்மனுடைய காட்சியினுல் அழிக்கப்பட்டு விடுகின்றது. அவர் தெய்வ திருஷ்டியுடையவராக இருக்கின்ருர். அவர் எப்பொழுதும் ஆத்மானந்தத்தையும், ஆத்ம ஞானத்தையும் அனுபவிக்கின்ருர். அவர் எப்பொழுதும் தன்னுடைய சொந்த ஆத்மனிலேயே களிப்படைகின்ருர். அவர் தன்னுடைய சொந்த ஆத்மனில் நிலை பெற்றிருக்கின்ற காரணத்தால் எதுவும் அவரைத் தொந்தரவு செய்ய முடியாது. அவருடைய நிலை வர்ணிக்க முடியாதது.

கிழிந்து போன ஒரு ஜோடி செருப்புகள் உன்னுடைய கால்களிலே தளர்ந்து போய் தொங்கிக் கொண்டிருப்பதாகவும் அந்தச் செருப்புக்களிலிருந்து நீ வேறுபட்டிருப்பதாகவும் நீ உணர்வதைப் போல ஒரு ஞானியானவர் ஒரு நைந்து போன ஸ்தூல சரீரம் தன்னைப் பற்றிக் கொண்டிருப்பதாகவும், தான் பிரம்மனுகவே இருப்பதாகவும், உண்மையில் உடலிலிருந்து முற்றிலும் வேறுபட்டுத் தனியாக இருப்பதாகவும் உணருவார்

மதுவருந்திய போதையிலே இருக்கின்ற ஒரு குடிகாரனுக்கு எப்படி அவனுடைய வேஷ்டியானது இடுப்பிலிருந்து நழுவித் தொங்கிக் கொண்டிருப்பது தெரியாதோ அதே போல பிரம்மப் பேரானந்தமாகிய மது மயக்கத்திலே இருக்கின்ற ஒரு ஞானிக்கும் அவருடைய சரீரத்தைப் பற்றிய உணர்வே இருக்காது.

ஒரு ஜீவன் முக்தனும் வலியை அனுபவிப்பார். ஆனுல் அவருடைய உணர்ச்சி ஒரு உலகாயத மனித

னுடைய அனுபவத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும். (பழைய வேதாந்த தத்துவம்)

புறவுலகத் தோற்றம் ஒரு ஜீவன் முக்தனால் உணரப் படும். ஆனால் அவருக்கு வேறுவிதமான அனுபவமே இருக்கும். அவர் உலகமனைத்தும் தன்னுடைய சொந்த ஆத்மாவுக்குள் ஆத்மாவாக இருப்பதாக அவர் உணர்வார். உலகம் மித்யா (பொய்யானது) என்கின்ற நிச்சயமானது அவருடைய மனத்திலே பதிக்கப் பெற்றிருக்கும்.

சொப்பனத்தில் ஒரு மனிதன் ஒரு அரசனாகின்றான்; ஆசைப்படுகின்ற சுகபோகங்களை எல்லாம் அனுபவிக் கின்றான்; பிறகு அவன் விரோதியால் தோற்கடிக்கப்பட்டு, காட்டிற்குச் சென்று தவத்தை மேற்கொள்ளுகின்றான். பிறகு அவன் ஒரு பிச்சைக்காரனாக இருப்பதாகக் கனவு காண்கின்றான். அரை மணி நேரத்திற்குள் அவன் எண்பது வருஷங்கள் வாழ்ந்து விட்டதாகக் கற்பனை செய்கின்றான். அவன் ஒரு பாம்பினால் கடியுண்டு இறந்து விடுவதாகக் கனவு காண்கின்றான். பயத்தினால் இப்பொழுது அவன் தன்னுடைய கண்களைத் திறந்து பார்த்து நடந்ததெல்லாம் கனவு என்பதை அறிகின்றான். விழித்திருக்கும் போது ஒரு மனிதன் எவ்வாறு கனவில் கண்டதைக் காணுவதில்லையோ அதே போல் ஒரு ஞானி பிரம்ம ஞானத்தை அடையும் பொழுது இப்பிரபஞ்சத்தைக் காணுவதில்லை.

ஒரு ஞானியானவர் பிரபஞ்சம் முழுவதும் தன்ன கத்தே இருப்பதையும், எல்லாவற்றையும் ஒரே ஆத்மா வாகவும் காணுகின்றார்.

சூரியன் பகலில் ஒளியைக் கொடுக்கின்றான். சந்திர னும் நட்சத்திரங்களும் இரவில் ஒளியைக் கொடுக்கின்றன. நீ எந்தக் கருவியின் மூலமாக ஒளியைக் காண்கின்றாய்? கண்ணின் மூலமாகத்தான் உன்னால் ஒளியைக் காண முடியும். ஒரு குருடனுக்கு ஒளியைப் பற்றிய அபிப்பிராயம் எதுவும் இருக்காது. கண் மூடியிருக்கிறதா அல்லது திறந்

திருக்கிறதா என்பதை நீ எதன் மூலம் தெரிந்து கொள்கிருய்? புத்தியின் மூலம். கண்களுக்கும் ஒளியைக் கொடுப்பது புத்தி. புத்தி இல்லாதிருந்தால் உன்னுல் சூரிய வெளிச்சத்தைப் பார்க்க முடியாது. புத்திக்கும் ஒளியைக் கொடுப்பது எது? இது ஆத்மா. இது ஒளிகளுக்கெல்லாம் சுயம் பிரகாசமான ஒளியாகும். நான் அதுவாக இருக்கிறேன். அங்கு நான் இருக்கின்றேன். ''தத்ர அஹம்''.

விடுதலை பெற்ற ஞானி கூறுகின்ருர் :—

''நான் பூமி. நான் பூமியில் இருக்கின்றேன். நான் தண்ணீர். நான் நெருப்பு. நான் நெருப்பில் இருக்கின்றேன். நான் காற்று. நான் காற்றில் இருக்கின்றேன். நான் மலர். நான் மலரில் இருக்கின்றேன். நான் மரம். நான் மரத்தில் இருக்கின்றேன். நான் பெண். நான் பெண்ணில் இருக்கின்றேன். நான் அறிவு. நான் அறிவில் இருக்கின்றேன். நான் சமுத்திரம். நான் சமுத்திரத்தில் இருக்கின்றேன். நான் தோன்றியிருக்கும் விராட்டாக இருக்கின்றேன். நான் உள்ளே இருக்கின்ற ஹிரண்யகர்ப்பளுக. இருக்கின்றேன் நான் பிரம்மன் அல்லது மனத்திற் கப்பாற்பட்ட ஆத்மளுக இருக்கின்றேன்.

நானே பிரம்மளுக இருக்கையில் நான் யாருக்கு வணக்கம் அல்லது மரியாதைகளைச் செய்வது? என்னைத் தவிர வேறு எதுவும் இல்லாத பொழுது யார் யாரை மதிப்பது? யார் யாரை வணங்குவது? சூரியனைப் போன்ற பிரகாச முடையவனும், எல்லாவிதமான (அஞ்ஞான) இருளையும் கடந்து இருப்பவனுகிய அந்த சக்தி பொருந்திய புருஷனை அறிவேன். அவனை அறிவதன் மூலமாகவே ஒருவன் மரணத்தை வெல்லுகிருன். விடுதலைக்கு வேறு வழி எதுவும் கிடையாது.

நான் ஒரு மணற் குருணையிலே ஒரு உலகத்தையும் ஒரு காட்டு மலரிலே ஒரு சொர்க்கத்தையும், என்னுடைய

உள்ளங் கையிலே எல்லையற்ற தன்மையையும், ஒரு மணியில் சாசுவதத் தன்மையையும் காண்கின்றேன்.

என்னிடத்தில் இப்பிரபஞ்சம் தன் மூலத்தைக் கொண்டிருந்தது.
என்னிடத்திலேயே அனைத்தும் நிலைபெற்றிருக்கின்றன.
என்னிடத்திலே இது அழிகின்றது.
நானே இந்த பிரம்மனாகவும், காலமற்றவனாகவும் இருக்கின்றேன்.
சிவோஹம் சிவோஹம் சிவோஹம்.
நான் இந்த உடலுமல்ல, மனமுமல்ல.
சிதானந்த ரூப: சிவோஹம்.
சிவோஹம் – நான் சிவா – நான் சிவா – பேரானந்த மயம், ஞான மயம்.

நான் எல்லா உடல்களிலும் அனுபவிக்கின்றேன். நான் எல்லா உடல்களிலும் அவதிப்படுகின்றேன். நான் எல்லாக் கண்களின் மூலமாகவும் பார்க்கின்றேன். நான் எல்லாக் கைகளின் மூலமாகவும் வேலை செய்கின்றேன். நான் எல்லாக் காதுகளின் மூலமாகவும் கேட்கின்றேன்.

இது தான் ஒரு ஞானியினுடைய உணர்வு (தெய்வீக அபேதத்தன்மை), நீ பல புத்தகங்களைப் படிக்க வேண்டியதில்லை. மேற் கூறிய கருத்துக்களிலே எப்பொழுதும் வசித்திரு. உனக்கு சீக்கிரத்தில் ஆத்மானுபூதி கிட்டும்.

"நானே சகலமும்", "நானே எல்லாம்" என்று ஞானி கூறுகின்றார். அவர் தன்னை பிரம்மனோடு அபேதப் படுத்திக் கொள்கின்றார். உலகமனைத்தும் பிரம்மனிலே தொங்கிக் கொண்டு அல்லது மிதந்து கொண்டு இருக்கிறது. ஆகவே அவர் "நானே சகலமும்" எல்லா நாம ரூபங்களும் என்னுடைய எண்ணங்களிலிருந்து பிரிக்கப்பட முடியாதவை. எண்ணங்கள் மறுபடியும் "என்"னிடமிருந்து பிரிக்கப்பட முடியாதவைகள். ஆகவே "நான் எல்லாமாக இருக்கின்றேன்" என்று கூறுவது பொருத்தமானதே.

---

# VOICE OF DEVOTEES

## (பக்தர்களின் புகழுரை)

It gives me great joy to write this letter to you and acknowledge the receipt of the two parcels of books and booklets sent by Sea Mail. I am very glad to see the ten copies of "Hindu Dharma". Very beautiful get up Nice paper. Clean printing. Excellent value. Sri Gurudev is indeed rejoicing.

The copies of "Bayaminri Vazhu Murai" and "Sadhanagalin Saram" are also very nice and will be very useful to Sadhaks here. Thank you very much for the book.

**Sri Swami Chidananda,**
President, Divine Life Society,
15—8—'68 (on tour) DURBAN.

* * * *

I am immensely thankful to your goodself for the two hundred copies of "Sivamirtha Mozhigal' (சிவாமிருத மொழிகள்) so kindly send for the distribution in the Head quarters. I appreciate very much your noble efforts for releasing a new book on every auspicious occasion. May the Grace of our Gurudev and the Almighty Lord be ever upon you is my humble prayer.

**Swami Krishnananda,**
Acting President, Divine Life Society
Sivananda Nagar.

I immensely thank you for the books 'Gita for the blind' so kindly sent to me. Really your Branch is doing wonderful work in spreading the divine message of our Gurudev.

**Swami Madhavananda,**
Sivananda Nagar

* * * *

I am reqularly receiving the Tamil leaflets and pamphlets I am very grateful for your kind remembrance Amazing is your love and affection for me.

I received a copy of the Tamil Translations of Sure ways for Success in Life and God Realisation. I am charmed at the Tamil translations.

**Swami Paramananda,**
Rishikesh.

* * * *

தாங்கள் மிக்க அன்புடன் அனுப்பி வைத்த ''இந்து தர்மம்'' என்னும் நூலின் இரு பிரதிகளும், 'பயமின்றி வாழுமுறை' 'சாதனங்களின் சாரம்' ஆகிய குறுஞ்சுவடிகளும் கிடைக்கப் பெற்று மிக்க மகிழ்வுற்றோம். குருதேவரின் ஞானயக்ஞும் தமிழ் பெருமக்களிடை பெருகத் தங்கள் சங்கக் கிளை செய்யும் பணி அளப்பரியது. மொழிபெயர்ப்புகள் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. திரு. செல்லமுத்து அவர்கள் மூலத்தின் பொருள் சிறிதும் திரிபுபடாமல் மொழிபெயர்த்துள்ளார். கிருஸ்துவ சமயத்திற்கு ''பைபிள்'' போலவும் இஸ்லாம் மதத்திற்குத் 'திருக்கோரான்' போலவும், புத்த சமயத்திற்குத் 'தர்மபரதா' போலவும் இந்து சமயத்தைப் பற்றி அறிந்து கொள்ள ஒரு நூல் இல்லையே

என்ற குறையை "All About Hinduism" என்ற சிறந்த நூலைத் தமக்கே உரித்தான அழகிய ஆங்கில நடையில் வெளியிடுவதன் மூலம் தீர்த்து வைத்தார். செவ்விய இந் நூலை எளிய இனிய தீந்தமிழில் மொழிபெயர்த்துதவிய திரு. செல்லமுத்து அவர்களுக்கு தமிழ் கூறும் நல்லுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. இதனை வெளியிட்ட தங்கள் சங்கம் பெரிதும் பாராட்டிற்குரியது.

குருதேவரின் உயிர்நாடி போன்று இராசிபுரத்தில் தாங்களும் தங்கள் சகாக்களும் செய்து வரும் தொண்டுகள் தங்கள் அனைவருக்கும் திருவருளும் குருவருளும் துணை நிற்கப் பிரார்த்திக்கிறேன்.

சுவாமி பிரணவானந்தா,
தலைவர், சிவானந்தாஸ்ரமம், கோலாலம்பூர்,
(மலேசியா)

* * * *

தாங்கள் அன்புகூர்ந்து அனுப்பி வரும் அரிய தமிழ் பிரசுரங்கள் கிரமமாகக் கிடைக்கப் பெற்று வருகின்றோம். தங்கள் பிரசுரங்களிலிருந்து அடிக்கடி Yoga way of Life இல் விஷயங்களை எடுத்து வெளியிட்டு வருகின்றோம். பலரும் பயனடைகின்றனர்.

சுப்ரமண்யம்,
ஆசிரியர், "Yog a way of Life"
கொழும்பு.

* * * *

தங்கள் அன்பு நிறைந்து அனுப்பி வைத்த "இந்து தர்மம்" குருதேவர் வடிவமும் உபதேசமும் உள்ள அவ்வளவு பெரிய புஸ்தகத்தை மிக அழகாக தமிழாக்கம் செய்துள்ள குருபக்தி ரத்ன ஸ்ரீ செல்லமுத்து அவர்களின்

உயரிய சேவைக்கும், புஸ்தகமாக்க வசூலித்து முடித்த உங்கள் எல்லோருக்கும் நம் அன்பர் குருதேவர் ஆவியாக விளங்கும் ஸ்ரீ சிவானந்த ஸ்ரீனிவாசானந்தா அவர்களுக்கும் எல்லோருக்கும் மேன்மேலும் தெய்வீக வாழ்க்கையில் ஊக்கமளித்து ஸகல பாக்கியங்களும் கொடுக்க இறைவன் ரூபமாக விளங்கிய நம் தெய்வீக குருதேவரைப் பிரார்த்திக்கின்றேன். தமிழ் நாட்டில் நீங்கள் செய்து வரும் அரிய சேவைக்கு ஈடு இணையே கிடையாது. எல்லாம் நம் அன்பு குருதேவர் மகிமையே.

சிவானந்த ராஜாமணி பாகவதர்,
டில்லி - 5.

❁ ❁ ❁ ❁

"இந்து தர்மம்" கிடைக்கப் பெற்றோம். இந்நூலில் இமயஜோதி ஸ்ரீ சுவாமி சிவானந்தஜி மகராஜ் அவர்கள் இந்து மதத்தின் சகல அம்சங்களையும் மிக மிக துலக்கமாக எடுத்துக் காட்டி விளக்கியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட அருமையான நூல் எங்களின் நூல் நிலையத்தில் இடம் பெறுவது எங்கள் நோக்கத்திற்கும் லக்ஷியத்திற்கும் பெரிதும் ஆக்கமளிப்பதாயிருக்கும்.

The Cultural Union,
நாகூர், (தஞ்சாவூர் ஜில்லா)

❁ ❁ ❁ ❁

தாங்கள் எங்கள் வாசகசாலைக்கு அனுப்பிய சிவானந்தரின் தினசரி சத்சங்கம், சிதானந்தரின் அருளுரைகள் ஆகிய இரு புஸ்தகங்களும் கிடைக்கப் பெற்றோம். மிகவும் நன்றியுடையோம்.

இராசிபுரத்தில் குருதேவரின் இயக்கம் சிறந்த முறையில் தொண்டாற்றி வருவதைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சி

அடைகின்றோம். தங்கள் கிளை மேன்மேலும் வளர்ச்சியுற்று இந்தியாவிலேயே ஓர் சிறந்த ஆத்மீக நிலையமாகத் திகழப் பிரார்த்திக்கின்றேன்.

சுவாமி ஓங்காரானந்தா,
மட்டக்களப்பு, சிலோன்.

* * * *

தாங்கள் அன்புடன் அனுப்பிய "இந்து தர்மம்" என்னும் புத்தகம் கிடைத்தது. மிக்க நன்றி. மட்டற்ற மகிழ்ச்சி. நான் இதற்கு முன் அறிந்திராத எத்தனையோ அரிய விஷயங்கள் அறிய உள்ளம் உவகையடைகிறது.

தமிழ் மக்களுக்கு இத்தகைய ஒரு மகத்தான நற் தொண்டினைச் செய்யும் உங்களையும், உங்கள் சங்கத்தின் குழாத்தினரையும் ஆசீர்வதித்து சகல சௌபாக்கியங் களையும் அளிக்கும்படி இறைவனைப் பிரார்த்திக்கும்

P கணேசன்,
உதகமண்டலம்.

* * * *

'இந்து தர்மம்' பெற்றேன். புத்தகமல்ல யான் பெற்றது. ஒரு இந்து மகா புருஷனால் அளிக்கப்பட்ட தர்மம். குருதேவ் சிவானந்த மஹராஜ் அவர்களுக்கு என்ன கைம்மாறு செய்வதென்றே தெரியவில்லை. எல்லாம் எம்பெருமான் செயல்.

K. சண்முகம்,
சிங்கம்பேட்டை,
கோயமுத்தூர் ஜில்லா.

சுவாமி சிவானந்த சரஸ்வதி அவர்களின் மறைவுக் குப்பின் அவர்பால் பக்தி, ஈடுபாடு ஏற்பட்ட துர்பாக்கிய வதிகளுள் நானும் ஒருவள். அவரது உபதேசங்கள், பிரசுரங்கள், புத்தகங்கள் இவைகளையாவது படித்து முன்னேறலாம் என்றால் அவை யாவும் ஆங்கிலத்திலேயே உள்ளன. ரிஷிகேசம் திவ்ய ஜீவன சங்கத்தில் சேர்ந்து பயன் பெறலாமெனில் அவைகளும் ஆங்கிலத்திலேயே உள்ளன. குருதேவரின் திருவார்த்தைகளை எப்படி அறிந்து முன்னேறுவது என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் தங்கள் மொழி பெயர்பாகிய "சிவானந்த சாதன சதகம்" "வாழ்வின் லட்சியத்தை அடைக" என்ற இரு தமிழ் வெளியீடுகளும் யதேச்சையாகக் கிடைத்தன. ஆங்கில அறிவு குறைந்தவர்களுக்கு தாங்கள் செய்யும் இப்பேருதவி அளவிடற்கரியது.

இலவசமாக தாங்கள் அளிக்கும் இவ்வுதவிக்கு ஆண்டவன் அருளும் குருவின் ஆசியும் என்றென்றும் உண்டு.

ஐ. சகுந்தலா,
பலாலி, காங்கேசன் துறை,
இலங்கை.

* * * *

தாங்கள் அன்புகூர்ந்து அனுப்பிய 'இந்து தர்மம்' தெய்வீக நூல் கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி. நூலை ஒரு முறை பொதுவாகப் பார்த்தேன். நூலின் அமைப்பு, பாகுபாடு, உள் தலைப்புக்கள் யாவும் மிகச் சீரிய முறையில் அமைந்திருக்கின்றன. தமிழாக்கம் செய்த திரு. S. R. செல்லமுத்து அவர்கட்கும், இந்நூலை மிகச் செம்மையான முறையில் வெளியிட்ட தெய்வீக வாழ்க்கைச் சங்கத்திற்கும் என் நெஞ்சம் நிறைந்த நல்வாழ்த்தும்

பாராட்டும் உரியன. தெய்வீக வாழ்க்கைச் சங்கம் மேலும் பல நற்பணிகள் புரிந்து சிறந்து விளங்குவதாக. மிக்க நன்றி.

அன்பன்,
பேராசிரியர் வ. பெருமாள், M. A., B. T., M. R. A. S.
தமிழ்ப் பேராசிரியர்,
முதல் நிலைக் கல்லூரி, உரிகம்,
கோலார் தங்கவயல், மைசூர் மாநிலம்.

* * * *

தாங்கள் அனுப்பிய "இல்லற வாசிகளுக்கோர் அறிவுரை" என்ற புத்தகம் கிடைத்தது. மிகவும் நன்றி. மிகவும் உபயோகமுள்ள புத்தகமாக இருக்கிறது.

V. A. அண்ணாமலை,
மதுரை - 1.

* * * *

தாங்கள் அன்புடன் அனுப்பிய சிதானந்தரின் அருளுரைகள் இரண்டு பிரதிகள் கிடைக்கப் பெற்று மகிழ்ச்சி அடைந்தேன். தங்களுக்கு நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

T. G. மார்கண்டம் பிள்ளை,
திருச்சி - 8.

* * * *

தாங்கள் அனுப்பிய 'சிதானந்தரின் அருளுரைகள்' என்ற புத்தகமும், சிவானந்தரின் தினசரி சத்சங்கம் என்ற

புத்தகமும் கிடைக்கப் பெற்றேன். மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். இம்மாதிரி நல்ல கருத்துக்கள் கொண்ட புத்தகங்களை வெளியிட்டு என் போன்ற ஆரம்ப நிலையி லுள்ள சாதகர்களுக்கு அனுப்பி, ஆன்மீகத் துறையில் முன்னேற்றமடைய பாடுபட்டு வரும் தாங்களும் இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கமும் இறைவன் அருளால் நீடுழி வாழ பிரார்த்திக்கின்றேன்.

T. P. சின்னமுத்தன் செட்டி,
துலையானத்தம், திருச்சி ஜில்லா.



தாங்கள் அன்புடன் அனுப்பிய குருதேவருடைய சித்தி விளையாடல்கள் புத்தகம் கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி. இது போன்ற குருசேவை தமிழ் நாடு முழுவதும் இருந்தால் குருதேவருடைய லட்சியம் நிறை வேறும்.

A. S. தனுஷ்கோடி,
தேனி, மதுரை ஜில்லா.



தாங்கள் அனுப்பிய குருஜி சுவாமி சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் எனும் 256 பக்கங்கள் கொண்ட அழகான புத்தகம் கிடைக்கப் பெற்றேன். உண்மையில் தாங்கள் மேற்கொண்டிருக்கும் தொண்டு நிரம்பவும் பாராட்டத்தக்கதொன்றாகும். நல்ல முறையில் தமிழாக்கம் பெற்றுள்ளது. நல்ல அச்சு. சிறந்த இத்திருப்பணியில் ஈடுபட்டுள்ள தாங்கள் நீடுழி காலம் நீண்ட ஆயுளுடன் திடகாத்திரத்துடன் நலன்கள் அனைத்தும் பெற்று தொண்டு

புரிய எல்லாம் வல்ல ஓம் ஸுப்ரமண்ய கடவுளை திருவருள் புரியுமாறு பிரார்த்திக்கிறேன்.

S. G. இராமலிங்கம், B A.,
'ஞானகுரு' ஆசிரியர், மதுரை.

* * * *

தாங்கள் அன்புடன் அனுப்பி வைத்த இந்து தர்மம் கிடைத்தது. மிக அரிய நூல். பல சமய தத்துவங்களைப் பிழிவாக அதாவது சுருக்கமாக அதே சமயத்தில் விளக்க மாக எடுத்துக் கொடுக்கும் பாங்கைக் கண்டு சுவாமிகளை என் உளமாரப் பாராட்டுகின்றேன். இறையருள் நிரம்பப் பெற்றவர் எழுதும் எழுத்தின் பெருமையை நம்மால் எடுத் துரைக்க இயலுமோ?

எனது இனிய நண்பர் உயர்திரு S. R. செல்லமுத்து அவர்கள் இவ்வளவு பெரிய, அழுத்தமான, கடினமான, புரியாத தத்துவக் கருத்துக்களை இனிய, எளிய, தமிழிலே மொழிபெயர்ப்பது என்றால் அது இறையருள் பெற்றவர்க் கன்றி ஏனையோருக்கு எளிதில் அமையாவென்பது வெள் ளிடைமலை.

ஒரு நூலை அன்பளிப்பாக, என்னை ஒரு பொருட்டாக கருதி, எனக்கு அனுப்பி வைத்தமைக்காக என் உளங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எல்லார்க்கும் நல்லருள் சுரக்கவென்று இறைவனை வேண் டுகின்றேன்.

அ. வைத்திலிங்கம், M. A.,
வேலூர், சேலம் ஜில்லா.

---




ஓம்

# ஓர் இந்துவின் வழிபாடு

ஸர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது.
ஸர்வேஷாம் சாந்திர் பவது.
ஸர்வேஷாம் பூர்ணம் பவது
ஸர்வேஷாம் மங்களம் பவது

அனைவருக்கும் இறையருள் கிட்டுவதாக.
அனைவருக்கும் அமைதி கிட்டுவதாக.
அனைவருக்கும் நிறைவு கிட்டுவதாக.
அனைவருக்கும் வளமார் வாழ்வு கிட்டுவதாக.

ஸர்வே பவந்து ஸுகினః
ஸர்வே ஸந்து நிராமயாః
ஸர்வே பத்ராணி பச்யந்து
மா கஸ்சித் துக்கபாக் பவேத்

அனைவரும் இன்புற்றிருப்பாராக.
அனைவரும் குறைபாடுகளினின்று விடுபடுவாராக.
அனைவரும் பிறர்நலம் பேணுவாராக.
அனைவரும் துன்பமின்றி வாழ்வாராக.

அஸதோ மா ஸத்கமய
தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய

பொய்மையினின்று உண்மைக்கு எனக்கு வழிகாட்டு
இருளினின்று ஒளிக்கு வழிகாட்டு.
அழியுந் தன்மையிலிருந்து அழியாத் தன்மைக்கு
வழிகாட்டு.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி!